

# சிவானந்த விஜயம்

# இந்துவாக வாழ்வோம்

## இந்து சமயக்களஞ்சியம்

## - இந்துக்களின் கையேடு -



# சிவானந்த விஜயம்

- "இந்துவாக வாழ்வோம்" -

ஒவ்வொரு இந்துக்களின் வீட்டிலும்
இருக்கவேண்டிய இந்துசமயக் களஞ்சியம்

**தொகுப்பாசிரியர்**

வித்யாபூஷணம், வித்யா ப்ரகாசன, பாரத்வாஜ

**பிரம்மஸ்ரீ ப. சிவானந்த சர்மா** B.A. (Hons.)

**(கோப்பாய் சிவம்)**









**இணுவில்**

வித்யாபூஷணம், சாதகசிரோமணி
பிரம்மஸ்ரீ ப. சிவானந்தசர்மா
ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி தம்பதிகளின்

## மணிவிழாச் சிறப்பு மலர்

விஜய வருஷம் மார்கழி மாதம் 21ம் திகதி
05-01-2014 ஞாயிற்றுக்கிழமை.
சதய நட்சத்திரம்



# நூல் வெளியீட்டுத் தரவுகள்


நூலின் பெயர் சிவானந்த விஜயம்

மொழி தமிழ்

விடயம் **சனாதன தர்ம நெறிமுறையில் இந்துவாக வாழ்வதற்கு வழிகாட்டும் வழிகாட்டியாகவும், தேவைப்படும் நேரத்தில் வேண்டிய தகவல்களைத் தருகின்ற களஞ்சியமாகவும், அவ்வப்போது ஏற்படுகின்ற ஐயங்களைப் போக்கும் ஆசானாகவும் அமைகின்ற இந்து சமயக் கையேடு**

வெளியீடு சர்வானந்தமயபீடம்

முகவரி "ஸ்ரீநகரம்" அளவோடை வீதி,
இணுவில் மேற்கு, சுன்னாகம்,
யாழ்ப்பாணம், இலங்கை.

தொலைபேசி 094 (0)21 224 1504

முதற்பதிப்பு 05-01-2014.

தொகுப்பும்
கணினி வடிவமைப்பும்
பிரம்மஸ்ரீ ப. சிவானந்த சர்மா B.A.Hons.

அச்சுப்பதிப்பு கஜானந்த் பிறின்டேர்ஸ்,
மானிப்பாய் வீதி, கந்தவாமி கோவிலடி,
இணுவில். தொ.பே. 0774374159

தயாரிப்புச் செலவு ரூபா 500.00




# மணிவிழாத் தம்பதிகள்



வித்யாபூஷணம் ,வித்யாப்ரகாசனர்
பாரத்வாஜ கோத்ரம்

## பஞ்சாக்ஷரசர்மா சிவானந்தசர்மா

(கோப்பாய் சிவம்)

## ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி தம்பதிகள்

# நுழைவாயில்



"தம் பொருள் என்ப
தம் மக்கள்" என உணர்ந்து,
"தம்மில் தம் மக்கள்
அறிவுடைமை" வேண்டித்,
தம் பொருள் யாவும்
தம்மவர் ஆகிய நமக்கே ஈந்து,
தம் பொழுது யாவும்
நமது உயர்வுக்காகவே போக்கி,
தம் பிரார்த்தனை யாவும்
நமது நலமாகவே நிலைநிறுத்தி,
நல்லவர்களாகவும் வல்லவர்களாகவும்
நம்மை வளர்க்கும் நமது பெற்றோரின்
பாதங்களை நமஸ்கரித்து,

அவர்களது எண்ணங்களை நிறைவேற்ற
இதயசுத்தியுடனும் இதயபூர்வமாகவும்
முழுமையாக முயற்சிக்கும்
சிறியவர்களாகிய நாங்கள்
எமது சின்னஞ்சிறிய கரங்களால்

அவர்களது மணிவிழா மலராக
இக் கையேட்டினைப்
பணிவன்போடு சமர்ப்பித்து
இறும்பூதெய்துகின்றோம்.







இங்ஙனம்,
செல்வன் சி. கீதப்பிரியசர்மா
செல்வி சி. கீதஸ்ரீ

# எங்கள் முதற் தெய்வம் மூத்த விநாயகர், எங்கள் குலதெய்வம் முத்து மாரியம்மன்



வேழ முகத்து விநாயகனைத் தொழ

வாழ்வு மிகுத்து வரும்



"......... வாழ்க்கையில் இருக்கக் கூடிய எல்லாவித வியாதிகளையும் போக்கடித்து அருள்பாலிப்பவள் மாரியம்மன். சிவவழிபாடு, பெருமாள் வழிபாடு செய்பவர்கள்கூட மகா மாரியம்மனை வழிபட்டே ஆகவேண்டும்............ சக்திகளுக்கெல்லாம் சக்தியளிப்பவள் பராசக்தி. அந்தப் பராசக்தியின் அம்சமாக விளங்குபவள் மகாமாரியம்மன்."

- காஞ்சி முனிவர்












தில்லை வாழ் அந்தணர்

பிரம்மஸ்ரீ ஜி. பரமேஸ்வர தீக்ஷிதர்



ஆன்ம போதம் இதுவெனக் காட்டி
ஆனந்த பாதம் அகத்தினில் நாட்டி
சீர்மை நாடிக் குஞ்சித பாதம்
சிரசில் பதித்து நல்கிய வேதம்
மேன்மை தந்து மெருகிடல் கண்டேன்
மேலும் மேலும் அமிர்தினை உண்டேன்
வான்மிளிர் தெய்வ ஆசியைத் தந்த
வள்ளல் பாதம் வணங்குதல் செய்தேன்.

~ சிவம்







ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் அன்னை,
அவையத்து முந்தியிருப்பச் செய்த தந்தை
இருவர் பதமும் இருவர் பணிந்து,

நமது குடும்ப முதல்வராய்த் தோன்றிப்
பொறியியல் வல்லுநராய் மிளிர்ந்து
சமய, சமூகப் பணிகளை விதந்து
வீரத்துறவி விவேகானந்தரையும்
வித்தகப் புலவர் விபுலானந்தரையும்
பின்பற்றி
இராமகிருஷ்ண மடத்தின் துறவியாகி
பாரதத்தில் பணிசெய்யும்
முனிபுங்கவர் பாதம்
நமஸ்கரிக்கின்றோம்.



ஸ்ரீ இராமகிருஷ்ண மடம்
சுவாமி அக்ஷராத்மானந்த

கோண்டாவில்
பிரம்மஸ்ரீ
கி. நாராயண சாஸ்திரிகள்



நீர்வேலி
சிவஸ்ரீ சுவாமிநாத
இராஜேந்திரக் குருக்கள்

வேத சிவாகம நெறிமுறை மரபு தவறாத ஆன்மார்த்த, பரார்த்த
ஆலயக் கிரியா மார்க்கங்களை நயமாகவும், பயமாகவும் பயிற்றுவித்த
மதிப்பார்ந்த குருமணிகளின் நினைவுகளை
உள்ளத்தில் நிரப்புகின்றேன்.

பண்டிதர்
ச. சுப்பிரமணியம்
ஆவரங்கால்

வித்துவான்
வி. சண்முகம்
அச்சுவேலி

சைவப்புலவர்
இ. செல்லத்துரை
சிறுப்பிட்டி

சைவத்தமிழ் இலக்கிய இலக்கண
மரபுமுறையில் வழிகாட்டிய
குருமணிகளாகிய மும்மணிகளை
நினைந்து போற்றுகிறேன்.







**Sarva Dharma [Values] Truth Right Conduct Peace Love Nonviolence**

# SAI JEWELS

I have come to light the lamp of love in your hearts, to see that it shines day by day with added luster. I have come not to disturb or destroy any faith, but to confirm each in his own faith - so that the **Christian becomes a better Christian, the Muslim, a better Muslim**, and the **Hindu, a better Hindu**.

There is only one religion, the **religion of Love**; There is only one language, the **language of the Heart**;There is only one caste, the **caste of Humanity**; There is only one law, the **law of Karma**;There is only one God, **He is Omnipresent**.

Start the Day with Love;Spend the Day with Love;Fill the Day with Love;End the Day with Love;This is the way to God.Love in thought is Truth;Love in action is Right Conduct;Love in understanding is Peace;Love in feeling is Non-Violence.Honor all religions. Each is a pathway to God You cannot see Me, but I am the Light you see by.You cannot hear Me, but I am the Sound you hear by.You cannot know Me, but I am the Truth by which you live.The Lord will be watching with a thousand eyes the least activity of man to discover any slight trace of selfless love sweetening it.

Hands that help are holier than lips that pray. Learn to give, not to take. Learn to serve, not to rule. The Grace of God is like insurance. It will help you in your time of need without any limit.



If there is righteousness in the heart,There will be beauty in the character.If there is beauty in the character,There will be harmony in the home.When there is harmony in the home,There will be order in the nation.When there is order in the nation,There will be peace in the world.

Children of My Being!Dissolve your sorrows and fears in Me.Let me efface All your karma.Come back into My Consciousness, which is Your own true Consciousness.Let your petty human self fade away, right now, As you come to Me, who am your Inner Self. You are now My radiant glorious Self...No longer separate from Me.Melt with Me... Merge with Me...!Become Me!

- Sathya Sai Baba\ Sai Ram!

*"தனக்குள் இருக்கும் தெய்வீகத்தை மனிதன் புரிந்துகொண்டானென்றால், அவனால் இயற்கையையே ஆளமுடியும். ஏனெனில், இயற்கையும் தெய்வீகத்தின் ஒரு பகுதிதான். உண்மையின்மூலம் அன்பை அனுபவிக்கலாம். அதேபோல, அன்பு செலுத்துவதன்மூலம் உண்மையைக் காணலாம். கடவுளை நேசித்தாயானால், ஒவ்வொரு பிராணியிடத்தும் நீ கடவுளைக் காண்பாய்"*

*"அளவாகப் பேசுபவர்களுக்கு விரோதம் வருவதில்லை. பேச்சிலே நிதானத்தைக் கடைப்பிடிக்கவேண்டும்"*

*"என்றைக்கு ஆன்மீகத்தில் நம்பிக்கை உள்ளவர்கள் உயர்ந்த பண்புகளை வளர்த்துக்கொள்கிறார்களோ, அன்றைக்கு ஆன்மீகத்தை நம்பாதவர்கள் மறைந்துவிடுவார்கள்.*

*வீட்டிலுள்ள குழந்தைகள், ஏன் வளர்ந்த பிள்ளைகள் கூட, தினமும் காலையில் அவர்களது தினசரி வேலைகளைத் தொடங்குமுன் தாய் தந்தையர் காலைத் தொட்டு வணங்கட்டும். வீட்டில் ஒரு கண்ணியமான சூழ்நிலை ஆரம்பமாகிவிடும். ஐந்து நிமிடம் வீட்டுப் பூஜை அறையில் தவறாமல் பெற்றோருடன் சேர்ந்து வணங்குவது என்பதைத் தினசரி நியமமாக வைத்துக்கொள்ளுங்கள். வீடு என்பது கோயில் ஆகிவிடும்.*

www - work, worship, wisdom







ஒெவா நா० ஹஜ்ரா ஸு௨திா ஐஜுயதா० ஒெவா நா०
ாாதிா ஹி நொ நிவத்துதா௴। ஒெவா நா० ஸவ்௨ுவ ஸெஹிஉ
வய० ஒெவா ந ஆய௰ வுதிாஷ ஜீவஸெ॥

**தேவானாம் பத்ரா ஸவுமதிர் ரிஜவூயதாம் தேவானாம் ராதிரபி நோ நிவர்த்ததாம். தேவானாம் ஸக்யமுப ஸேதிமா வயம் தேவா ந ஆயு: ப்ரதிரந்து ஜீவஸே.**

மங்கலமான தேவர்களின் நல்லாசிகள் நம்மீது நிலவட்டும். அவர்களின் வரங்கள் நமக்குப் பெருகட்டும். அவர்களின் நட்பு நமக்குக் கிடைக்கட்டும். இங்கே நாம் நீண்ட காலம் வாழ்வதற்கான ஆயுளை அவர்கள் நமக்குத் தரட்டும்.

**– ஆ நோ பத்ரா சூக்தம். ரிக் வேதம் 1.89**

*"உண்மையையும் நேர்மையையும் கடைப்பிடிப்பவருக்கு இயற்கை நல்ல ஒத்துழைப்பைக் கொடுக்கும்"*

*ரிக்வேதம் 1.90.6*

*என் மனத்தின் நல்ல ஆசைகள் நிறைவேறட்டும். நான் என் வாயினால் உண்மையே பேசும் ஆற்றல் பெறவேண்டும். என் வீட்டைப் பசுக்கள் நிறைந்து அழகூட்டட்டும். உணவு தானியங்கள் என் நாவுக்கு மிகுந்த ருசி அளிப்பதாகுக. லட்சுமிதேவியும் புகழும் என்னைச் சார்ந்திருக்கட்டும்.*

*யஜுர்வேதம் 39.4*

*"சுவர்க்கம், அந்தரிக்ஷம், பூமி ஆகியவற்றில் அமைதி நிலவவேண்டும். நீர், மூலிகைகள், செடி கொடிகள், தேவர்கள், பிரம்மம், ஈஸ்வரன் ஆகியோரும் உலகமும் அமைதியாக இருப்பதாகுக. சாந்தி அளிக்கும் தெய்வம் எனக்கு சாந்தி அளிப்பதாகுக.*

*யஜுர்வேதம் 36.17*

*"நான் தேடிச் சேர்க்கும் புண்ணியங்கள் என் வீட்டை வளமாக்கட்டும். புண்ணியங்கள் சேகரித்ததன்மூலமாக பாவங்கள் என்னை வந்து அடையாமல் விலகிவிட்டன"*

*அதர்வவேதம் 7.1134*

**இன்று புதிதாய்ப் பிறந்தோம்.**

**பழைமையில் காலூன்றிநின்று புதுமைகளை வரவேற்போம்.**
**வேற்றுமைகளிலிருந்து ஒற்றுமையை நாடுவோம்.**
**முரண்பாடுகளை முன்வைத்து ஒருமைப்பாடு காண்போம்.**

# சிவானந்த விஜயத்தின் செம்பொருட் பெறுபேறுகள்

# உசாத்துணை

**இந்நூலாக்கத்திற்கு வேண்டிய பல தகவல்களை பல நூல்களிலிருந்து திரட்டினோம்.**

நன்னிலம் ராஜகோபால கனபாடிகள் அவர்களால் வெளியிடப்பட்ட
ஸந்தேஹ நிவாரனி முதல் ஆறு பாகங்கள்.
தர்ம சாஸ்திரம் முதல் மூன்று பாகங்கள்.
கே. சங்கர சாஸ்திரிகள் தொகுத்து கிரி டிரேடிங் வெளியிட்ட ஸதாசாரம்

மற்றும் இதுபோன்ற தர்ம சாஸ்திரம் தொடர்பாக அவ்வப்போது வெளிவந்த பல நூல்களில் அவ்வப்போது சேகரித்த செய்திகள் இங்கு இடம் பெறுகின்றன. இந்நூலில் இடம் பெறும் பல விடயங்கள் ஏற்கெனவே இலங்கையில் வெளியிடப்பட்ட,

**1. பாலகுமாரம்**
*சுழிபுரம், பறாளாய் பிரம்மஸ்ரீ முத்துச்சாமி ஐயர் பாலகுருசாமி சர்மா ஸ்ரீமதி விசாலாக்ஷி அம்மா தம்பதிகளின் சதாபிஷேகச் சிறப்பு மலர்*

**2. சுந்தரேசம்**
*யாழ்ப்பாணம், தாவடி பிரம்மஸ்ரீ சாமிரத்தினசர்மா சுந்தரேசக் குருக்கள் அவர்களின் வர்ஷாப்திக நினைவேடு*

**3. ராகா சஹஸ்ரம்**
*யாழ்ப்பாணம, நீர்வேலி பிரம்மஸ்ரீ தியாகராஜக்குருக்கள் நடனசபாபதி சர்மா ஸ்ரீமதி கிரிஜாம்பிகை தம்பதிகளின் சதாபிஷேகச் சிறப்பு மலர்*

**4. முருகு**
*அராலி ஸ்ரீ தறணன் முருகமூர்த்தி ஆலய 2013ஆம் ஆண்டு ஷ்கந்தஷஷ்டி விழாவை முன்னிட்டு அராலியூர் மார்க்கண்டு மதியழகன் வெளியீடு*

**5 தேவகுமாரம்**
*இணுவில் சிவஸ்ரீ சி. குமாரராஜக் குருக்கள் ஸ்ரீமதி தேவசேனா தம்பதிகளின் விஜயரதசாந்திச் சிறப்பு மலர்*

**6. தர்மசாஸ்திரம் கூறும் வாழ்க்கை நெறி**
*கோப்பாய் தெற்கு, பிரம்மஸ்ரீ சோ. இ. பிரணதார்த்திஹரக்குருக்கள் ஸ்ரீமதி சுகந்திகுந்தளாம்பிகை தம்பதிகளின் பீமரத சாந்திச் சிறப்பு வெளியீடு*

**7. நடராஜ தரிசனம்**
*ஆவரங்கால் அமரர், சிவஸ்ரீ வே. நடராஜக் குருக்கள் அவர்களின் நினைவஞ்சலி மலர்*

ஆகிய நூல்களில் வெளியிடப்பட்டவை என்பதையும் நன்றியோடு தெரிவிக்கின்றோம்.

# அகம்

## விழாநாயகர் பற்றிய குறிப்புக்கள்


ப. சிவானந்தசர்மா

197

*கடிதத் தலைப்பு - 1976ஆம் ஆண்டு.*

"தன்னிடை ஆற்றல் உணரார் இடையினும்
மன்னிய அவையிடைப் புகுந்த காலையும்
தன்னைத் தான் புகழ்தல் தகும் புலவோர்க்கே"

~ இலக்கணகாரர்

சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும்
இனியெதிர்காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்றபேறதனால்
எற்றைக்கும் திருவரு ளுடையேம்
நன்றியில் நெறியில் அழுந்திய நாடும்
நற்றமிழ் வேந்தனும் உய்ந்து
வெள்றிகொள் திருநீற் றொளியினில் விளங்கும்
மேன்மையும் படைத்தனம் என்பார்.

- பெரிய புராணம்

# 'கோப்பாய் சிவம்' - விபரக் குறிப்புக்கள்

மறுமலர்ச்சி எழுத்தாளரும் பன்மொழிப் புலவரும் சம்ஸ்கிருத பண்டிதரும் ஆசிரியருமான **கோப்பாய் வடக்கு பிரம்மஸ்ரீ ச. பஞ்சாட்சர சர்மாவின்** மகனாக 1954 ஜனவரி 8ஆம் திகதி பிறந்தவர் **கோப்பாய் சிவம்** என்ற புனைபெயரால் அறியப்பட்ட **வித்யாபூஷணம், வித்யா ப்ரகாசனர், பிரம்மஸ்ரீ ப. சிவானந்த சர்மா.** கோப்பாயைப் பிறப்பிடமாகக் கொண்டாலும் இணுவில் பதியை நீண்ட கால வசிப்பிடமாகக் கொண்டதோடு இப்போது இணுவிலையே தமது சொந்த இடமாகவும் ஆக்கிக் கொண்டார்.

சிறப்புக் கலைப் பட்டதாரியாகிய இவர் சம்ஸ்கிருதம், தமிழ், இந்துநாகரிகம் ஆகிய பாடங்களில் பாண்டித்தியமுடையவர். இவரது தந்தைவழிப் பேரன் சபாபதி ஐயர் சித்தவைத்தியர், புராணபடன வித்தகர். தாய்வழிப்பேரன் தியாகராஜக் குருக்கள் சிவாச்சாரியர், புராணபடன வித்தகர்.

இந்திய சாஸ்திகளான நாராயண வாத்தியாரிடம் **வேதம்** பயின்றவர். தந்தையாரிடமும் பின்னர் பல்கலைக் கழகத்திலும் **சம்ஸ்கிருத இலக்கண இலக்கியங்கள்** கற்றவர். நீர்வேலி சுவாமிநாத இராஜேந்திரக் குருக்களிடம் **ஆகமங்களும்** பயின்று கிரியை முறைகளில் பயிற்சியும் **பத்ததி வாசித்தலில்** நீண்டகால அனுபவமும் ஆராய்ச்சியும் உண்டு.

சுமார் நாற்பத்தைந்து வருடங்களாகப் பல்வேறு துறைகளிலும் (சிறுகதை, கவிதை, கட்டுரை, விமர்சனம், வானொலி நாடகம், உரைச்சித்திரம், மெல்லிசை, கீர்த்தனைகள், சமயத்துறை சார்ந்த கட்டுரைகள்) எழுதிப் பல நூல்களை வெளியிட்டுப் பரிசுகள் பெற்றுள்ளார்.

சமயப் பிரசங்கங்கள், இலக்கியச் சொற்பொழிவுகள், பட்டி மன்றங்கள் பலவற்றிலும் கலந்துகொள்ளும் நடறிந்த பேச்சாளர்.

2004 இல் லண்டன் பூபாள ராகங்கள் நிகழ்ச்சியிலும்
2006 இல் சிங்கப்பூர் வீரமாகாளி அம்மன்கோவில் சிவராத்திரியிலும்
2006 நோர்வே சிவசுப்பிரமணியர் ஆலய மஹோற்சவத்திலும் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார்.

அரச நீர்ப்பாசனத் திணைக்களத்தில் படவரைஞராகக் கடமையாற்றி ஓய்வுபெற்றவர்.

இலங்கை இந்துகலாச்சாரஅமைச்சு நடத்திய சிவாச்சாரிய குருகுலத்தில் நிர்வாக உத்தியோகத்தராகக் கடமை புரிந்தவர்.

தனியார் கல்வி நிறுவனங்கள் பலவற்றில் தமிழ், இந்துநாகரிகம், சமயம், சம்ஸ்கிருதம் ஆகிய பாடங்களின் போதனாசிரியராக இருந்தவர்.

*தற்போது அழைப்புக்கிணங்கப் பல்வேறு ஆலயங்களிலும் பத்ததி வாசித்தல், சமயப் பிரசங்கம் செய்தல், கணினி வடிவமைப்புக்கள், கணினிப் பதிப்புக்கள் மூலம் நூல் வெளியீடுகள் செய்தல், வாழ்த்துப் பாக்கள், ஊஞ்சற் பாடல்கள் முதலியன இயற்றுதல் என்பவற்றை முயற்சியாகக் கொண்டுள்ளார்.*

*கொழும்பு சனாதன இந்து தர்ம சங்கம் மற்றும் HERE Foundation ஆகிய அமைப்புக்களின் சார்பில் கொழும்பில் நடைபெறும் சம்ஸ்கிருத பயிற்சிநெறித் திட்டப் பணிப்பாளராகக் கடமையாற்றி அங்கு சம்ஸ்கிருத வகுப்புக்களை நடத்தி வருகிறார்.*

## கலை, இலக்கிய முயற்சிகள் பற்றிய விபரங்கள்:

1) 13 வயதிலிருந்து இன்றுவரை பல்வேறு பத்திரிகைகள், சஞ்சிகைகளில் கவிதைகள், சிறுகதைகள், கட்டுரைகள், நாடகங்கள், விமர்சனங்கள், குறுநாவல்கள் முதலிய இலக்கியப் படைப்புக்களை எழுதி வருகின்றமை.

2) வானொலி நிகழ்ச்சிகள் பலவற்றில் நேரடியாகக் கலந்துகொண்ட குரல் கொடுத்தமை.

3) வானொலி நிகழ்ச்சிகளில் பல இலக்கிய ஆக்கங்களை வெளியிட்டமை.

4) வானொலி நாடகங்கள், உரைச்சித்திரங்கள், இசைச்சித்திரங்கள், சைவ நற்சிந்தனைகள் முதலியவற்றை வெளியிட்டமை.

5) பத்திரிகைகள் சஞ்சிகைகள் பற்றியும் சிறுகதைகள் கவிதைகள் பற்றியும் விமர்சனக் கட்டுரைகள் எழுதியமையும் மேடைகளில் ஆய்வுரைகள் நிகழ்த்தியமையும்.

6) சமயச் சொற்பொழிவுகள், பட்டிமன்றங்கள், கவியரங்கங்கள் முதலிய மேடையேற்றங்கள்.

கௌரவப் பட்டங்கள், பரிசுகள்:

1. 1976ம் ஆண்டு முதற் காலாண்டில் வெளியான ஈழத்துச் சிறுகதைகளில் சிறந்த கதைக்கான தகவம் நிறுவனத்தின் பரிசு.

2. யாழ். மாவட்ட சனசமூக நிலையங்களின் ஒன்றியம் நடத்திய விடிவெள்ளி கே. பி. முத்தையா நினைவுச் சிறுகதைப்போட்டியில் சிறப்புப் பரிசு - 1981.

3. வீரகேசரி எழுத்தாளர் ஆண்டுக்கான கட்டுரைப் போட்டியில் பரிசு - 1982.

4. மட்டக்களப்பில் வெளிவந்த தாரகை சஞ்சிகை நடத்திய சிறுகதைப் போட்டியில் மூன்றாம் பரிசு - 1984.

5. மட்டக்களப்பு களம் கலை இலக்கிய வட்டம் நடத்திய திருமதி ரோஸ் பற்றிக் நினைவுச் சிறுகதைப் போட்டியில் பாராட்டுப்பரிசு. - 1985

6. ஆக்க உரிமைகள் வியாபாரக் குறிகள் பதிவகம் நடத்திய சிறுகதைத் தொகுதிக்கான போட்டியில் முதற்பரிசு ரூ 5,000.00 - 1985.

7. யாழ். இலக்கிய வட்டம் நடத்திய கனக. செந்திநாதன் நினைவுக் குறுநாவல் போட்டியில் பாராட்டுப் பரிசு. - 1985.

8. 1987-88 இல் வெளிவந்த சிறுவர் இலக்கிய நூல்களில் சிறந்த நூல்களுள் ஒன்று என 'பூந்தோட்டம்' கவிதைநூல் இலங்கை இலக்கியப் பேரவையால் பாராட்டப்பட்டது.

9. 1987-88 இல் வெளிவந்த சமய இலக்கிய நூல்களில் சிறந்த நூல்களுள் ஒன்று என 'சைவ விரதங்களும் விழாக்களும்' நூல் இலங்கை இலக்கியப் பேரவையால் பாராட்டப்பட்டது.

10. வீரகேசரி புத்தாண்டுக் கவிதைப் போட்டியில் முதற்பரிசு ரூபா 5,000.00 - 1990

11. வலி கிழக்கு உதவி அரசாங்க அதிபர் பிரிவு நடத்திய புத்தாண்டுக் கவிதைப் போட்டியில் முதற்பரிசு - 1990.



## கோப்பாய் சிவம் - நூல் வெளியீடுகள்

1. கனவுப்பூக்கள் -கவிதைகள்
2. அன்னை பராசக்தி -சமயம்
3. நியாயமான போராட்டங்கள்(ரூ.5,000/= பரிசுபெற்றது)-சிறுகதைகள்
4. இலங்கையில் தமிழ்ப்பத்திரிகைகளும் சஞ்சிகைகளும் -ஆய்வும்தொகுப்பும்
5. வெள்ளோட்டம் (பாராட்டுப் பரிசு பெற்றது) -குறுநாவல்
6. சைவநற்சிந்தனை -வானொலியில் ஒலித்தவை
7. சைவாலயக்கிரியைகள் -சமயம் (இரு பதிப்புக்கள்)
8. சைவாலயங்கள் கிரியைகள் - ஒரு கையேடு
9. சைவ விரதங்கள் - ஓர் அறிமுகம் - சமயம்
10. சைவவிரதங்களும் விழாக்களும் - சமயம் (மூன்று பதிப்புக்கள்)
11. பஞ்சாக்ஷரம் - ச.ப.சர்மாவின் வாழ்வும் பணியும்
12. பூந்தோட்டம் - சிறுவர் பாடல்கள்
13. நொடியும் விடையும்- விடுகதைத் தொகுப்பு(நான்குதொகுதிகள்)
14. ரோஜாப்பூ - சிறுவர் பாடல்கள்
15. பொறுக்கிய முத்துக்கள் - பொன்மொழித் தொகுப்பு
16. என்னாலும் பேசமுடியும் - சிறுவர்க்கான உரைகள்
17. தகவல் வங்கி - பொதுஅறிவு
18. விவாஹசோபனம் - வைதிகவிவாகக்கிரியைவிளக்கம்
19. அக்னிகார்யம் - ஓர் அறிமுகம் -சமயம்
20. யாகமண்டப பூஜை - ஓர் அறிமுகம் - சமயம்
21. விநாயகஷஷ்டி விரதம் -சமயம்
22. ஸ்கந்தஷஷ்டி விரதம் -சமயம்
23. சம்ஸ்கிருத ஸ்வபோதினி - தேவநாகரி - பாடநூல்
24. இந்துநாகரிகம், இந்துசமயம் A/L வினாவிடை (இரு பாகங்கள்)
25. கும்பாபிஷேக திரவிய சூடாமணி -பட்டியல்
26. ஆற்றல் பல நல்கும் ஆஞ்சனேயர் -சமயம்
27. தார்மீகக் கோபங்கள் -சிறுகதைகள்
28. அருள் வழங்கும் மாரியம்மன் -சமயம்
29. இதுதான் இந்துமதம் -சமயம்
30. பஞ்சாக்ஷர தீபம் - வரலாறு

31. அக்ஷரானந்தம் - மொழி
32. வளரும் சிறுவர்க்கு வாழும் இந்து சமயம் பாகம் 1 இருபதிப்புக்கள்
33. வளரும் சிறுவர்க்கு வாழும் இந்து சமயம் பாகம் 2 இரு பதிப்புக்கள்
34. சங்கடஹர சதுர்த்தி விரத பூஜா
35. சந்தோஷிமாதா விரதம்
36. மனித உடலும் ஆலயமும் - வியத்தகு உண்மைகள்
37. துக்கம் துடைக்கும் துர்க்காதேவி
38. விவாஹ சோபனப் பாடல்கள்
39. வீரகாவலர் வீரபத்திரரும் பத்திரம் நல்கும் பத்திரகாளியும்.
40. மந்திரங்கள் கூறும் மறைபொருள் விளக்கங்கள்
41. விவாஹ மங்கள கிரியா பத்ததி
42. ஆலய அமைப்பு..... ஆண்டவன் இருப்பு...... அருட்சிறப்பு
43. காப்பதில் வல்ல கருட பகவான்
44. ஆன்மீக மங்கலம் அறுபது
45. முன்னோர் கடமையும் முத்தல யாத்திரையும்
46. நவக்கிரக மஞ்ஜரி - நவக்கிரகங்கள் பற்றிய தகவல் தொகுப்பு
47. வரலக்ஷ்மி விரதம்
48. நலம் பல நல்கும் நாராயணர்
49. மறுமலர்ச்சி தந்த பஞ்சாக்ஷரம்
50. சிவானந்த விஜயம்



# புறம்

## இந்துவாக வாழ்வோம்



## இந்துசமயக் களஞ்சியம்

## இந்துக்களின் கையேடு



எழுந்திரு!
விழித்திரு!
கோரியகருமம் நிறைவேறும்வரை
உழைத்திரு!

**ப்ர காயத்ரேணகாயத பவமானம்**

"புனிதனும் புனிதப் படுத்துவோனும் ஆகிய பரமாத்மாவை காயத்ரீ மந்திர கானம் செய்து போற்றுவீர்"

**ரிக்வேதம் 9.60.1**

ஓம் || மேதா தேவீ ஜுஷமாணா ந ஆகாத் விச்வாசீ

பத்ரா ஸுமனஸ்யமானா | த்வயா ஜுஷ்ட்டா நுதமானா

துருக்தான் ப்ருஹத்வதேம விததே ஸுவீரா: || 1 ||

1. எங்கும் நிறைந்தவளும், மங்கலத்தைத் தருபவளும், நன்மை செய்பவளும், நம்மிடம் மகிழ்ச்சி கொண்டவளும், அறிவின் தேவியும் ஆகிய கலைமகள் நம்மிடம் வருவாளாக! தேவீ, நீ வருமுன்பு பயனற்ற பேச்சுகளில் மகிழ்ந்திருந்த நாங்கள் உனது ஆசிகளால் நல்லறிவு பெற்று, வீரம் நிறைந்த மக்களுடனும் சீடர்களுடனும் மேலான உண்மைகளைப் பேசும் திறன் பெற்றோம்.



# முத்தான மொழிகள்

உங்கள் இதயங்களிலும் எண்ணங்களிலும் நீங்கள் செய்யும் தீர்மானங்களிலும் ஒற்றுமை இருக்கட்டும். ஒன்றுகூடி பரஸ்பரம் ஒத்துழைத்து வாழும் வலிமை உங்கள் எல்லோரிடமும் ஸ்திரமாக இருக்கட்டும். - **ரிக் வேதம் பத்தாவது மண்டலம்.**

உணவிலும் தண்ணீரிலும் அனைவருக்கும் சம உரிமை உண்டு. வாழ்க்கை எனும் தேரின் நுகத்தடி அனைவருடைய தோள்களிலும் சமமாகவே அமர்ந்திருக்கிறது. எல்லோரும் ஒருவரை ஒருவர் ஆதரித்துக்கொண்டு தேர்ச்சக்கரத்தின் விளிம்பை மையத்துடன் இணைக்கும் கம்புகளைப்போல ஒருமித்த நோக்குடன் வாழவேண்டும்.

- **அதர்வண வேதம்.**

ஒழுக்கமற்றவன் அவனுடைய பரம்பரையை மட்டும் வைத்து மரியாதைக்குரியவன் ஆகிவிடமாட்டான். ஒருவனுடைய பிறப்பு எப்படிப்பட்டதாயினும் ஒழுக்கத்தை ஒட்டியே ஒருவனுக்கு மரியாதை கிட்டுகிறது.

சுய கட்டுப்பாடு, பொறுமை, தியாகம், அன்னதானம், தூய்மையான திருமணங்கள், தவம், பிரம்மத்தை உணர்ந்த தன்மை, மற்றவர்களைத் திருப்தி செய்யும் குணம் இந்த எட்டுக் குணங்கள் எந்தக் குடும்பங்களில் எப்போதும் நிலவுகின்றனவோ அவையே உயர் குடும்பங்கள். பசுக்களும் செல்வமும் மிகுந்திருந்தாலும் நன்னடத்தையும் நற்குணமும் இல்லாத குடும்ாங்கள் உயர்ந்த குடும்பங்கள் ஆகமாட்டா.

- **விதுர நீதி உத்யோக பர்வம் மஹா பாரதம்.**

அநுஷ்டானமுள்ள பிராமணன் காயத்திரி மந்திரத்தை மாத்திரம் அறிந்தவனாக இருந்தபோதிலும் அவன் உயர்ந்தவன். அநுஷ்டானங்களைக் கடைப்பிடிக்காத பிராமணன் மூன்று வேதம் அறிந்தவனாக இருந்த போதிலும் அவன் உயர்ந்தவன் அல்லன். - **மனுதர்ம சாஸ்திரம்.**

**"வேதங்களே நமது ஆசனம். வேதங்களே நமது பாதுகை வேதங்களே நமது ஊர்தி. வேதங்களே நமது காற்சிலம்பு வேதங்களே நமது கோவணம். வேதங்களே நமது திருக்கண் வேதங்களே நமது திருவாக்கு. வேதங்களே நமது திருமேனி வேதங்களே நமது ஆணையாகிய சக்தியின் வடிவமாய் ஆன்மாக்களுக்கு விதிவிலக்குகளை அறிவித்து, அறிவு கொளுத்தி, நன்னெறியில் நிறுத்திப் போகம் அளித்து, பின் ஆணவ மலக் கட்டினை அவிழ்த்து, வீடுபேற்றை அளிக்க வல்லவை.நான்கு வேதங்களே நமது செங்கோலும் ஆகும்"**

~ பரஞ்சோதி முனிவர்
திருவிளையாடற்புராணம்.



# இந்து சமயத்தின் மூல வேர்கள்.

இந்துசமயம் பற்றி அறியமுற்படும்போது 'அதன் தோற்றமும் வளர்ச்சியும்' என்று ஒரு தலைப்பு எடுத்துக்கொள்ளப்பட முடியாது. அது தோன்றவுமில்லை. வளரவும் இல்லை. என்றும் உள்ள சனாதன தர்மமே இந்து சமயம். அது தேயாமல் வளராமல், என்றும் இளமையாக, என்றும் புதிதாக, எப்போதும் உள்ளபடியே இருந்துகொண்டிருக்கிறது. அதை அனுசரிப்போராகிய இந்துக்கள்தான் காலத்துக்குக் காலம் வளர்கிறார்கள் - தேய்கிறார்கள் - பல இன்னல்களைச் சந்திக்கிறார்கள் - மீண்டும் புதிதாக எழுச்சி பெறுகிறார்கள்.

யாரால் எப்போது தோற்றுவிக்கப்பட்டது என்ற கேள்விக்கு அவசியமில்லை. அதற்கு யாரும் விடை பகரவும் முடியாது. என்றும் எங்கும் உள்ள இறைவனின் மூச்சுக் காற்றாக என்றும் எங்கும் பரந்திருக்கும் வேதங்களே சனாதன தர்மத்தின் மூல வேர். "வேதோகில தர்ம மூலம்" என வேதங்களே ஓதிநிற்பதற்கிணங்க அந்த வேதங்களாகிய மூலவேரிலிருந்து கிளைத்த பக்க வேர்களுடனும் பரந்து விரிந்த பல்வேறு சாஸ்திரங்கள் மற்றும் அறிவு நூல்களாகிய கொப்புகள், கிளைகளுடனும் விழுதுகளுடனும் இலைகள், பூக்கள், பழங்களுடனும் பரந்து விரிந்து நிற்கும் சனாதன தர்மமாகிய அந்தப் பெருமரத்தின் குளிர்நிழலின்கீழ் நாம் நிற்கிறோம். அதற்குப் பின்னாளில் சூட்டப்பட்ட இந்துசமயம் என்ற பெயர் இனிதாக நிலைத்திருப்பதால் நாம் அனைவரும் அதனை ஏற்றுக்கொண்டிருக்கிறோம்.

வேதமாகிய மூல வேரைத் தொடர்ந்து எழுந்த பக்க வேர்கள், கிளைகள் முதலிய ஏனைய நூல்களையும் வரிசைக்கிரமமாகத் தெரிந்துகொள்வது நமது சமயப் பரப்பைப் புரிந்துகொள்ள உதவும்.

ஏனைய சமயத்தவர்கள் உங்களைப் பார்த்து, "எங்கள் சமயத்திற்கு மூலநூல் என ஒன்றை நாங்கள் கூறுகின்றோம். எங்கள் தெய்வம் என ஒருவரைக் கூறுகின்றோம். பைபிள், குர்ஆன் என்பதுபோலவும் கர்த்தர், அல்லா என்பது போலவும் உங்கள் சமயத்திற்கு ஒரு கடவுளின் பெயரையும் ஓர் அடிப்படை நூலையும் கூற முடியுமா?" என்று கேட்கும்போது உங்களிடம் ஏதோ ஒரு தவறு இருப்பது போல நீங்கள் ஏன் கூனிக் குறுகி நிற்கிறீர்கள்? வேதமே நமது மூல நூல் என்றும் குணம் குறியும் உருவும் பெயரும் இல்லாத பரம்பொருளே நமது கடவுள் என்றும் கூற ஏன் வெட்கப்படுகறீர்கள்? அல்லது இன்னொரு வகையில் அவர்களைப் பார்த்து நீங்கள் ஏன் எதிர்க் கேள்வி கேட்கக்கூடாது இப்படி. - "எங்கள் சமயத்தில் எண்ணற்ற கடவுளர்கள் இருக்கிறார்கள், எங்கள் சமயத்திற்கு எத்தனையோ அடிப்படை நூல்கள் இருக்கின்றன. ஆனால் உங்கள் சமயத்திற்கு ஒரே ஒரு கடவுளும் ஒரே ஓரு நூலும் தானே உள்ளது"

(திருப்பரங்குன்றம் ஸ்கந்தகுரு வித்யாலய ஆசிரியர் பிரம்மஸ்ரீ ஜி. கார்த்திகேய சிவம் அவர்களின் கருத்து இது)

# இந்து சமயத்தின் வேர்களும் விழுதுகளும் ~ ஒரு வரலாற்றுப் பார்வை.

பொதுவாக இந்து சமயத்தின் அடிப்படை நூல் வரிசையைப் பின்வருமாறு கூறுவர்

| | | |
|---|---|---|
| வேதங்கள், | - 4 | (ரிக்) இருக்கு, யஜுர், சாமம், அதர்வம் |
| வேதாங்கங்கள் | - 6 | சிட்சை, வியாகரணம், சந்தசு, ஜோதிடம், நிருக்தம், கல்பம். |
| உபாங்கங்கள் | - 4 | மீமாம்சை, நியாயம், புராணம், தர்மசாஸ்திரம். |
| உபவேதங்கள் | - 4 | ஆயுர்வேதம், தனுர்வேதம், கந்தர்வேதம், அர்த்தசாஸ்திரம் |

இப்பதினெட்டு நூல்களும் மிக அடிப்படையான முக்கிய நூல்கள். இதில் முதல் பதினான்கையும் ஒருங்கிணைத்து சாங்கோபாங்கமாக வேதங்களைக் கற்றல் எனக் கூறுவதுண்டு. சாங்கோபாங்கம் என்பது ச அங்க உப அங்க எனப் பிரியும். அதாவது ஆறு வேதாங்க நூல்களுடனும், உபாங்க நூல்களுடனும் வேதங்களைக் கற்றல்.

நால்வேதங்களும் தனித்தனியே ஒவ்வொன்றும் நான்கு பிரிவுகளைக் கொண்டமைந்தவை. சம்ஹிதைகள், பிராமணங்கள், ஆரண்யங்கள், உபநிடதங்கள் என்பனவே அவை. யஜுர்வேதம் இரண்டு உட்பிரிவுகளைக் கொண்டது. சுக்ல யஜுர், கிஷ்ண யஜுர் என்பனவே அவை.

| | சம்ஹிதைகள் | பிராமணங்கள் | ஆரணியங்கள் | உபநிடதங்கள் |
|---|---|---|---|---|
| இருக்கு | 21 சாகைகள் | 2<br>ஐதரேயம், சாங்காயனம் | 2 | 21 |
| யஜுர் | 109 சாகைகள் | | | 109 |
| சுக்ல யஜுர் | | 1<br>சதபதப் பிராமணம் | 1 | |
| கிருஷ்ணயஜுர் | | 2<br>தைத்திரீய, மைத்திராயணி | 2 | |
| சாம | 1000 சாகைகள் | 5<br>தாண்ட்ய (பஞ்சவிம்ச), ஷட்விம்ச, சாந்தோக்ய, அற்புதஆர்ஷேய, உபநிஷதபிராமணம். | 5 | 1000 |
| அதர்வ | 50 சாகைகள் | 1<br>கோபதபிராமணம் | 1 | 50 |
| மொத்தம் | 1180 | 11 | 11 | 1180 |

ஒவ்வொரு பிராமணங்களையடுத்தும் ஒவ்வொரு ஆரண்யங்கள் வருகின்றன. சம்ஹிதைகளின் எண்ணிக்கையளவு உபநிடதங்களும் உள்ளன. என சுவாமி சிவானந்தர் கூறுகிறார்.

வேதாங்கங்கள் ஆறும் வேதங்களின் அங்கங்கள் என உருவகிக்கப்படுகின்றன.

சிட்சை - இது வேதத்தின் கண். உச்சரிப்புக்களின் இலக்கணம்.
வியாகரணம் - இது வேதத்தின் .................. எழுத்திலக்கணம்.
சந்தஸ் - இது வேதத்தின் .............. யாப்பிலக்கணம்.
நிருக்தம் - இது வேதத்தின் ............. சொல்லிலக்கணம்.
ஜோதிஷம் - இது வேதத்தின் .............. சோதிட சாஸ்திரம்.
கல்பம் - இது வேதத்தின் ............... இது பல உட்பிரிவுகளைக் கொண்டது. நூல் ஆராய்ச்சிக்கு உதவும் பிரிவுகள் பல. வாழ்க்கை நெறிகளைப் போதிப்பவை சில. வேத வேள்விகளுக்குரிய விளக்கங்களும் வேள்விகளுக்கான குண்ட அமைதிகள் பற்றிய விபரங்கள் தரும் பகுதிகள் சில.

கிரந்த சூத்திரங்கள், சுல்வ சூத்திரங்கள், கிருஹ்ய சூத்திரங்கள், ப்ராதிசாக்கியங்கள், பதபாதங்கள், கிரமபாதங்கள், உபலேகங்கள், அனுக்கிரமணிகள், தைவாட்சம்ஹிதங்கள், பரிசிஷ்டங்கள், பிரயோகங்கள், பத்தாதிகள், காரிகைகள், கீலங்கள், வியூகங்கள்.

இங்குள்ள கிருஹ்ய சூத்திரங்களிலிருந்தே தர்ம சூத்திரங்களும் அவற்றின் வழி தர்ம சாஸ்திரங்களும் எழுந்தன. வாத்ஸ்யாயனரின் காமசூத்திரமும் சாணக்கியர் எனும் கௌடில்யரின் அர்த்தசாஸ்திரமும் இவற்றினடிப்படையில் எழுந்ததே.

## கல்ப சூத்திரங்கள்

இருக்கு - ஆஸ்வலாயன, சாங்காயன, சாம்பவ்ய
சுக்ல யஜுர் - காத்யாயன, பாரஸ்கர
கிருஷ்ணயஜுர் - ஆபஸ்தம்ப, ஹிரண்ய கேசி, போதாயன, பாரத்வாஜ, மானவ, வைகானச, காடக
சாம - கோபிலா, கதிரா
அதர்வ - வைதான, கௌஷிகா.

## ஸ்மிருதிகள் (தர்மசாஸ்திரங்கள்) 18

மனு, யாஜ்ஞவல்கிய, பராசர, விஷ்ணு, தக்ஷ, சம்வர்த்தா,வியாச, ஹரீத, சதபத, வசிஷ்ட, யம, ஆபஸ்தம்ப, கௌதம, தேவால, ஷாங்தலிகிதா, உஷாண, அத்ரி, சௌனக.

இவற்றில் முதல் மூன்றும் முக்கியமானவை.

அடிப்படை நூல்களைச் சுவாமி சிவானந்தர் அவர்கள் இன்னொரு வகையில் வகுப்பார்.அவருடைய வகுப்பிலே இவற்றுள் சில நூல்களுக்குப் பதிலாக, இவற்றுக்குப் பின்வந்த சில நூல்கள் முக்கியத்துவம் பெறுகின்றன.

ஆறு சாஸ்திர நூல்களும் நான்கு லௌகிக நூல்களுமாக பத்து நூல்கள் அடிப்படையானவை.

சாஸ்திரநூல்கள் ஆறு: **சுருதிகள் (வேதங்கள்),**
**ஸ்மிருதிகள் (தர்மசாஸ்திரங்கள்),**
**இதிஹாசங்கள்**
**புராணங்கள்**
**ஆகமங்கள்**
**தரிசனங்கள்**

லௌகிக நூல்கள் நாக்கு: **சுபாஷிதங்கள் (நீதி நூல்கள்)**
**காவியங்கள்**
**நாடகங்கள்**
**அலங்காரங்கள் (இலக்கண நூல்கள்)**

மனித வாழ்க்கைக்கான அறிவுரைகள் மூன்று வகைப்படும்.

(காரியங்களைச் சாதித்துக்கொள்ள சாம, தான, பேத, தண்ட எனும் நான்கு உபாயங்கள் கைக்கொள்வது போல)

அவை,

1. **பிரபு சம்ஹிதம்:** எஜமானுடைய கட்டளைகளாக அமைந்திருப்பவை - வேதங்கள், தர்மசாஸ்திரங்கள்

2. **சுஹிருத் சம்ஹிதம்:** நண்பனுடைய போதனைகளாக அமைந்திருப்பவை - இதிஹாசங்கள், புராணங்கள், நீதி நூல்கள்.

3. **காந்தா சம்ஹிதம்:** மனைவியினுடைய அறிவுரை போன்றவை - காவியங்கள், நாடகங்கள்.

இங்கு பார்த்த நூல்கள் பிரார்த்தனைகள், யாகங்கள், வழிபாடுகள், விரதங்கள், இல்லறக் கடமைகள் முதலியவற்றைச் சொல்கின்றன.

இருக்குவேதம் பிரார்த்தனைகளையும், யஜுர்வேதம் யாக வழிபாடுகளையும், சாமவேதம் இசைப் பாடல்களையும், அதர்வவேதம் லௌகிக வாழ்க்கைத் தேவைக்கான வழிபாடு முதலியவற்றையும் விபரிக்கின்றன.

இன்னொரு வகையில், நால்வேதங்களின் நான்கு பிரிவுகளான **சங்கிதைகள்** பிரார்த்தனை மந்திரங்களையும், **பிராம்மணங்கள்** யாகங்களுக்கான விபரங்களையும், **ஆரணியங்கள்** இவற்றின் உட்பொருள் விளக்கங்களையும், **உபநிடதங்கள்** தத்துவங்களையும் தருகின்றன.

வேதாங்கங்களில் **சிட்சை, வியாகரணம், சந்தசு, நிருக்தம்** நான்கும் வேதங்களை விளங்கிக்கொள்ளத் துணைபுரிகின்றன. **ஜோதிஷம்** நல்ல நாளையும் இடத்தையும் தெரிந்து நல்ல வாழ்க்கை வாழத் துணை செய்கிறது. **கல்பம்** பல்துறை அம்சங்கள் கொண்டது. அதன் முக்கிய பகுதி தர்ம சாஸ்திரங்களுக்கு ஆதாரமாக அமைந்தது.

**தர்மசாஸ்திரங்கள்** வேத உபதேசங்களைச் சட்டங்களாக வகுத்தும் விரித்தும் எழுதப்பட்டன. வாழ்க்கை நெறிகளும் சம்ஸ்காரங்கள் என்னும் இல்லறக் கிரியைகளும் அவற்றில்தான் காணப்படுகின்றன. **ஆபஸ்தம்பர், போதாயனர்** முதலிய சூத்திரகாரரும், **மநு, யாஜ்ஞவல்கியர்,** பராசரர் முதலிய சாஸ்திரகாரரும் நெறிப்படுத்திய இச்சட்டதிட்டங்கள் பின்னரும் **வைத்தியநாத தீக்ஷிதர்** என்பவரால் எழுதப்பட்ட வைத்தியநாத தீக்ஷிதீயம் என்ற நூலில் தெளிவுபடுத்தப்பட்டது.

தர்மசாஸ்திர நெறிமுறைகளும் வேத வழிபாட்டு முறைகளும் **இதிகாச, புராணங்களில்** கதை வடிவில் சுவையாகவும் எளிமையாகவும் சொல்லப்பட்டன. **இன்னும்** எளிமையும் சுவையும் மிகுந்தனவாக நீதி நூல்களும் **காவியங்கள், நாடகங்களும்** எழுதப்பட்டன.

**வால்மீகிமுனிவர்** அருளிய **இராமாயணமும் வியாசமஹரிஷியின் மஹாபாரதமும்** இதிஹாசங்கள் ஆகும். **சிவரஹஸயம்** என்பதும் இதிஹாசங்களில் ஒன்றாகச் சொல்லப்படுவதுண்டு. புராணங்கள் மஹாபுராணங்கள், உப புராணங்க்ள் என இருவகைப்படும்.

மஹாபுராணங்கள் 18 - பிரமம், பதுமம், விஷ்ணு, வாயு, பாகவதம், நாரதீயம், மார்க்கண்டேயம், அக்னி, பவிஷ்யம், பிரம்மவைவர்த்தம், வராகம், லிங்கம், ஸ்காந்தம், வாமனம், கூர்மம், மத்ஸ்யம், கருடம், பிரமாண்ட புராணங்கள். இதில் வாயுபுராணத்திற்குப் பதிலாக சிவபுராணம் என்பதும் சொல்லப்படுகிறது.

உபபுராணங்கள் 18 - சனற்குமார, நரசிம்ம, நந்த, சிவதர்ம, துர்வாச, நாரதீய, கபில, வாமன, உசனஸ், மானவ, வருணகவி, மகேஸ்வர, சாம்ப, சௌர, மரீச, பார்க்கவ புராணங்கள்.

புராணங்கள் எப்படி அமைந்துள்ளன என அவற்றின் இலக்கணங்களை வகுத்த பிற்கால அறிஞர்கள் மஹாபுராணங்களுக்குரிய தசலக்ஷணங்கள் எனப் பத்து இலக்கணங்களைக் கூறுகின்றனர். அவை சர்க்கம் (படைப்பு), பிரதிசர்க்கம்(மீள்படைப்பு), வம்சம்(தெய்வ பரம்பரை), மன்வந்தரம்(மனுக்களின் காலம்), வம்சானுசரிதம்(அரசர்களின் வரலாறு), விருத்தி(தொழில்), ரக்ஷா(தெய்வங்களின் அவதாரம்), முக்தி(வீடுபேறு), ஹேது(அவ்யக்தமான உயிர்), அபாஸ்ரய(பிரமம்) என்பனவாகும். இவற்றில் முதல் ஐந்தையும் பஞ்சலக்ஷண மரபு எனக்கூறி அவற்றை உப புராணங்களுக்குரியன என்பர்.

தர்மசாஸ்திரங்களின் அடிப்படையில் தர்மார்த்த காம்ய மோக்ஷமென்னும் (அறம், பொருள், இன்பம், வீடு) புருஷார்த்தங்களை நாடி (உறுதிப்பொருள்கள்) பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர எனும் நால்வருணத்தைச் சேர்ந்தவர்களும்

ஒழுங்குபடுத்தப்பட்ட சமூக வாழ்க்கையில் பிரம்மசர்யம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் எனும் நான்கு ஆசிரம நெறிமுறையில் ஒவ்வொரு தனிமனிதனும் வாழவேண்டிய முறைகளை இவ்விதிஹாச புராணங்கள் வகுத்துக் காட்டின.

வேதாங்கங்களான சிட்சை, வியாகரணம், சந்தஸ் முதலிய இலக்கண நூல்களைக் கற்றுணர்ந்தும் மக்கள் வழக்காகிய **பிராகிருத** மொழியை (புரா முன்பு, க்ருதம் - செய்யப்பட்டது - பிராகிருதம்) நன்கு அவதானித்தும் **சம்ஸ்கிருதம்** (சம் - நன்கு, க்ருதம் - செய்யப்பட்டது - சம்ஸ்கிருதம்) என நன்மொழியாக்கித் தேவபாஷை எனமிளிரவைத்த **பாணினி என்னும் சூத்திரகாரரும்** அதற்கு வழிநூல் அமைத்த **வாக்கியகாரர் வரருசியும்**, விரிவுரை எழுதிய **பாஷ்யகாரர் பதஞ்ஜலியும்** போற்றுதலுக்குரியவர்கள்.

காந்தா சம்ஹிதை என்ற அடிப்படையில் அமையும் சுவையான காவிய நாடகங்கள் படைத்தோரில் மிகப்பழையவர் அஷ்வகோஷர். காளிதாசர், பாசர், பட்டர், பாரவி, மாகன், ஹர்ஷர் முதலிய பல கவிஞர்கள் இவ்வாறு தோன்றினர். புத்த சரிதம், குமாரசம்பவம், ரகுவம்சம், கிராதார்ஜுனீயம், சிசுபாலவதம், நைஷதம், சாகுந்தலம், மேகதூதம் முதலியன இவர்களால் படைக்கப்பட்ட காவியங்களுட் சிலவாகும்.

வேதங்களில் இயற்கை வழிபாடு பெரிதும் பேசப்படுகிறது. இயற்கையோடு இணைந்தும் இசைந்தும் வாழ்ந்த அன்றைய நம் முன்னோர், காணும் இயற்கை யாவும் கடவுளாகக் கண்டு போற்றிப் பாடினர். இயற்கையில் மறைந்து நிற்கும் இறைவனுக்கு அக்கினியினூடாக ஆகுதிகள் வழங்கி மகிழ்ந்தனர், மகிழ்வித்தனர். இயற்கைப் பொருட்களையெல்லாம் அக்கினியில் சொரிந்து மகிழ்ந்தனர். அனைவரும் சேர்ந்து இசையோடு பாடித்துதித்து வேண்டுதல்களைச் செய்தனர்.

**அகத்திணையும், புறத்திணையும்** என்று காதலும் போருமாக வாழ்ந்த சங்கத் தமிழ் மக்களிடையேகூட இயற்கையோடிணைந்த ஐவகை நிலங்களான **குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை** என்னும் இடங்களுக்குகந்த வகையில் முருகன், திருமால், வருணன், இந்திரன், கொற்றவை என்போரையும் பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவனையும் வணங்கி ஆடிப்பாடி மகிந்திருந்தனர். **கொடிநிலை, கந்தழி, வள்ளி** என அடையாளச் சின்னங்களையும் நீத்தார் பெருமையையும் (நடுகல்) வழிபட்டனர். பந்தலிட்டு மெழுக்கிட்டுப் பூவும் நீரும் தூவி வழிபாடியற்றினர்.

ஆலயங்களை உருவாக்கி, அங்கு திருவுருவங்களை உரிய முறையில் அமைத்து ஸ்தாபித்து வழிபாடுசெய்யும் முறைகள் **ஆகமங்களில்** காணப்படுகின்றன. வேதங்களைப் பொதுநூலாக ஏற்கின்ற அனைத்து இந்து சமயப் பிரிவுகளும் ஆகமங்களைத் தமது சிறப்பு நூல்களாக ஏற்கின்றன. ஆகமங்களின் சிறப்புக்கள் காரணமாக இவை பரசுருதி, சுவதந்திரம் என அழைக்கப்படுகின்றன.

சிவாகமங்கள் இருபத்தெட்டு ஆகும். **உபாகமங்கள்** நாரசிங்கம் அல்லது மிருகேந்திரம் முதல் விசிவான்மகம் வரை இருநூற்றேழு. ஆகமங்கள் **சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞான பாதம்** என நான்காக வகுக்கப்பட்டுள்ளன.

முதலிரண்டும் சாதாரண மக்களுக்குரிய வழிபாட்டு முறைகளையும் தொண்டுகளையும் சொல்ல, மற்றிரண்டும் உள்ளத்தினுள்ளே உயர்நிலை வழிபாடு செய்யவும் உணர்வு நிலையில் இறைவனை அறிந்து ஆராதனை செய்யவும் அறிவு நிலையிலே ஆண்டவனை ஆராய்ந்து பார்க்கவும் வகை செய்தன. கர்ஷணம் முதல் பிரதிஷ்டை உத்சவம் பிராயச்சித்தம் பூஜைமுறை எல்லாம் கூறப்பட்டு இருக்கின்றன.

சிவாகமங்கள் இருபத்தெட்டும் வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| 1. காமிகம் | 2. யோகஜம் | 3. சிந்தியம் | 4. அஜிதம் |
| 5. தீப்தம் | 6. சூக்ஷ்மம் | 7. சஹஸ்ரம் | 8. அம்சுமான் |
| 9. சுப்ரபேதம் | 10. விஜயம் | 11. நிச்வாசம் | 12. ஸ்வாயம்புவம் |
| 13. அநிலம் | 14. வீரம் | 15. ரௌரவம் | 16. மகுடம் |
| 17. விமலம் | 18. சந்திரஞானம் | 19. பிம்பம் | 20. ப்ரோத்கீதம் |
| 21. லளிதம் | 22. சித்தம் | 23. சந்தானம் | 24. சர்வோக்தம் |
| 25. பாரமேஸ்வரம் | 26. கிரணம் | 27. வாதுளம் | 28. காரணம் |

இவற்றுள் முன் பத்தும் (10) சிவபேதம் எனப்படும்.
பின் (18) பதினெட்டும் உருத்திரபேதம் எனப்படும்.

சிவாகமங்கள் போலவே வைணவ சம்பிரதாயத்திற்கு **வைகானசங்களும் 108 பாஞ்சராத்திரங்களும்** விதிநூல்களாயமைகின்றன. சாக்த நெறிக்கு எழுபத்தேழு **தந்திரங்கள்** விதிநூல்களாக அமைகின்றன. ருத்ரயாமளம், மேருதந்திரம், டமாரதந்திரம், ஞானார்ணவம், குலசூடாமணி முதலியன முதல் நிலையிலும் சனகம், சனாதனம், சனற்குமாரம், சுகம், வசிட்டம் முதலியன உப நிலையிலும் சக்தி வழிபாடு பற்றிக் கூறுகின்றன. பாஞ்சராத்திரத்தின் ஐந்து பிரிவுகளாக அகிர்புத்னியம், ஈஸ்வரம், பௌஷ்கரம், பரமம், பாத்மம் என்பன காணப்படுகின்றன.

ஆகமங்களின் வழிநூல்களாய் எழுந்த **சிற்பரத்தினம், மயமதம்** முதலிய சிற்ப நூல்கள் அளவுப்பிரமாணங்களுக்கேற்ப ஆலயங்களை அமைப்பது பற்றியும், இறைவனின் திருவுருவங்கள் அமைப்பது பற்றியும் எடுத்துக் கூறுகின்றன. மற்றொரு வகையில் ஆகமங்களின் வழிநூல்களாயமைந்த **கிரியா பத்ததிகள்** ஆலயங்களில் கிரியை வழிபாடுகளை நடத்துவது பற்றித் தெரிவிக்கின்றன.

சிற்பக் கலையுடன் இணைந்து **ஓவியக் கலையும்** நமது ஆலயங்களில் வளர்ந்து பரந்து மனம் கவர்ந்து நிறைவினைத் தருகின்றன. இந்த ஓவியக் கலைகளின் அடிநாதத்தை புராணங்களில் நாம் கண்டுணரலாம். ஆகமங்களிலும் வர்ணம் தீட்டுதல் பற்றிய குறிப்புக்களைக் காணலாம்.

சாமவேதத்தின் அடிப்படையிலும் வேதாங்கங்களுள் ஒன்றான **கந்தர்வ வேதத்தின்** அடிப்படையிலும் பரத முனிவரின் **நாட்யசாஸ்திரம்**, மற்றும் **அபிநவ தர்ப்பணம்** முதலிய கலைநூல்கள் தோன்றிக் கலைக்கு இலக்கணம் வகுக்க நடனம், இசை முதலிய கலைகள் வளரலாயின. மேளகர்த்தா ராகங்கள் **வேங்கடமகியால்** வகுக்கப்பட புரந்தரதாசர், **அண்ணமாச்சாரியார்** முதலியோரும் சங்கீத் மும்மூர்த்திகள் ஆகிய தியாகராஜ சுவாமிகள், முத்துஸ்வாமி **தீக்ஷிதர்,**

**ஸ்யாமா சாஸ்திரிகள்** ஆகியோரும் **சதாசிவப் பிரம்மேந்திரரும் சுவாதித்திருநாள் மகாராஜாவும் அருணாசல கவியும் கோபாலகிருஷ்ண** பாரதியும் பாபநாசம் **சிவனும்** இவர்களைப்போல இன்னும் பலரும் சங்கீதக் கலையை வளர்த்து வருகின்றனர். இதேபோல **பரதநாட்டியமும்** அதுபோன்ற பலவிதமான நாட்டியக் கலைகளும் ஆனந்த நடராஜாவுக்கு அர்ப்பணமாகின்றன.

வேதங்களின் இறுதிப் பகுதியாகிய வேதாந்தமென்னும் உபநிடதங்களின் தத்துவப் பொழிவாக **பிரம்மசூத்திரமும்** அதன் விளக்கமாக **சங்கர பாஷ்யம், இராமானுஜபாஷ்யம், மத்துவ பாஷ்யம், நீலகண்ட பாஷ்யம்** என்பன தோன்றியதும் **அத்வைத வேதாந்தம்**, விசிஷ்டாத்வைத **வேதாந்தம், துவைத வேதாந்தம், சைவ சித்தாந்தம்** என்னும் தத்துவங்கள் மலர்ந்தன.

மஹாபாரத இதிஹாசத்தினுள் இறைவாக்காகவும் தத்துவ ரத்தினமாகவும் விளங்கும் **பகவத் கீதையும்**, முன்னரே உள்ள **உபநிடதங்களும்**, பின்னர் தோன்றிய **பிரம்மசூத்திரமும் பிரஸ்தானத் திரயங்கள்** எனப் போற்றப்படுகின்றன.

வேதங்களைக் கற்றறிந்தபின் அவற்றின் கோட்பாடுகளை ஏற்க மறுத்த உலகாயதம், பௌத்தம், சமணம் முதலிய **அவைதிக தத்துவ தரிசனங்களும்,** வேதங்களை ஏற்கும் முறையில் தத்தமக்குள் மாறுபடும் ஐவகைத் தரிசனங்களாக **சாங்கியம், யோகம், நியாயம், வைசேடிகம், மீமாம்சை** என்பனவும், தனித்துவம் மிக்க **வேதாந்தம், சைவ சித்தாந்தம்** என்பனவுமாக இவ்வாறு தத்துவ தரிசனங்கள் ஒருபுறம் தழைத்தோங்கித் தத்துவ விசாரங்களில் திழைத்தன.

மற்றொரு புறத்தில் சிவனை முதன்மையாகக் கொள்ளும் **சைவமும்**, சக்தியை முதன்மையாகக் கொள்ளும் **சாக்தமும்**, விஷ்ணுவை முதன்மையாகக் கொள்ளும் **வைஷ்ணவமும்** சூரியனை முதன்மையாகக் கொள்ளும் **சௌரமும்**, கணபதியை முதன்மையாகக் கொள்ளும் **காணாபத்தியமும்**, குமரனாகிய முருகனை முதன்மையாகக் கொள்ளும் **கௌமாரமும்** அறுவகைச் சமய நெறிகளாக மலர்ந்து மக்களை நெறிப்படுத்தி வரலாயின.

கேரளாவில் ஆலப்புழையில் எட்டாம் நூற்றாண்டில் தோன்றிய **ஆதிசங்கரபகவத் பாதர்** இவ்வறுவகைச் சமய நெறியை மீளவும் புனருத்தாரணம் செய்து **சிவானந்தலகரி, சௌந்தர்யலகரி** முதலிய பல தோத்திர நூல்களையும் தனிப்பாடல்களான துதிமாலைகளையும் உருவாக்கினார். வேதாந்த தத்துவத்தை நிலைநாட்டிப் பல உரைநூல்களையும் எழுதி சிஷ்யர்கள் பலரை உருவாக்கி நாலாபுறமும் மடங்களை நிறுவி மக்கள் மனத்தில் சமய சிந்தனைகள் வலுப்பெற வழிவகுத்தார்.

வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தம்" என உமாபதி சிவாசாரியார் கூறுவதற்கிணங்க வேத உபநிடதங்களில் மூலவித்துக்களைப் பெற்று, ஆகமாந்தமான ஞானப்பொருளில் விளைந்து ஆகமவழிநூல்களாகிய **அஷ்டப்பிரகரணங்கள்** என எட்டு நூல்கள் தோன்றின. தென்னகத்தில் தமிழில் நிகழ்ந்த அற்புதமாக சிவ பரம்பொருளைத்துதிக்கும் பாடல்களைத் தத்துவங்களையும் உள்ளடக்கித் திருவின்மிக்க நாயன்மார்கள் அருளினர். **பன்னிரு திருமுறைகளாக** வகுக்கப்பெற்ற

அத் தோத்திர நூல்களில் துலக்கமுற்றுச் **சைவசித்தாந்தசாத்திரங்கள்** பதினான்கும் மலர்ச்சிபெற்றன.

நாயன்மார் வரலாறு கூறும் **பெரிய புராணம், திருவாதவூரர் புராணம்** என்பனவும் ஆலய வரலாறுகள் கூறும் **தலபுராணங்களும்** வடமொழிப்புராணங்களின் மொழிபெயர்ப்புக்களாகக் **கந்தபுராணம்** முதலியனவும் இன்னும் **திருவிளையாடற்புராணம்** முதலாய அநேக தமிழ்ப் புராணங்களும் பட்டினத்தார், **அருணகிரிநாதர், தாயுமானவர்,** அபிராமி பட்டர் முதலிய பல்வேறு அடியார்கள் உருவாக்கித் தந்த தோத்திர நூல்களும் நிறைந்து கிடக்கின்றன.

சைவ நாயன்மார்களுக்குச் சமாந்தரமாக வைணவ அடியார்களாகிய ஆழ்வார்கள் பன்னிருவரும் தோன்றி **நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களை** இயற்றி வைணவ சம்பிரதாய பக்தி நெறிக்கு உரமூட்டினர். இந்த கிருஷ்ணபக்தி இயக்கம் அலையலையாக வடநாட்டிலும் எழுந்து பரவியது. பெரியதொரு பக்த பரம்பரை பாரதத்தில் தொடர்கிறது.

நாயன்மார்களின் சொற்கோவில்களுக்கீடாகப் பல கற்கோவில்களைத் தமிழகமெங்கும் ஆறாம் நூற்றாண்டில் **பல்லவ மன்னர்கள்** உருவாக்கினர். அவர்களைத் தொடர்ந்து **சோழர்களும்,** நாயக்கர்களும் தமிழ்நாடெங்கிலும் பாரிய கோவில்களைக் கட்டியெழுப்பினர். முன்பு மரத்தாலும் மண்ணாலும் உருவாகி அவ்வப்போது அழிந்துபோன கோவில்கள்போல அல்லாமல் இவை இன்றளவும் வானுயர்ந்த கோபுரங்களுடன் காட்சியளிக்கின்றன.

அந்தணர்கள் அருமறைகள் ஓத, ஓதுவார்கள் திருமுறைப்பண்கள் ஒலிக்க, இசைவேளாளர்கள் மங்கல வாத்தியங்கள் முழங்க, சிவாசார்யர்கள் சிவாகம நெறிமுறைப்படி கிரியைகளை ஆற்ற, பௌராணிக வித்தகர்கள் புராண படனங்கள் நிகழ்த்த, ஜோதிடத்தின் அடிப்படையில் தர்மசாஸ்திர நெறிமுறையில் இல்லறக் கடமைகளையும் சம்ஸ்காரங்களையும் செம்மையுறக் கடைப்பிடிக்கும் சிவானுபூதிச் செல்வர்கள் வழிபாடியற்றி தர்ம நெறியில் வாழ்ந்து காட்ட, சிவபூமியாகிய ஈழத்திலும், புண்ணிய பூமியாகிய பாரத தேசத்திலும் இணையிலா இந்துமதம் வீறுநடை போட, “மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்” என யாவரும் என்றும் போற்றிப் பாடுதற்கிணங்க உலகெங்கும் உன்னதமாகப் பரந்து விரிந்து நிலைபெற்றோங்கிவரும் இந்துசமய நெறிமுறைகள் கண்டு வானவர்கள், “புவனியில் போய்ப் பிறவாமையினால் நாம் போக்குகின்றோம், இந்தப் பூமி சிவன் உய்யக் கொள்கின்ற ஆறு” என எண்ணி எண்ணி வியப்புற்று நிற்க, நாம் இந்து தர்மம் காத்து இந்துவாக வாழ்வோமாக!



# நன்நெறி (ப்) படர்கொடி

நமது இவ்வுலக நல்வாழ்க்கைக்கான நற்போதனைகளும் வழிகாட்டல்களும் (உபதேசங்களும் வாழ்ந்து காட்டல்களும்) ஆதியிலிருந்து இன்றுவரை படர்கொடியாகத் தொடர்ந்து, படர்ந்து, வளர்ந்து, நிலைபெற்றிருக்கின்றன. அவற்றின் தொடர்பை உணரவைக்கும் ஒரு படமாக அமையும் இதற்கு, நன்னெறியாகிய படர்கொடி எனும் பண்புத்தொகையோடிணைந்த வினைத்தொகை விரிவும், நன்னெறி படர்கின்ற கொடி என்னும் வினைத்தொகை மட்டுமேயான விரிவும் அமைந்து பொருள்தரும் வகையில் இந்த வினோதத் தலைப்பை இட்டிருக்கின்றோம்.

கால வரன்முறையில் எவ்வாறு நன்னெறிகள் நமக்கு வழங்கப்பட்டு வருகின்றன என்பதை அடுத்த தலைமுறையினர் வரலாற்று ரீதியில் உணர்வதற்கு
இது உதவலாம்.




சான்றோராகிய நம் முன்னோர் வாழ்க்கைமுறைகளும், அறிவுரைகளும்.

# இந்து சமயத்தின் சிறப்பான கருத்துக்கள்

இந்து சமயம் ஒருவரால் ஆரம்பிக்கப்பட்டதல்ல.

உண்மைகள் ஒன்றுக்கும் தொடக்கமில்லை. உதாரணமாக ஐந்தும் ஐந்தும் பத்து என்பது உண்மை. இவ்வுண்மை எக்காலத்திலும் நிலை பெற்றது. இதுபோல் இந்து சமயம் சுருதி, யுக்தி, அனுபவங்களுக்கு ஒத்த அநாதியான ஆத்மீக உண்மைகளை அடிப்படையாகக் கொண்டது. ஓர் விஞ்ஞான மெய்ஞ்ஞானம்.

எல்லா மதங்களிலும் உள்ள சமயப் போதனைகள் அனைத்தையும் தன்னுள் அடக்கியிருப்பது.

உலகத்தில் இனிமேல் எத்தனை சமயங்கள் தோன்றினாலும் அவற்றை எல்லாம் தன்னுள் அடக்கக்கூடிய வலிமையுள்ளது.

ஏனைய மதங்களால் கையாளப்படாத கன்மம், மறுபிறப்புண்மை, ஆன்ம இலக்கணம், சகுண நிர்க்குண உருவ அருவ உபாசனை முதலியவற்றைத் தெளிவாக எடுத்துக் கூறுவது.

காலங்களில் அறங் குன்றி, மறந் தலையெடுத்தாடும்போது திருஅவதாரம் ஏற்படும் எனக் கூறுவது.

கடவுளைத் தாயாகவும் தகப்பனாகவும் சிசுவாகவும் கணவனாகவும் தோழனாகவும் அந்தராத்மாவாகவும் வழிபட வழி காட்டுவது.

பெண்மையை இகழாது அதனை உயர்த்திப் பெண்களை வழிபடக் காட்டுவது.

இல்லறத்தாலும் துறவறத்தாலும் இறைவனை அடையலாம் என்று கூறுவது.

மனிதரைக் கட்டுப்பாட்டுக்குட்படுத்தாது சுதந்திரத்துடன் இறைவனை வழிபடச் செய்வது.

நாஸ்திகன் முதல் திவ்வியஞானி வரை அனைவருக்கும் தன்னகத்தே இடங் கொடுப்பது.

முக்தி அடைவதற்கு ஏற்ற மதம் எங்கள் மதம் என்று கூக்குரலிடாது எப்பெயரைக் கொண்டு எங்கு நின்று வழிபடினும் அவை அனைத்தையும் இறைவன் ஏற்றுக் கொள்கின்றான் என்ற சமரசக் கருத்தினை வெளியிடுவது.

ஒவ்வொருவரின் பக்குவத்திற்கேற்ப சரியை, கிரியை, யோகம், ஞானம் அல்லது பக்தி மார்க்கம், ஞான மார்க்கம் முதலிய வழிகளில் நின்று கடவுளை அடைய இடங் கொடுப்பது.

இந்து சமயத்தின் துவைத, விசிட்டாத்வைத, அத்வைத சித்தாந்தங்கள், உலகத்திலுள்ள எல்லா தத்துவ சாஸ்திரங்களையும் தம்முள் அடக்கி நிற்கக்கூடியன.

*சமய அனுஷ்டானங்களும் சித்தாந்தங்களும் ஒன்றுபட்டு நிற்பது.*

*தற்கால விஞ்ஞான சாஸ்திர முடிவுகளுடன் முரண்படாத முடிவுகளை உடையது.*

*இந்து சமயம் ஒரு சனாதன தர்மம். (சநாதனம் - அழிவற்றது அல்லது ஆதியந்தம் இல்லாதது)*

“இதுதான் வழி விரும்பினால் வா! அல்லது போ” என்று யாரையும் புறக்கணிக்கும் போக்கு இந்துமதத்தில் இல்லை. “இறைவனிடம் செல்ல எத்தனையோ வழிகள் உண்டு. நீ விரும்பிய ஒரு வழியில் செல்” என வழிப்படுத்துகிற சிறப்பு இந்து மதத்தில்தான் உண்டு.

நடந்து செல்கின்ற மனிதன் வாகனங்களைக் கண்டுபிடித்து அவற்றில் பயணம் செய்வதனால் துரிதமுன்னேற்றம் கிடைத்தது போல சமயவழிநடக்கும் ஆன்மீகவாதிகளுக்கும் காலத்தோடொட்டிய நவீன வளர்ச்சிகளைச் சமய வளர்ச்சிக்குப் பயன்படுத்தும் பரந்த மனப்பான்மை இந்து மதத்திலுண்டு.

ஆனால், இத்தகைய சுதந்திர இயல்பைத் தவறாகப் பயன்படுத்தும் நம்மவர்கள் சிலரின் நடைமுறைதான் இந்துசமயம் பற்றி உயர்வான எண்ணத்தை இந்துச் சிறார்களிடையே வளர்க்கத்தவறும் காரணியாக அமைந்துவிட்டது.

எல்லாம் எக்காலத்திலும் உண்மையானவையல்ல; ஏற்றவையுமல்ல. ஒருகாலத்தில் உண்மை என ஏற்கப்படுபவை இன்னொரு காலத்தில் பொய்யாகி விடுகின்றன; காலத்துக்கு ஒவ்வாதவை ஆகிவிடுகின்றன. அறிவியல் சிந்தனை வளர்ச்சியின் அடித்தளம் இதுதான். சமய தத்துவமும் ஓர் அறிவியல்தான் என ஒப்புக்கொள்வோர் இந்த உண்மையைப் புரிந்துகொள்வர்.

அதேநேரத்தில் என்றும் மாறாத சில அடிப்படை உண்மைகளும் உள்ளன. கடவுட்கோட்பாடு போன்றவை அத்தகையன. அவற்றை அடிப்படையாகக்கொண்டு மாறிவரும் உலகில் அறிவு வளத்துக்கேற்ப வளர்ந்துவரும் சிந்தனைகளை ஆராய்ந்து காலத்துக்கேற்ற மாற்றங்க ளோடிணைந்த உண்மைகளை ஏற்றுக்கொள்வதே மேல்.

இன்றைய நமது சமயத்தை நோக்கினால், இந்துமதம்- சைவ மதம்- தமிழர் மதம் என்ற பெயர்களெல்லாவற்றையும் கடந்து அது ஒரு புதிய சமயமாக இருக்கிறது. அதேநேரத்தில் அது சநாதன தர்மமாகவும் இருக்கிறது.(முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியனே.)

உ

சிவமயம்





# தர்மம்

"தர்மமே சகல உலகத்திற்கும் ஆதாரம்"
('வேதோகில் தர்ம மூலம்')

"வேத சாஸ்திரம் தெரிந்தவர்களாயும் கெட்ட குணங்கள் எதுவுமில்லாதவர்களாகவும் இருக்கிற சாதுக்களால் எது அனுஷ்டிக்கப்பட்டதோ தாத்பர்யம் உள்ள மனத்தால் எது அங்கீகரிக்கப்பட்டதோ அதுதான் தர்மம்"

- மனு தர்ம சாஸ்திரம்.

"பெரியோர்கள் எந்தக் கார்யத்தைப் புகழ்கிறார்களோ அது தர்மம். எந்தக் கார்யத்தை அவர்கள் நிந்திக்கிறார்களோ அது அதர்மம்" - ஆபஸ்தம்பர்.

# அறம்

"சிறப்பீனும் செல்வமும் ஈனும், அறத்தினூங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு"

(எல்லாச் சிறப்புக்களையும் செல்வத்தையும் தரவல்ல அறத்தைவிட மேலான ஒரு பொருள் வேறென்ன உண்டு?)

"ஒல்லும் வகையால் அறவினை ஓவாதே
செல்லும் வாய் எல்லாம் செயல்"

(இயன்ற வகையில் இடைவிடாது எல்லா வழிகளிலும் அறத்தினைச் செய்க)

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது"

(நல்ல ஒரு இல்லறம் என்பது அன்பை உடையதாயிருக்கும். அதன்பயன் நல்லறங்களைச் செய்வதேயாகும்)

- திருக்குறள்.

# இயற்கையின் அழகில் இறைவனைக் காணலாம்

நம்மைச் சுற்றிலும் நாம் காணும் யாவுமே அன்பும் அழகும் நிறைந்தவையே. உறவினர்கள், நண்பர்கள், மிருகங்கள், பறவைகள், தாவரங்கள் முதலிய எல்லாமே அன்பே மயமான உயிர்ப் பொருட்கள். இறைவனின் அற்புதப் படைப்புக்கள். நம் வாழ்க்கையை இலகுபடுத்தவும் மகிழ்ச்சியைக் கொடுக்கவும் உயிரற்ற பொருட்கள் பல நம்மோடு இணைந்திருக்கின்றன. இன்னும் சிறிது கண்களை விரித்து நாலாபுறமும் கவனித்துப் பார்ப்போம்.

கீழே நிலம். நாம் வாழ்வதற்கு ஆதாரமாக இருப்பது நிலம். எம்மைத் தாங்கி நிற்பதுடன் எமக்கு வேண்டிய உணவுப் பொருட்களைத் தருகின்ற தாவரங்களை வளரச் செய்து எமக்குத் தருவதும் நிலம் அல்லவா?

பூமி என்பதும் நிலத்திற்கு இன்னொரு பெயர். உலகம் எனவும் கூறுவர். பூமி எம்மைத் தாங்கிநின்று எம்மை வாழ வைப்பதனால் பூமாதேவி என்று கூறுவோம். அதனை நமது அன்னை என்று போற்றி வணங்குகிறோம்.

மேலே நிமிர்ந்து பார்த்தால் வானம் தெரிகிறது. வானம் என்பது வெறுமையான பெரிய வெளியாகும். ஒன்றுமேயில்லாத அந்தப் பெருவெளி ஒளியின் தெறிப்புக் காரணமாக நீலமாகத் தெரிகிறது. ஆகாயம் அழகாக இருக்கிறது. அதனைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது நாம் மகிழ்ச்சியடைகிறோம். அந்த ஆகாயத்தில் சூரியனும் சந்திரனும் சுற்றி வருகின்றன. சூரியன் நெருப்புக் கோளமாக ஒளி வீசிக்கொண்டிருக்கிறது. அதன் ஒளியைப் பெற்றுச் சந்திரனும் ஒளி வீசுகிறது. இவை இரண்டின் காரணமாகவே இரவும் பகலும் உண்டாகின்றன. பகலில் சூரியனும் இரவில் சந்திரனும் ஒளி கொடுக்கின்றன. இரவில் சந்திரனுடன் நட்சத்திரங்களும் காணப்படுகின்றன. இரவில் நாம் ஓய்வெடுக்கின்றோம். தூங்குகின்றோம். பகலில் உற்சாகத்துடன் நமது வேலைகளில் ஈடுபடுகின்றோம். பகலும் இரவும் நமது வாழ்க்கையை ஒழுங்குபடுத்துகின்றன. அதனால் சூரியனும் சந்திரனும் நமது வணக்கத்துக்குரியன. சூரியன் ஏழு குதிரைகள் பூட்டிய தேரிலே உலகை வலம் வருகிறான் என்று சமது சமய நூல்கள் வர்ணிக்கின்றன. வெண்ணிற ஒளி பிரிவடையும்போது ஏழு நிறங்கள் உருவாகுவதை நாம் பார்க்கிறோம். சூரிய ஒளியின் ஏழு நிறங்களையே முன்னோர்கள் அவ்விதம் உருவகித்திருக்கின்றனர்.

நம்மைச் சுற்றிக் காற்று வீசுகின்றது. காற்று கண்ணுக்குப் புலப்படுவதில்லை. ஆனால் அதனை நாம் உணர்கிறோம். காற்றை நாம் சுவாசிக்கின்றோம். அதுவே நாம் உயிர் வாழ்வதற்குக் காரணமாக இருக்கிறது. காற்று இல்லாவிட்டால் உலகில் உயிரினங்கள் எதுவும் வாழ முடியாது. காற்று நம் மீது படும்போது நாம் இன்பம் அடைகிறோம்.

ஆகாயத்தில் வெண்ணிற முகிற் கூட்டங்களைக் காண்கிறோம். அவற்றை மேகங்கள் என்றும் கூறுவோம். அவை காற்றினால் அசைந்து நகர்ந்து கொண்டிருக்கின்றன. மாரி காலத்தில் அவை கறுத்துத் திரண்டு பின்னர் அவற்றிலிருந்து மழை பெய்கிறது. ஆகாயத்திலிருந்து மழை மூலம் நீர் பூமியை அடைகிறது.

பூமியில் உயர்ந்த மலைகள் பல உள்ளன. அவற்றின் இயல்பு காரணமாகவும் உயர்ந்து நிறைந்து வளர்ந்திருக்கும் மரங்கள் காரணமாகவும் மழை பொழிகின்றது. மழைநீர் குளங்களில் தேங்கிநிற்கிறது. நிலத்தினுள் போகும் நீர் ஊற்று நீராகக் கிணறுகளில் கிடைக்கிறது.

மலையுச்சிகளில் நீரூற்றுக்களும் உள்ளன. மலை போன்ற உயர்ந்த இடங்களிலிருந்து தாழ்ந்த இடங்களை நோக்கி நீர் பாய்கிறது. இவை ஆறு அல்லது நதி எனச் சொல்லப்படுகின்றன. நமது வாழ்விடமாகிய நிலப்பரப்பைச் சூழ்ந்து பெரிய கடல் இருக்கிறது. இவை பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கின்றன. நீர் வீழ்ச்சிகள் நதிகள் கடல் இவற்றையும் நாம் தெய்வத் தன்மை உடையனவாக மதிக்கின்றோம்.

ஆறு, குளம், கிணறு முதலியவற்றிலிருந்து நாம் நீரைப் பெறுகிறோம். நீர் நமக்கு மிக முக்கியமானது. நமது தாகத்தைத் தீர்க்கவும் உணவுகளைத் தயாரிக்கவும் நீர் அவசியமானது. நம்மையும் நமது பொருட்களையும் நமது ஆடைகளையும் நமது சூழலையும் தூய்மைப்படுத்தித் துப்புரவாகவைத்திருப்பதற்கு நீர் உதவுகின்றது. நீர் இன்றி நமது வாழ்க்கை நடைபெற முடியாது. அதனால் நாம் நீரைப் போற்றி வணங்குகின்றோம்.

நெருப்பும் நம்மை வாழ்விக்கும் ஓர் இயற்கைச் சக்தியாகும். தீ என்றும் அக்கினி என்றும் அதனைக் கூறுவர். தீ அசுத்தங்களை எரித்து அழிக்கிறது. உணவு தயாரிப்பதற்கு உதவுகின்றது. குளிரைப் போக்கி வெப்பத்தைத் தருகிறது. எரிந்துகொண்டிருக்கும் நெருப்பிலே தெய்வத் தன்மையை நாம் காண்கிறோம்.

இயற்கை என்பது அழகானது. இயற்கைச் சக்திகள் உயர்வானவை. அவற்றை நாம் என்றும் போற்றுவோம்.



# இறைவன் யார்?

இந்தப் பூமியும் இங்கு காணப்படும் உயிருள்ள, உயிரற்ற பொருட்களும் பூமியைச் சூழ்ந்துள்ள சூரியன், சந்திரன், கோள்கள், நட்சத்திரங்கள் முதலியனவும் ஓர் ஒழுங்கான முறையில் இயங்குகின்றன. இவற்றை இயக்குபவர் யார்? மழை, வெயில் போன்ற மாற்றங்களும் அதற்கேற்ப விளைகின்ற பயிர்களும் மரம், செடி, கொடிகளின் வளர்ச்சியும் நமது வாழ்க்கைக்கு உகந்த வகையில் சீராக அமைக்கப்பட்டுள்ளன. இவற்றுக்கெல்லாம் காரணமானவர் யார்?

யாரோ ஒருவர் எம்மையெல்லாம் இயக்குபவராக நமக்கு மேல் இருக்கிறார். அவரே கடவுள். அவர் கண்ணுக்குப் புலப்படாவிடினும் அவரை நாம் உணர்கிறோம்.

அவரை நாம் வெளியில் எங்கும் தேடத் தேவையில்லை. அவர் நாம் அறியா வகையில் நம்முடனே என்றும் இருக்கிறார். எல்லா இடங்களிலும் நிறைந்துள்ளார். எல்லா உயிர்களிலும் உயிருக்கு உயிராக உள்ளே உறைகின்றார். அதேநேரத்தில் அனைத்தையும் கடந்து எங்கும் வியாபித்திருக்கின்றார். அதனால்தான் அனைத்தையும் கடந்தும் அனைத்தின் உள்ளேயும் இருப்பவர் என்ற பொருளில் கடவுள் எனக் கூறப்படுகிறார். காற்றினை நாம் எவ்வாறு உணர்கிறோமோ மின்சக்தியை நாம் எவ்வாறு புரிந்துகொள்கிறோமோ அவ்வாறு கடவுளை உணர வேண்டும்.

அனைத்தையும் ஆள்பவர் என்பதனால் **ஆண்டவன்** என்றும் எல்லாவற்றையும் தமது உடைமையாகக் கொண்டவர் என்பதனால் உடையவர் என்றும் யாவருக்கும் தலைவன் என்பதனால் **இறைவன்** அல்லது **ஈசன்** என்றும் ஒளிபொருந்தியவர் என்பதனால் **தேவன்** என்றும் போற்றப்படுகிறார்.

அவர் எல்லா உயிரினங்களையும் அன்போடு காக்கிறார். பூமி சுழல்வதும் சூரிய, சந்திரர்களின் இயக்கமும் மழை - வெயில், இரவு – பகல் போன்றவை தோன்றுவதும் அவராலேயே நிகழ்கின்றன. அவரவர்கள் செய்யும் நற்செயலுக்கான நற்பயன்களையும் தீய செயல்களுக்கான துன்பங்களையும் அவரவருக்கு ஊட்டுபவர் கடவுளே ஆவர். அன்போடு வேண்டுதல் செய்பவர்களுக்கு இரங்கி அவர்கள் வேண்டும் வரங்களை அவர் நல்குவார். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களை அவர் செய்கிறார்.

யாரும் காண முடியாத இறைவனை ஓவியங்களில் வரைந்தும் திருவுருவச் சிலைகளாக உருவாக்கியும் நமது முன்னோர்கள் நமக்குத் தந்திருக்கின்றனர். அவற்றை நாம் கோவில்களிலும் வீட்டிலுள்ள சுவாமி அறைகளிலும் வைத்து வழிபடுகிறோம்.



# ஆலயத்தில் ஆண்டவன்

கடவுளை நாம் நன்றியோடு துதிக்கவேண்டும். என்றும் போற்றி வணங்கவேண்டும். எங்குமுள்ள இறைவனை நாம் மனமொன்றி இலகுவாக வழிபடுவதற்கு வாய்ப்பாக ஆலயங்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஆலயம் என்பதன் பொருள் ஆன்மா லயப்படும் இடம் என்பதே. உயிர்கள் ஆகிய நாமே ஆன்மா எனச் சொல்லப்படுகிறோம். லயப்படுதல் என்றால் வேறு நினைவு இல்லாமல் இறைவனையே நினைத்து மனத்தை ஒருங்கு குவித்து வழிபடுதல் ஆகும்.

ஆலயம் என்பதற்கு கோவில் என்றும் பெயர். கோ என்றால் கடவுள். இல் என்றால் இருப்பிடம். எனவே கடவுளின் இருப்பிடம் கோவிலாகும். எங்கும் நிறைந்திருக்கும் கடவுளைச் சிறப்பாக வழிபடக் கோவில் அமைத்திருக்கிறார்கள்.

ஆலயத்தில் பெரிய மண்டபங்கள் பல அமைந்திருக்கும். எல்லோரும் கூடி வழிபாடு செய்வதற்கு அவை உதவுகின்றன. உயர்ந்த கோபுரங்கள், ஓவியங்கள், சிற்பங்கள் முதலியன நமது மனத்தைக் கவரும். மகிழ்ச்சியை ஏற்படுத்தும்.

ஆலயத்தில் ஒலிக்கின்ற மந்திர ஒலிகளும் திருமுறைப் பாடல்களும் மிகுந்த சக்தி வாய்ந்தவை. அவற்றோடு அங்கே ஒலிக்கின்ற மணி ஒலி, மேளம், நாதஸ்வரம் முதலிய மங்கல வாத்தியங்களின் ஒலி, சாம்பிராணி வாசனை முதலியன நமது உள்ளத்தில் பக்தி உணர்வினை எழுப்புகின்றன.

அங்கு சென்று நாம் மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரணங்களாலும் வழிபாடுகளைச் செய்ய வேண்டும். மனத்தால் இறைவனை நினைத்தலும் வார்த்தைகளால் இறைவன் புகழ் பாடுதலும் உடலால் ஆலயத் தொண்டுகள் செய்வதுமே திரிகரண வழிபாடு ஆகும்.

ஆலயத்தில் நாம் நம்மை உயர்ந்தவர்களாகக் கருதாமல் இயன்ற அளவு தொண்டுகள் செய்ய வேண்டும். கூட்டுதல், கழுவுதல், மாலை கட்டுதல், பூந்தோட்டம் அமைத்தல் முதலிய இவற்றைச் சரியைத் தொண்டுகள் என்பர். இவை மனத்திற்கு மகிழ்ச்சியை ஏற்படுத்துவதுடன் நல்ல உடற்பயிற்சியாகவும் அமைகின்றன. வீதி வலம் வருதல் வீழ்ந்து வணங்குதல் முதலியனவும் சிறந்த உடற் பயிற்சிகளாக இருக்கின்றன.



## ஆலய வழிபாடு

தினமும் நாம் கோவிலுக்குச் சென்று கடவுளை வழிபட வேண்டும். மிகப்பெரிய கண்டாமணியின் ஒலி மிகத் தொலைவிலேயே நமக்குக் கேட்பதனால் இறைவனை நாம் நினைக்க உதவுகிறது. ஆலயம் செல்லும்போது கோவிலின் கோபுரம் தூரத்திலேயே தெரிகிறது. அதனைக் கண்டவுடன் கைகளைத் தலைமேல் குவித்து இறைவனை வழிபடவேண்டும்

கோவிலின் அருகில் குளம் அல்லது கிணறு இருக்கும். அங்கு கை, கால்களைச் சுத்தம் செய்து அர்ச்சனைப் பொருட்களையும் கழுவிக்கொண்டு ஓம் நமச்சிவாய என ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதிக்கொண்டு கோவிலினுள்ளே செல்லவேண்டும்.

பலிபீடத்திற்கு இப்பால் வீழ்ந்து வணங்கவேண்டும். ஆண்கள் அட்டாங்க நமஸ்காரமும் பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும் செய்யவேண்டும். அட்டாங்க நமஸ்காரம் என்பது எட்டு அங்கங்கள் நிலத்தில் பட வணங்குவது. தலை, கையிரண்டு, செவியிரண்டு, வாய், புயங்களிரண்டு என்பனவே அட்டாங்கம் என்னும் எட்டு உறுப்புக்களாகும். பஞ்சாங்க நமஸ்காரம் என்பது ஐந்து உறுப்புக்கள் நிலத்தில் பட வணங்குவது. தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு என்பனவே பஞ்சாங்கம் என்னும் ஐந்து உறுப்புக்களாகும்.

மூலாதார விநாயகர் என அழைக்கப்படும் கொடித்தம்பப் பிள்ளையாரை வணங்கவேண்டும். கொடித் தம்பத்தின் அருகில் நந்திதேவர் அல்லது அதற்குப் பதிலாக மூஷிகம் என்னும் எலி, மயூரம் எனப்படும் மயில், சிம்மம் என்னும் சிங்கம், சுவானம் எனப்படும் நாய் இவற்றில் ஏதாவதொன்று இருக்கும். அவர்களிடம் நாம் உள்ளே போவதற்கு அனுமதி கேட்டுக்கொண்டு வீதி வலம் வந்து நமஸ்காரம் பண்ணியபின் உள்ளே சென்று வழிபடவேண்டும்.

வீழ்ந்து வணங்குவதும் வலம் வந்து வணங்குவதும் மூன்று அல்லது ஐந்து அல்லது ஏழு அல்லது ஒன்பது தரம் செய்யப்பட வேண்டும். தீபாராதனை நடைபெறும்போது கைகளை உச்சிமேல் குவித்து வழிபட்டு பஞ்சாலாத்தி முதலியன வெளியே கொண்டுவரப்படும்போது தொட்டு வணங்குதல் வேண்டும். கோவிலின் உள்ளே ஒவ்வொரு பரிவார சந்நிதிகளிலும் வீழ்ந்து வணங்குவது தவறு. கொடித்தம்பத்திற்கு இப்பால் ஓர் இடத்தில் மட்டுமே வீழ்ந்து வணங்கவேண்டும்.

ஆலயத்திற்கு நாம் செல்லும்போது ஆண்டவனுக்கு அன்பளிப்பாக எம்மால் இயன்ற பொருட்களைக் கொண்டுபோக வேண்டும். கனிந்த உள்ளத்தின் அடையாளமாக் கனிகளும் மலர்ந்த முகத்தின் அடையாளமாக மலர்களும் அவருக்கு அர்ப்பணம் செய்யக்கூடிய பொருட்களாகும். அவற்றோடு மங்கலச் சின்னமாக வெற்றிலை, பாக்கு என்பனவும் வழிபாட்டிற்காக கற்பூரமும் அபிஷேகத்திற்காகப் பால், தயிர், இளநீர் முதலியனவும் எடுத்துச் செல்லக்கூடிய பொருட்களே.

கற்பூரம் ஏற்றும்போது மீதி எதுவும் இல்லாமல் முழுதும் எரிந்து ஒன்றுமில்லாமல் போய்விடுகிறது. அதுபோல நமது குற்றங்குறைகளும் துன்பங்களும் இல்லாமல்

போய்விடவேண்டும் என்னும் வேண்டுதல் கற்பூரம் ஏற்றுதலில் அடங்கியுள்ளது. அதுமட்டுமல்லாமல் நாம் நமக்கென்று எதுவுமில்லாமல் நம்மையே ஆண்டவனிடம் ஒப்புவித்து விடுகின்ற சரணாகதி தத்துவமும் அதில் மறைந்திருக்கிறது.

காணிக்கைப் பொருட்களை ஆலயத்தில் நாம் சமர்ப்பித்தால் அவற்றை அங்கு முறைப்படி பயன்படுத்துவார்கள். கற்பூரத்தை அதற்கென்று உள்ள இடத்தில் மட்டும் ஏற்றவேண்டும். படிகளில் ஏற்றுவது ஆகாது. அதேபோல மலர்களை நாமே அர்ச்சனை செய்கின்றோம் என எண்ணிக்கொண்டு படிகளில் இடுவதும் தப்பு. சுவாமி சிலைகளை நாம் கைகளால் தொட்டு வணங்குவதும் ஆகாது.

வழிபாடுகள் முடிந்ததும் சண்டேஸ்வரர் சந்நிதி சென்று கும்பிட்டு மும்முறை மெதுவாகக் கைகொட்டி வழிபாட்டின் பலனைத் தரும்படி பிரார்த்திக்கவேண்டும். அதன்பின் ஆலயத்தின் ஒருபுறத்தே அமைதியாக அமர்ந்திருந்து சிவநாமங்களை மனத்திலே செபிக்கவேண்டும். அதன்பின் விபூதி, பிரசாதங்களைப் பெற்றுக்கொண்டு வீடு திரும்ப வேண்டும்.

## திருவுருவங்கள்

உருவம் ஒன்றுமில்லாமல் எல்லா இடங்களிலும் பரந்து கலந்திருக்கின்ற இறைவனுக்கு அங்கே சில உருவங்களை அமைத்திருக்கிறார்கள். கடவுளை நாம் நினைத்து வழிபடுவதற்கு அவை உதவுகின்றன. பிள்ளையார், சிவபெருமான், உமாதேவியார், முருகன், வைரவர் முதலிய பல வடிவங்களில் நாம் கடவுளை வழிபடுகிறோம்.

நமது ஒரே தந்தையாரை அவர் வெவ்வேறு வயதுகளில் வெவ்வேறு தோற்றங்களில் எடுத்துவைத்திருக்கும் புகைப்படங்களில் கண்டு மகிழ்வதுபோல ஒரே கடவுளை நாம் பல தோற்றங்களில் கண்டு மகிழ்கிறோம்.

அந்த உருவங்களுக்கு அபிஷேகம் செய்து தூய்மையாக்கி ஆடை அணிகள் அணிவித்து அலங்கரிக்கின்றோம். விசேட நாட்களில் இறைவனின் திருவுருவங்களுக்கு பால், தயிர், பஞ்சாமிர்தம், இளநீர் முதலியவற்றால் அபிஷேகம் செய்கின்றோம். இப்படி அபிஷேகங்கள் செய்வதால் இறைவன் மகிழ்ச்சி அடைந்து நமக்குப் பல்வேறு பலன்களை அருளுகிறார். இன்னொரு வகையில் பார்க்கின்றபோது, இப் பொருட்கள் அங்கு அபிஷேகமாகும்போது சூழல் குளிர்ச்சியடைந்து அங்கு ஒருவித சக்தி உண்டாகிறது. தீபங்கள் ஏற்றி வைத்து வாசனைத் தூபங்கள் இட்டு பலகாரங்கள், பழங்கள், வெற்றிலை, பாக்கு முதலியவற்றை அவருக்கு நிவேதனம் செய்து வணங்குகிறோம்.

தாமரை, மல்லிகை, முல்லை, சண்பகம், நித்திய கல்யாணி, நந்தியாவர்த்தை, செம்பரத்தை, செவ்வரளி, பொன்னொச்சி போன்ற பூக்களும் செம்பரத்தை, பொன்னொச்சி, வில்வம், நெல்லி, கடம்பு, வன்னி போன்ற மரங்களின் இலைகளும் இறைவனுக்கு அர்ச்சனை செய்ய உகந்தவை. இவ் இலைகளைப் பத்திரம் எனச் சொல்வர். அறுகு விநாயகருக்கும் துளசி விஷ்ணுவுக்கும் விசேடமாக உரியன.

## திருவிழாக்கள்

ஆலயத்திலே விசேட நாட்களிலே திருவிழாக்கள் நடைபெறும். சதுர்த்தி, கார்த்திகை முதலிய விசேட தினங்களிலும் வருடம் ஒருமுறை நடக்கும் கொடியேற்று விழாவிலும் திருவிழாக்கள் நடைபெறுவதுண்டு.

கும்ப பூசை, அபிஷேகம், அலங்காரம், நிவேதனம் (உணவு படைத்தல்), தீபாராதனை (பல்வேறு தீபங்களை வரிசையாகக் காட்டுதல்), அர்ச்சனை (இறைவனின் பல்வேறு பெயர்களைச் சொல்லிப் புகழ்ந்து மலர்களை அவர் பாதங்களில் இடுதல்), பிரார்த்தனை முதலியன விசேட திருவிழாக்களின் வழமையான அங்கங்கள். இதன்பின் இதற்கென அமைந்த இறைவனின் திருவுருவங்களை எலி, இடபம், சிங்கம், குதிரை, யானை முதலிய வாகனங்களில் வைத்து வீதியைச் சுற்றி எடுத்து வருவர். இவ் வேளையில் மேளம் நாதஸ்வரம் முதலிய வாத்தியங்களை வாசிப்பர். அடியார்கள் பஜனை பாடுவர்.

தேர்த் திருவிழா தீர்த்தத் திருவிழா இரண்டும் மிகச் சிறப்பானவை. ஊர் மக்கள் யாவரும் திரண்டு வந்து இவ் விழாக்களில் கலந்து கொள்வர். அடியார்கள் பலர் காவடி எடுப்பர். பெண்கள் கற்பூரச் சட்டி எடுப்பர்.

தினமும் நாம் ஆலயம் சென்று இறைவழிபாடு செய்வோம்.

## சிவாச்சாரியர்

ஆலயத்தில் ஆண்டவனுக்கு இறைபணிகளைச் செய்து பூசை செய்பவர் சிவாச்சாரியர் ஆவார். அவரையும் நாம் குரு என்கிறோம். பூசகர் என்றும் அவர் அழைக்கப்படுகிறார். ஆசிரியர் போலவே அவரும் வணக்கத்துக்குரியவரே. ஐயா என அவரை நாம் அழைக்கின்றோம். அவர் பிறந்த நாளிலிருந்தே தம்மை இக் கடமைக்குத் தயாராக்கிக் கொள்கிறார். தமது தந்தையிடமிருந்து பூசை செய்யும் முறைகளையும் அதற்குரிய மந்திரங்களையும் கற்றுக் கொள்கிறார்.

வெள்ளை அல்லது மஞ்சள் நிற வேட்டியும் சால்வையும் அணிந்து உருத்திராக்க மாலை, ஸ்படிக மாலை, ஓம் என்னும் பிரணவத்துடன் கூடிய தங்கச் சங்கிலி முதலியவற்றுடன் பிறரிடமிருந்து தம்மை வேறுபடுத்தி அறியக்கூடிய தோற்றத்தில் அவர் காணப்படுவார்.

கடவுளை வணங்கியபின் அவரையும் வணங்கி அவரிடமிருந்து இரு கைகளினாலும் திருநீறு வாங்கி நாம் அதனை வலது கையினால் நெற்றியில் அணிந்துகொள்ள வேண்டும். அதன்பின் தீர்த்தம் என்னும் மந்திர நீர் தரப்படும்போது அதனை இரு கைகளாலும் வாங்கி பக்தியோடு அருந்தவேண்டும். சந்தனம் குங்குமம் என்பன நெற்றியில் திலகமாக அணிவதற்குத் தரப்படுகிறது.

# திருமுறைகள்

இறைவனது பெருமைகளைப் புகழ்ந்து பாடும் பாடல்கள் பல இயற்றப்பட்டுள்ளன. அவற்றை பக்தியுடனும் இசையுடனும் பாடி மகிழ்கிறோம். இறைவனின் நாமங்களைத் திரும்பத் திரும்பக் கூறி வழிபடுதல் நாம ஜபம் என்பர். பலர் ஒன்று சேர்ந்து இவ்வாறு நாமங்களைக் கூறுதலும் பாடல்களைப் பாடுவதும் உண்டு. இதனை பஜனை என்பர். இவற்றின் மூலம் நமது நன்றியை ஆண்டவனுக்கு நாம் எடுத்துக் காட்டுவதுடன் நமது மனத்திலும் அன்பு, அமைதி, ஆனந்தம் முதலிய உணர்வுகளுடன் உற்சாகமாக நமது வாழ்க்கையைத் தொடர முடிகிறது.

இறைவன்முன் திருப் பாடல்களைப் பாடும்போது கைகளைக் குவித்து வணங்கியவாறு கண்களை மூடி இறைவனைத் தியானித்தபடி திருச்சிற்றம்பலம் என்று சொல்லி ஆரம்பித்துப் பாடி முடித்தபின்னரும் திருச்சிற்றம்பலம் என்ற கூறி நிறைவு செய்ய வேண்டும்.

இந்த அருட்பாடல்கள் திருமுறைகள் என அழைக்கப்படுகின்றன. திருமுறைகள் பன்னிரண்டு பிரிவாகப் பிரிக்கப்பட்டுள்ளன. பன்னிரு திருமுறைகளிலிருந்தும் பாடல்கள் பாட முடியாதென்பதால் ஐந்து திருமுறைகளைத் தேர்ந்தெடுத்துப் பஞ்சபுராணம் எனப் பாடுவது வழக்கம். தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருப்புராணம் என்பனவே அவை. நேரம் போதாமலிருப்பின் தேவாரம், புராணம் இரண்டையும் பாடுவதுமுண்டு.

*திருச்சிற்றம்பலம்*

*ஆதியாய் நடுவுமாகி அளவு இலா அளவுமாகிச்*
*சோதியாய் உணர்வுமாகித் தோன்றிய பொருளுமாகிப்*
*பேதியா ஏகம் ஆகிப் பெண்ணுமாய் ஆணும் ஆகிப்*
*போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி*

*கற்பனை கடந்த சோதி கருணையே உருவம் ஆகி*
*அற்புதக் கோலம் நீடி அரு மறைச் சிறத்தின் மேலாம்*
*சிற்பர வியோமம் ஆகும் திருச் சிற்றம்பலத்துள் நின்று*
*பொற்புடன் நடம் செய்கின்ற பூங் கழல் போற்றி போற்றி*

*திருச்சிற்றம்பலம்*

# ஆலயத்தில் எவ்வாறு இறைசக்தி உருவாகின்றது?

கும்பாபிஷேகம் என்பது கும்பத்தினால் அபிஷேகம் செய்தல் என்ற கருத்தை உடைய ஒரு வடமொழிச் சொல். கும்பம் என்பது இறைசொரூபமாக பாவனை செய்யப்படும் நிறைகுட வடிவம். சர்வ தேவதா ஸ்வரூபம் என ஆகமங்கள் கும்பத்தினை விவரிக்கும். அதாவது எந்த ஒரு தெய்வத்தையும் நாம் கும்பத்தில் ஆவாஹனம் செய்து வழிபடலாம். அவ்வாறு கும்பத்தில் எழுந்தருளச்செய்து வழிபட்ட இறைவனை, ஆலயத்தின் கருவறையில் அமைக்கப்பட்டிருக்கும் அவனது திருவுருவத்திற்கு அபிஷேகம் செய்வதன்மூலம் அங்கு அவனை நிலையாகக் குடியிருக்கச்செய்து தினமும் இறைவழிபாட்டை நாம் நடத்துகிறோம். இதுவே கும்பாபிஷேகம் என்பதன் விளக்கமாகும்.

ப்ரதிஷ்டை என்ற ஒரு சொல்லும் கும்பாபிஷேகத்தை உணர்த்துவதாகும். 'திஷ்ட்' என்ற வினையடி நிற்றல் என்ற பொருளையுடையது. 'ப்ர' என்ற உபசர்க்கத்தோடு இவ்வேர்ச்சொல் இணைந்து நன்கு நிலை நிறுத்துதல் என்ற பொருளையுடைய ப்ரதிஷ்டை என்ற சொல்லைத் தருகிறது.

ஒரு நாமம், ஓருருவம் இல்லாமல் எங்கும் பரவியிருக்கின்ற எல்லாம் வல்ல அந்தப் பரம்பொருட்சக்திக்கு ஏதோ ஒரு பெயரைக் கொடுத்து அதற்கேற்ற உருவ அமைப்பையும் கற்பித்து வழிபடுகிறோம். அந்த உருவத்தில் இறைசக்தி எழுந்தருளி இருப்பதாக பாவனை செய்து அந்த உருவத்துடன் நாம் அன்புடன் உறவாடி அதற்குரிய உபசாரங்களை வழங்கி மனநிறைவடைகிறோம். நமது துன்ப துயரங்களை அந்த உருவத்தோடு பகிர்ந்துகொண்டு மன அழுத்தங்களைக் குறைத்துக் கொள்கிறோம். இறைவன் அந்த உருவத்தினூடாக அருளாகிய தமது சக்தியை எமக்கு வழங்குகிறான் என்ற எதிர்பார்ப்போடு, அந்த அருட்சக்தி காரணமாக நமது துயரங்கள் அகன்று நாம் புதிய சக்தி பெற்று இவ்வுலக வாழ்க்கையில் சகல நலங்களும் அடைந்து இன்புறலாம் என்பது எமது நம்பிக்கை. இவ்வுடல் நீத்தபின் அந்தப் பரம்பொருட் சக்தியோடு ஒன்றிணைந்து பேரானந்த நிறைவை அடையலாம். இந்த நம்பிக்கைகள் என்றும் அடியவர்களுக்கு மனச்சாந்தியை வழங்க வல்லவை.

எனவே, எங்கும் பரவியிருக்கும் அந்தப் பரம்பொருட்சக்தியை கும்பத்திலே எழுந்தருளச்செய்து பின் அதனை அபிஷேகம் செய்வதன்மூலம் திருவுருவத்திலே எழுந்தருளியிருந்து நிரந்தரமாக எமக்கு அருள்தர வேண்டுவதே கும்பாபிஷேகத்தின் நோக்கம்.

பக்தி இலக்கியங்கள் வர்ணிப்பது போலவும், நாம் நமது மனக்கண்ணிலே கற்பித்து வைத்திருப்பதுபோலவும் திருவுருவத்தை அவன் கொண்டிருக்கிறானோ இல்லையோ, அளவற்ற கருணையையும் சக்தியையும் அவன் கொண்டிருக்கிறான் என்ற கருத்தை எந்த ஒரு விஞ்ஞானியோ, அறிவியலாளனோ மறுக்கமுடியாது.

"பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின்
அருமைக்கும் ஒப்பின்மையான்"

என்று சைவசித்தாந்தம் (திருவருட்பயன்) அவனை அழகாக வரையறுத்துக் காட்டுகிறது. அந்த இறைவன் பெரியவற்றிற்கெல்லாம் பெரியவன். நுண்மையானவற்றுள் மிக நுண்மையானவன். அவனது அருட்பேற்றிற்கு ஒப்புவமை கூறமுடியாது என்பது இக்குறளின் கருத்து. அதாவது 'வரையறுத்துக் காட்டமுடியாதவன்' என்பதே அவனுக்கு வரைவிலக்கணம். அத்தகைய ஒரு சக்தியை அறிவியலாளர்கள் எவ்வாறு ஒப்புக்கொள்வர் என்பது சிலருக்கு ஐயமாக இருக்கலாம். மின், அல்லது இலத்திரனியல் சக்திகளை ஏற்று அவற்றின் வலிமையைப் புரிந்துகொண்டு அந்தச் சக்திகளைத் தமக்கு வேண்டிய வகையில் ஒலிச்சக்தியாகவோ, ஒளிச்சக்தியாகவோ, வெப்ப சக்தியாகவோ, காந்த சக்தியாகவோ நாளாந்தம் பயன்படுத்திக்கொண்டிருக்கும் எந்த ஒரு மனிதனும் இப்படி ஒரு 'மஹாசக்தி' நம்மை ஆண்டுகொண்டிருக்கும் ஆண்டவனாக இருப்பதை மறுக்கமுடியாது.

இயற்கையாக எங்கும் சக்தி நிறைந்திருப்பதை நாம் காணுகின்றோம். எல்லா இயற்கைச் சக்திகளுக்கும் மூலசக்தியாக, யாவற்றுக்கும் நடுநாயகமாக நின்று அனைத்தையும் இயக்குகின்ற மூலப்பொருள் சூரியன். அதன் ஒளிச்சக்தியையும் வெப்ப சக்தியையும் யார் மறுப்பார்? பூவுலகிற்கு உயிர்கொடுக்கும் சூரியனை யாவற்றுக்கும் முதற்பொருளாக ஏற்றுப் போற்றுகிறது காயத்ரி என்னும் வேதமந்திரம்.

"இப்பூவுலகம், மேலுலகம், கீழுலகம் என்ற மூவுலகங்களையும் இயக்கி, யார் நமது அறிவைத் தூண்டிநிற்கிறாரோ, அந்த ஒளிக்கடவுளுக்கு வந்தனம்"

காற்று வீசுகிறது. ஆறு பாய்கிறது. மழை பெய்கிறது. எல்லாம் இயற்கைச் சக்தியின் லீலைகள். இந்த இயற்கை யாவற்றிலும் உள்ள சக்தி மகத்துவத்தைக் கண்டு வியந்தார்கள் வேதகால ரிஷிகள். அந்த இயற்கையின் ஒழுங்கமைப்பை - நியதியை - ஒழுக்கை அவர்கள் வியந்து போற்றினர். (ரிதம் என்ற வட சொல்லையும் - Rhythm என்ற ஆங்கிலச் சொல்லையும் ஒப்பிட்டு நோக்குக) அவற்றின் அடிப்படையாக அவற்றின் உள்ளேயும் (உள்) அவற்றைக் கடந்தும் (கட) இயங்கும் ஒரு சக்தியை உணர்ந்தனர். கடவுள் என்றனர். இறைவன் என்றனர். அதனால் பிறந்தன வேத மந்திரங்கள். கவிதைகளாக, பிரார்த்தனைகளாக, புகழ்மொழிகளாக, வேண்டுதல்களாக, புதிர்களாக, வினாக்களாக அவை வெளிவந்தன. அந்த வேதம் என்னும் மறைபொருட் பாடல்களைப்பயன்படுத்தி இயற்கை தந்த அக்னியிலே இயற்கை தந்த விளைபொருட்களை இட்டு யாகங்கள் செய்து மகிழ்ந்தனர். வேள்வித் தீயில் அவை எரிந்து மறைந்தபோது அங்கு மாற்றீடாக உண்டாகும் புகையும் வாசனையும் பெரும் சக்தியை வெளிப்படுத்தும் என்பதைக் கண்டறிந்தனர். வெளிப்படையாக மட்டுமன்றி கதிர்வீச்சுக்களாகவும், அலைவடிவங்களாகவும்கூட சக்தியை வெளிப்படுத்துகின்றன என உணர்ந்தனர்.

ஆகமங்கள் தோன்றின. இந்த அருட்சக்தியை நாம் அகப்படுத்தினால் என்ன என அவை ஆராய்ந்தன. "பக்தி வலையில் படுவோன் காண்" என்பதற்கிணங்க, மந்திரசக்தி, மனோசக்தி ஆகியவற்றால் அந்தப் பேரருட் சக்தியை ஒரு சிறிய திருவுருவத்தினுள் அடக்கி, ஆலயம் ஒன்றினுள் பாதுகாத்துவைத்துப் பேணவும் வேண்டியபோது நாம் அந்த அருட்சுரப்பை அனுபவிக்கவும் ஆகமங்கள் வழிசமைத்தன.

வானியலை ஆராய்ந்து சோதிடம் கண்டும் கணிதவியலை ஆராய்ந்து சிற்பம் அமைத்தும் ஒலியியலை ஆராய்ந்து மந்திரங்களைக் கண்டறிந்தும் ஆலயங்கள் அமைத்து அங்கு திருவுருவங்களைப் பிரதிஷ்டை செய்து மந்திரங்கள் ஓதிக் கிரியைகள் செய்து வழிபாடு செய்யும் மரபு மலர்ச்சி பெறலாயிற்று. ஆலயம் அமைத்து வழிபடும் அந்த ஆகம மரபில், வேதம் ஓதி எரியோம்பும் வேதகால வைதிக மரபும் கைவிடாது பேணப்படலாயிற்று.

இயற்கைச் சக்தியின் மூலங்கள் ஐந்து எனக்கண்டறிந்து பஞ்சபூதங்கள் என அவற்றை அழைத்தனர். (B)பூ - ஆகுதல், உருவாகுதல். பூதம் - உருவாக்கம். எப்பொருளை எடுத்தாலும் பிருதுவி, அப், தேயு, வாயு, ஆகாசம் (நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம்) என்ற அந்த ஐந்து மூலப் பொருட்களாலேயே ஆக்கப்பட்டிருக்கும். அதனாலேயே அவை பஞ்ச பூதங்கள் எனப்பட்டன. பஞ்சபூதங்களின் திரட்சி என்பதனால் பிரபஞ்சம் என இந்த சூரியக் குடும்பம் அழைக்கப்படலாயிற்று.

இயற்கைச் சக்தியை வசப்படுத்த இயற்கைப் பொருட்களே தேவை என உணர்ந்த முன்னோர், பஞ்சபூதங்களின் அடிப்படையிலேயே ஆலயக் கிரியைகளை அமைத்தனர். பூத நாயகன் என இறைவனைப் போற்றினர். கிராமிய மரபில்கூட, பூதராயர் வழிபாட்டை இன்றும் காணலாம். பஞ்சபூதத் தளத்தைக் கடந்து இன்னும் கொஞ்சம் விரிந்த நிலையில் சிந்திக்கும்போது அட்ட மூர்த்திகள் கும்பாபிஷேகக் கிரியைகளிலும் சைவ சித்தாந்த தத்துவத்திலும் முக்கிய இடம் பெறுவதைக் காணலாம். நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் எனும் பஞ்ச பூதங்களுடன் சூரியன், சந்திரன், எஜமானன் (ஆன்மா) என்னும் மூன்றையும் சேர்க்கும்போது அட்ட மூர்த்திகள் உருவாகின்றனர். இறைவன் அட்டமூர்த்திகளின் வடிவமாக இருக்கிறான் என்பதைத் சைவத் திருமுறையாளர்கள் பல இடங்களில் தொட்டுக் காட்டியிருக்கிறார்கள்.

மின்னலைக்கண்டு பயந்தனர் நமது முன்னோர்கள். பின்னர் அதனைத் தெய்வ சக்தியாக்கி வியந்தனர். விஞ்ஞானி அந்த மின்னலிலிருந்து மின்சாரத்தைக் கண்டுபிடித்தான். மின்சார சக்தியை உண்டாக்குவது இலகுவானதா? அதற்காக எத்தனை விதமான பொருட்கள் அதற்குரிய அளவுப் பிரமாணங்கள் தப்பாமல் உரிய முறைப்படி நியமிக்கப்பட்டு அதற்கான செயற்பாடு சரியான முறையில் நிகழ்த்தப்படும்போது மின்சாரம் தோன்றுகிறது. அதுபோல பிரபஞ்சத்தின் அடிப்படை மூலகாரணமாக அண்டவெளியெங்கும் பரந்தும் நிறைந்தும் கரந்தும் இருக்கின்ற பேரருட் சக்தியைச் சுரக்கச்செய்து அதனை நமக்கு வேண்டிய வடிவத்தில் நமக்குரிய இடத்தில் பெறுவதற்கு ஏகப்பட்ட செயற்பாடுகள் தேவைப்படுகின்றன. அவைதான் கும்பாபிஷேகக் கிரியைகள்.

மின்சாரத்தைக் கையிலே கொண்டுவர முடியாது. கம்பிகள் வேண்டும். கம்பிக்குக் காவலிடப்பட்டிருக்கவேண்டும். மின்சாரத்தின் அளவு அதிகமாகும்போது அதனைக் கையாள்வதில் அதிக கவனம் தேவையாகிறது. கையாளும் கம்பி, சேமிப்புக்கலம் முதலியவையும் அதற்கேற்ப அவதானமாகத் தயாரிக்கப்படுகின்றன. கையாள்பவர் தம்மைக் காவலிட்டுப் பலப்படுத்திக் கொள்கிறார். அதன் செயற்பாடு புரியாதோர் எழுந்தமானமாகக் கையாள முற்பட்டால் எதிர்விளைவுகள் ஏற்படும். சாதாரண மின்சக்திக்கே இவ்வளவு ஏற்பாடென்றால் பிரபஞ்சத்தையே

இயக்கிக்கொண்டிருக்கும் திருவருட் சக்தியைக் கையாள்வதில் எவ்வளவு முன்னாயத்தங்களும் கவனமும் தேவை என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறதல்லவா?

அருட்சக்தியை ஆவாஹனம் செய்துவைக்கப்படும் திருவுருவங்கள் நல்லமுறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட கருங்கல்லாக இருக்கவேண்டும். (ஆண்கல், பெண்கல், அலிக்கல் என்ற பேதங்களும் அவை பெறப்படும் இடங்களும் முக்கியம்) அல்லது சரியான முறையில் கலக்கப்பட்ட உலோகக் கலவையாக (பஞ்சலோகம்) இருக்கவேண்டும். அவை ஆகமங்களில் சொல்லப்பட்ட அளவுப் பிரமாணங்களில், அதற்கேற்ற அங்கலட்சணங்களுடன் உரிய ஆடை அணிகலங்கள், ஆயுதங்களுடன் செதுக்கப்பட்டு அல்லது வார்க்கப்பட்டு உருவாக்கப்பட வேண்டும். இந்தச் சிற்பங்களை உருவாக்குபவர் சிற்பாசாரி எனப்படுகிறார். அவருக்கென்று சில நியமங்கள், ஒழுக்கங்கள், பாரம்பரியக் கட்டுப்பாடுகள் இருக்கின்றன. சிலையின் விதிமுறைகள் மட்டுமல்லாமல் சிலை செய்யப்படுபவரின் விதிமுறைகளும் சிலையின் சக்தியை நிர்ணயிக்கும். செய்யப்படும் திருவுருவை மனத்தில் கற்பனை செய்து அதன் தியான சுலோகத்தை உச்சரித்தவராக, அத்திருவுருவில் லயித்த மனதுடையவராக அவர் அச்செயலில் ஈடுபடும்போது அவரது எண்ண அலைகள் இயல்பாக அந்தச் சிலையின் உருவாக்கத்திற்கு உதவுகின்றன. சிலை செய்யப்படும் சிற்பாலயத்திலும் அத்தகைய புனிதமான அலைகளும் கதிர்வீச்சுக்களும் இருக்கவேண்டும்.

திருவுருவை ஸ்தாபித்து வழிபாடியற்றும் ஆலயமும் சிற்பாசாரியினால் முன்சொன்ன வகையிலே உருவாக்கப்படுகின்றன. அதற்கென்று அளவுப் பிரமாணங்களும் அமைப்பு விதிகளும் ஆகமங்களிலே வரையறுத்துக் கூறப்பட்டுள்ளன. ஆகமங்களின் வழிநூல்களான சிற்ப சாஸ்திரங்கள் இவ்விதிமுறைகளை விரித்துக் கூறுகின்றன. மூன்றுபுறமும் மூடப்பட்டு முன்புறம் மட்டும் திறந்ததாகக் கருவறை அமைக்கப் படுகிறது. மேலே விமானம் அமைகிறது. 'மான' என்பது அளவைக் குறிக்கும். விமான என்பது மிகவும் துல்லியமான அளவு எனக் கருதலாம். எனவே விமானம் அமைக்கும்போது கவனிக்கவேண்டிய அளவுப் பிரமாணங்களின் முக்கியத்துவத்தை அச் சொல்லின் பொருளே குறித்து நிற்பதைக் காணலாம். வான் நோக்கி உயர்ந்து, குவிந்து கூம்பியிருக்கும் கோபுரங்களாக அவை அமைந்திருப்பதுடன் உச்சியில் உலோகக் கலசங்களையும் கொண்டிருக்கும். நாற்றிசையில் முப்புறமும், மேல், கீழ் ஆகிய பகுதிகளும் கருங்கல்லினால் (அல்லது வெள்ளைக்கல், அதமபட்சமாகச் செங்கல்) அமைக்கப்படுவது அதிர்வுகளையும் கதிர்வீச்சுக்களையும் நெறிப்படுத்தி ஒலி, ஒளி, முதலிய புறச்சக்திகளையும் திருவருட்சக்தியாகிய அகச்சக்தியையும் உள்வாங்கிச் சேமித்து வைத்திருந்து முன்புற வாயிலினூடாக அளவறிந்து வெளிவிடுவதற்காகவே. ஆகாய வெளியில் பரந்து நிறைந்து மறைந்திருக்கும் பிரபஞ்ச சக்தியாகிய இறையருட்சக்தியை மேல்நோக்கிக் குவிந்து கூர்மையாக நிற்கும் உலோகப் பொருளாகிய கலசங்கள் தாங்கிய விமானம் என்னும் ஸ்தூபி ஈர்த்துக் கீழேயுள்ள திருவுருவத்தில் சேமிக்கின்றது.

தாம்ர விக்கிரகம் எனப்படும் பஞ்சலோகத் திருவுருவங்கள் 'சபை' என்ற பெயரில் தனியான சந்நிதியில் வைக்கப்பட்டிருக்கும். இவை எழுந்தருளிகள் அல்லது உற்சவ மூர்த்திகள் எனப்படும். இவை விழாக்களின்போது வீதி உலாவுக்கு

எழுந்தருளுகின்றன. சக்தியைத் தற்காலிகமாகச் சேகரித்து உடனுக்குடன் வெளிவிடுவதன் மூலம் எல்லா வெளியிடங்களிலும் சக்திக் கதிர்வீச்சினை இவை ஏற்படுத்துகின்றன.

ஆண்டவனை நமக்கு அருகிலிருத்துவதற்கான ஆயத்தங்கள் இவ்வாறு விக்கிரக உருவாக்கத்துடனும் ஆலய நிர்மாணத்துடனும் நிறைவடைந்தபின் அத்திருவுருவில் அருட்சக்தியை உட்புகச்செய்வதற்காக (ஆவாஹனம்) கும்பாபிஷேகக் கிரியைகள் நடைபெறுகின்றன.

பிரபஞ்சமெங்கும் பரந்திருக்கும் சக்தியை ஒருங்கு குவிப்பதற்கு ஐம்பூதங்களினூடான படிமுறைக் கிரியைகள் உதவுகின்றன. சூரிய சக்தியைப் பூதக் கண்ணாடியூடாகக் குவித்து அதன்சக்தியை ஒருங்கு சேர்ப்பதன்மூலம் பஞ்சினை எரிப்பது போன்றதே இது என விளங்கிக்கொள்ளலாம்.

"பிரம்மண ஆகாசாத் சம்பூதஹ
ஆகாசாத் வாயுஹு
வாயோர் அக்னிஹி
அக்னேர் ஆபஹ
அத்ப்யஹ் ப்ருதுவீ" என்பது உபநிடத வாக்கியம்.

"பிரம்மமானது ஆகாயத்திலிருந்து தோன்றி, வாயுவுக்கும் வாயுவிலிருந்து அக்னிக்கும், அக்னியிலிருந்து தண்ணீருக்கும், தண்ணீரிலிருந்து நிலத்திற்கும் படிப்படியாக இறங்கி வருகிறது" என்பதே இதன் விளக்கமாகும்.

ஆகாயம் என்பது காட்சிக்கும் தொடுகைக்கும் அப்பாற்பட்ட பரவெளி மட்டுமே. அதன் அடுத்த நிலையாகிய காற்று தொடுகைக்கு உட்படுமெனினும் கட்சிக்கு அடங்காதது. அடுத்த நிலையாகிய தீ தொடுகைக்கும் காட்சிக்கும் உட்பட்டதே எனினும் தொட்டுணர்வதற்கு அப்பாற்பட்ட சக்தியை உடையது. நான்காம் நிலையிலுள்ள நீர் தொடுகைக்கும் காட்சிக்கும் உடன்படுவதாகவும் நமது இலகுவான பயன்பாட்டுக்குரியதாகவும் இருப்பினும் நிலையான வடிவத்தை அது பெறுவதில்லை. இறுதிநிலையாகிய பூமி (நிலம் என்னும் தரையில் பெறப்படும் மண், கல், உலோகம் என்பன) எல்லா வகையிலும் எமக்கு உகந்ததாக, வேண்டிய உருவைப் பெறவல்லதாக உள்ளது.

இதேபோல மந்திரங்களின் அதிர்வுகள் பிரபஞ்ச சக்தியை ஈர்க்கும் தன்மையுடைய ஒத்த அதிர்வுகளைக் கொண்டிருக்கின்றன. அவை கதிர்வீச்சுப்போல பேரருட்சக்தியைக் கும்பத்திலும் அக்கினியிலும் விக்கிரகத்திலும் கொண்டுவந்து சேர்க்கத்தக்கன.

பிரதிஷ்டையில் அக்கினி, கும்பம், விக்கிரகம் ஆகிய மூன்று இடங்களிலும் திருவருட்சக்தி பொலிவுற்று விளங்குகிறது. இறுதியில் அக்கினியிலுள்ள சக்தி கும்ப நீரில் சேர்க்கப்பட்டு அது அபிஷேகத்தின்மூலம் விக்கிரகத்திலே சேர்க்கப்படுகிறது.

அக்கினி அளவற்ற சக்தி வாய்ந்தது. ஆக்கவும் அழிக்கவும் வல்லது அது. நமக்கு வேண்டிய உணவுப் பொருட்களை உருவாக்கித் தருவதும் அது. நம்மையே

அழித்துவிடுவதும் அக்கினியே. எந்த அசுத்தத்தையும் தூய்மைசெய்யும் சக்தியும் அதற்குண்டு. பிரபஞ்சத்தையே இயங்கச்செய்யும் மூலப்பொருளாக நடுவில் நின்று சுழன்றுகொண்டிருக்கும் சூரியன் ஓர் அக்கினிக் கோளமன்றோ? அதனால்தான் ஆதியிலிருந்து இன்றளவும் அக்கினி ஓர் தெய்வ சக்தியாக யாவராலும் வணங்கப்படுகிறது. அத்தகைய அக்கினி மூலமாகவே நாம் அருட்சக்தியைச் சேகரிக்க முற்படுவது பொருத்தமானதல்லவா?

எனவே, ஒன்றிலிருந்து முப்பத்துமூன்று குண்டம் வரை ஓமகுண்டங்களை யாகசாலையில் அமைத்து அங்கு எரியோம்பி அவற்றில் ஒவ்வொரு சக்திகளைத் தனித்தனியே வருவித்துப் பின்னர் அவை யாவற்றையும் பிரதான குண்டமாகிய ஒரு குண்டத்திலே சேர்த்து அதைப் பிரதான கும்பத்து நீரிலே சேர்த்து அதையும் அபிஷேகம் மூலம் விக்கிரகத்திலே சேர்க்கின்றோம்.

எல்லாமே 'டிஜிற்றல்' மயமாக இருக்கும் இன்றைய உலகில் அதன்மூலம் நாம் இதனை விளங்கிக்கொள்ள முயற்சிக்கலாம். மின் அஞ்சல் மூலம் நாம் ஒரு விடயத்தை அனுப்பும்போது ஒரே தடவையில் அனுப்ப முடியாத சந்தர்ப்பங்களில் அதனைப் பல பகுதிகளாகப் பிரித்து அனுப்புகின்றோம். பெறுபவர் பின்பு அவற்றை ஒன்று சேர்க்கிறார்.

மேலும், கணினியில் படங்களை உருவாக்கும்போது புள்ளிகளின் செறிவு அதிகரிக்கும்போது அவை துல்லியமானவையாக அமைவதைக் காணலாம். குறைந்த புள்ளிகள் உடைய படங்கள் கையாள இலகுவாக இருப்பினும் அவை செறிவு குறைந்தவையாக இருப்பதால் அதிக அழகுடன் காணப்படுவதில்லை.

இதே தத்துவம்தான் யாக குண்டங்களிலும் காணப்படுகிறது. அருட்செறிவு அதிகமாக இருக்கவேண்டுமானால் அதிக குண்டங்களை உருவாக்கிப் பகுதி பகுதியாகச் சக்தியைச் சேகரிக்கும்போது துல்லியமான சக்திச் சேமிப்பு கிடைக்கும். அதற்கான இடம் பொருள், ஏவல் கிடைக்காதவிடத்துக் குறைந்த எண்ணிக்கையில் குண்டங்களை அமைத்து ஓரளவு சக்தியைப் பெற்றுக்கொள்ளலாம்.

பொதுவாக, நவகுண்டம் எனப்படும் ஒன்பது குண்டம் சாதாரண நிலையில் போதுமானது. அதற்கு அடுத்தபடியாக பஞ்சகுண்டம் எனப்படும் ஐந்து குண்ட முறை பயன்படுகின்றது. பஞ்ச பூதங்களின் வழியாகச் சேர்க்கப்படும் சக்தி பஞ்சகுண்டங்கள் மூலமாகச் சேர்க்கப்படும்போது அதில் ஒரு பொருத்தப்பாடும் உள்ளது. அதன் விரிந்த நிலையாகிய அட்டமூர்த்திகளின் வழியாக சக்தியைச் சேகரிக்கும் முறை நவகுண்டத்தில் பயன்படுகிறது. இங்கு எட்டுக் குண்டங்களில் அட்ட மூர்த்திகளும் பிரதான குண்டமாகிய ஒன்பதாவது குண்டத்திலே ஆலய மூல மூர்த்தியும் எழுந்தருளுவர்.

யாகசாலையின் நடுவிலே வேதிகை என்னும் மேடையில் பிரதான கும்பம் அமைந்திருக்கும். அதில் பிரதான மூர்த்தி ஆவாஹனம் செய்யப்பட்டுத் தினமும் மந்திர உச்சாடனம் மூலம் உருவேற்றப்பட்டு அருட்போலிவோடு விளங்குவார். பிரதான குண்டத்தில் சிவாக்கினி முறைப்படி வளர்க்கப்பட்டு அங்கிருந்து ஏனைய

குண்டங்களிலும் சேர்க்கப்படும். பிரதான குண்டத்திலிருப்பது சிவாக்கினி. இந்த அக்கினியில்தான் மூலமூர்த்தியின் பிரதான அம்சம் ஆவாஹனம் செய்யப்படும்.

பிரதானமான இந்த யாகசாலைக் கிரியைகளுக்கு அங்கமாக, முன்னேற்பாடாக பூர்வாங்கக் கிரியைகள் பல செய்யப்படுகின்றன. அவை பயிர்ச்செய்கைக்கு முன் வயலைத் தயார் செய்வதைப் போன்றவை. வயலை உழுது பண்படுத்தி அங்கிருந்து கற்கள், வேர்கள், களைகள் முதலிய வேண்டாதவற்றை அகற்றி நீர்பாய்ச்சி சொகுசுபடுத்தி அதன்பின்னரே விதைக்கப்படுகிறது. இறைதிருவுருவத்தையும் ஆலயத்தையும் அதன் சூழலையும் தூய்மை செய்து புனிதப்படுத்தி, இடையூறுகள் நேராமல் காவலிட்டு, தீய சக்திளை அகற்றிப் பாதுகாப்பு வேலிகளை இட்டு அதன்பின் அங்கு படிப்படியாக சக்தியை உருவாக்கும் செயற்பாடுகள் நடைபெறுகின்றன.

மந்திரம், பாவனை, கிரியை என முத்திறத்ததாக இவை அமைகின்றன. மந்திரங்களின் ஒலி அதிர்வுகள் சக்திச் செறிவை ஏற்படுத்துகின்றன. பாவனை என்பது மனோதத்துவம் - மனோசக்தி (Will Power) சார்ந்தது. மனோசக்தியின் பயன்பாடுகள் பற்றியும், சாதனைகள் பற்றியும், மனோதத்துவ விஞ்ஞானம் எவ்வளவோ செய்திகளை ஆதார பூர்வமாகக் கூறுகிறது. வைத்திய போதனைகளில் மனோவசிய முறை நன்கு பயன்படுத்தப்டுகிறது. ஒரு வைத்தியரின் போதனைகளால், அவரிடம் நோயாளி வைக்கின்ற நம்பிக்கையால் அரைப்பங்கு நோய் குணமாகிவிடுகிறது. மேலும், சுயவசிய முறைப்படி தனது உடலுறுப்புக்களைத் தானே வசப்படுத்திச் சில நோய்களை மாற்றிவிடக்கூடிய சக்தி மனவலிமைக்கு உண்டு. விஞ்ஞான பூர்வமாக ஆராய்ந்தால் நமது கிரியைகளில் மனோசக்தி எவ்வளவு தூரம் சிறப்பிடம் வகிக்கின்றது என்பது விளங்கும். ஆக, இறைசக்தி இங்கு நிலைபேறாகிறது என்ற நம்பிக்கை சிவாசாரியாரிடத்தும் அடியார்களிடத்தும் இருப்பதே பாவனை என்பதாகும். கிரியை என்பது செயற்பாடுகளைக் குறிக்கும்.

ஆலயங்களில் நிகழும் கிரியைகளுக்கும் யாக மண்டபங்கள், வேதிகைகள், கும்பங்கள் முதலியன விதிப்படி அமைய வேண்டியது அவசியம். அதுமட்டுமல்ல, ஆலயமே ஆகம விதிப்படி ஒழுங்காக அமைக்கப்பட்டிருந்தால்தான் அங்கு நிகழும் கிரியைகள் நாம் எதிர்பார்க்கும் பலனைப் பூரணமாகத் தரும்.

விஞ்ஞானப் பரிசோதனைகளை நாம் நிகழ்த்தும்போது அதற்கென ஆய்வுகூடங்கள் தேவைப்படுகின்றன. நினைத்த இடங்களிலெல்லாம் அவற்றைச் செய்துவிடமுடியாது. சூழல் அதற்கான ஒழுங்கமைப்பில் இருக்கவேண்டும். அளவுப் பிரமாணங்கள், வெப்பநிலைகள், ஓசைகளின் அளவு, சேர்க்கப்படும் பொருட்களின் அளவு மற்றும் செறிவு முதலியன அவற்றுக்கான கருவிகள் என இத்தனை விடயங்கள் ஒருங்குசேரும்போதுதான் பரிசோதனைகளைச் சரியானமுறையில் நிகழ்த்தி விளைவுகளைக் கண்டறிகிறோம். மருத்துவ சிகிச்சை நடக்கும்போதும் இதே நிலைமைகளை நாம் காணலாம். இதேபோன்றதொரு செயல்தான் பிரபஞ்சமெங்கும் பரந்திருக்கும் பேரருட் சக்தியை நாம் நமக்குள் பெற்று நம்மை உயர்த்தி அந்த அருட்சக்தியோடு ஒன்ற முயற்சிக்கின்ற வழிபாட்டு முறைகளும்.

ஆலயமும் அங்கு ஸ்தாபிக்கப்படும் திருவுருவங்களும் சரியாக அமைந்து மந்திரம், பாவனை, கிரியைகளும் ஒழுங்குற நடைபெற்று உயர்வான கும்பாபிஷேகம் மூலம் திருவருட்பொலிவு அங்கு ஏற்பட்டிருக்கும் நிலையில் நாம் அதனைப் பெற்று இன்புறத் தயாராக இருக்கவேண்டும் என்பதும் முக்கியமானதல்லவா?

ஆண்டவன் அருட்கதிர் தகுதியான இடங்களில் மட்டுமே பாயும். ஆசாரம், ஒழுக்கம், தூய்மை, நற்குண நற்செயல்கள் என்பன சற்பாத்திரனுக்கு இலக்கணம். நல்ல பாத்திரத்தில்தான் நல்ல பொருட்களை ஏந்தலாம். ஆசாரம் என்பதும் நன்னடத்தை ஆகிய ஒழுக்கத்தையே குறிக்கும். எனினும், ஆன்மீக நடைமுறையில் ஆசாரம் என்ற சொல் புற ஒழுக்கம் சார்ந்த சில நடைமுறைச் செயற்பாடுகளையும் சுட்டிநிற்கிறது.

ஆலய வழிபாடு என்றதும் முதலில் சொல்லப்படும் செயற்பாடு, 'நீராடித் தோய்த்துலர்ந்த ஆடை உடுத்தி' என ஆரம்பமாகிறது. உடல் அல்லது உடைகள் சார்ந்த புறவயமான தூய்மை நிலைமை ஆசாரம் ஆகும்.

ஆசௌசமுடைய ஒருவரில் தீண்டுதல் (முட்டுதல்), அவர்களது இல்லதிதற்குள் செல்லுதல், அவர்களிடம் உணவோ நீரோ அருந்துதல் இவையெல்லாம் ஆசாரமற்ற செயற்பாடுகளாகும். இவற்றை நன்கு சிந்தித்துப் பார்த்தால் இவை யாவுமே சுகாதாரப் பழக்கவழக்கங்கள் என்பதையும் தூய்மையைப் பேணும் நடைமுறைகள் என்பதையும் புரிந்துகொள்ளலாம். அறிவியல் - மனோதத்துவ - ரீதியில் பார்க்கும்போது ஆசாரமான பழக்கவழக்கங்கள் சில உயர்நிலை அதிர்வுகளை அல்லது தூண்டல்களை உள்ளத்தில் ஏற்படுத்தக் கூடியவை என்பதையும் எதிர்மறையாக அவை உதாசீனப்படுத்தப்படும்போது மந்தமான அதிர்வுகள் தூண்டப்படலாம் என்பதையும் உணரமுடியும்.

எனவே, உடல்நிலை சார்ந்த புறவயத் தூய்மையும் உளம் சார்ந்த தியாக உணர்வும் சிரத்தையும் பற்றுறுதியும் நம்பிக்கையும் மனிதாபிமானம், ஜீவகாருண்ணியம் முதலிய பண்பு நலன்களும் இருந்தால் சற்பாத்திரராகி அருட்சக்தியை ஏற்றுக்கொள்ளும் பக்குவநிலையைப் பெற்றுவிடலாம்.

இவை யாவும் சரியாக அமையும்போது நமது உடலும் உள்ளமும் சரியான சக்திப் பேற்றுக்கேற்ற அதிர்வுகளை உடையவர்களாகின்றோம். அதனால் படிப்படியாக அருட்சக்தியால் உயர்நிலையடைந்துவிடுகிறோம். பக்குவமடைந்த இந்த உடலிலிருந்து எளிதாக ஜீவான்மா விடுபட்டுப் பரமான்மாவுடன் ஐக்கியமடைந்துவிடுகிறது. இதுவே இந்துசமயத்தில் எதிர்பார்க்கப்படும் உயிரின் உன்னதமான உயர்நிலையாகும்.






# இல்லற வாழ்வில் இந்து சமயம்

## ~ ஆசாரமும் நெறிமுறையும்



இந்துசமயம் என்பது பாரம்பரியமான ஒரு மரபு விருட்சம். அதனை அடியோடு வெட்டிப் புரட்டிவிட்டு வேறொரு மரத்தை நடலாம் என நினைப்பவர்கள் மூடர்கள்.

அதன் கிளைகளை வெட்ட முற்படுவோர் பலர். அதன் அருகில் வேறு மரங்களை நாட்ட முற்படுவோர் பலர்.

தவறாக வளைந்து நெளிந்து பரப்பிய கிளைகள் தறிக்கப்பட்டபோது அதனை மரம் ஏற்றது. அருகில் நடப்பட்ட புதிய மரங்களைக் கொடிகளாக்கித் தன்மீது படரச்செய்து அதன் நல்லியல்புகளைத் தானும் ஏற்றுத் தனது நல்லியல்புகளை அதற்கும் கொடுத்து – கொண்டும் கொடுத்தும் - வளம்பெற்றுக்கொண்டிருக்கிறது இந்துமதம் என்னும் இந்தப் பெரு விருட்சம்.

மரநிழலில் நிற்பவர்கள் சிலர், கிளைகள் வெட்டப்பட்டபோது “ஐயோ எங்கள் மரத்தின் கிளைகளை வெட்டுகிறார்களே” என அழுதனர். வேறு மரங்கள் நடப்பட்டபோது “ஐயோ, எங்கள் மரம் அழியப்போகிறதே” என ஓலமிட்டனர். ஆனால் மரம் எதற்கும் கலங்காமல் வளர்ந்து நிழல் பரப்பிக்கொண்டுதான் இருக்கிறது.

**விதிகளும் உண்டு, விலக்குகளும் உண்டு. இதை உணர்ந்து நடப்பது நமது கடமை.**

‘‘குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே’’ என்பார்கள். ஆலயங்களில் பூஜைவேளைகளில் அடியார்களின் பிரசன்னம் மிக அவசியம். ஒவ்வொரு பூஜைக் காலத்திற்குமுன்னரும் அடியார்கள் வந்து சரியைத் தொண்டுகள் செய்து ஆலயத்தைப் புனிதமும் அழகும் மிக்கதாக ஆக்கவேண்டும். பூஜை நடைபெறும்போது ஆர்வத்துடன் தரிசித்து வணங்க வேண்டும். முடிவுற்றபின் திருமுறை பாராயணங்கள், கூட்டுப்பிரார்த்தனைகளில் ஈடுபடவேண்டும். சிறிதுநேரம் அமைதியாக இறைசிந்தனையில் லயித்திருந்தபின் மனச்சாந்தியுடன் இல்லம் திரும்பவேண்டும்.





...............பிரபஞ்சத்தில் ஒவ்வொன்றும் இப்படித்தான் இருக்கவேண்டும் என்று ஒரு நியதி இருக்கிறது. மரத்திற்கும் மட்டைக்கும்கூட நியதி உண்டு. குடும்ப காரியம், சொந்தக் காரியம், குளிப்பது, சாப்பிடுவது முதற்கொண்டு ஒரு நிர்ணயப்படி – நியதிப்படிதான் செய்ய வேண்டும்.

ஒரு வீடு என்றால் அதில் சமையல் அறை, பூஜை அறை, படுக்கை அறை என்று வெவ்வேறாக இருக்கும். ஒரு பக்டரி என்றால் இயந்திர சாலை, நிர்வாகஸ்தர் ஆபீஸ் என்று தனித்தனியாக இருக்கும். இவற்றில் ஒன்றில் செய்வதை இன்னொன்றில் செய்யலாமா? இந்தக் காலத்தின் சௌகரியத்துக்கு புதுக் கொள்கைக்கும் போக்குக்கும் ஏற்ப சாஸ்திரத்தை மாற்றக் கூடாது. வேதங்களின் சாராம்சம்தான் சாஸ்திரம். சாஸ்திரம் என்றால் இப்படித்தான் என்று கட்டளையாக இடப்பட்டிருப்பது.

வாழ்க்கை வழிமுறைகளில் புதிது, பழசு என்பதாலேயே ஒன்று வேண்டும், வேண்டாம் என்பது இல்லை. அதன் பிரயோஜனம் என்ன என்ாதைப் பரீட்சித்துப் பார்த்தே எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஏதாவது ஒரு நல்ல விஷயத்திலே நாம் பூர்ணமாக ஈடுபடப் பழகினால் அப்போது சித்தம் கூடியமட்டும் அழுக்குப்படாமல் இருக்கும். சித்தத்தை நேராக அடக்க முயன்றால் அது திமிறிக்கொண்டு நாலாதிசையும் பாயத்தான் செய்யும். எனவே சித்தத்தில் கவனம் வைக்காமல் ஏதாவது ஒரு நல்ல காரியத்தில் ஈடுபட்டுவிட்டால் அப்போது சித்தத்துக்கு சஞ்சலிக்க இடம் குறைந்துபோகும்.

எப்போது பார்த்தாலும் உர் என்று இருந்துகொண்டு வாழ்க்கையில் தனக்கு எல்லாம் கஷ்டம் என்று புலம்பிக்கொண்டு நொந்துகொண்டு இல்லாமல் எதிலும் கடுமையாகச் செய்யாமல் நிம்மதியோடு லேசாகச் செய்யவேண்டும். இப்படிச் செய்வதாலேயே ஆயாசப்பட்டுக்கொண்டு செய்வதைவிடப் பலமடங்கு வேலை செய்துவிடலாம்.

நமக்கு நிஜமாக சிரத்தையும் தைரியமும் இருந்தால் எதையும் நடத்திக் கொண்டுவிடலாம்.

ஒரு லாப நஷ்ட வியாபாரமாக நினைக்காமல் பிறர் கஷ்டத்தை தீர்க்க நம்மால் ஆனதைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். ஆரம்பித்துவிட்டால் போதும், அதனால் பிறத்தியார் பெறுகிற பலன் ஒரு பக்கம் இருக்கட்டும். நமக்கே ஒரு சித்த சுத்தியும் ஆத்ம திருப்தியும் சந்தோஷமும் ஏற்பட்டு அந்த வழியில் மேலும் மேலும் செல்வோம்.

சொந்த ஆசை, துவேஷம் இல்லாதபோது எந்தக் காரியம் செய்வதிலும் வெறுப்பு இராது. ஆசையும் துவேஷமும் போய்விட்டால் எந்தக் காரியத்தையும் அன்போடு செய்துகொண்ட ஆனந்தமாக இருக்கமுடியம்.

சமமான அன்புடன் இருந்துகொண்டு சுத்தமான எண்ணத்தோடு அவரவரும் அப்படித் தன் கருமத்தைச் செய்தால் சமூகத்தில் போட்டி பொறாமை சண்டை சச்சரவு எதுவுமே இருக்காது. லோகமே இன்பமயமாக இருக்கும்.

~ காஞ்சிப் பெரியவர்.

திரேதா யுகத்தில் வாழ்ந்த இராமனுக்கு அவன் காட்டிற்குச் செல்லும்போது அவனுக்கு என்ன கொடுக்கலாம் எனச் சிந்தித்த தாய் கோசலை கொடுத்த பொக்கிஷம் தர்மமே.

"இராமா, உன்னைக் காப்பது தர்மம் ஒன்றுதான். இப்போது நீ மன வலிமையுடனும் குறை சிறிதும் இல்லாமலும் முறையாகவும் எந்த தர்மத்தைப் பாதுகாத்து வருகிறாயோ, அந்த தர்மத்தைக் காட்டிலும் கடைப்பிடிப்பாயாக!"

அவ்வாறு தர்மம் காத்தமையால்தான் இலங்கையை விபீஷணனிடம் கொடுத்தபின் அனுமனைப் பார்த்து "விபீஷணனிடம் அனுமதி பெற்றபின் அசோக வனத்திற்குச் சென்று சீதையை அழைத்து வா" என்கிறான்.

- புலவர் எஸ். சந்தர் எழுதிய
மானிடத்தை வழிநடத்தும் மனித தர்மம் என்ற நூலிலிருந்து

நம் எண்ணம் எப்படியோ, அப்படியே நாம். நாம் எழுவதெல்லாம் நம் எண்ணங்களால்தான். உலகை உருவாக்குவதும் நம் எண்ணங்களால்தான்.

- தம்மபத முதற் சூத்திரம்.

தேவைகள் ஏதும் இல்லாதவனாக இரு.
எங்கே ஆசை இருக்கிறதோ,
அங்கே மௌனித்துவிடு!

மகிழ்ச்சியோ துயரமோ
எது நடந்தாலும்
பாதிப்பில்லாதவனாகப்
போய்க்கொண்டிரு.

- தம்ம பத சூத்திரம்.

"மூல சித்தாந்தக் கொள்கைகளைப் பொறுத்தவரை இந்துமதம் கண்டிப்பாகவும், கடுமையாகவும் உள்ளது. ஆனால், அது வெளிப்புறத்தே உள்ளவற்றையும் முக்கியமல்லாதவற்றையும் சரிப்படுத்திக்கொள்வதில் மிகவும் வளைந்து கொடுக்கக் கூடியது. அதனால்தான் இந்துமதம் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக உயிருடன் வாழ்ந்து வருகிறது."

- சுவாமி சிவானந்தர்.



எதையும் அனுமதிக்கக் கூடிய மதம் ஒன்று உண்டென்றால் அது இந்து மதம்தான். மற்ற மதங்களில் அவைகளின் கோட்பாடுகளிலிருந்து விலகி எதுவுமே செய்யமுடியாது. அப்படிச் செய்ய நினைப்பவர்கள் மதத்தில் இருக்கமுடியாது. இந்துமதம் அப்படிப்பட்டதல்ல. எல்லோருமே – நாத்திகர்கள் உட்பட - இந்துவாக வாழ முடியும்.

மற்ற மதங்கள் குறிப்பிட்ட அளவுக்கு ஒரு சட்டையைக் கொடுத்துவிடுகின்றன. அதை எப்படியாவது வசதிப்படுத்திப் போட்டுக்கொள்ள வேண்டும். இந்துமதம் அப்படிப்பட்டதல்ல. அது துணியைத்தான் கொடுக்கிறது. சட்டையைத் தைத்துக்கொள்வது அவரவர் சுதந்திரத்துக்கு விடப்படுகிறது.

குணம், பண்பு, திறமை இவை எங்கே இருந்தாலும் அவற்றை மதித்து ஏற்கவேண்டும் என்றே இந்து மதம் சொல்கிறது. மற்றவர்களிடமிருந்து நல்லது எதுவானாலும் அதை ஏற்றுக்கொண்டு அதன் பலனைப் பெறவேண்டும் என்றும் வழிகாட்டுவதுதான் இந்துமதம்.

**-சுவாமி விவேகானந்தர்.**

அவனவன் சிந்தனைசெய்து சரியான வழி எது எனத் தெளிந்து அதை மேற்கொள்ள வேண்டும் என்று வலியுறுத்துவது இந்துமதத்தின் ஓர் அடிப்படை அணுகுமுறை. இதைத்தான் ஸ்வதர்மம் என்றும் சொல்கிறார்கள் என்பது என் கருத்து. இதனால் சமூக வழிபாட்டு முறை என்பதுகூட இந்துமதத்தில் ஏற்படவில்லை என நான் நினைக்கிறேன். இதனால்தான் போப் போன்று சர்வ அதிகாரமும் கொண்ட மதத்தலைவரும் இந்துமதத்தில் இல்லை என்றும் கருதுகிறேன்.

சோ எழுதிய யார் பிராமணன்? நூலிலிருந்து எடுக்கப்பட்டது.

# தர்மசாஸ்திரம் கூறும் வாழ்க்கை நெறிகள்

## சாதாரண வாழ்க்கையில் மனித மேம்பாட்டுக்கு உதவும் நல்ல செயற்பாடுகள்

### 1. ஆசார விதிமுறைகள்

உணவருந்துமுன் கை கால்கள் கழுவி (ஈரக் காலுடன்) சாப்பிடவேண்டும்.

பிரார்த்தனை செய்து சாப்பிடவேண்டும்.

அரைவயிறு உணவு, கால் வயிறு நீர், கால்வயிறு வெறுமை.

ஒரே ஆடையுடனோ ஈரத் துணியுடனோ உண்ணலாகாது.

நெற்றிக்கு இட்டுக்கொள்ளாமல் உண்ணலாகாது.

வடக்கு நோக்கி அமர்ந்து உண்ணலாகாது.

திங்கள், புதன், வெள்ளி, சனி இந்த நாட்களில் விருந்து கொடுக்கவோ, விருந்து உண்ணவோ நல்ல நாட்களாகும். மற்ற நாட்களில் விருந்து அளித்தாலோ, விருந்து சாப்பிட்டாலோ பகை வளரும், உறவு முறியும்.

காய்ச்சிய நீரை உட்கொள்ள வேண்டும். நீர் விட்டுப் பெருக்கிய மோரை உட்கொள்ள வேண்டும். காச்சிய நெய்யை உபயோகப்படுத்த வேண்டும்.

பந்தியில் உட்கார்ந்து சாப்பிடும் பொழுது பெரியவர்களுக்கு வலது பக்கம் உட்கார வேண்டும். அவர்களை நெருக்கி முண்டியடித்து கொண்டு உட்கார்ந்து சாப்பிடக்கூடாது.

அன்னம், உப்பு, நெய் இவைகளைக் கரண்டி இல்லாமல் வெறும் கையால் பரிமாறக் கூடாது. மங்கையர்கள் வளையல் அணியாமல் எதையும் பரிமாறக் கூடாது.

சுண்ணாம்பு தடவிய வெற்றிலை, பாக்கு இவற்றை உட்கொள்ளாமல் வெறும் வெற்றிலையையோ அல்லது வெறும் பாக்கையோ போடக்கூடாது. வெற்றிலையின் பின்பக்கம்தான் சுண்ணாம்பு தடவ வேண்டும். முன்புறம் தடவக்கூடாது.

வெற்றிலையை வெளிப்புறமாக மடிக்கக்கூடாது. காலையில் பாக்கை அதிகமாகவும், பகலில் சுண்ணாம்பை அதிகாக உட்கொள்ளுவது ஆயுளை விருத்தி செய்ய உதவும். மனைவி கணவனுக்கு வெற்றிலை மடித்துக் கொடுக்கலாமே தவிர, கணவன் மனைவிக்கும், பையன் தாயாருக்கும், பெண் தந்தைக்கும் மடித்துத் தரக் கூடாது.

சாப்பிடவுடன் கிருகஸ்தன் தாம்பூலம் போட வேண்டியது. வெற்றிலையின் நுனியில் பாவமும், மூலத்தில் வியாதியும், நரம்பில் புத்திக் குறைவும் உள்ளதால் இவற்றை தள்ளிவிட வேண்டும்.

படுக்கைக்குப் போகுமுன் கை கால் கழுவி விபூதி பூசி இறைவணக்கம் செய்தபின் கால்கள் காய்ந்த பிறகு படுக்கவேண்டும். (ஈரக் காலுடன் படுக்கக் கூடாது)

பெண்களுக்கு நெற்றியில எப்போதும் திலகம் இருக்கவேண்டும்.

இரவில் வீடு கூட்டவோ கழுவவோ கூடாது. குப்பையை வெளியில் கொட்டக் கூடாது.

தலையை விரித்துப் போட்டபடி வெளியே செல்லலாகாது.

பிறர் தரித்த உடைகள், செருப்பு, மாலை, தண்ணீர்குடிக்கும் குவளை, படுக்கை, உட்காரும் ஆசனம் முதலியவைகளை நாம் உபயோகிக்கக் கூடாது. அவை பாபத்தையும் நோயையும் உண்டாக்கும்.

பிணப் புகை, இளவெயில், தீப நிழல், பிற மனிதர் நிழல் ஆகியன நம்மீது படுமானால் ஆயுள் ஆரோக்கியம் செல்வம் என்பன கெடும்.

இரவு நேரத்தில் மரங்களின் கீழ் தங்கக் கூடாது.

தர்ப்பைப் புல், பூ ஆகியவற்றை நகத்தால் கிள்ளக் கூடாது.

எரிகின்ற தீபத்தை வாயினால் ஊதி அணைக்கக் கூடாது.

ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பவரைத் திடீரென்று எழுப்பக் கூடாது.

நெல்லிக்காய், தயிர், சத்துமா, இஞ்சி ஆகியன இரவில் உண்ணலாகாது.

நண்பர்கள், உறவினர்களைப் பயணம் அனுப்பிவிட்டோ வீட்டில் சுப காரியங்கள் செய்துவிட்டோ உடனே குளிக்கலாகாது.

வெளியே புறப்படும்போது கொல்லை வழியாகப் போகக் கூடாது. வாசல் வழியாகவே போகவேண்டும்.

அரைத்த சந்தனத்தைச் சந்தனக் கல்லிலோ சந்தனக் கட்டையிலோ வைக்கக் கூடாது.

அரைத்த சந்தனத்தை நகத்தால் வழிக்கக் கூடாது. விரலின் உட்புறத்தால் வழிக்க வேண்டும்.

நண்பகலுக்குமேல் மாலையில் அரச மரத்தைச் சுற்றி வழிபடலாகாது.

ஆடுகள், கழுதைகள் செல்வதால் உண்டாகும் தூசியும் வீடு பெருக்குவதால் உண்டாகும் தூசியும் நம் மேல் படக் கூடாது. அது தரித்திரம்.

பசுவின் தூசி நன்று.

பால், சந்தனம், புஷ்பம் இவற்றைத் தாமிரப்(பித்தளை) பாத்திரத்தில் வைக்கக் கூடாது.

கோவில் வாசல், துவஜஸ்தம்பம், துவாரபாலகர் ஆகிய இடங்களில் அஷ்டாங்க நமஸ்காரம் செய்ய வேண்டும். நமஸ்காரம் செய்யும் போது பின்புறம் சந்நிதி, பெரியோர்கள் இல்லாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும்.

புது உடை அணிய வியாழன், வெள்ளி உகந்த நாளாகும்.

அமாவாசையன்று எண்ணெய் தேய்த்துக் குளிக்கக்கூடாது. சுபகாரியங்கள் செய்யக்கூடாது. செவ்வாய், சனிக்கிழமை புதிய ஆடைகள் உடுத்தக் கூடாது. அமாவாசை நாளில் முடிவெட்டிக் கொள்ளக்கூடாது. வெள்ளிக்கிழமை உப்பு வாங்கினால் செல்வம் வளரும்.

உச்சி வெயிலில் நடப்பது தவறு. சூரிய அஸ்தமன சமயத்தில் தூங்கக்கூடாது. சாப்பிடக்கூடாது. இரவில் நடு ஜாமத்தில் வெளியில் செல்லக்கூடாது. விளக்கு ஏற்றியபிறகு பால், தயிர் இவற்றை பிறர்க்குக் கொடுக்கக் கூடாது. விருந்தாளி போன பிறகு வீட்டைக் கழுவி சுத்தப்படுத்தக்கூடாது.

குடும்பப் பெண்கள் வீட்டில் காலையிலும், மாலையிலும் விளக்கு ஏற்ற வேண்டும். விளக்கு தானாக அணைய விடக் கூடாது. பூவாலோ அல்லது பாலைத் தொட்டோ அணைக்க வேண்டும். விளக்கு ஏற்றிய பிறகு வெளியில் எங்கும் செல்லக் கூடாது. வீண் பேச்சு கூடாது. கடவுளை நினைத்து பிரார்த்தனை செய்ய வேண்டும். பிரார்த்தனைகளால் எதையும் சாதிக்க முடியும்.

மனிதனாகப் பிறந்தவன் தன் வாழ்நாளில் ஏதாவது ஒரு புனித யாத்திரை செய்ய வேண்டும். சேர்த்து வைத்த பணத்தில் தானதர்மம் செய்ய வேண்டும். ஏழை, எளியர்வகளுக்கு உதவ வேண்டும்.

உத்தரத்திற்கு நேராக கட்டிலிட்டு படுக்கக்கூடாது. படுத்தோ, நின்றோ உண்ணக்கூடாது. கட்டிலின் மேலிருந்தும் உண்ணக்கூடாது.

பெரியோரிடம் ஒன்றைக் கொடுக்கும் போதும், வாங்கும் போதும் இரு கைகளாலும் வாங்கல், கொடுத்தல் செய்ய வேண்டும்.

உரல், அம்மி, உலக்கை, வாயிற்படி, முறம் இவைகளில் உட்காரக் கூடாது.

ராகு காலத்திலும் எம கண்டத்திலும் நல்ல காரியங்கள் செய்யக் கூடாது. சூலையுள்ள திக்கில் பிரயாணம் செய்யக்கூடாது. குளிகைகளில் அசுப காரியங்கள் செய்யக்கூடாது.

பெண்கள் வாசலில் நின்று கொண்டு வருவோரையும், போகிறவர்களையும் பார்த்து கொண்டு நிற்கக்கூடாது. பழக்கம் இல்லாதவர்களுடன் பேசக் கூடாது. காரணமில்லாமல் சிரிக்கக் கூடாது. ஆண் துணையின்றி இரவில் நடமாடக்கூடாது. மாலையில் விளக்கு ஏற்றியபின் பிற வீடுகளுக்குப் போகக் கூடாது.

நம் வீட்டில் சுபகாரியம் நடக்கும்போது யார் வந்தாலும் உபசரிக்க வேண்டும்.

பரணி, கார்த்திகை, திருவாதிரை, பூரம், ஆயில்யம், கேட்டை, சித்திரை, விசாகம், சுவாதி, மகம், இந்த நட்சத்திரம் வரும் நாட்களில் பிரயாணம் செய்யக்கூடாது. பிரதமை, அஷ்டமி, நவமி, திதிகளும் கூடாது.

புண்ய தீர்த்தங்களில் வந்தவுடன் காலை வைக்கலாகாது. முதலில் ஜலத்தை தலையில் ப்ரோக்ஷித்துக் கொண்டு, பிறகே கால் அலம்ப வேண்டும். உடம்பில் துணியில்லாமல் குளிக்கக் கூடாது. ஜலத்தில் துப்பக் கூடாது.

குளித்தவர்கள் (ஸ்னானம் செய்தவர்கள்) குளிக்காதவர்கள் மீது படக்கூடாது. (இது விழுப்பு எனப்படும்).

வாழைப்பழம் முதலிய பழங்களில் ஊதுபத்தியை செருகி வைக்கக்கூடாது. (பழங்களக்கும் உயிர் உண்டு. இவைகள் தெய்வவடிவம்).

புஷ்பத்தைச் சிகையிலும் துளஸியைக் காதிலும் சந்தனத்தை மார்பிலும் கரங்களிலும் பூசிக்கொள்ள வேண்டும். ஆண்கள் மார்பில் மாத்திரம் சந்தனம் பூசிக்கொள்வதும், காது இடுக்கில் புஷ்பத்தைத் தரிப்பதும், தலையில் துளஸீதளத்தை வைத்துக் கொள்வதும் பாபமாகும். பெண்கள் இரு கரங்களிலும் கழுத்திலும் சந்தனம் பூசலாம்.

நமது வயது, செல்வம், வீட்டுக் கலகம், நமக்கு உபதேசமான மந்த்ரம், நமது போகம், தானம், நமக்கு பிறர் செய்த ஸன்மானம், அவமானம் நமக்கு உள்ள கடன் இவைகளை ரஹஸ்யமாகவே வைத்துக் கொள்ள வேண்டும். பிறர் கேட்டாலும் ஸ்தூலமாக ஏதோ இவ்வளவு எனக் கூறவேண்டும். ஆப்தமான குரு, நண்பர் இவர்களிடம் மட்டும் எதையும் ஒளிக்கக்கூடாது.

திருமணம், க்ருஹப்ரவேசம், உபநயனம் போன்ற மங்கள நிகழ்ச்சிகளுக்கு அரிசி மாவினால் கோலம் போடும்பொழுது ஒரு கோட்டினால் போடக்கூடாது. (இரண்டு அல்லது நான்கு இழையினால் போடலாம்).

திருக்கோயில் மூடி இருக்கும் நேரத்திலும், திருவிழாவில் ஸ்வாமி வீதி உலா வரும் நேரத்திலும், உள்ளே திரை போட்டிருக்கும் நேரத்திலும் திருக்கோயிலில் உள்ள தெய்வத்தை தரிசனம் செய்வதோ, ப்ரதக்ஷிணம் செய்வதோ கூடாது.

ஈரமான (உலராத) உடையை உடுத்திக் கொண்டு பூஜை, அர்ச்சனை, போன்ற தெய்வ வழிபாட்டை செய்யக்கூடாது.

விளக்கு எரிந்து கொண்டிருக்கும் போது விளக்கின் எண்ணையிலுள்ள தூசியை கை விரலால் எடுக்கக் கூடாது. (இது தரித்ரத்தைத் தரும்).

அபிஷேகம் செய்யும் போது இரும்பு மற்றும் எவர்சில்வர் பாத்திரங்களில் அபிஷேகத்துக்கு ஜலம் வைத்துக்கொள்ளக் கூடாது. (பித்தளை மற்றும் வெள்ளி பாத்திரங்களில் வைத்துக் கொள்ளலாம்).

தெய்வங்களுக்கு நிவேதனம் செய்யும் பொழுது வெற்றிலையோ, பாக்குகளையோ 1.3.5.7 என ஒற்றை எண்ணிக்கையில் வைக்கக் கூடாது. (2,4,6,8,10 என இருமை இருக்க வேண்டும்).

வாழைப்பழத்தைப் பாதியாக வெட்டி அதன் மீது கற்பூரம் ஏற்றி வைத்து தீபாராதனை செய்வதோ, அதன் மீது திரி போட்டு தீபம் ஏற்றுவதோ செய்யக்கூடாது.

மணியடிக்கும் ஓசையில்லாமல் எந்த ஒரு பூஜையும் செய்யக் கூடாது.

பூஜைக்கு உபயோகிக்கும் மணி, வெற்றிலை, பழங்கள், பூக்கள், தர்ப்பங்கள், ஸமித்துகள், வாழைஇலை, புஸ்தகம், விபூதி, ருத்ராக்ஷம் முதலியவற்றை பூமியில்

(தரையில்) நேரடியாக வைக்கக் கூடாது. (தட்டு போன்ற பொருட்களின் மீது வைக்கவேண்டும்).

எரியும் விளக்கின் திரியை கைவிரலால் தூண்டி விடக்கூடாது. (இது ஏழ்மையைத் தரும்).

உஷத்காலம் என்கிற விடியற்காலை நேரத்தில் (தீபாவளியைத் தவிர மற்ற நாட்களில்) எண்ணெய் தேய்த்து குளிக்க கூடாது.

தலைப்பு (நுனி) இல்லாத உடைகளையும், கரைகள் இல்லாத ஆடைகளையும், மற்றும் நெருப்பு பட்ட துணிகளையும் உடுத்திக் கொள்ளக்கூடாது.

வலதுபுறம் சாய்வாக வலது கையைத் தரையில் வைத்துக்கொண்டு படுத்துக் கொள்ளக்கூடாது. (இடது புறமாக சாய்ந்து இடது கையைத் தரையில் படுமாறு படுக்க வேண்டும்)

நோயாளிகளுடன் சேர்ந்து ஒரே படுக்கையில் படுத்துக் கொள்ளக் கூடாது.

எரிந்து கொண்டிருக்கும் ஸ்வாமி விளக்கை ஆடவர்கள் அணைக்கக் கூடாது.

தலைமுடி வெட்டிக்கொண்டவனும், மயானத்துக்குச் சென்று வந்தவனும், தலையில் எண்ணையை வைத்துக் கொண்டு குளிக்கக் கூடாது.

ஒவ்வொரு மாதமும் தனது ஜன்ம (பிறந்த) நக்ஷத்திரம் வரும் நாட்களில் புதிதாக மருந்து உட்கொள்ள ஆரம்பிப்பதும், வெளியூர் பிரயாணம் செல்வதும் கூடாது.

சூரியன் மறைந்தபிறகு (இரவு நேரத்தில்) சனி, செவ்வாய் என்னும் வார (கிழமை) தோஷம் கிடையாது.

சூரியன் மறையும் அஸ்தமான நேரத்துக்கு (கெட்ட) லக்னத்தினால் உண்டாகும் தோஷம் கிடையாது.

இரவு நேரத்திலும், வெள்ளிக்கிழமையிலும், செவ்வாய்க்கிழமையிலும், பணம், பொருள் முதலியவைகளைக் கடன் கொடுக்கக் கூடாது.

சதுர்த்தி திதியன்று சந்திரனைப் பார்க்கக்கூடாது. (இது பழிச்சொல்லை ஏற்படுத்தும்).

மணமகனின் ஜென்ம மாதத்தில் விவாஹம் செய்யக்கூடாது.

அமாவாஸை, பௌர்ணமி தவிர மற்ற நாட்களில் ஸமுத்ரத்தில் குளிக்கக்கூடாது, ஸமுத்ர ஜலத்தை கையால் தொடவும் கூடாது.

திருக்கோவில், நதி (ஆறு), குளம், அரசமரம் இவைகளின் முன்பாக தன்னைத் தானே சுற்றிக்கொள்ளும் ஆத்ம ப்ரதக்ஷணம் செய்யக் கூடாது.

தலை மயிர்களிலிருந்து வழியும் ஜலம், துணியிலிருந்து பிழியப்படும் ஜலம், வீட்டைப் பெருக்கும் துடைப்பத்தின் புழுதி, புடைக்கப்படும் முறத்தின் காற்று முதலியவைகள் உடல்மீது படக்கூடாது. (இது ஏழ்மையை உண்டாக்கும்)

ஒருவர் போட்டுக்கொண்ட பூ மாலையை மற்றவர் அணியக்கூடாது. (புதிதாகத் திருமணமான மணமக்களைத்தவிர).

கணவன்-மனைவி, குரு-சிஷ்யர், நந்தி-சிவன், தந்தை-மகன், அண்ணன்-தம்பி, அக்கா-தங்கை, மாடு-கன்று, இவர்களின் குறுக்கே (நடுவில்) செல்லக் கூடாது.

உதயமாகும் சூரியனை கண்களால் நேரடியாக பார்க்கக் கூடாது.

கிழிந்த துணிகளையும், கிழிந்த செருப்புகளையும் பயன்படுத்தக்கூடாது.

நாம் உடுத்திய பழைய துணிகளை வீட்டின் கதவுகளின் மீது போடக்கூடாது.

பின் புறமாக கைகளை கட்டிக் கொண்டு நிற்கக் கூடாது.

கன்னத்தில் கைவைத்தக் கொண்டு உட்காரக்கூடாது.

எழுத்துக்கள் எழுதப்பட்ட அல்லது அச்சிடப்பட்ட பேப்பரிலோ, துணியிலோ, ஆசனத்திலோ அமரக்கூடாது. (எழுத்துக்கள் ஸரஸ்வதியின் வடிவம்)

தாய் மற்றும் தந்தை இறந்த வருடம் முழுவதும் அனைத்து மகன்களும் தமது வீட்டில் எந்த ஒரு சுபநிகழ்ச்சிகளையும் நடத்தக்கூடாது.

ஒரே தமிழ் மாதத்தில் இரண்டு அமாவாஸை வந்தால் - அந்த மாதத்தில் சுப காரியங்களை நடத்தக்கூடாது. (இது அதிக மாஸம் எனப்படும்).

ஒரே திதியில் தந்தை தாய் இருவருக்கும் ச்ராத்தம் வந்தாலும் அல்லது தீட்டினால் தடைப்பட்டு, தீட்டு போகும் நாளில் இரண்டையும் ஒன்றாக செய்ய நேர்ந்தாலும், தந்தையின் ச்ராத்தத்தை முதலில் செய்து முடித்து, தாயின் ச்ராத்தத்தை பின்னர் செய்ய வேண்டும். ஒரே சமையலில் இரண்டையும் செய்யலாம்.

சாவு தீட்டோ, பிரசவ தீட்டோ தந்தை தாய் ச்ராத்த தினத்தில் வந்தால் தீட்டு போகும் தினத்தில்தான் ச்ராத்தம் செய்யவேண்டும்.

சந்த்ர, ஸுர்ய க்ரஹணம் ச்ராத்த தினத்தில் வந்தால் அன்று உபவாஸமிருந்து மறுநாள் தான் ச்ராத்தம் செய்ய வேண்டும்.

வேறு காரணத்தால் ச்ராத்தம் திதியில் செய்ய முடியாவிடினும், திதி இன்னதென்று தெரியாவிடினும் க்ருஷ்ணபக்ஷ அஷ்டமி, ஏகாதசி அல்லது அமாவாஸ்யையில் செய்யவேண்டும்.

தாய் தந்தைக்கு செய்யவேண்டிய சிராத்த மாதத்தில் - சிராத்தம் நடைபெறும் நாளுக்கு முன்பாக- வீட்டில் ஹோமங்கள், பூஜைகள், சுபகாரியங்கள் எதுவும் செய்யக்கூடாது. (ச்ராத்தம் நடைபெற்ற பிறகு செய்யலாம்).

இறப்பு தீட்டுள்ளவர்கள் விபூதியை ஜலம் விட்டுக் குழைத்து இட்டுக் கொள்ளக்கூடாது.

ஒருவன் இறந்தவுடன் ஒரு யாமம் கழிந்த பின்பே அவ்வுடலை அப்புறப் படுத்தவேண்டும். 3 யாமத்திற்கு மேல் வைத்திருக்கக் கூடாது. அப்படி வைக்க நேர்ந்தால் அது பர்யுஷிதம் (பழையது) என்ற தோஷமுள்ளதாகும்.

இறப்பதற்கு முன் என்ன செய்ய வேண்டும்? ஸமீபத்தில் மரணம் வரும் என்று தெரிந்தபோது ப்ராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டும். அது நாம் இதுவரை செய்த பாபத்தை அகற்றி கஷ்டமில்லாதிருக்கச் செய்யும். இந்த கர்மா மிக முக்யமானது. அவசியம் செய்ய வேண்டும்.

சக்தி இருந்தால் இறக்கப் போகின்றவனே ஸ்நானம் செய்து ஸங்கல்பம் செய்துகொண்டு தன் கையால் ப்ராம்மணர்களுக்கு தானம் செய்ய வேண்டும். சக்தி இல்லாத பட்சத்தில் புத்ரன் அல்லது கர்மா செய்பவர் இதைச் செய்யலாம்.

ப்ராயச்சித்தம் செய்து கொண்டவர் பிழைத்து விட்டால் தோஷமில்லை.

ப்ராணன் விரைவில் போய்விடும் என்று தெரிந்தால் படுக்கையில் கட்டிலில் படுக்க விடக்கூடாது. அறையின் உள்ளேயும் படுக்க வைக்கக் கூடாது. ஹோலில் நிலத்தில் தர்ப்பையைப் போட்டு அதன்மீது படுக்கவிடவேண்டும்.

புண்ணியசாலிகளுக்கு முகத்திலுள்ள துவாரங்கள் மூலமாகவும், ஞானிகளுக்கு சிரசு வெடித்தும், பாவிகளுக்கு மலஜலத் துவாரம் வழியாகவும் உயிர் பிரியும்.

பிராணன் போன பின்பு, தலையைத் தெற்குப்புறமாக வைத்துப் படுக்க வைக்க வேண்டும். பூணூலை இடமாகப் போட்டுக் கொள்ள வேண்டும். பெண்கள் தலையை விரித்துக் கொண்டு, தெற்கு நோக்கி நமஸ்காரம் செய்ய வேண்டும்.

ஒருவன் இறந்தவுடன் ஒரு யாமம் (3மணி நேரம்) கழிந்த பின்பு உடலை அப்புறப்படுத்த வேண்டும். இரவு 9 நாழிகைக்கு மேல் தகனம் செய்யக் கூடாது.

பிறவியில் மூத்தவனே கொள்ளி வைக்க வேண்டும். அவன் இல்லாவிட்டால், இருப்பவர்களுள் மூத்தவன் கர்மஞ் செய்ய வேண்டும். எல்லா பிரேத காரியங்களிலும் ஈரத்துணியுடன் இருக்க வேண்டும். கொள்ளி வைப்பவர் அக்னியை சட்டியில் எடுத்துச் கொண்டு, முதலில் புறப்பட வேண்டும். அக்னிக்கு பின் பிணத்தை எடுத்துச் செல்ல வேண்டும். மற்றவர்கள் பிரேதத்தை தொடர்ந்து வரவேண்டும்.

தகனம் செய்யுமிடத்தில் பிரேதத்தை தெற்குப் புறம் தலையிருக்கும் படி வைக்க வேண்டும். பிறகு கொள்ளி வைப்பவர், சிதையின் கிழக்குப்புறத்தில் மேற்கு நோக்கி நின்று கொண்டு, பிரேதத்தின் மார்பில் அக்னியை இடவேண்டும்.

பிறகு சிதையின் வடக்குப்புறம் தெற்கு நோக்கி நின்று கொண்டு, அக்னியைத் தொழுது, மூன்று முறை "ஓம்" என உச்சரிக்க வேண்டும்.

பிறகு எல்லோரும், பூணூலை இடமாகப் போட்டுக் கொண்டு, திரும்பிப் பார்க்காமல் சென்று, தலைமுழுகி ஸ்நானம் செய்ய வேண்டும். பின்பு உறவினர்களுடன் வீட்டுக்கு செல்ல வேண்டும்.

பெற்ற தாய் தந்தை இறந்தால் ஒருவனுக்கு ஒரு வருடம் வரை தீட்டு உண்டு. மனைவி இறந்தால் 3 மாதமும், சகோதரர் இறந்தால் 11/2 மாதமும் தாயாதிகள் இறந்தால் ஒரு மாதமும் தீட்டு உண்டு. ஒருவனுக்கு தாய் தந்தை இறந்துவிட்டால் ஒரு வருடம் வரை ஆறு, கடல், மலை உள்ள பெரிய சிவன்கோயிலுக்கோ, பெருமாள் கோயிலுக்கோ செல்லக்கூடாது. நேர்த்திக்கடன் செலுத்தக்கூடாது. சுபகாரியம் கூடாது.

மாப்பிள்ளை இறந்தால், மாமனார், மாமியார், மைத்துனருக்கு தீட்டில்லை. குளித்துவிட்டால் போதும்.

தற்கொலை செய்து கொண்டு இறப்பவனுக்கு தீட்டு, தர்ப்பணம் தேவையில்லை.

ஆனால் ஹோமம் வளர்த்து சாந்தி பரிகாரம் செய்ய வேண்டும்.

கருத்தரித்த குழந்தை கலைந்தால், அந்தக்கரு எத்தனை மாதமோ அத்தனை நாட்கள் தீட்டு.

சிரார்த்தத்தின்போது மனைவியும் உடன் இருக்க வேண்டும். மனைவி மாத விலக்காயிருந்தால் கூடாது.

அனுஷ நட்சத்திரமும் அமாவாசையும் சேரும் கார்த்திகை, மாதத்தில் பிதுர்களுக்கு சிரார்த்தம் செய்தால், பிதுர்களுக்கு ஒரு வருஷத்துக்கு திருப்தியுண்டாகும். ஐப்பசி மாதத்தில் விசாகம் அல்லது சுவாதியில் அமாவாசை வரும். அன்றைக்கு சிரார்த்தம் செய்தாலும் ஒரு வருஷம் திருப்தியடைவர்.

ஆனி மாதத்தில், திருவாதிரை அல்லது புனர்பூச நட்சத்திரத்தில் வரும் அமாவாசையில் செய்கின்ற சிரார்த்தமும் ஆடி மாதத்தில் பூசம் நட்சத்திரத்தில் வரும் அமாவாசை பிதுர்களுக்கு 12 வருஷம் திருப்தியளிக்கும்.

தை மாதத்தில் அவிட்டம் நட்சத்திரத்தில் அமாவாசை வரும். மாசி மாதத்தில் சதய நட்சத்திரம் அல்லது பூரட்டாதியில் அமாவாசை வரும். பங்குனியில் பூரட்டாதியில் அமாவாசை வரும். இந்த மூன்று காலங்களும் தேவர்களுக்கும் கிடைக்காத புண்ணிய காலமென்று சொல்லப்பட்டுள்ளது.

மாசிமாதத்து அமாவாசையானது எப்போதாவது சதய நட்சத்திரத்துடன் கூடுமானால், அது மிகவும் புண்ணிய காலம். அற்ப புண்ணியமுள்ள மனிதர்களுக்கு கிடையாது.

அந்நேரத்தில் அவிட்டம் நட்சத்திரமும் சேருமாயின் அப்போது பிதுர்களுக்கு தர்ப்பணம் செய்தவனுக்கு 10000 ஆண்டுகள் பிதுர்க்களை திருப்தி செய்த பயன் கிடைக்கும். அக்காலத்தில் பூரட்டாதியும், சேருமானால், அதில் பிதுர்க்கள் திருப்தியடைந்து ஆயிரம் யுகங்கள் சுகமாகத் தூங்குவார்கள்.



## 2. ஆன்மீக உபதேசங்கள்

சோதிடம் கூறும் ஜோதிஷனும் நீதி வழங்கும் நீதிபதியும், காரணமின்றி பரிகாரம் பண்ணுகிறவனும், தேவாலயத்தில் பூஜை செய்யும் அர்ச்சகனும், சாஸ்திர ரீதியாகச் செய்யாவிட்டால், பிரம்மஹத்தி தோஷம் வரும் என்று மகான்கள் கூறியிருப்பதால் பயபக்தியுடன் முடிவு எடுக்க வேண்டும்.

ஒருவனுக்கு பக்தி மட்டும் இருந்தால் போதாது. ஆசாரமும் வேண்டும். ஆசாரம் இருந்தால் அனுஷ்டானம் தேடிவரும். பணமும், பொருளும் இன்று வரும். நாளை போகும். ஆனால் ஆசாரமும், அனுஷ்டானமும் என்றும் நிலைத்து நிற்கும். பணத்தால் குறைந்தவன் குறைந்தவனல்ல. ஆனால் ஆசார அனுஷ்டானமின்றி கெட்டவன் கெட்டவனே ஆவான். ஆசாரக் குறைவுள்ள குலங்கள் எவ்வளவுதான் வசதியுடன் இருந்தாலும் தீர்க்க முடியாத குறைகள் இல்லாமல் போகாது.

தனது இடது கையால் ஆசனம் போட்டுக் கொண்டால் ஆயுள் நாசம். தனது இடது கையினால் எண்ணெய் தேய்த்துக் கொண்டால் புத்திர நாசம். தன் இடது கையினால் சாப்பாடு போட்டுக் கொண்டால் தன நாசம். தன் இடது கையினால் படுக்கை போட்டுக் கொண்டால் இருப்பிடம் நாசம் ஏற்படும்.

சந்நியாசி, மருத்துவன், சோதிடன், குரு, கர்ப்பிணி, நோயாளி ஆகிய இவர்களுக்கு ஆபத்துக் காலத்தில் செய்யும் உதவியால் வரும் புண்ணியம் உயர்ந்தது. தன் வீடு தேடி எந்தக் காரியமாக சுமங்கலி வந்தாலும், அவளை வரவேற்று உபசரித்து அன்னமளிக்க வேண்டியது. இன்றேல் தண்ணீராவது அருந்தக் கொடுக்க வேண்டும். செல்லும் பொழுது மஞ்சள், குங்குமம், புஷ்பம் கொடுத்து அனுப்ப வேண்டும். இதனால் கொடுப்பவர்களுக்கு மாங்கல்ய பலமும், பெறுபவர்களுக்கு ஐஸ்வரிய பலமும் உண்டாகிறது.

அடிக்கடி புண்ணிய தர்ம காரியங்களைச் செய்யும்போது புத்தி வளரும். புத்தி வளரும்போது புண்ணியத்தைத் தவிர பாபத்தைச் செய்ய மனம் வராது. மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும் மனத்தை அடக்கி, கோபத்தைக் குறைத்து தெய்வ நம்பிக்கையுடன் தான தர்ம புண்ணியங்களைச் செய்துவர வேண்டும்.

ஒருவன் நல்ல வழியில் சம்பாதித்த பணம் தன்னைவிட்டுப் போவதற்கு முக்கிய காரணங்கள் இரண்டு என்பதை அறிவாளிகள் உணரவேண்டும். அதில் ஒரு காரணம் நல்லவனுக்குக் கொடுக்காமல் இருப்பதும், மற்றொன்று அயோக்கியனுக்கு கொடுப்பதும் ஆகும்.

அதர்மத்தாலும், அநியாயத்தாலும் சம்பாதித்த பொருளை தான தர்மம் செய்து அந்த தோஷத்தை மறைத்து விடலாம் என்று எண்ணாதே! அந்த தோஷங்கள் மறையாததோடு, அதிலிருந்து புது தோஷங்கள் உருவாகும்.

நேர்மையுடன் நல்ல வழியிலே உழைப்பதனால் உண்டாகும் முன்னேற்றம் ஆலமரத்தைப் போல வளர்ந்து பயன்தரும். வானவெளியிலே பறந்து செல்லும் வலிமை மிகுந்த கழுகு சூரியனுடைய ஒளியைக் கண் கூசாமல் பார்ப்பதைப்

போல், நேர்மையுடன் கூடிய உழைப்பினால் முன்னேற்றமடைகின்றவனால் தன்னுடைய பெருமையாகிய ஒளியை கூச்சமில்லாமல் பார்க்க முடியும்.

தங்கள் சிக்கனத் தன்மையில் கருத்துள்ளவர்கள் பிறருடைய உயர்வு தாழ்வுகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்க மாட்டார்கள். எவரைப் பற்றியும் எதைப் பற்றியும் அதிகமாகப் பேசுகிறவர்கள் துன்பத்தைத் தேடிக் கொள்ளுகிறார்கள். ஆகவே அளவுடன் பேச வேண்டியதை மட்டும் பேசுவது நல்லது.

மனிதனே! உன் அறிவு அதிகமானதென்று நீ கர்வப்படலாமா? உனக்குள்ள திறமையே போதுமானதென்று நீ நினைக்கலாமா? உன்னிடத்தில் உள்ள தவறு என்னவென்று நினைத்துப் பார்ப்பதே நீ அறிவுள்ளவன் என்பதற்கு முதல் அடையாளமாகும். மற்றவர்கள் உன்னை ‘முட்டாள்’ என்று நினைக்காமல் இருக்க வேண்டுமானால், உன்னை நீயே அறிவாளி என்று சொல்லிக் கொள்ளாதே!

இன்பத்தைப் போலவே துன்பமும் மனித வாழ்க்கைக்குத் தேவைதான். துன்பப்படும்போதுதான் நல்ல மனிதன் நன்றாகக் கற்றுக் கொள்கிறான். ஆகையால் துன்பத்தையும், இன்பத்தையும் அனுபவிக்கப் பிறந்தவனே! கேள்! எவ்வளவு சீக்கிரமாக முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக நீ இந்த உலகத்தில் உனக்காக துன்பத்தை ஏற்றுக்கெள்ள உன்னை ஆயத்தப்படுத்திக்கொள். இதனால் திடீரென்று வரக்கூடிய துன்பத்தை உன்னால் தாங்கிக் கொள்ள முடியும்.

மற்றவர்கள் நம்மை நிந்திக்கும் பொழுது, நாம் நம்மையே சந்தேகித்துக் கொள்ள வேண்டும். அவர்கள் நம்மைப் புகழும் பொழுது, நாம் அவர்களைச் சந்தேகிக்க வேண்டும்.

அளவுக்கு மிஞ்சிய எதையும் நீக்குவாயாக. அளவுக்கு மிஞ்சி தானம் செய்ததால் பலிச் சக்கரவர்த்தி கட்டுண்டான். அளவுக்கு மிஞ்சிய கர்வம் படைத்ததால் துரியோதனன் மாண்டான். அளவுக்கு மிஞ்சி காம வசப்பட்டதால் இராவணன் இறந்தான்.

உழைப்பு! உழைப்பு! உழைப்பு! உலகத்தில் எல்லா நன்மைகளையும் தரக்கூடியது உழைப்புத்தான். கடவுள் அவரவர் தகுதிக்கேற்ப ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வழியைக்காட்டி இருக்கின்றார். அவ்வழியில் தளராமல் உழைப்பவரே முன்னேற்றமடைவார்.

வெறுப்பைக் காட்டுவது அரக்கர் குணம். மன்னிப்பது மனித இயல்பு. அன்பு செலுத்துவது தெய்வத்தின் பண்பு.

பிரார்த்தனை, கடவுளை அடையும் பாதிவழி வரை நம்மைக் கொண்டு செல்கிறது. மத உணர்வு நம்மை அவனது மாளிகையின் வாயில் வரை அழைத்துச் செல்லுகிறது, ஆனால் ஈகைதான் உள்ளே செல்லும் அனுமதியை அளிக்கிறது.

உணவு உண்ணும் முன் ஒவ்வொரு தடவையும் ஆண்டவனுக்கு அவசியம் வந்தனம் கூறவேண்டும். அப்பொழுதுதான் நமக்கு நாள் தவறாமல் உணவு கிடைத்துக் கொண்டிருக்கும்.

தினசரி பெரியவர்களையும், தெய்வத்தையும் வணங்கி அலுவல்களில் ஈடுபடுபவனுக்கு புகழ், ஆயுள், தனம் இவைகள் விருத்தியடைகின்றன. அதனால் அன்றாடம் இறைவனைத் தொழத் தவறாதே!

அரசனின் விரோதி, காமாந்தகாரன், பெருந்தீனிக்காரன், பெருவியாதிக்காரன், தர்ம சிந்தனை இல்லாதவன், பிறரைப் பற்றி சதா குறை கூறுபவன், பெண்களைக் கண்டதும் சிரித்துச் சிரித்துப் பேசுகிறவன், துறவி போல் வேஷம் போடுகிறவன் ஆகியவர்களைத் தன் வீட்டில் கால் மணி நேரத்திற்கு மேல் தங்க விடுவது, கொள்ளிக் கட்டையை தலையில் சொருகுவது போலாகும்.

மனத்தின் மாசைக் கழுவுவதற்காக பெரியோர்கள் பலவித வழிகளைக் கையாண்டிருக்கிறார்கள். இதில் மிகச் சிறந்தது பிரார்த்தனை ஆகும். ஆரம்பத்தில் உலக விஷயங்களில் பெரும்பாலும் நேரத்தைப் போக்கினாலும் ஒரு சில மணி நேரமாவது பிரார்த்தனையில் செலவு செய்யும் வழக்கம் ஏற்படின் அந்த நேரம் வரைக்கும் உலகத்தை துறந்தவராவோம்.

எது அழகு? அன்புதான் அழகு. காருண்யம் தான் லாவண்யம். ஒருவேளை சாப்பிடாவிட்டால், ஒருநாள் ஜுரம் அடித்தால், சிறிது கோபதாபம் வந்தால் முகத்தின் அழகு போய்விடுகிறது. ஆனால் லாவண்யமாகவும், காருண்யமாகவும் உள்ள அம்பாளின் அருளைப் பெற்றால் அதன் அழகு மறையாமல் நிற்கிறது. அந்த அழகு குழந்தையின் அழகு. தெய்வத்தை ஏன் அம்பாளாகப் பாவிக்க வேண்டுமென்றால் அம்மாவின் எதிரில்தான் காம உணர்ச்சி நாசமாகிறது; நாம் குழந்தையாகிறோம்.

எவன் ஒருவன் நாள்தோறும் தன் சக்திக்குத் தகுந்தாற் போல் கிடைக்கும் நேரத்தில் சாஸ்திரத்திலோ, கீதையிலோ உள்ள நான்கு வாக்கியங்களைப் படிக்கிறானோ, அவன் தவம் செய்ததாகவே கருதப்படுகிறான். அவனுக்கு எந்தக் கஷ்டம் வந்தாலும் அது சுலபமாகவே நிவர்த்தி ஆகும்.

தாய், தந்தை, குரு இவர்களின் கஷ்டத்தை அறிந்து அதைப் போக்குகிறவன் தவம் செய்த பலனை அடைகிறான். மூவரும் மும்மூர்த்திகளாகவும், முப்பெரும் தேவர்களாகவும் போற்றத் தகுந்தவர்களாவார்கள்.

தேவைக்கு மேற்பட்ட பொருளைத் தேடுதல் பிசாசைத் தேடுவது போல ஆகும். இது எவருக்கும் நல்லதல்ல. ஆகவே இரவும், பகலும் தேவைக்கு மேல் பொருளைத் தேடுகின்றவர் செயல் நியாயமானதல்ல. அப்படி இறைவன் அதிகமாகக் கொடுத்தால், தான தர்மம் செய்து மகிழ்ச்சி அடைவாயாக!

எவன் குல தெய்வம் அருகிலிருந்தும் வணங்காமல் இருக்கிறானோ, எவன்தன் இரகசியங்களை பிறர் கேளாமல் இருக்கும் போது சொல்கிறானோ, எவன் வசதி இருந்தும் பிதுர்களை திருப்திப்படுத்தவில்லையோ, எவன் நல்ல குணம் உள்ளவனை சிநேகிதம் செய்து கொள்ளவில்லையோ, எவன் சத்ருவை நம்பிக்கொண்டு சிநேகிதனை வெறுக்கிறானோ, எவன் தனது கலகலப்பாக உள்ள மனைவி மீது வீண் சந்தேகப்படுகிறானோ, எவன் உடனடியாகச் செய்யவேண்டிய காரியத்துக்கு தாமதிக்கிறானோ, எவன் படிக்காமல் கர்வம் கொள்ளுகிறானோ, எவன் சோம்பேறியாக

இருந்து கொண்டு சம்பாதிக்க ஆசைப்படுகிறானோ, குடும்ப குல கௌரவத்தை எவன் அழிக்க முற்படுகிறானோ, எவன் தனக்கு பக்க பலமாக உள்ள பலசாலியை துவேஷம் செய்கிறானோ, எவன் நாத்திகவாதம் புரிபவனிடம் சிநேகம் கொள்ளுகிறானோ, எவன் குரு பக்தியை தன் இஷ்ட காரியத்திற்கு பயன்படுத்துவானோ அவனவன் எல்லாம் தான் விரித்த வலையில் தானாக விழுந்து மீள முடியாமல் தவிப்பவர்கள் ஆவார்கள். கடைசியில் வருத்தப்படுவதைவிட முதலிலேயே கவனமாக இருப்பது சரியாகும்.

தினசரி பிரார்த்தனை என்பது உன் வீட்டு வாயிலில் ஓடிவரும் தெளிந்த ஆறு போன்றது. எவனொருவன் அதில் தன்னைச் சுத்தி செய்து கொள்கிறானோ, அவன் தன்னை நிர்மலமாக்கிக் கொண்டவனாகிறான்.

நிந்தனை செய்யாதே! பிறருக்குத் தீமை செய்யாதே! அறநெறிக்குக் கட்டுப்பட்டு வாழ். மிதமாய்ச் சாப்பிடு. ஏகாந்தமாய் உறங்கு. ஏகாந்தமாய் அமர்ந்திரு. எண்ணங்களை அலையவிடாமல் உயர்ந்த சிந்தனை லயத்தில் ஒருமைப்படுத்து. இவை தர்மமாகும்.

நன்மை பயக்கும் அறமே என் தந்தை. நிறைந்து விளங்கும் அறிவு என்னுடைய தாய். அழியாத செல்வமாகிய கல்வி என் நண்பன். தெளிந்த மனத்துணிவே என் தம்பி. இவர்கள் என்னுடைய மெய்யான சுற்றத்தார். சுற்றம் என்ற பெயரில் என்னைச் சுற்றி நிற்கும் மற்றவர்கள் அனைவரும் பொய் சுற்றத்தாரே!

ஒவ்வொரு நோக்கமும் உலகம் முழுவதையும் சூழும் அளவு விரிவடைய வேண்டும். ஒவ்வோர் அவாவும் மனித இனம் முழுமையும், உலக உயிர் அனைத்தையும் தன் நோக்கத்தோடு பொருந்தும் அளவு வளரவேண்டும். அதுவே தர்மம்.

வினைகள் தீரவேண்டுமானால், செய்கின்ற காரியங்கள் செம்மையாக நடைபெற வேண்டுமானால் விநாயகமூர்த்தியை வணங்கு. அழகும், வீரமும், ஞானமும் வேண்டுமானால் முருகப் பெருமானை வணங்கு. இவ்வுலகத்திலே எல்லா விதமான இன்பங்களும் அடைய உன் மனம் விரும்பினால் திருமாலை வணங்கு. எல்லா சக்திகளையும் பெற்று தீரனாக, தைரியவானாக விளங்க வேண்டுமானால் அம்பிகையை வணங்கு. கல்வியைப் பெற விரும்புகிறாயா? சரஸ்வதியைப் போற்றி வணங்கு. செல்வத்தை விரும்பி யாசிக்கின்றாயா? திருமகளை வணங்கிப் போற்று. முக்தியை விரும்பி நிற்கின்றாயா? சிவபெருமானைத் துதித்து அருள் பெறுவாயாக!

குரு, முனிவர், ஆச்சாரியர்கள், குல புரோகிதர்கள், குடும்ப ஜோதிடன், குடும்ப வைத்யன், மகான்களின் சரித்திரம், கெட்டஸ்தீரியின் நடத்தை ஆகியவைகளைப் பற்றி வீண் ஆராய்ச்சியில் ஈடுபடவோ, இவர்களுக்கு குற்றம் கற்பிக்கவோ இவர்களிடம் உள்ள அற்ப தவறுகளை பகிரங்கப்படுத்தி விமரிசனம் செய்யவோ கூடாது. இவர்கள் செய்வது சற்றுத் தவறாகத் தென்பட்டாலும் அதற்கு களங்கம் கற்பிக்காமல் மௌனமாக இருப்பதே நல்லது.

க்ஷேமத்தை எப்பொழுதும் விரும்புகின்றவன் தான் செய்யும் ஒவ்வொரு சுபகாரியங்களுக்கும், தெய்வ காரியங்களுக்கும், விரத சடங்குகளுக்கும், மத காரியங்களுக்கும் தன் பெண், உடன் பிறந்த சகோதரி ஆகியவர்களுக்கு ஆடை,

ஆபரணம், பொருள் முதலியன கொடுத்து உபசரிக்க வேண்டியது கடமையாகும். வசதியில்லாதவன் தன் வசதிக்கு தகுந்தபடி உபசரிக்க வேண்டும். எப்படியும், குடும்பத்தில் திருமணம் போன்ற சுபகாரியங்களை நடக்கும்போது சுமங்கலிகள் வருத்தமடையும்படி கர்த்தாவானவர் நடந்து கொள்ளுதல் கூடாது.

இயற்கையின் நடைமுறையில் ஒழுங்குபாடு இருக்கிறது. அந்த ஒழுங்குபாடு சில வேளைகளில் மனிதனுக்குப் பேருதவி பண்ணக் கூடியதாக வந்தமைகிறது. இரவும், பகலும் சந்திக்கிற நேரத்தை சந்தியாவேளை என்கிறோம். அந் நேரத்தைக் கடவுள் வழிபாட்டில் பயன்படுத்தினால் மனிதன் அதில் அடையும் நன்மையானது மிக அதிகம். அதேபோன்று உஷத்கால வேளையும் மேலானது.

விடியற்காலத்தில் - பிரம்ம முகூர்த்தத்தில் யார் ஒருவர் இடைவிடாமல் நாள்தோறும் நீராடி வருகிறார்களோ அவர்கள் உடலில் அழகு மிளிரும். தேஜஸ் எனப்படும் ஒளி உடம்பு கிடைக்கும். உடல் வலிமை கூடும். தூய்மையும் வாழ்நாள் வளர்ச்சியும் மிகும். நோய் நொடிகள் அணுகமாட்டா. மனத்தில் தைரியம் பெருகும். அறிவு வளரும். இரவில் நல்ல தூக்கம் வரும். மிக முக்கியமாக, பாவம் செய்தவர்களிடம் நாம் பொருள்களைப் பெறுவதனால் ஏற்படும் தோஷங்கள் போய்விடும்.

வாசனையுள்ள இடத்தில் மகாலட்சுமி வாசம் செய்கின்றாள். மகாலட்சுமி இருக்குமிடம் வாசனையுள்ள இடமாக இருக்கும். வாசனையுள்ள இடத்தில்தான் வசதி பெருகும். அதனால் ஒருவன் தன் வீட்டில் தினசரியோ அல்லது வெள்ளி, செவ்வாய்க்கிழமைகளிலோ சாம்பிராணி தூபம் காண்பித்து தெய்வத்தைப் பிரார்த்திக்க வேண்டும்.

வேதத்தினால் ரிஷிகளையும், ஹோமத்தினால் தேவர்களையும், சிராத்தத்தினால் பிதுர்க்களையும், அன்னத்தினால் அதிதிகளையும், மலர் மூலம் பூதங்களையும், உழைப்பினால் தன் எஜமானையும், தரிசனத்தால் தெய்வங்களையும், பிரியத்தால் பெற்றோர்களையும், அன்பால் மனைவியையும், கண்டிப்புடன் கூடிய பாசத்தால் பிள்ளைகளையும் திருப்தி செய்ய வேண்டியது தர்மமாகும்.

எவன் தான் செய்யவேண்டிய அன்றாட காரியங்களைச் செய்ய சோம்பல்படுகிறானோ, எவன் பிறர் செய்யும் காரியங்களில் வேண்டுமென்றே குறை கூறுகின்றானோ, எவன் தான் உடனடியாகச் செய்ய வேண்டிய காரியத்தை வேண்டுமென்றே தாமதித்துச் செய்கிறானோ அவன் அறிவு இல்லாதவன் ஆவான். கடவுளின் அருளும் அவன்பால் செல்வதில்லை.

வீட்டில் எந்த விசேடம் செய்தாலும், அயலில் உள்ளவர்களை அழைத்து உணவு கொடுக்காமல் செய்கின்ற காரியம் நெய் இல்லாமல் ஹோமம் செய்த அக்னி போலாகும். இவர்களை கட்டாயம் அழைக்க வேண்டும். அப்பொழுதுதான் அந்த விசேடத்தின் பலன் கிடைக்கும்.

சித்தர், முத்தர், முனிவர்கள், அவர்களது பொன்மொழிகள், இந்த வடிவங்களிலும் ஆண்டவன் உங்களிடம் வருகிறான். படங்களில் பார்ப்பது போலவும், கோயில்களில் காண்பது போலவும் நான்கு கரங்களுடன்தான் இறைவன் வருவான்

என்று எண்ண வேண்டாம். உங்கள் மனத்தை சுத்தப்படுத்தி வையுங்கள். அவன் சாதாரண உருவிலும் வந்து உங்களுக்கு உதவி செய்வான்.

குறைவாகப் பேச வேண்டும். இனிமையாக பேச வேண்டும். உண்மையே பேச வேண்டும்.

மன நிறைவு என்பது இயற்கையாகவே நம்மிடம் உள்ள செல்வம். ஆடம்பரம் என்பது நாமே தேடிக்கொள்ளும் வறுமை. எளிமை, நல்வாழ்வுக்குத் துணை புரியும்.

தர்மம் சத்தியத்தால் காக்கப்படுகிறது. கல்வி தீவிரமான பயிற்சியால் காக்கப்படுகிறது. அழகு சுத்தம் செய்வதால் காக்கப்படுகிறது. குலப்பெருமை நன்னடத்தையால் காக்கப்படுகிறது.

மனிதனுக்குத் தேவை அன்புள்ள இதயமும், அமைதியுள்ள மூளையும்.

சந்தர்ப்பம் வரும்போது அதனைப் பயன்படுத்திக் கொள்ள தயாராகயிருப்பதே வெற்றிக்கு அடிப்படை.

பணத்தை விட அறிவே உயர்ந்தது. அறிவைவிட ஒழுக்கமே சிறந்தது.

எல்லா மனிதர்களையும் நம்பி விடுவது ஆபத்து. ஒருவரையும் நம்பாமல் இருப்பதும் பேராபத்து.

இளமையில் துணிச்சல் - முதுமையில் நிதானம். வாழ்வதில்தான் இன்பம். உழைப்பதில்தான் வாழ்வு.

கோபத்தோடு எழுந்தால் நஷ்டத்தோடு உட்கார வேண்டும். கோபத்தால் போனது சிரித்தால் வராது.

எல்லா உண்மைகளையும் எப்போதும் சொல்லக் கூடாது.

தங்க நகையை காலில் அணியக் கூடாது.

சிரிப்பதற்கு நேரம் ஒதுக்குங்கள். அது இதயத்தின் இசை. சிந்திப்பதற்கு நேரம் ஒதுக்குங்கள், அது சக்தியின் பிறப்பிடம். விளையாட நேரம் ஒதுக்குங்கள், அது இளமையின் ரகசியம். படிக்க நேரம் ஒதுக்குங்கள், அது அறிவின் ஊற்று. நட்புக்கு நேரம் ஒதுக்குங்கள், அது மகிழ்ச்சிக்கு வழி. உழைக்க நேரம் ஒதுக்குங்கள், அது வெற்றியின் விலை.

பிறர் விவகாரங்களில் அநாவசியமாக தலையிடக்கூடாது. பிறர் பேசிக் கொண்டிருக்கும் போது நடுவில் குறுக்கிடக்கூடாது. பிறர் ரகசியங்களை அறிய முயலக் கூடாது.

வேலைக்காரர்களையும், விலை உயர்ந்த ஆபரணங்களையும் வைக்க வேண்டிய இடத்தில் வைக்க வேண்டும். வேலைக்காரர்களிடம் நம் ரகசியங்களைச் சொல்லக் கூடாது.

தினசரி ஒரு மணி நேரமாவது மௌனம் கடைப்பிடிக்க வேண்டும். தனியிடத்தில் இருந்து தியானம் செய்ய வேண்டும். தியானம் மனதைச் சுத்தப்படுத்தும். நல்ல

எண்ணம், தூய சிந்தனை உதயமாகும். கடவுளை அடைய ஒரே வழி தியானம்தான்.

நமது குடும்பத்தில் சுப காரியங்கள் நடப்பதற்கு முன்பும், நடந்த பின்பும் குல வழக்கப்படி குல தெய்வத்திற்கு பூஜை காரியங்களும், பிதுருக்களுக்கு பிரீதி உண்டாக்கும் சிராத்தம், தர்ப்பணம் போன்றவைகளையும் செய்வதால்தான், குலதெய்வத்தின் பக்க பலமும், பித்ருக்களின் ஆசீர்வாதமும் கிடைத்து குடும்பம் குதூகலிக்கும். அதே சமயம் இஷ்ட தெய்வத்தையும் மறந்து விடக்கூடாது.

வீட்டில் இருந்து கொண்டு காயத்ரீ அல்லது இஷ்ட மந்திர ஜெபம் செய்தால் ஒரு பங்குதான் பலன். நதி தீரத்தில் ஜெபித்தால் இருபங்கு பலன். ஹோமம் செய்யுமிடத்தில் ஜெபித்தால் ஆயிரம் மடங்கு பலன். தேவாலயங்களிலும் க்ஷேத்திரங்களிலும் இருந்து ஜெபித்தால் நூறாயிரம் மடங்கு பலன் ஏற்படும். இஷ்ட மந்திர ஜெபத்தை விட காயத்ரீ ஜெபம் சிறந்தது. தன் ஆசை காரணமாக எல்லா ஜெபத்தையும் கொஞ்சம் கொஞ்சம் செய்வதைவிட ஒரு குறிப்பிட்ட காயத்ரீ மகா மந்திரத்தை பல லட்சம் செய்வது நற்பலனை வாரி வழங்கும்.

மான் தோலில் அமர்ந்து ஜெபித்தால் ஞானம் விருத்தியாகும். புலித்தோலில் உட்கார்ந்து ஜெபித்தால் மோட்ச சித்தியாகும். பெண் யானைத் தோலில் இருந்து ஜெபித்தால் வியாதி நீங்கும். ரத்தின கம்பளத்தில் இருந்து ஜெபித்தால் கஷ்டம் நீங்கும். தர்ப்பையினாலான ஆசனத்திலிருந்து ஜெபித்தால் மனக்குறை நீங்கும்.

காயத்ரீயை அல்லது இஷ்ட மந்திர ஜெபத்தை குறைந்தது 27 தடவைகளாவது ஜெபிக்க வேண்டும். எந்த மந்திரத்தையும் வாயால் உச்சரித்து ஜெபிப்பது ஒரு பங்கு பலன். சப்தமில்லாமல் ஜெபிப்பது பத்து பங்கு பலன். உதடுகளை மட்டும் அசைத்து ஜெபிப்பது நூறு பங்கு பலன். மனதிற்குள்ளேயே ஜெபிப்பது ஆயிரம் பங்கு பலன். புத்தி உள்ளவர்கள் மனதிற்குள் ஜெபிக்க வேண்டும்.



நமது முன்னோர்கள் வேத சிவாகமங்களையும், இதிஹாச புராணங்களையும், தர்மசாஸ்திரங்கள் மற்றும் நீதிநூல்களையும் நன்கு படித்து அவற்றின்படி ஒழுகிவந்தனர். நமக்கு இன்று படிக்கவேண்டிய வேறுபல விடயங்கள் புதிது புதிதாகத் தோன்றிவருவதால் நாம் இவற்றைத் தேடிப் படிப்பதில்லை. ஆனால் நமக்கு முந்திய தலைமுறையினர் **தமது முன்னோரைப் பின்பற்றுதல்** என்ற ஒரு நற்காரியத்தை விடாப்பிடியாகக் கைக்கொண்டுவந்தமையால் குழப்பங்கள் தோன்றவில்லை. **பழைய நடைமுறைகளை மிக இறுக்கமாகப் பின்பற்றுதல், புதிதாக ஒன்றை அங்கு புகுத்தத் தயங்குதல்** என்ற இரு நடைமுறைகள் சென்ற நூற்றாண்டுவரை இருந்தமையால் நமது கட்டுக்கோப்பு சிதைவுறாமல் தொடரும் வாய்ப்பு இருந்தது. ஆனால் இன்று நம்மவர்கள் மனநிலையில் **பழைமையைப் பேணுவதில் தயக்கமும் அந்த நடைமுறைகளைத் தூக்கி எறிவதில் துணிச்சலும்** ஏற்பட்டுள்ளன. அதேபோல **புதுமைகளை ஏற்றுக்கொள்வதில் எவ்வித தயக்கமின்மையும் ஆராய்வின்மையும்** வளர்ந்து வருகின்றன.

அர்த்தமுள்ள இந்துமதம் என்ன சொன்னது?

அவரவர் கடமையை வகுத்துத் தந்தது. என்று கவிஞர் கூறியதற்கிணங்க, அல்லது அதற்குமுன் பகவத்கீதையில் தெளிவுபடுத்தி யிருப்பதுபோல ஒவ்வொருவருக்கும் கடமைகள் வகுக்கப்பட்டிருந்தன. எல்லைகள் இருந்தன. யாரும் தமது எல்லைகளை மீறியதில்லை. **தனது கடமையைச் செய்யமல் விடுதல், பிறரது கடமையைத் தான் வலிந்து செய்தல்** என்ற இரண்டையுமே குற்றமாகத்தான் பகவத் கீதை குறிப்பிடுகிறது. இந்தக்கூற்று சாதியின் அடிப்படையில் அமைந்ததன்று என்பதைக் கீதை படித்த எவரும் சுலபமாகப் புரிந்துகொள்வர். ஏனெனில் பிறப்பால் மட்டும் சாதி நிர்ணயம் இல்லை என்பதையும் செயல்களால்தான் சாதி நிர்ணயிக்கப்படுகிறது என்பதையும் கீதை நன்கு தெளிவுபடுத்துகிறது.

இங்கு வலியுறுத்த விரும்பும் முக்கிய செய்தி என்னவென்றால், தத்தமது தகுதி, ஒழுக்கம், ஆசாரம் என்பவற்றை உயர்த்திக்கொள்ளும் முயற்சி எதுவும் இல்லாமல் தமக்கிருக்கும் பொருளாதார அந்தஸ்து அல்லது சாதி மேம்பாடு அல்லது பதவிப் பெருமை இவற்றை வைத்துத் தாம் ஆன்மீக நிலையில் உயர்ந்தவர்களாகப் பலர் கருதி மனம்போனபடி நடந்துகொள்கின்றனர். **முக்கியமாக யாரும் எதையும் சொல்லலாம், எவரும் எதையும் செய்யலாம்** என்ற நிலை ஏற்பட்டுள்ளது.

தகுதியை உயர்த்திக்கொள்வது என்பது எப்படி என்ற கேள்வி எழலாம். **சமய நூல்களைக் கற்றுணர்தலும், புலாலுணவை நீக்கிச் சுத்தபோசனராதலும், நித்திய கர்மானுஷ்டானங்களைச் செய்தலும் என்பவையே தகுதியை உயர்த்தத் தேவையானவை. அதன்மேல் மானுடநேயமும் ஆசார ஒழுக்கமும் அன்பு நெகிழ்ச்சியும் ஆன்மீக உயர்வை ஏற்படுத்தும்.**

# நடைமுறை வாழ்க்கையில் ஏற்படும் ஐயங்களுக்கான விளக்கங்கள்

## ஆலய தரிசனம்

### வணக்கம், வழிபாடு, விரதம்

**கோவிலுக்குச் செல்லும்போது கடைப் பிடிக்கவேண்டிய நெறிமுறைகள் என்ன?**

நீராடி நம்மைத் தூய்மை செய்து தோய்த்து உலர்ந்த ஆடைகளை அணிந்து செல்லவேண்டும்.

**ஆடைகள் எவ்வாறு அமையவேண்டும்?**

ஆலயம் செல்லும்போது அதற்கே உரிய வகையில் நமது பண்பாட்டுப் பாரம்பரியங்களுக்கேற்ற வகையில் நம்மைத் தயார்ப்படுத்துதல் அவசியம்.

சாத்வீகமான உணர்வுகளையும் தூய்மையான மன எண்ணங்களையும் ஏற்படுத்தக்கூடிய தோற்றம் மிகவும் அவசியம். 'ஆள் பாதி ஆடை பாதி' என்பார்கள். அதற்கிணங்க, நம்மைப் பார்க்கும்போதே பிறர் மனத்தில் ஒரு மரியாதையுணர்வை உருவாக்கக் கூடியதாக நமது ஆடை அலங்காரங்கள் இருக்க வேண்டும்.

வெண்மை நிறமான வேட்டி சால்வையே ஆண்களுக்கு உகந்தது. குளிர் தேசங்களில் வாழ்வோர் மேலங்கி அணிய வேண்டிய அவசியம் ஏற்படுமாயின் வெண்மையான ஷேட் உகந்தது.

பெண்கள் உடலை முழுமையாக மூடியிருக்கும் கீழைத்தேயப் பண்பாட்டுணர்வுக்குகந்த ஆடைகளை அணிய வேண்டும். முக்கியமாகப் பிறர் மனத்தில் விகாரமான சிந்தனை தூண்டப்படாத வண்ணம் சேலை, அல்லது அரைத்தாவணி போன்றவை விரும்பத் தக்கது. இளவர்ணங்கள் கொண்டவையாகவும், எளிமை யானவையாகவும் இருத்தல் நன்று.

இளம் நிறங்களும், எளிமையும் எப்போதும் சாத்வீக உணர்வைத் தூண்டி மன அமைதி தரக்கூடியவை. சாந்தியையும், அருளையும் நாடி ஆலயம் செல்லும்போது நமக்கும் பிறர்க்கும் நலம் பயக்கும் ஆடைகள் அவையே ஆகும்.

**விபூதி அணிவது ஏன்?**

விபூதி, பசுவின் சாணத்தை எரித்து உண்டாக்கப்படுவது. புனிதமான, 'கோமாதா' என்று கொண்டாடப்படுகின்ற பசுவின் சாணம் எரிந்து சாம்பலாவது போல், மனிதனின் எண்ணங்களும் முதிர்ச்சி பெற்று, ஞானம் பெறும்போது, தீய எண்ணங்கள் பஸ்பமாகி செய்த பாவங்கள் எரிந்து சாம்பலாகி விடும்.

சாம்பல் அழியாதது. பரம்பொருளும் அழிவில்லாதது. அழிவில்லாத சாம்பலைப் பூசிக்கொண்டு, அழிவில்லாத பரம்பொருளை நாடி, பக்தியோடு வணங்குவர் அடியார்கள்.

எவ்வளவு உயர்ந்த பதவியில் இருந்தாலும், எத்தனை செல்வம் இருந்தாலும், ஒரு நாள் தீயில் வெந்து சாம்பலாகத்தான் வேண்டும் என்னும் உண்மையை விபூதி நினைவு படுத்திக் கொண்டே இருக்கிறது.

விபூதி, நாம் இட்டுக் கொள்ளும் போதெல்லாம், இது பஸ்பமாக போகும் உடல் என்பதை உணர்த்தி, அகங்காரத்தை விட்டு, அடக்கத்தோடு, அமைதியோடு வாழும் பக்குவத்தை எற்படுத்துகிறது.

திருநீறு நிலையாமையைக் காட்டுவதாகச் சிலர் கூறுவர். நித்திய தத்துவத்தைக் காட்டுவதும் திருநீறாகும். ஏனெனில் நெருப்பிலிட்டால் எல்லாப் பொருட்களும் அழியும். திருநீறு அழியாது. மூன்று விரல் அளவாகத் திருநீறு இடுவது ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மல நீக்கத்தில் வரும் சிவப்பேற்றையும் பரிபூரண ஞானத்தையும் உணர்த்தும். மனம், மொழி, மெய் மூன்றின் பரிசுத்தத்தையும் விபூதி குறிக்கும். **பூசுநீறு போல் உள்ளும் புனிதர்கள்** என்பது சேக்கிழார் வாக்கு. உத்தூளனமாக வீபூதி பூசுவது சிவப்பேற்றையும் தூய்மையையும் காட்டும்.

## சமய சின்னங்களை அணிவதற்கு ஏதாவது விதிமுறைகள் உள்ளனவா?

விபூதியை மூன்று விரல்களால் எடுத்து வடக்கு அல்லது கிழக்குத் திசை நோக்கி நின்று அண்ணாந்து நிலத்திலே சிந்தாவண்ணம் சிவசிவ என உச்சரித்தவாறு பூசுதல் வேண்டும். நெற்றியிலும் மார்பிலும் இவ்வாறு பரவிப் பூசுதல் உத்தூளனம் எனப்படும்.

சமயதீட்சை பெற்றவர்கள் விபூதியை நீரில் குழைத்து உடலின் குறிப்பிட்ட இடங்களில் அதற்குரிய மந்திரங்களை உச்சரித்தவாறு பூச வேண்டும். இது திரிபுண்டரம் எனப்படும். ஆலய வழிபாட்டிற்குச் செல்லும்போது இன்னொரு சிவசின்னமாகிய உருத்திராக்கம் அணிதலும் நன்று.

## பொட்டு வைப்பது ஏன்?

முக்கண் பெருமானான சிவனுக்கு மட்டுமன்றி, மனிதருக்கும் கூட ஞானக்கண் உள்ள இடம் புருவத்தின் மத்தியாகும். அதனால்தான் அந்த இடத்தில் பொட்டு வைத்து ஞான உணர்வைத் தூண்டுகிறோம். இதனால் மனதில் அமைதியும் பரவசமும் ஏற்படுகிறது.

நெற்றியில் பொட்டு இட்டுக் கொள்ளும் போதெல்லாம் ஊனக் கண்ணால் உலகைப் பார்க்கும் நாம், ஞானம் என்னும் மூன்றாவது கண்ணால் உலகை தெய்வமயமாகப் பார்க்க வேண்டும் என்ற உணர்வு எழுகிறது. அதனால்தான் பொட்டு வைத்த முகம் தெய்வீகக் களையோடும், அமைதியோடும் திகழ்கிறது. அப்படிப்பட்ட ஞானம் திகழ்கின்ற முகத்தை உடையவரை வேறு எந்த தீய சக்தியும் அண்டாது.

## சந்தனம், குங்குமம் முதலியனவும் நமது சமயச் சின்னங்களா?

விபூதி, உருத்திராக்கம், சிவநாமம் என்னும் மூன்றுமே சமய சின்னங்கள் ஆகும். முதலிரண்டும் வெளிப்படையானவை. ஐந்தெழுத்தாகிய சிவாயநம என்னும்

நாமத்தை எப்போதும் மனத்தில் தியானித்திருக்க வேண்டும்.

சந்தனம், குங்குமம் இரண்டும் சமய சின்னங்கள் எனச் சிறப்பித்துச் சொல்லப்படாவிட்டாலும் அவையும் நமது பண்பாட்டுச் சின்னங்களே.

பெண்கள் அவசியம் திலகம் எனப்படும் பொட்டு அணிதல் வேண்டும். கல்யாணமாகாத கன்னிப் பெண்கள் கறுப்பு நிறமான பொட்டு அணிவர். கல்யாணமான சுமங்கலிப் பெண்கள் சிவப்புநிறக் குங்குமப் பொட்டு அணிவர். சுமங்கலிகள் நெற்றியில் மட்டுமல்லாமல் உச்சி வகிட்டின் ஆரம்பத்திலும் திலகம் அணியவேண்டும். அங்கு இலக்குமி வாசம் செய்கிறாள்.

ஆண்கள் சந்தனப்பொட்டு அணிதல் வரவேற்கத்தக்கது. மஞ்சள் நிறச் சந்தனம் சிவனையும், சிவப்புநிறக் குங்குமம் சக்தியையும் குறிப்பவை. சக்தி உபாசகர்களாகிய ஆண்களும் குங்குமம் விரும்பி அணிவதுண்டு.

பொதுவாக நெற்றிப்பொட்டு என்ற இடம் மூன்றாவது கண் ஆகிய அறிவுக் கண்ணுக்குரிய இடமாகும். அந்த இடத்தில் பல நரம்புகள் சந்திக்கின்றன. அந்த இடத்தைக் குளிர்மையாக வைத்திருப்பதன் மூலம் உடல் ஆரோக்கியம் பேணப்படுகிறது.

மேலும், ஹிப்நொட்டிசம் என்னும் வசியக்கலை மூலம் நம்மைப் பிறர் வசப்படுத்த முனையும்போது நெற்றியில் புருவ மத்தியே பயன்பாட்டுக்குரிய இடமாகிறது. அதனைத் தடுக்கும் காவலாகவும் திலகம் அமைகிறது. கைவளைகளும், கழுத்து, காது, மூக்கு முதலிய அங்கங்களில் தங்க நகைகளும் அணிவது பெண்களுக்கு அவசியமானதே. அது லஷ்மிகரமாக அமைகிறது. ஆடம்பரமில்லாமல், பிறர் பார்த்து ஏங்கும் வகையின்றி இவற்றை அணிவது நன்று.

## குங்குமம், சந்தனம், தீர்த்தம், மலர் ஆகியவை குறிப்பிடும் தத்துவம் என்ன?

குங்குமம் பராசக்தியின் அடையாளம். செந்நிறம் சக்தியின் செயலாற்றலைக் குறிக்கும். இறைவனின் திருவருளாகிய பராசக்தியின் துணைக் கொண்டு செயல் புரிகின்றோம் என்பதைக் குங்குமம் உணர்த்தும். மங்கலம். செல்வம், நன்மை ஆகியவற்றையும் குங்குமம் குறிக்கும். இதனாலேயே மாங்கல்யதாரணத்தில் குங்குமம் முக்கிய இடம் பெறுகிறது. சைவர்கள் மாங்கல்யத்தில் வீபூதி இட்டே குங்குமம் வைப்பர். வீபூதியும் மங்கலப் பொருளாகும். அம்மையின் திருவருளைச் சிறந்த வகையில் காட்டுவதற்கே குங்குமம் இடுகின்றோம். சந்தனம் குளிர்ச்சிப் பொருள். சந்தனமும் மலரும் முறையே இறைவன் உலக சுகபோகங்களையும் செல்வத்தையும் வழங்குகின்றான் என்பதைக் குறிக்கும். இறைவனின் தண்கருணைக்கும் சந்தனம் அடையாளமாகும். தீர்த்தம் இறைவன் நம் வழிபாட்டை ஏற்றுப் புனிதமாகும் வண்ணம் அருள்பாலிக்கிறான் என்பதை உணர்த்தும்.

## ஆலயத்தில் வழிபடும் முறைகள் எவை?

கோபுர வாசலினுள்ளே சென்றதும் கொடிமரத்திற்கு இப்பால் வீழ்ந்து வணங்குதல் வேண்டும். வடக்கே அல்லது கிழக்கே தலைவைத்து வணங்க வேண்டும். ஆண்கள் அட்டாங்க நமஸ்காரமும், பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும் செய்தல் முறை. வீழ்ந்து வணங்கிய பிறகு நந்தியம்பெருமானிடம் (இடபதேவர்) அனுமதி பெற்றபின் உள்வீதியை வலம்வந்து வணங்க வேண்டும். அதன்பின் உள்ளே சென்று தனித்தனி சந்நிதானங்களை முறைப்படி வணங்கவேண்டும்.

## இந்த வழிபாடுகளை எங்கே செய்யவேண்டும்?

ஐந்தாங்குரவர் ஆகிய ஆறுமுகநாவலர் அவர்கள் வழிபடும் முறை பற்றிக் கூறும்போது பலிபீடத்திற்கு இப்பால் மட்டுமே வீழ்ந்து வணங்குவது பற்றிக் குறிப்பிடுகிறார்.

உள்ளே நுழைந்து வீதிவலம் வரும்போது சுவாமி சந்நிதிகளில் தனித்தனியே ஒவ்வொரிடத்திலும் வீழ்ந்து வணங்குவது உகந்ததன்று. அங்கே நாம் வீழ்ந்து வணங்கினால் நாம் கால் நீட்டும் திசையில் இன்னொரு சந்நிதானம் இருக்கும். வழிபடுகின்ற மற்றவர்களுக்கு இடையூறாக இருக்கும். அதனால் குறித்த இடம் தவிர மற்ற இடங்களில் வீழ்ந்து வணங்குவதைத் தவிர்க்க வேண்டும்.

## குட்டிக் கும்பிடுதல், தோப்புக்கரணம் போடுதல் என்பவற்றை யார் எங்கே செய்யவேண்டும்?

இவ்விரு வழிபாடுகளும் விநாயகருக்குரியவை. அவரது சந்நிதியில் மட்டுமே இவ்விரு வழிபாடுகளையும் செய்யவேண்டும். வேறு சந்நிதானங்களில் செய்வது பொருத்தமற்றது.

விநாயகப்பெருமான் சந்நிதியில் நெற்றியில் மும்முறை குட்டி, கைகளை மாறி வலக்கையால் இடக் காதையும், இடக்கையால் வலக் காதையும் பிடித்துக்கொண்டு மும்முறை இருந்து எழும்பி வணங்குதல் தோப்புக்கரணம் எனப்படும்.

மேலும் குட்டிக் கும்பிடுதல் இருபாலாருக்கு முரியது. ஆனால், தோப்புக்கரணம் ஆண்களுக்கு மட்டுமே உரியது. பெண்கள் தோப்புக்கரணம் செய்யவேண்டியதில்லை.

## நமஸ்கார வகைகள் யாவை?

தலையை மட்டும் குனிந்து வணங்குதல் **ஏகாங்க நமஸ்காரம்.** தலை மேல் இருகரம் கூப்பி வணங்குதல் **த்ரியாங்க நமஸ்காரம்.** இரண்டு கைகள் இரண்டு முழந்தாள்கள், சிரம் ஆகிய ஐந்தும் நிலத்தில் பொருந்த வணங்குதல் **பஞ்சாங்க நமஸ்காரம்.** தலை, இரண்டு கைகள், இரு செவிகள், இரு முழந்தாள்கள், மார்பு அனைத்தும் பூமியில் பட வணங்குதல் **அஷ்டாங்க நமஸ்காரம்.**

பஞ்சாங்க நமஸ்காரம் பெண்களுக்கும், அஷ்டாங்க நமஸ்காரம் ஆண்களுக்கும் உரியது. பெண்களின் முக்கிய அவயவங்கள் பூமியில் படக்கூடாது என்பதால் அவர்களுக்குப் பஞ்சாங்க நமஸ்காரம் விதிக்கப்பட்டுள்ளது. பெண்கள் நிலத்தில் ஸாஷ்டாங்கமாக விழுந்து வணங்குவதும் அங்கப் பிரதட்சணம் செய்வதும் ஆகாது.

## பூஜையின் போது கை குவிப்பது, மற்றும் கீழே விழுந்து வணங்குவதன் பொருள் என்ன?

நாம் நமது வலது கையால் பல வேலைகள் செய்கிறோம் - எழுதுகிறோம், உண்ணுகிறோம். ஆனால் இடது கையை வேறு வேலைக்காகப் பயன் படுத்துகிறோம்.

கடவுளை வணங்கும் போது இந்த இரண்டு கைகளையும் ஒன்று சேர்த்துக் கூப்புகிறோம். இறைவன் முன் உயர்வு தாழ்வு ஏதும் இல்லை. எல்லோரும் சமம் என்பதே இதன் அர்த்தம். தம்மை முழுவதுமாக அர்ப்பணித்து சரணாகதி செய்யும் பக்தர்களின் நலனை இறைவன் தானே கவனிக்கிறார். மனமுவந்து அருள் செய்கிறார்.

“என் செயலால் ஆவது ஏதுமில்லை. உன்னுடைய பொறுப்பில் என்னை அர்ப்பணித்து விட்டேன்“ என்ற அர்த்தத்தில் தான் உடம்பை தரையோடு தரையாகக் கிடத்தி பணிவோடு வணங்குகிறோம்.

## ஆலயங்களில் எப்படி பிரதக்ஷிணம் செய்ய வேண்டும்? எந்தெந்த தெய்வத்தக்கு எவ்வளவு தடவை?

நிறைமாத கர்ப்பிணிப்பெண் எவ்வாறு மிகமிக மெல்லமாகவும் கவனத்துடனும் நடந்து செல்வார்களோ, அவ்வாறு மிக மெல்லமாக தெய்வத்தின் நினைவுடன், தெய்வத்தை வலமாக சுற்றி வருவதே, பிரதக்ஷிணம் எனப்படும். இவ்வாறு செய்யப்படும் ப்ரதக்ஷிணமானது முன்ஜன்மத்தில் நாம் செய்த அனைத்துப் பாபங்களையும் போக்கடிக்கும்.

பொதுவாக எந்தத்தெய்வத்துக்கும் ஒருமுறைமட்டும் ப்ரதக்ஷிணம் செய்யக்கூடாது. ஆனால் விநாயகருக்கு மட்டும் ஒரு தடவை செய்யலாம்.

இவ்வாறே ஒரே ஒரு கையால் தெய்வங்களை வணங்குவதும் கூடாது. இது நமக்கு நன்மையைத் தராததுடன் நாம் செய்த புண்யத்தை அபஹரிக்கும்.

மேலும் பெருமாள் கோவிலுக்கு நேரமற்ற நேரத்தில் சென்று விஷ்ணுவை தர்சிக்கக் கூடாது.

ஏகஹஸ்த ப்ரணாமச ஏகஞ்சாபி பிரதக்ஷணம்
அகாலே தர்சனம் விஷ்ணோ: ஹந்தி புண்யம் புராதநம்.

ஒரு தடைவ மட்டும் செய்யும் பிரதக்ஷிணமும், ஒருகையால் செய்யப்படும் நமஸ்காரமும், நேரம் தவறிச்செய்யும் விஷ்ணு தரிசனமும், நமது புண்யத்தைக் குறைக்கும்.

தன்னைத்தானே சுற்றிக்கொண்டு செய்யும் ப்ரதசஷிணம் ஆத்ம பிரதக்ஷணம் எனப்படும். இந்த விதமான ப்ரதக்ஷிணத்தை சூரியனுக்கு மட்டும்தான் செய்யலாம். ஸந்தியாவந்தனத்தில் செய்யலாம். ஆலயங்களிலோ மற்ற இடங்களிலோ ஆத்ம பிரதக்ஷிணம் செய்யக்கூடாது. மேலும்,

ஏகம் வினாயகே ப்ரோக்தம், த்வே சூர்ய, த்ரீணி சங்கரே, சத்வாரி மஹாவிஷ்ணோ:; பஞ்சாஸ்துதேவ்யா: ஸப்த அஸ்வத்த ப்ரதக்ஷிணம் என்னும் வசனப்படி

ஸ்ரீ மஹா கணபதிக்கு ஒரு முறை ப்ரதக்ஷிணமும்
சூரியுனை நோக்கிச்செய்யும் ப்ரதக்ஷிணம் இரு தடவையும்
பரமேஸ்வர(சிவ)னுக்கு மூன்று முறை ப்ரதக்ஷிணமும்
மஹாவிஷ்ணுவுக்கு நான்கு முறையும்
தாயார் அம்மனுக்கு ஐந்து முறை ப்ரதக்ஷிணமும்
அச்வத்த வ்ருக்ஷத்துக்கு (அரசமரத்திற்கு) ஏழு தடவைக்குக் குறைவில்லாமலும் பிரதக்ஷிணம் செய்ய வேண்டும்.

## கோவிலில் பிரகாரங்கள் அமைந்திருப்பது ஏன்?

கோவிலில் தெய்வத்தை வழிபடுபவர்கள், வெளிப்பிரகாரம் பின்னர் உள் பிரகாரம் என சுற்றி வருவதன் தத்துவம், உலக பந்தத்தை சிறுகச் சிறுக விட்டொழித்து, இறைவனை அடைய வேண்டும் என்பதே.

கடவுள் சந்நிதானத்தில் நிற்கும்போது, பக்தன் தன்னை மறந்து உலகை மறந்து நிற்கிறான். அப்படி மனம் ஒன்றி செய்யப்படும் பக்தியை வெளியில் இருந்து வரும் ஒசைகளும் சந்தடிகளும் கலைத்து விடாது இருக்கவே சந்நிதானத்தைச் சுற்றிப் பிரகாரங்கள் வைக்கப்பட்டுள்ளன.

## சூரிய நமஸ்காரத்தால் கிட்டும் பலன் என்ன?

சூரிய நமஸ்காரம் செய்யம்போது சூரியனின் கதிர்கள் கண்களில் படுவதால் கண்கள் ஒளி பெறுகின்றன. வயிற்றின் தசைகள் அசைவதால் ஜீரண உறுப்புகள் சரியாக இயங்குகின்றன. உண்ட உணவு நன்கு செரித்து, நல்ல பசி உண்டாகும். உடல் ஆரோக்கியம் பெறும்.

## கோவில்களில் விடியற்காலை அங்கப்ப்ரதக்ஷினம் செய்வதன் தத்துவம் என்ன?

அங்கப்ப்ரதக்ஷிணம் என்பது வேண்டுதலுக்காகச் செய்வது. பக்தர்கள் அதிகாலை நேரத்தில், திருக்குளத்தில் நீராடி, ஈர உடையுடன் கோவிலுக்கு வந்து பிரகாரத்தை வலம் வருவர்.

காலம் காலமாக எத்தனையோ மகான்களும், ஞானிகளும் கோவிலை வலம் வந்திருப்பர். அவர்களுடைய திருவடி பட்ட அந்த இடத்தில் தலை முதல் கால் வரை படும்படியாக படுத்து அங்கப்ப்ரதக்ஷிணம் செய்யும்போது அவர்கள் பாதத்தூளியால் பாவங்கள் தீர்ந்தபோகும் என்பதுதான் அங்கப்பரதக்ஷிணம் செய்வதன் தாத்பர்யம்.

மேலும், பெரும்பாலான கோயில்களில் பிராகாங்கள் திறந்த வெளியில் இருக்கும். அதனால் காலை எட்டு மணியிலேயே கூட பிரகாரத்தின் தரை சூடாகி

விடும். பக்தர்கள் அங்கப் பிரதக்ஷிணம் செய்பவர்கள் அதிகாலையிலேயே செய்யவேண்டும் என்று கூறப்படுகின்றது.

## ஆலயத்தில் செய்யத் தகாதவை எவை?

சுவாமி திருவுருவங்களைத் தொட்டு வணங்குதல், கருவறையின் சுவர்களில் தலையை முட்டிக்கொள்ளுதல் போன்றவையெல்லாம் அநாவசியமான பழக்கங்கள்.

கண்ட இடங்களிலெல்லாம் கற்பூரம் ஏற்றாது. அதற்குரிய இடத்தில் மட்டுமே ஏற்ற வேண்டும்.

நாமே இறைவனை அர்ச்சிக்க வேண்டும் என்னும் ஆவலால் உந்தப்பட்டுத் தெய்வ சந்நிதானங்களில் பூக்கள் எறிந்து வழிபடுதலும் ஆகாது. அது நமக்குத் தகுதியான ஒரு செயலன்று என்பதோடு அம் மலர்கள் பின்னர் அர்ச்சகர்களின் காலில் படும்போது இருவருக்கும் பாபம் ஏற்படுகிறது.

பொதுவாக ஆலயத்தினுள் வீண்வார்த்தை பேசுதலும், வேறு சிந்தனைகளில் ஈடுபடுதலும் ஆகாது. ஆலயத்தையும் அதன் சூழலையும் எப்போதும் அமைதியாகவும், தூய்மையாகவும் வைத்திருத்தல் அவசியம். சூழலில் சக்தியை மேம்படுத்த அமைக்கப்பட்ட ஆலயங்கள் சூழலை மாசுபடுத்தும் வகையில் நாம் நடந்துகொள்ளக்கூடாது.

ஆலயத்தினுள் நந்திக்கும் மூலவருக்குமிடையே குறுக்கே செல்லலாகாது. சண்டேஸ்வரர் சந்நிதிக்கும் மூலஸ்தானத்துக்கும் இடையில் போவதும் ஆகாது. ஆதனால் சண்டேஸ்வரரை வலம் வரலாகாது.

## கோவிலில் ஏன் தேங்காய் உடைத்து அர்ச்சனை செய்கிறோம்?

நம் சமயம் ஞானம் பெறுவதே முக்கிய குறிக்கோளாகக் கொண்டுள்ளது. ஞானம் என்பது அறிவு. நம் அறிவை எப்பொழுதும் ஆணவமலம் மறைத்துக் கொண்டிருக்கின்றது. ஆணவமலம் நீங்கினால் தான் அறிவு பிரகாசிக்கும். குடுமி, கண்கள் ஆகியவற்றை உடையதாகத் தேங்காய் இருப்பதால் அறிவுணர்ச்சிக்கு இருப்படமான நம் தலையை அது குறிக்கின்றது. தேங்காயைச் சுற்றியுள்ள ஓடு அறிவைச் சூழ்ந்துள்ள ஆணவ மலத்தைக் காட்டுகிறது. அதை நீக்கி, அறிவைப் பிரகாசிக்கச் செய்ய வேண்டும் என இறைவனைக் கேட்பதே தேங்காய் உடைப்பதன் கருத்தாகும். நம் அறிவினாலேயே இறைவனை அடைந்து விடலாம் எனக் கருதுபவர்கள் உண்டு. நம் அறிவு ஆணவமலத்தால் மறைக்கப்பட்டிருப்பதால் அதன் துணைக்கொண்டு இறைவனை அடையமுடியாது. அன்பினால் நெக்குருகி வழிபட்டால், இறைவன் ஆணவமலத்தை நீக்கி நம் அறிவைப் பிரகாசிக்கச் செய்வான். நாமாக நம்மறிவைப் பிரகாசிக்கச் செய்ய முடியாது. தேங்காய் உடைப்பதன் வாயிலாக வெளிவரும் நீர் அன்பினால் அறிவு பிரகாசம் பெறுவதை உணர்த்துகின்றது. ஆணவமல நீக்கம் தேங்காய் உடைப்பதன் தத்துவமாகும்.

## வெற்றிலை, பாக்கு, பழம் வைத்து ஏன் அர்ச்சனை செய்கிறோம்?

வெற்றிலை நம் உடலைக் குறிக்கும். தூல உடல், சூக்கும உடல் ஆகிய இரண்டையும் குறிக்க இரண்டு வெற்றிலை வைப்பது வழக்கம். காரண உடலைச் சேர்த்து மூன்று வெற்றிலையும் வைக்கலாம். நோயில்லாமல் ஆரோக்கியமாக இருக்கவேண்டும் என வேண்டுவதே இதன் குறிக்கோளாகும். பாக்கு செல்வத்தைக் குறிக்கும். இரண்டு வாழைப்பழங்களும் நாம் செய்யும் நல்வினை, தீவினை இரண்டையும் குறிக்கும். எனவே ஆரோக்கியம், செல்வம், பாவபுண்ணிய விடுதலை ஆகிய மூன்றையும் வேண்டியே வெற்றிலை, பாக்கு, பழம் வைத்து அர்ச்சனை செய்கிறோம். இது மாயா மலத்தையும் கன்ம மலத்தையும் நீக்குவதற்கு இறைவன் துணையை நாடுகிறோம் என்பதை உணர்த்தும். சுருக்கமாகத் தேங்காய், வெற்றிலை, பாக்கு, பழம் ஆகியவை அர்ச்சனை செய்வதன் நோக்கம், அறிவு, ஆரோக்கியம், செல்வம், பாவபுண்ணிய விடுதலை ஆகிய பயன்களைத் தரவேண்டும் என்பதே ஆகும்.

## கோயிலில் ஏன் மணி அடிக்கிறோம்?

மணி நாததத்துவத்திற்கு அறிகுறி ஆகும். கோவிலில் மணி அடிப்பதன் மூலம் இறைவனே எல்லாப் பொருட்களையும் இயக்குகிறான் என்பதை உணர்த்துகிறோம்.

## அபிஷேகம், அலங்காரம் ஏன் செய்கிறோம்?

ஐந்தொழில் ஆற்றுபவன் இறைவன். பால், தயிர், தேன் முதலியவற்றை அபிஷேகம் செய்வதன் மூலம் நாட்டில் நிலவளமும் நீர் வளமும் உணவு தானியங்களும் பசு, செல்வமும் பெருகுமாறு செய்யவேண்டும் என்று இறைவனை அன்புநீராட்டி வேண்டிக் கொள்கிறோம். அலங்காரம் அவன் படைக்கின்ற பொருட்களைக் காத்து நிலைபெறச் செய்யவேண்டும் என்பதைக் குறிக்கும். அக்னி வளர்த்து, ஹோமம் செய்வது, எல்லாப் பொருட்களையும் அவனே அழிக்கின்றான் என்பதை உணர்த்தும். சாம்பிராணி, ஊதுபத்தி முதலியன உலக போகங்களில் இறைவன் நம்மை அழுத்துவிக்கும் மறைத்தல் தொழிலைக் குறிக்கும். தீபாராதனை ஞானச்செல்வம் அருளுவதைக் காட்டும். சுருக்கமாகப் படைத்தல், காத்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் முறையே அபிஷேகம், அலங்காரம், அக்னிகார்யம், தூபம், தீபம் ஆகியவை உணர்த்துகின்றன எனக் கொள்ளல் வேண்டும்.

## திருமுறைகளைப் பாடுவதால் என்ன நன்மை கிட்டும்?

இறைவனது பெருமைகளைப் புகழ்ந்து பாடும் பாடல்களை பக்தியுடனும் இசையுடனும் பாடி மகிழ்கிறோம். இறைவனின் நாமங்களைத் திரும்பத் திரும்பக் கூறி வழிபடுதல் நாம ஜபம் என்பர். பலர் ஒன்றுசேர்ந்து இவ்வாறு நாமங்களைக் கூறுதலும் பாடல்களைப் பாடுவதும் உண்டு. இதனை பஜனை என்பர். இவற்றின் மூலம் நமது நன்றியை ஆண்டவனுக்கு நாம் எடுத்துக் காட்டுவதுடன் நமது மனத்திலும் அன்பு, அமைதி, ஆனந்தம் முதலிய உணர்வுகளுடன் உற்சாகமாக நமது வாழ்க்கையைத் தொடர முடிகிறது.

**இப்பாடல்களைப் பாடும்போது கடைப் பிடிக்கவேண்டிய நெறிமுறைகள் என்ன?**

இறைவன்முன் திருப்பாடல்களைப் பாடும்போது கைகளைக் குவித்து வணங்கியவாறு கண்களை மூடி இறைவனைத் தியானித்தபடி திருச்சிற்றம்பலம் என்று சொல்லி ஆரம்பித்துப் பாடி முடித்தபின்னரும் திருச்சிற்றம்பலம் என்ற கூறி நிறைவு செய்ய வேண்டும்.

**ஆலய வழிபாடு எதற்காக ஏற்படுத்தப்பட்டது?**

ஆலயத்தில் பெரிய மண்டபங்கள் பல அமைந்திருக்கும். எல்லோரும் கூடி வழிபாடு செய்வதற்கு அவை உதவுகின்றன. உயர்ந்த கோபுரங்கள், ஓவியங்கள், சிற்பங்கள் முதலியன நமது மனத்தைக் கவரும். மகிழ்ச்சியை ஏற்படுத்தும்.

ஆலயத்தில் ஒலிக்கின்ற மந்திர ஒலிகளும் திருமுறைப் பாடல்களும் மிகுந்த சக்தி வாய்ந்தவை. அவற்றோடு அங்கே ஒலிக்கின்ற மணி ஒலி, மேளம், நாதஸ்வரம் முதலிய மங்கல வாத்தியங்களின் ஒலி, சாம்பிராணி வாசனை முதலியன நமது உள்ளத்தில் பக்தி உணர்வினை எழுப்புகின்றன.

அங்கு சென்று நாம் மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரணங்களாலும் வழிபாடுகளைச் செய்ய வேண்டும். மனத்தால் இறைவனை நினைத்தலும் வார்த்தைகளால் இறைவன் புகழ் பாடுதலும் உடலால் ஆலயத் தொண்டுகள் செய்வதுமே திரிகரண வழிபாடாகும்.

ஆலயத்தில் நாம் நம்மை உயர்ந்தவர்களாகக் கருதாமல் இயன்ற அளவு தொண்டுகள் செய்ய வேண்டும். கூட்டுதல், கழுவுதல், மாலை கட்டுதல், பூந்தோட்டம் அமைத்தல் முதலிய இவற்றைச் சரியைத் தொண்டுகள் என்பர். இவை மனத்திற்கு மகிழ்ச்சியை ஏற்படுத்துவதுடன் நல்ல உடற் பயிற்சியாகவும் அமைகின்றன. வீதி வலம் வருதல் வீழ்ந்து வணங்குதல் முதலியனவும் சிறந்த உடற் பயிற்சிகளாகும்.

**நமக்கு எல்லாச் செல்வங்களையும் அருளும் இறைவனுக்கு நாம் பூஜைக்கு மலர்களையும், நைவேத்தியத்திற்குப் பழத்தையும் அளிப்பதன் தத்துவம் என்ன?**

"உண்மையான அன்புடன் எனக்கு ஒரு இலையை, ஒரு பழத்தை, ஒரு மலரை, ஒரு துளி தண்ணீரை அர்ப்பணித்தாலும் கூட அதை ஒரு தூய்மையான மனத்தின் காணிக்கையாக நான் ஏற்றுக் கொள்கிறேன்", என பகவத் கீதையில் கிருஷ்ண பரமாத்மா சொல்கிறார். தட்டு நிறைய பொன்னும் பொருளும் இருப்பது முக்கியமில்லை. மனம் நிறைய அன்பும் பக்தியும் இருக்க வேண்டும். அதுவே முக்கியம்.

அழகாக சிருஷ்டிக்கப்பட்ட மலர்களின் வாழ்க்கை குறுகியது. ஆனால் அந்த சொற்ப நேரத்தில் அவை மணம் பரப்பி நம்மை மகிழ்விக்கின்றன. தம்மிடமுள்ள மகரந்தத்தை வண்டுகளுக்குக் கொடுத்து விடுகின்றன.

இதே போலப் பழங்களும், மனிதனுக்கும் மிருகங்களுக்கும் பறவைகளுக்கும் உணவாகின்றன. இனிமையுடன் தம்மைக் கொடுத்துத் தியாகம் செய்கின்றன. பறிக்கப்படாமல் போனால், கனிந்து, உதிர்ந்து மண்ணுடன் கலந்து புழு, பூச்சிகளுக்கு உணவாகின்றன. தங்கள் விதையை மண்ணுக்குக் கொடுக்கின்றன.

இப்படி மலர்களும், பழங்களும் தங்கள் சொற்ப கால வாழ்க்கைக்குள் தம்மைப் பலருக்கு பயன்பட தியாகம் செய்யும் உயர்ந்த குணத்துடன் வாழ்பவை. இத்தகைய தியாக மனப்பான்மைதான் ஒரு பக்தன் பெற வேண்டிய மகத்தான குணம். அதனாலேயே அதைக் குறிப்பது போல் மலர்களையும் பழங்களையும் இறைவனுக்கு அர்ப்பணிக்கிறோம்.

## நைவேத்தியம் செய்தால் பகவான் சாப்பிடுகிறாரா? உணவை நைவேத்யம் செய்வது எதற்காக?

பண்டிகைகள், பூஜைகளின்போது, 'கடவுளுக்கு விருப்பமானவை' என விதவிதமான இனிப்பு வகைகள் - பாயசம், கொழுக்கட்டை - போன்ற பலகாரங்களை இறைவனக்கு நிவேதனமாகப் படைத்துவிட்டுப் பின்பு உண்கிறோம். 'நிவேதனம்' என்றால் ஸ்வாமியை சாப்பிடச் செய்வது என்றுதான் பலரும் நினைக்கின்றனர். ஆனால், 'நிவேதயாமி' என்பதற்கு 'அறிவிக்கிறேன்' என்பதுதான் பொருள்.

'இறைவனே! இந்த வேளைக்கு உன் கருணையால் எனக்கு இந்த உணவு கிடைத்திருக்கிறது. அதற்கு என்னுடைய நன்றி' என்று கடவுக்கு நம் நன்றி உணர்வை அறிவிப்பதுபோல்தான் நிவேதயாமி என்று சொல்வது. இவ்வளவு நல்ல உணவை உண்ணும் பாக்கியத்தைக் கொடுத்த கடவுளுக்கு நாம் கட்டாயம் நன்றி சொல்ல வேண்டும். நமக்குக் கிடைத்த எல்லாமே இறைவன் கொடுத்ததே.

'என் வாழ்வு என் உழைப்பால் வந்தது' என சிலர் எண்ணலாம். ஆனால் அந்த உழைப்பிற்கு வேண்டிய சக்தியும், சந்தர்ப்பமும்கூட இறைவன் கொடுத்ததுதான் என்பதை உணர வேண்டும். அவர் கொடுத்ததை அவரிடமே காட்டி அவருக்கு நன்றி கூறி, பின் அனுபவிப்பதே முறை. தர்மமும் கூட.

## உருவச் சிலைகளை ஏன் வழிபடவேண்டும்?

உருவம் ஒன்றுமில்லாமல் எல்லா இடங்களிலும் பரந்து கலந்திருக்கின்ற இறைவனுக்கு பெரியோர்கள் சில உருவங்களை அமைத்திருக்கிறார்கள். கடவுளை நாம் நினைத்து வழிபடுவதற்கு அவை உதவுகின்றன. பிள்ளையார், சிவபெருமான், உமாதேவியார், முருகன், வைரவர் முதலிய பல வடிவங்களில் நாம் கடவுளை வழிபடுகிறோம்

நமது ஒரே தந்தையாரை அவர் வெவ்வேறு வயதுகளில் வெவ்வேறு தோற்றங்களில் எடுத்துவைத்திருக்கும் புகைப்படங்களில் கண்டு மகிழ்வதுபோல ஒரே கடவுளை நாம் பல தோற்றங்களில் கண்டு மகிழ்கிறோம்.

## சிவலிங்கம், நடராஜர் போன்ற வடிவங்களின் விளக்கம் என்ன?

சிவலிங்க வடிவத்தில் மேற்பகுதியாகிய லிங்கம் சிவன் என்று ஆண்

தெய்வமாகவும், கீழ்ப் பகுதியாகிய பீடம் ஆவுடையார் என்னும் சக்தி வடிவாகிய பெண் தெய்வம் என்றும் உருவகம் செய்வர்.

அன்னையும், தந்தையும் இணைந்து செயற்படும்போதுதான் நமது குடும்பம் என்ற இல்லற வாழ்க்கை இனிமையாக நகருகிறது. இந்தத் தத்துவமே சிவலிங்க வடிவம், நடராஜர் - சிவகாமி வடிவங்களில் புலப்படுத்தப்படுகின்றது. இன்னொரு வடிவத்தையும் இந்துக்கள் போற்றி வணங்குகின்றனர். அர்த்த நாரீஸ்வரர் அல்லது மாதொரு பாகர் என அழைக்கப்படும் இவ்வடிவம் பாதி ஆணும் பாதி பெண்ணும் சேர்ந்த வடிவமாகும்.

விஞ்ஞான அடிப்படையிலும், நேர்முனைவும் (+) எதிர் முனைவும் (-) சேரும்போதுதான் சக்தி பிறக்கிறது. காந்தி சக்தியானது வடமுனைவையும், தென் முனைவையும் கொண்டுள்ளது. மூலப் பொருட்கள் எல்லாவற்றிற்கும் அடிப்படை மூலப்பொருளாக இன்று விஞ்ஞானிகள் கண்டறிந்துள்ள அணுக்களும் நேர் முனைவாகிய புரோத்தன்களையும் எதிர் முனைவாகிய இலத்திரன்களையும் கொண்டவை அல்லவா?

பழமும் அதன் சுவையும் போல, நெருப்பும் அதன் சூடும் போல, மலரும் அதன் மணமும் போல சிவனும் அம்பிகையும் ஒன்றாக இணைந்திருந்து இப் பிரபஞ்சம் அனைத்துக்கும் அன்னை தந்தையாக (அம்மை அப்பராக) இருந்து படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களைப் புரிகின்றார்கள்.

## கற்பூர ஆரத்தி எடுப்பது ஏன்?

தூய்மையான வெண்ணிறத்தை உடையது கற்பூரம். இது எரியும் போது ஏதும் மிச்சமில்லாமல் ஆவியாகி விடும். அடையாளமில்லாமல் நெருப்போடு ஒன்றிவிடும்.

கற்பூரத்தைப் போன்று மனிதர்களும் தூய்மையான மனத்துடன் பக்தியில் இரண்டறக் கலந்து ஒன்றி விட வேண்டும் என்பதைத்தான் கற்பூர ஆரத்தி காட்டுகிறது.

## வழிபாடு முடிந்ததும் யாது செய்யவேண்டும்?

இறை தரிசனமும், வழிபாடும் முடிந்தபின் சண்டேஸ்வரர் சந்நிதிக்கு சென்று மிக மெதுவாக மும்முறை கைகொட்டி, இறை வழிபாட்டின் பலனைத் தரும்படி அவரை வணங்கவேண்டும்.

சிவபக்தியில் மிகவும் மேம்பட்டவரான சண்டேஸ்வரரை, வழிபாட்டின் பலனை வழங்கும் பதவியில் அமர்த்தியிருக்கிறார் சிவபிரான். சண்டேஸ்வரர் எப்போதும் சிவத்தியானத்தில் இருப்பார். அதனால் அவரைக் குழப்பாது மெதுவாக அவர் கவனத்தை நம்மீது ஈர்க்கும் வகையில் மெதுவாகக் கைகொட்டி வணங்குகிறோம்.

இதன்பின் ஆலயத்தில் அமைதியான ஒரு புறத்தில் தியானத்தில் ஈடுபட வேண்டும். அதன்பின் பிரசாதங்களைப் பெற்றுக்கொண்டு நிறைவோடும், மகிழ்வோடும் வீடு திரும்பலாம்.

## இறந்தவர்கள் நினைவாக வெளியிட்ட புத்தகங்களை ஆலயத்தில் பயன்படுத்தலாமா?

இறந்தவர்கள் மனித நிலையிலிருந்து உயர்ந்து தெய்வ நிலைக்கு அருகிலிருப்பவர்களாகவே கருதப்படுவதால் அவர்கள் ஆலயத்தில் தவிர்க்கப்பட வேண்டியவர்கள் அல்லர்.

மேலும் அவர்களது பெயரால் புனிதமான திருமுறைகள் பலரது கைகளுக்கும் கிட்டுகின்றன அல்லவா? அவற்றை வைத்து ஓதுவதில் எவ்வித தவறும் இல்லை.

## ஆலயங்களின் உருவாக்கத்திலும் அங்கு நடைபெறும் கிரியைகளிலும் பயன்படுத்தப்படும் மூலப்பொருள்களின் சிறப்பியல்புகள் எவை?

கருங்கற்களே மிகப் பொருத்தமானவை. பழையகால ஆலயங்கள் யாவும் கருங்கற் கட்டடங்களே. அவை நிறைவாகச் சக்தியைச் சேமித்து வைத்துச் சிறிது சிறிதாக வெளிவிடும் அற்புத ஆற்றல் கொண்டவை. நீண்டகாலம் இருக்கும் பலம் உடையவை.

வெள்ளைக் கற்கள் ஓரளவுக்கு இதே தன்மை கொண்டிருப்பதால் அதனைப் பயன்படுத்துவர். செங்கற்கள் மண்ணால் தயாரிப்பதனால் அவையும் ஓரளவு ஏற்றுக்கொள்ளத் தக்கவையே. செங்கற்களே ஓமகுண்டங்கள், யாகசாலைகள் அமைப்பதில் பெரும்பாலும் பயன்படுகின்றன. சீமெந்து, மரம், பிளாஸ்ரிக் மற்றும் நவீனகால மூலப் பொருட்கள் மிகக் குறைந்த பொருத்தப்பாட்டை உடையவை.

வழிபாட்டுக்குரிய திருவுருவங்கள் கருங்கல்லால் அமைக்கப்படுவதே முறை. உற்சவ மூர்த்திகள் பஞ்சலோகக் கலவையால் உருவாக்கப்படுகின்றன. (தங்கம், செம்பு, ஈயம், வெண்கலம், பித்தளை)

பூஜைக்குப் பயன்படும் தட்டுகள், தாம்பாளங்கள், கிண்ணங்கள், பஞ்சபாத்திரம், உத்தரணி, தீபங்கள், குத்துவிளக்குகள், கற்பூரத்தட்டு, கெண்டி, செம்பு, குடம் முதலிய உபகரணங்கள் பெரும்பாலும் பித்தளையில் அமைந்திருக்கும்.

சில இடங்களில் சில உபகரணங்கள் செம்பிலும், வெள்ளியிலும் அமைந்திருக்கும்.

பொதுவாக ஆலயம், விக்கிரகம், பூஜைப்பொருட்கள் யாவுமே பிருதுவி எனப்படும் மண்ணின் அம்சங்கள் ஆகும். எனவே இவை மண்ணால் செய்யப்பட வேண்டும். அல்லது கல்லினாலோ மண்ணிலிருந்து எடுக்கப்படும் உலோகங்களாலோ செய்யப்பட வேண்டும்.

உலோகங்களில் மிக உயர்ந்தது தங்கம். அதற்கடுத்து வெள்ளி. இவை இரண்டும் மிக விசேடமானவை. எனினும் இவற்றின் அதிகூடிய பெறுமதி காரணமாக இவற்றை அதிகம் பயன்படுத்த முடிவதில்லை.

இவற்றுக்கு அடுத்ததாக செம்பு, பித்தளை ஆகிய உலோகங்கள் சொல்லப்படுகின்றன. இவற்றுக்கும் அடுத்த நிலையில் வெண்கலமும் உபயோகப்படலாம்.

இவை யாவும் நல்ல அதிர்வுகளையுடையவை. சக்தியைச் சேமித்து வைத்து வெளிவிட வல்லவை.

இரும்பு, ஈயம் இரண்டும் கிரியை வழிபாடுகளுக்குப் பயன்படுத்த ஆகாதவை.

தற்காலத்தில் பெரிதும் பயன்பாட்டிலுள்ளன 'எவர்சில்வர்' என்பதும் முலாம் பூசப்பட்ட இரும்பே ஆகும். அதனால் எவர்சில்வரால் ஆன உபகரணங்களை ஆன்மீகத் தேவைகளுக்காக வீடுகளிலோ ஆலயங்களிலோ பயன்படுத்தக் கூடாது.

இதேபோல, பிளாஸ்டிக் மற்றும் செலூலொயிட் பொருட்களும் பயன்பாட்டுக்கு உதவாதவையே.

## காரியங்கள் கைகூடவும், மன அமைதி பெறவும் ஆஞ்சநேயரை வேண்டுவது ஏன்?

ஆஞ்சநேயர் மனத்தைக் கட்டுப்படுத்தியவர். ராமருக்கு தாஸானுதாஸனாக இருந்து தொண்டு செய்தவர். மனத்தையும் உடலையும் ராமருக்குத் தொண்டு செய்ய அர்ப்பணித்தவர்.

கொஞ்சம் கூட சஞ்சலம் இல்லாது புலன்களை அடக்கி வாழ்ந்தவர். அவர் துறவியாக இருந்துகொண்டு, மலையிலோ குகையிலோ அமர்ந்து தவம் செய்து மனதைக் கட்டுப்படுத்தியவரில்லை. உலகத்தோடு ஒருவராக வாழ்ந்து மனக் கட்டுப்பாட்டோடு ஜிதேந்திரியராக திகழ்ந்தார்.

அவர் சஞ்சீவி மலையைத் தூக்கியவர். அசோக வனத்தையே அழித்தவர். இலங்கையைக் கொளுத்தியவர். வாயு வெகத்தில் செல்லக் கூடியவர். இந்திரியங்களை ஜெயித்தவர். எல்லாவற்றிற்கும் மேலாக ராமதாஸனாக இருந்து, ராமருக்கே தூது போனவர். சீதாராமரின் துக்கத்தையே போக்கி மகிழ்ச்சியைக் கொடுத்தவர். அதனால்தான் காரியங் கைகூடவும் மன அமைதி வேண்டியும் ஆஞ்சநேயரை வணங்குகிறோம்.

## ஹனுமாருக்கு வெண்ணைக் காப்பு சாத்தப்படுகிறதே? இதற்கு புராணச்சான்று உண்டா?

தர்மத்தின் வழியில் சென்றால் மனிதர்கள் மட்டுமன்றி பறவைகள் மிருகங்கள் கூட நமக்கு உதவி செய்யும் என்பதை ஸ்ரீமத் ராமாயணத்திலிருந்து நாம் தெரிந்து கொள்ளலாம். கிஷ்கிந்தையைச் சேர்ந்த ஏராளமான குரங்குகள் ராமர் இலங்கைக்கு யுத்தத்துக்கு செல்லும்போது தமது உயிரையும் விடத் தயாராக ஸ்ரீராமருடன் புறப்பட்டன. யுத்தத்தில் வெற்றிவாகை சூடி ஸ்ரீசீதாராம பட்டாபிஷேகமும் நடந்தது.

வாநரர்கள் செய்த இந்த உதவியை மனதில் கொண்ட ஸ்ரீ ராமர் அடுத்த அவதாரமான கிருஷ்ணாவதாரத்தில் அந்தக் குரங்குகளுக்கு விருந்தளித்தார். ஸ்ரீ கிருஷ்ணர் கோகுலத்தில் இடையர்களின் வீட்டில் தயிர் பால் வெண்ணையைத் திருடிச் சாப்பிடும் போது அதே குரங்குகள் அங்கு வந்து ஸ்ரீ கிருஷ்ணரிடம் தமக்கும் வெண்ணை வேண்டும் என்று கேட்டு ஜன்னல் வழியாக கையை நீட்ட ஸ்ரீ கிருஷ்ணரும் குரங்குகளுக்கு வெண்ணையைத்தர அவைகளும் அதைத் தமது உடல் முழுவதும் பூசிக் கொண்டு சாப்பிட்டு ஸந்தோஷமடைந்தன என்கிறது ஸ்ரீமத் பாகவதம். இதுதான் வாநரத்துக்கும் (குரங்குக்கும்) வெண்ணைக்கும் இருக்கும் ஸம்பந்தம். அது முதல் ஸ்ரீஆஞ்சநேயருக்கு வெண்ணை மிகவும் பிடித்தமான ஆஹாரமாக ஆயிற்றாம். ஆகவேதான் ஆஞ்சநேயருக்கு வெண்ணைக் காப்பு செய்யப்படுகிறது.

## விநாயகருக்கு அறுகம்புல் உகந்ததாகக் கருதப்படுவது ஏன்?

ஒரு இடத்தில் முளைத்து கொடி போல் நீண்டு, வேறு இடங்களில் கிளைத்துக் கொண்டே போவது அறுகு. 'அறுகு போல் வேரூன்றி' என்ற உவமையும் பழமொழிகளில் வழங்கப்படுகிறது.

'மூலாதார மூர்த்தி' என்ற பெயர் விநாயகருக்கு உண்டு. குண்டலினியில் வசிப்பவர் அவர். அவர் குண்டலினியாகிய அறுகை சுவாதிட்டாணம் முதலிய மற்ற ஐந்து இடங்களில் பொருந்தச் செய்து பல நுனிகளாகத் தளைக்கச் செய்பவர். அதனால் அறுகம்புல் அவருக்குப் பிடித்தமானது.

உயிர் உடலை விட்டுப் பிரிந்ததும் வேறு உடலை நாடுகிறது. புல் நுனியில் பொருந்தி, பசு வயிற்றில் புகுந்து, எருவின் வழியாகப் பயிர்களோடு பரவி பின்னர் மானிட கர்ப்பத்தில் தங்குவதாக உபநிடதம் கூறுகிறது.

இப்படிப் புல் நுனிதான் ஒவ்வொரு உயிர்க்கும் முதல்படியாக அமைகிறது. விநாயகப் பெருமான் முழுமுதற் கடவுள். அவருக்கு அர்ச்சனைக்கு உரியதாக அருகம்புல் அமைகிறது.

## துளசியின் சிறப்பு என்ன?

துளஸி மகாவிஷ்ணுவிற்கு மிகவும் உகந்தது. மகத்தான மருத்துவக் குணங்கள் நிறைந்தது. விஷ்ணு ஆலயங்களில் துளசி அர்ச்சனையும் துளசித்தீர்த்தமும் இன்றியமையாதன.

துளசியின் பெருமையை விளக்கும் கதையாவது -

'பிருந்தை ஜலந்தராசுரனின் மனைவி. ஜலந்தராசுரன் கொடியவன். ஆனால் பிருந்தையோ பதிபக்தை. பிருந்தையின் பதிவிரதா பக்தியினால் கட்டுண்டு, ஜலந்தராசுரனை அழிக்கத் தயங்கினார் சிவபெருமான்.

ஸ்ரீ விஷ்ணு, ஜலந்தராசுரன் போன்ற வடிவில் அவனுடைய படுக்கையில் படுத்திருக்க, பிருந்தை தன் கணவன் தன் முன்னே தான் இருக்கிறான் என்ற அமைதியில் இருக்க அந்த சமயத்தில் சிவபெருமான் ஜலந்தராசுரனைக் கொன்றார்.



தலை துண்டிக்கப்பட்டு அசுரனின் உடல் வந்து விழ ஸ்ரீ விஷ்ணுவின் மாய வேடத்தைப் புரிந்துகொண்ட பிருந்தை, உடனே தன்னை மாய்த்துக் கொண்டாள். தன் உடலை எரித்துக் கொண்டு சாம்பலானாள்.

அவளுடைய பதிவிரதா தர்மத்தைக் கண்டு மகிழ்ந்த ஸ்ரீ விஷ்ணு அந்தச் சாம்பலுக்குத் தன் ஸ்பரிசத்தைத் தர, அந்த சாம்பலிலிருந்து துளசிச் செடி உண்டானது. துளசிச் செடியை சிரத்தையாக வளர்த்து, பூஜித்து வழிபடுவோர்களுக்கு இம்மை மறுமை பலன்கள் அனைத்தும் கிட்டும் என்ற வரம் அளித்து, துளசியான பிருந்தையைத் தன் சரணத்தில் சேர்த்து கொண்டார்.

அதனால் தான் ஸ்ரீ கிருஷ்ணருக்கு, துளசி நிறைந்த பிருந்தாவனத்தில் மிகுந்த பிரியம் உண்டாயிற்று. பக்தர்கள், ஸ்ரீ கிருஷ்ணர் மிகவும் உகக்கும் துளசி இலைகளை எடைக்கு எடை துலாபாரம் தருவதாகக்கூட வேண்டிக் கொள்வர்.

பகவான் அளித்த வரத்தின் படி, துளசி தன்னை வேண்டுவோருக்கு இம்மை, மறுமைப் பலன்கள் தரவல்லவள். நல்ல கணவனையும், தீர்க்கசுமங்கலித்துவமும் வேண்டி, பெண்கள் துளசியை பூஜித்து வழிபடுவர். தெய்வமாக, விஷ்ணுவிற்கு உகந்த தளமாக, பிணி தீர்க்கும் மருந்தாகத் தம்மை நாடுபவரைக் காப்பாற்றும் வல்லமையும் சிறப்பும் உடையது துளசி.

## அரச மரத்தை சுற்றுவதால் பலன் கிடைப்பது எப்படி?

ஹிந்துமதத்தில் அரசமரத்தைத் தெய்வமாகக் கருதுகின்றனர். அக்னி பகவான் அரசமரத்தில் ஆவிர்பத்து இருந்ததால், அதற்கு 'அஸ்வத்தம்' என்ற பெயரும் உண்டு.

அரசமரம் பிரஹ்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும் மூர்த்திகளின் வடிவம். அரசமரத்தைக் காலையில் வலம் வருவோர்க்கு புத்திர பாக்கியம் கிட்டும். பாபங்கள் நீங்கி சொர்க்கத்தை அடைவார்கள் எனச் சொல்லப்படுகிறது.

ஆக்நேய புராணத்தில் கூறப்படும் கதை இது.

ஒருபிராமணன், கணட இடங்களில் அலைந்து, பொருள் தேடித்தன் வயிற்றுக்கும் சரியாக சாப்பிடாமல் மற்றவர்க்கும் கொடுக்காமல் சேமித்து வைத்தான். ஒரு நாள் விளையாட்டாக அரசமரம் ஒன்றை ஆற்றங்கரையில் நட்டான். நாளடைவில் அது வளர்ந்து பெரிய மரமானது. அந்த பிராமணன் வயதாகி இறந்து போனான். பரலோகம் செல்லும் வழியில் அவனை இரண்டு பேர் மறித்து, "நாங்கள் தைத்துக் கொடுத்த செருப்பிற்கான கூலியைக் கொடுக்காமலேயே, நீங்கள் எப்படிப் பரலோகம் செல்ல முடியும்? எங்கள் கூலியைக் கொடுங்கள்' என்றனர்.

பிராமணன் என்னை செய்வதென்று தெரியாமல் விழித்தான். அப்போது ஒரு பிரம்மச்சாரி தோன்றி, அந்தக் கூலியைத்தான் கொடுப்பதாகக் கூறி, பிராமணனை விட்டு விடும்படிக் கேட்டுக் கொண்டார். உடனே அந்த இருவரும் தங்களுக்குக் கூலியாகக் காசு பணம் வேண்டாம். செருப்பு தைக்கத் தோல் தான் வேண்டும் என்றனர். அந்த பிரம்மச்சாரி உடனே தன் தொடையில் இருந்து தோலை அறுத்துக் கொடுக்க அவர்கள் அந்த பிராமணனை விட்டுச் சென்றனர். நடந்ததைக் கண்டு

ஆச்சரியமடைந்த அந்த பிராமணன் சித்ர குப்தரிடம் இதைச் சொல்ல, சித்ர குப்தர் அவன் நட்ட அரசமரம்தான் பிரம்மச்சாரி உருவில் வந்து அவனைக் காத்தது என்று கூறினார். உடன் அந்த பிராமணன் அனுமதி பெற்று பூமிக்கு வந்து அந்த அரச மரத்தைப் பார்க்க அந்த மரத்தின் பட்டைகள் உரிந்து போயிருந்தன. தான் செய்த சிறிய தர்மம் தன்னைக் காத்ததைக் கண்டு மனம் நெகிழ்ந்தான். சொர்க்கம் சென்றடைந்தான்.

அரசங்கன்றை நட்ட பலன், அவரை இறந்த பின்னும் காத்து சொர்க்கத்திற்கு அழைத்துச் சென்றது. அரச மரத்தை நாட்டிய பலன் வாழ்நாளில் மட்டுமல்ல, நம் வாழ்வுக்குப் பின்னும் தொடரும் என்பது உண்மை.

அரச மரம் நடும் இடத்தில் வேம்பையும் நட்டு வைத்து, இரண்டு மரங்களையும் சுற்றி வருவார்கள். அரச மரத்தின் மகரந்தத்தை முகர்ந்தால் உடலிலுள்ள சுரப்பிகள் தூண்டப்படும். பெண்களின் சூலகம் தூண்டப்பட்டு சுரப்பு நீர் சமப்படுத்தப்படும். அதனால்தான் பெண்களுக்கு மகப்பேறு கிட்டுகிறது.

மேலும் அரச மரமும் வேப்ப மரமும் தரும் காற்று உடலுக்கு ஆரோக்கியமானது. இந்த மரங்கள் அதிக அளவில் நல்ல பிராணவாயுவை வெளியிடுகின்றன. விஞ்ஞான ஆய்வின்படி ஒரு மரம் ஒரு நாளுக்கு இரண்டாயிரத்து நானூறு கிலோ பிராண வாயுவை வெளியிடுகிறது.

அரச மரத்தின் சமித்துக்களை ஹோமத்தில் இட்டு, அந்தப் புகை வீட்டில் பரவினால் பல நன்மைகள் ஏற்படும். ஸ்ரீ கிருஷ்ணர், பகவத் கீதையில் ‘மரங்களில் நான் அரசமரமாய் இருக்கிறேன்‘ என்று கூறியுள்ளார்.

## வில்வத்தின் சிறப்பு என்ன?

வில்வம் சிவனுக்கு உகந்தது. மருத்துவ குணங்கள் மிக்கது. வில்வ மரத்தில் லக்ஷ்மி வாசம் செய்கிறாள் என்றும் கூறப்படுகிறது.

ஒரு வில்வ இலை, லட்சம் ஸ்வர்ண புஷ்பங்களுக்குச் சமம். ஒரு வில்வ இலையை சிவனுக்கு அர்ப்பணம் செய்தால், சகல பாவங்களும் நீங்கி க்ஷேமம் உண்டாகும்.

**த்ரிதளம் த்ரிகுணாகாரம் த்ரிநேத்ரம் ச த்ரியாயுதம்**
**த்ரிஜன்ம பாப ஸம்ஹாரம் ஏக பில்வம் சிவார்ப்பணம்**

என்னும் இந்த ஸ்லோகம் வில்வத்தால் செய்யப்படும் சிவபூஜையின் அருமையைச் சொல்கிறது.

## பூக்களால் அர்ச்சனை செய்யும் போது பூக்கள் மேல்நோக்கி இருக்குமாறு போட வேண்டுமா? பூக்கள் தரையை நோக்கி இருக்குமாறு போட வேண்டுமா?

புஷ்பங்களால் அர்ச்சனைகள் செய்யும் போது செடிகளில் பூக்கள் எவ்வாறு உண்டாகின்றனவோ, அவ்வாறே இருக்குமாறு போட வேண்டும்.

புஷ்பம் பத்ரம் பலம் சைவ யதோத் பன்னம் ததார்ப்பயேத்

புஷ்பம், பத்ரம் (இலை), பழம் முதலிய வைகளை அவைகள் செடி மற்றும் மரங்களில் எப்படி உண்டாகின்றனவோ, அப்படியே தெய்வங்களுக்கு ஸமர்ப்பிக்க வேண்டும். ஆகவே புஷ்பங்களாலும், இலைகளாலும் அர்ச்சனை செய்யும்போது அவை மேல் திசையை நோக்கி இருக்கும்படியே தான் அர்ச்சனை செய்யவேண்டும்.

ஆனால் வில்வ இலையால் அர்ச்சனை செய்யும் போது மட்டும் வில்வஇலை கீழ்திசையை (தரையை) நோக்கி (கவிழ்ந்து) இருக்குமாறு அர்ச்சனை செய்ய வேண்டும்.

**பூஜையின் முடிவில் மந்திர புஷ்பம் போடும்போது இரண்டு கைகளாலும் புஷ்பங்களை போடலாமா? இடது கை சேராமல் வலது கையால் மட்டும் புஷ்பங்களை போட வேண்டுமா?**

பூஜையின் முடிவில் தனக்குத் தெரிந்த மந்திரங் களையோ, ஸ்லோகங்களையோ சொல்லி இரண்டு கைகளிலும் புஷ்பங்களை எடுத்து, பயபக்தியுடன் தெய்வத்தின் திருப்பாதத் தில் புஷ்பங்களைப் போடுவதுதான் மந்திரபுஷ்பம் அல்லது புஷ்பாஞ்ஜலி என்று கூறப்படுகிறது. இதுவும் தெய்வத்துக்குச் செய்யும் ஒருவித பூஜை உபசாரம்தான்.

ஸம்ச்லிஷ்ட ஹஸ்தத்வய மத்ய வர்த்தீ
ப்ரஸூந புஞ்ஜ: குஸுமாஞ்சலி: ஸ்யாத்

ஒன்று சேர்ந்த இரண்டு கைகளின் நடுவில் உள்ள புஷ்பங்களின் கூட்டமே புஷ்பாஞ்ஜலி எனப்படும். ஆகவே இரண்டு கைகளாலும்தான் புஷ்பாஞ்சலியை (புஷ்பம் போடுவதை) செய்ய வேண்டும் இதில் இடதுகை சேருகிறதே என்று கவலைப்பட வேண்டாம், அது தவறில்லை.

**பூஜையில் எந்தெந்த ஸமயத்தில் மணியை அடிக்க வேண்டும்?**

எந்த ஒரு பூஜையின் துவக்கத்திலும் தெய்வங்களை வரவேற்பதற்காக கட்டாயம் மணியால் ஓசைகள் எழுப்பப்பட வேண்டும். இதைத்தவிர தெய்வங்களுக்குச் செய்யப்படும் ஒரு சில உபசாரங்களின் போதும் மணியடித்து சப்தம் எழுப்பப்பட வேண்டும். அதாவது

ஸ்நாநே தூபே ததா தீபே நைவேத்யே பூஷணே ததா
கண்டா நாதம் ப்ரகுர்வீத ததாநீராஜநேபிச
(பரசு - கல்ப - ஸூ)

தெய்வங்களுக்கு அபிஷேகம் செய்யும் ஸமயத்திலும்,
தூபம் (சாம்பிராணி) காண்பிக்கும் நேரத்திலும்,
தீபங்களை ஏற்றிக் காண்பிக்கும் போதும்,

பழங்கள், அன்னம் முதலான பொருட்களை நிவேதனம் செய்யும்போதும்,

ஆபரணங்கள் அணிவித்து அலங்காரம் செய்யும் நேரத்திலும்,
நீராஜனம் எனப்படும் கற்பூர ஹாரத்தி காண்பிக்கப்படும் ஸமயத்திலும்,

கட்டாயம் மணியடித்து சப்தம் (ஓசை) எழுப்பப்பட வேண்டும் என்கிறது பரசுராம கல்பஸூத்ரம்,

## கடையில் முதல்நாள் வாங்கிய புஷ்பங்களால் மறுநாளோ அல்லது அதற்கு மறுநாளோ அர்ச்சனைகள் செய்யலாமா?

செடியிலிருந்து பறிக்கப்பட்ட புஷ்பங்களுக்கு, ஓர் இரவு அல்லது ஓர் பகல் தாண்டி விட்டால் யாதயாமம் (பழமை) என்னும் தோஷம் ஏற்படுகிறது. இதனால் புஷ்பங்களின் தூய்மையும், வாஸனையும் மாறிவிடும் என்பதால் செடியிலிருந்து அவ்வவ்போது புஷ்பங்களை தனது கைகளால் பறித்து உடனுக்குடன் பூஜைகள் செய்வது மிக உத்தமம்.

இது இயலாவிட்டால் அன்று பறிக்கப்பட்ட புஷ்பங்களை அன்றைய தினமேயாவது பூஜை செய்துவிட வேண்டும். புஷ்பங்களை கடைகளில் வாங்கி அதை மறுநாள் வரை (ப்ரிட்ஜில்) பாதுகாத்து, அவற்றால் பூஜைகள் செய்வது அர்ச்சனையின் முழு பலனையும் தராது என்பது பொதுவிதி. ஆனால்,

பங்கஜம் பஞ்சராத்ரம் ஸம்யாத் தசராத்ரம் து வில்வகம்
ஏகாதசாஹம் துளஸீம் நைவ பர்யுஷிதா பவேத்

ஜலத்தில் தோன்றும் தாமரை பூக்களை ஐந்து நாட்கள் வரை பாதுகாப்பாக வைத்திருந்து அவற்றால் பூஜைகள் அர்ச்சனைகள் செய்யலாம்.

வில்வ மரத்திலிருந்து முறையாக சேகரித்த வில்வத்தை பத்து நாட்கள் வரை வைத்திருந்து பூஜைகள் செய்யலாம்.

முறையாக இதழாக பறிக்கப்பட்ட துளஸியை பதினொரு நாட்கள் வரை வைத்திருந்து பூஜிக்கலாம்.

ஆகவே மேலே குறிப்பிட்ட நாட்கள் வரை தாமரை, பில்வம், துளஸி ஆகியவைகளுக்கு பர்யுஷிதம் (பழமை) என்னும் தோஷம் கிடையாது.

மேலும் பூக்களை பறித்து சேகரித்து அதை மாலையாக கட்டி விற்கும் பூ வியாபாரிக்கு மாலாகாரர் எனப்பெயர், இந்த பூ வியாபாரியின் இருப்பிடத்தில் சேகரித்து வைக்கப்படும் பூக்களுக்கும் யாதயாம (பழமை) தோஷம் என்பது கிடையாது என்கிறது கீழ்கண்ட ப்ரமாணச்லோகம்.

ந பர்யுஷித தோஷோஸ்தி மாலாகார க்ருஹே(அ)பி ச

ஆகவே அன்றன்று செடியிலிருந்து புஷ்பங்களை பறித்து தெய்வங்களுக்கு பூஜை செய்ய இயலாவிட்டாலும், அன்றன்றாவது கடையில் பூக்களை வாங்கி பூஜை செய்வதே சிறந்தது.

## விரதங்களை அனுஷ்டிப்போர் தலை தோயவேண்டும் என்பது அவசியமா? குளித்துவிட்டு அனுஷ்டிக்க முடியாதா?

ஸ்நானம் என்றாலே தலைதோய்தல் தான். ஆலயம் செல்லுதல், வழிபாடு செய்தல், வீட்டில் பூஜைகள் முதலியவற்றில் ஈடுபடுதல் என எதனைச் செய்வதானாலும் நதிகள், குளங்களில் தலை முழுகி முழுமையாக நம்மைத் தூய்மை செய்தல் மிக அவசியம். நதி, குளம் இல்லாத இடங்களில் கிணற்று நீரை அல்லது குழாய் நீரை தலையில் ஊற்றி முழுமையாக உடல்முழுதும் நனையத் தோய்வது அவசியம். ஆனால் எண்ணெய் வைத்து முழுகுதல் ஆகாது. (சனி வார விரதத்திற்கும், பெண்கள் தீட்டு கழிவதற்கும் மட்டும் எண்ணெய் முழுக்கு அவசியம்)

அவ்வாறு ஸ்நானம் செய்வது மட்டுமன்றி, தோய்த்துலர்ந்த ஆடைகளை அணிந்துகொள்ள வேண்டும். அவ்வுடுப்புக்கள் தோய்க்காத ஏனைய உடுப்புக்களுடன் அளையாதவையாக இருக்கவும் வேண்டும். மடி வஸ்திரம் என இவற்றைக் குறிப்பிடுவர். தெய்வ சக்தி வேண்டுமெனில் ஆசாரம் மிக அவசியம். ஆசாரம் என்பது தூய்மை, புனிதம், ஒழுக்கம் என்பவையே.

நோயாளர்கள், இயலாதவர்கள் மட்டும் தலைதோய முடியாவிட்டால் உடலைக் கழுவிக்கொண்டு அல்லது உடல் முழுதும் விபூதி பூசிக்கொண்டு (பஸ்ம ஸ்நானம்) வழிபாடுகளில் ஈடுபட சாஸ்திரங்கள் அனுமதிக்கின்றன.

## சோமவார விரதத்திற்கு விளக்கு வைத்துச் சாப்பிடுதல் என்பது விதியாகச் சொல்கிறார்களே, அதன் விளக்கம் என்ன?

பகல் முழுவதும் விரதமாக இருந்து இரவுப் பொழுது வந்ததும் அந்தி நேர வழிபாட்டை முடித்துக்கொண்டு அதன்பின் சாப்பிடவேண்டும் என்பது சோமவார விரதத்தின் நியதி. அந்தி நேரம் விளக்கு வைக்கப்படும். எனவே அந்தி நேரம் என்பதைக் குறிக்க விளக்கு வைத்துச் சாப்பிடுதல் என்ற சொற்பிரயோகம் வழக்கில் வந்துவிட்டது. இதனைப் புரிந்துகொள்ளாத சிலர், பசி தாங்க முடியாமல் பொழுது சாயுமுன் விளக்கு வைத்துச் சாப்பிடுவதையோ அல்லது சாப்பிடும் இடத்தில் விளக்கு ஒன்றை ஏற்றி வைத்துவிட்டுச் சாப்பிடுவதையோ வழக்கமாகக் கொண்டால் அதனை எவ்வாறு விளக்குவது?

## கந்தஷஷ்டி போன்ற விரதங்களை அனுஷ்டிக்கின்ற நாட்களில் தீட்டு அல்லது துடக்கு வந்நதால் என்ன செய்யவேண்டும்?

அந்த வருடம் விரதம் பங்கமாகிவிட்டு என்றே கருதவேண்டும். அடுத்த வருடம் மீண்டும் விரதம் அனுட்டிக்கலாம். மொத்த எண்ணிக்கையில் ஒரு எண்ணிக்கை குறைந்துவிட்டதால் மேலதிகமாக இன்னொரு வருடம் அனுட்டிக்கவேண்டும்.

## பாரணை எவ்வாறு செய்யவேண்டும்?

உபவாச விரதங்களுக்கு மறுநாள் பாரணைபண்ணுதல் அவசியம். விரதநாளின் மறுநாள் அதிகாலை துயில் நீத்து ஸ்நானம் செய்து நித்திய கர்மானுஷ்டானங்கள்

செய்து ஆலயம் சென்று வழிபட்டு வந்து காலை எட்டரை மணிக்குமுன் அடியார்கள் உறவினர்களுடன் பாரணை செய்தல் நன்று.

உரிய நேரத்தில் பாரணை பண்ணுவதற்குத் தடைகள் ஏற்பட்டால் பாரணைக்காகச் சமைத்த உணவைச் சாமிப்படத்திற்கு முன் படைத்து அதனை உரிய நேரத்தில் முகர்ந்து விடுதல் போதுமானது. பின்னர் இயன்ற பொழுதில் சாப்பிடலாம்.

சமையல் தயாராவதிலும் தாமதம் ஏற்படின் சாமிப்படத்திற்கு முன் ஒருசிறு பாத்திரத்தில் நீரெடுத்து வைத்து அதில் துளசியை இரண்டு அடியிலைகளுடன் கூடிய கதிராக எடுத்து அந்த நீரில் இட்டுப் பூஜை வழிபாடு முடிந்ததும் அந்தநீரை உரிய காலத்தில் அருந்திப் பாரணையை நிறைவு செய்யலாம். பின்னர் வசதியானபோது சாப்பிடலாம்.

### ஒரு விரதத்தின் முடிவில் அதாவது பாரணை நாளில் இன்னொரு விரதம் வந்தால் என்ன செய்யவேண்டும்?

ஒரு விரதத்தின் முடிவில் அதாவது பாரணை நாளில் இன்னொரு விரதம் வந்தால் முதலில் கூறிய முறையையே கடைப்பிடிக்க வேண்டுமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. இரண்டாவது விரதமும் உபவாசமாக இருந்தால் முதலாவது விரதத்தின் பாரணையைத் துளசிதீர்த்தம் அருந்தி நிறைவேற்றி, இரண்டாவது விரதத்தை முறைப்படி உபவாசமாக அநுஷ்டித்து அதற்கு மறுநாள் பாரணை செய்ய வேண்டும்.

பெரும்பாலும் கேதாரகௌரி நோன்பின் மறுநாள் ஸ்கந்த ஷஷ்டி விரதாரம்பம் அல்லது ஸ்கந்தஷஷ்டி விரதமுடிவில் அதாவது பாரணையன்று சோமவாரவிரதம் வருவதுண்டு. இந்த சந்தர்ப்பத்தில் மேற்கூறிய விதிமுறையே அநுசரிக்கப்படவேண்டும்.

சிலர் உதயத்திற்குமுன் முதல் விரதத் திற்குரிய பாரணையை முடித்து விடுவதுண்டு. ஆனால் சூரியோதயத்திறகு முன் பாரனை செய்தல் விதியன்று.

உபவாசமாக இருப்பவர்கள் விரதத்திற்கு முதல் நாள் ஒரு பொழுது உணவுடன் விரதமிருந்து உபவாசத்துக்கு மறுநாள் காலை எட்டரை மணிக்குள் பாரணை செய்ய வேண்டும். பாரணையிலன்று மறுபடி உணவு கொள்வதும் தகாது. இரவில் பால்பழம், பலகாரம் என்பன உண்ணலாம். இது உபவாச விரதங்கள் யாவற்றுக்கும் பொதுவிதி.

### விரத உத்யாபனம் எவ்வாறு செய்யவேண்டும்?

குறிப்பிட்ட கால எல்லை முடிந்ததும் அதாவது தாம் கைக்கொள்வதாகக் கருதிய வருடம் நிறைவு பெற்றதும் முறைப்படி விரதத்தை முடித்து. விரதபலனைத் தருமாறு வேண்டுதல் செய்தலே விரதோத்யாபனமாகும்.

வீட்டிலே பூஜைவழிபாடுகள் செய்யும்போது தங்கம், வெள்ளி, செம்பு இவற்றில் ஏதாவதொரு உலோகத்தில் சுவாமி திருவுருவத்தைச் செய்து வைத்து ஆவாகனம் செய்து பூஜை நடத்த வேண்டும். அன்று உபவாசமிருந்து மறுநாட்காலை

புனர்பூஜையின் பின் (மீண்டும் பூஜை செய்தல்) உத்வாசனம் செய்து அர்ச்சகருக்குரிய தக்ஷிணை தாம்பூலங்களுடன் உலோகப் பிரதிமையையும், கும்பப்பொருட்களையும் வேட்டி சால்வை அரிசி, காய்கறி முதலிய தானங்களையும் வழங்கி இதன்பின் மாஹேஸ்வரபூஜை செய்து (சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்தல்) தாமும் காலை எட்டரை மணிக்கு முன்னதாகப் பாரணை செய்து விரத பூர்த்தி செய்யலாம்.

விரதபூர்த்தி காலத்தில் சாஸ்திரத்தில் கூறியபடி விரதத்திற்குரிய பலன்கள் எனக்குச் சித்திக்க வேண்டுமெனக் கருதி இந்தப் பூஜையைச் செய்கிறேன். என்று சங்கல்பத்துடன் ஆரம்பித்து முடிவில் அர்ச்சகருக்குரிய தானம் வழங்கும் போது. பிரதிமை, வஸ்திரங்கள், கும்பப்பொருட்கள் முதலிய தானங்களை மகிழ்ச்சியுடன் பிராம்மணோத்தமருக்கு வழங்குகிறேன். இவ்விரதத்திற்குச் சொல்லப்பட்ட பலன்கள் எனக்கு உண்டாகட்டும். என்று பிரார்த்திக்க வேண்டும்.

பூஜை முடிவில் கும்பத்தால் யஜமானனுக்கு அபிஷேகம் செய்வித்தலும் சொல்லப்பட்டிருக்கிறது. உலோகப் பிரதிமை செய்வதற்கு வசதியில்லாதவர்கள் களிமண்ணால் செய்து வழிபட்டபின் அதனை நீர்நிலையில் விட்டு விடலாம்.

விரதோத்யாபன காலத்தில் இவ்வாறு வீட்டில் பூஜைகள் செய்ய வசதியில்லாதவர்கள் ஆலயத்துக்குச் சென்று அபிஷேகம், பூஜை, அர்ச்சனை முதலியன செய்வித்தபின் - அல்லது குறைந்த பட்சம் விரதோத்யாபனத்துக்குரிய சங்கல்பத்துடன் சஹஸ்ர நாமார்ச்சனையாவது செய்து அர்ச்சகருக்குரிய தாம்பூல தக்ஷிணைகள் அரிசி, காய்கறி முதலிய தானங்கள் வழங்கி முன்கூறியவாறு விரதபலனைத் தருமாறு பிரார்த்தித்து விரத பூர்த்தி செய்யலாம்.

## திங்கட்கிழமையும் அமாவாஸையும் ஒன்று சேரும் நாளுக்கு என்ன விசேஷம்?

திங்கட்கிழமையன்று அமாவாஸை சேர்ந்தால் அந்த நாளுக்கு ஸோமவதீ அமாவாஸ்யா எனப்பெயர். இந்த நாள் புண்யகாலம் எனப்படும் அதாவது அன்று செய்யப்படும் ஸ்நானம் பாராயணம் பூஜை, ஜபம், ஹோமம், தானம் போன்றவை ஒன்றுக்கு ஆயிரம் மடங்கு அதிகமான பலனைத்தரும், இதைப்போன்றே மேலும் சில நாட்கள் புண்யகால நாட்களாகும் அதாவது

**அமாவாஸ்யா து ஸோமேந ஸப்தமீ பா[4]நுநா ஸஹ**
**சதுர்த்தீ[2] பூ[4]மி புத்ரேண ஸோமபுத்ரேண சாஷ்டமீ**

என்பதாக அமாவாஸ்யையும் திங்கட்கிழமையும் ஒன்றுசேரும் நாள் ஸோமவதீ அமாவாஸ்யா என்றும்,

ஸப்தமியும் ஞாயிற்றுக் கிழமையும் ஒன்றுசேரும் நாள் பானுஸப்தமீ என்றும்,

சதுர்த்தி செவ்வாய் கிழமையும் ஒன்றுசேரும் நாள் அங்காரகசதுர்த்ததீ என்றும்

அஷ்டமியும் புதன்கிழமையும் ஒன்றுசேரும்நாள் புதாஷ்டமீ என்றும் கூறப்படுகிறது இந்த நாட்கள் அனைத்துமே புண்யகால நாட்களாகும்.

# நவராத்திரி காலத்தில் வரும் புரட்டாதிச் சனி விரதத்தில் எள் எண்ணெய் எரித்து வழிபடலாமா?

தாராளமாக எள் எண்ணெய் எரித்து வழிபடலாம். அதனால் எந்தத் தவறும் இல்லை.

நவராத்திரி விரதம் கடினமான விதிமுறைகள் இல்லாத இலகுவான விரதம். சிறுவர்கள்கூட அனுட்டிப்பார்கள். குளித்தல், தோய்த்துலர்ந்த ஆடை அணிதல், சிவ சின்னங்களை அணிதல், அனுட்டானம் பார்த்தல், ஆலயம் சென்று வழிபடுதல், இயன்றவரை துதிப்பாடல்கள் பாடி வணங்குதல், அம்பிகையின் சிந்தனையோடு தியானம் அல்லது செபத்தில் ஈடுபடுதல், விரத நாளில் மட்டுமல்லாமல் முதல் நாளும் மற்ற நாளும் சுத்த சைவ போசனமாக இருத்தல், ஒரு நேரமாவது உணவை விடுத்து விரதமாக இருத்தல் இவைதான் பொதுவான விரத நியதிகள்.

சனி வார விரதத்திற்கு இந்த நியதிகளுடன் தலைக்கு நல்லெண்ணெய் தேய்த்து முழுகுதல் ஒரு முக்கிய விதிமுறையாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் ஏனைய விரதங்களுக்குத் தலை குளிக்கவேண்டுமென்பது (தோய்வது) முக்கியமல்லாமல் எண்ணெய் தேய்த்து முழுகுதல் ஆகாது என்பதும் நியதி.

இதனால் புரட்டாதிச் சனியும் நவராத்திரியும் சேரும்போது நமக்குள்ள ஒரே பிரச்சினை, அன்று சாதாரணமாகத் தோய்வதா, முழுகுவதா என்பதே ஆகும். அறிவு ரீதியாகச் சிந்தித்தால் இரண்டு விரதமும் அனுட்டிக்கும் ஒருவர் ஒன்றையும் பாதிக்காமல் பொது விதியாக அன்று எண்ணெய் முழுக்கைத் தவிர்த்தல் உசிதமானது. ஏனெனில் செய் எனக் கூறிய ஒன்றைச் செய்யாமல் விடும் குற்றத்தைவிடச் செய்யாதே எனக் கூறிய ஒன்றைச் செய்யும் குற்றம் பெரிது என்பது தெளிவு.

அடுத்தது எள் எண்ணெய் எரித்தல் பற்றியது. ஆராய வேண்டிய எத்தனையோ சிக்கல்களை விட்டு அவசியமற்ற ஒன்றைப் போட்டுக் குழப்புவது நம்மவர்க்கு விருப்பமான ஒன்று. விரத காலத்தில் செய்யத் தகாதவை எனப் பல விதிமுறைகள் கூறுவர். பொய்பேசக்கூடாது. வீண்வார்த்தை பேசக் கூடாது. மாமிசம் உண்ணக்கூடாது. (இவையெல்லாம் சைவ சமயத்தவர்க்கு நாளாந்த நடைமுறைகள்தான் எனினும் விரத காலத்திலாவது கடைப்பிடிக்கட்டும் என இவற்றை வலியுறுத்துவர்) இதேபோல எள் எண்ணெய் எரிக்கக் கூடாது என்று ஏன் கூற வேண்டும்? எங்கே அந்த விதிமுறை உண்டு? யார் கூறினார்கள்? எள் எண்ணெய் எரித்தல் விரத நியதியுடன் இணைந்த ஒன்றல்ல. அது சனி தோஷத்துக்குரிய ஒரு பரிகாரம். அதனை எப்போது வேண்டுமானாலும் செய்யலாம். சனிவாரத்தில் செய்தால் விசேடம். புரட்டாதிச் சனியில் செய்தால் இன்னும் விசேடம். எல்லாரும் கட்டாயம் எள் எண்ணெய் எரிக்கவேண்டும் என்பதும் இல்லை. புரட்டாதியில் வரும் எல்லாச் சனிக்கிழமையம் எரிக்கவேண்டும் என்பதும் இல்லை. தத்தமது தோஷத்திற்கேற்ப வேண்டியவர்கள் வேண்டிய அளவு அதனைச் செய்துகொள்ளலாம்.

நவராத்திரி விரதத்திற்கு அது இடையூறாக இருக்கும் என நினைப்பவர்கள் எள்ளெண்ணெய் எரிப்பதைத் தவிர்த்துக்கொள்ளலாம். அதனால் சனிபகவான் கோபித்துக் கொள்ளமாட்டார். பயத்தின் காரணமாக ஒன்றைச் செய்வதில் பயனில்லை. ஈடுபாட்டுடன் செய்யவேண்டும். இரண்டிலும் ஈடுபாடு உடையவர்கள் இரண்டையும் செய்யலாம். ஒன்றை ஒன்று பாதிக்காது.

இவ்விடயம் சம்பந்தமாகத் தெளிவான விளக்கம் ஒன்றைத் தரவிரும்புகிறேன். மிக நீண்ட காலமாக இத்தகைய கேள்விகள் இருந்து வருகின்றன. நமது மதம் வளைந்து கொடுக்கும் இயல்புடையது என்பதால் எல்லோரும் மனம்போனபடி விளக்கங்கள் கொடுக்கின்றார்கள். விதிகளை மீறுவதும் புதிய விதிகளை அமைப்பதும் மிகச் சாதாரணமாக நடைபெறுகிறது.

தெளிவாக ஒன்றைப் புரிந்துகொள்ளவேண்டும். ஆகம விதிமுறைகள், மரபு முறைகளை இயலுமானால் அதற்கான மூல நூல்களையோ வழிநூல்களையோ பார்த்துத் தெரிந்துகொள்ள முயலவேண்டும். அவற்றை முடிந்த அளவில் பின்பற்ற வேண்டும். இயலாத இடத்தில் படித்தவர்களிடத்தில் கேட்டு நன்கு விளங்கி அவற்றைப் பின்பற்ற வேண்டும்.

மற்றவர்கள் கேட்கும் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டிய தேவை ஒருவருக்கு வரும்போது தமது பதிலுக்குச் சரியான ஆதாரமோ அல்லது அறிவார்ந்த விளக்கமோ கொடுக்க முடிந்தால் மட்டும் பதில் சொல்ல வேண்டும். இல்லையேல் தெரியாது எனக் கூறிவிடுவது யாவருக்கும் நல்லது.

இன்று நமது சமயத்தில் தோஷ பரிகாரங்களுக்கான வழிபாட்டு முறைகள் பல புதிது புதிதாக வருகின்றன. அவற்றில் பல ஏற்கெனவே சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருந்து துறை சார்ந்த அறிஞர்களால் இப்போது கண்டறிந்து கையாளப்படுபவை. அவற்றைக் கைக்கொள்வதில் தவறில்லை. வேறுசில, அத் துறை சார்ந்தவர்களின் யுக்திப் பிரகாரம் புதிதாக யூகித்துச் சொல்லப்படுப்வை. அவற்றுக்கு அறிவார்ந்த விளக்கம் கொடுக்கமுடிந்தால் மட்டும்தான் கைக்கொள்ளவேண்டும். யுக்தியான செயற்பாடுகள் சுருதிப் பிரமாணத்துக்கு மாறுபடாமல் இருக்கவும் வேண்டும்.

விரத வழிபாடுகள் பல ஒன்றுக்குள் ஒன்று கலந்து வருவது தவிர்க்க முடியாதது. ஒரேகடவுளை நாம் பலவிதமாக வழிபடுகிறோம் என்பதையும் அவற்றுக்கிடையே பேதங்கள் இருக்கலாகாது என்பதையும் புரிந்துகொள்ளவேண்டும். விநாயகருக்குச் சிறப்பு வழிபாடு நடத்தும்போது முருகன் கோபிப்பாரென்றோ முருகனுக்குச் சிறப்பு வழிபாடு நடத்தும்போது விநாயகர் கோபிப்பாரென்றொ நினைப்பது மடமை.

விநாயகருடைய விரத வழிபாட்டு நாளில் ஏனைய தெய்வங்களைவிட அவருக்கு முக்கியத்துவம் உண்டு என்பதையும் அதுபோல முருகனுடைய விரத வழிபாட்டு நாளில் முருகனுக்கு முக்கியத்துவம் உண்டு என்பதையும் தெரிந்துகொள்ளும் அதே நேரத்தில் விநாயகருடைய சிறப்பு வழிபாட்டு நாளில் முருகனை வழிபடக் கூடாது என்றோ முருகனுக்குரிய விரத நாளில் விநாயகரை

வழிபடக் கூடாது என்றோ யாராவது சொல்லலாமா? அந்த அந்த விதிமுறைப்படி விரதங்களை அனுட்டிக்க வேண்டும். இரண்டு விரதங்கள் ஒன்றாக வரும்போது ஒன்று மற்றதைப் பாதிக்காமல் இரண்டையும் அனுட்டிக்க வேண்டும்.

விரதங்களைத் தொடங்கும்போது தமக்கு எந்த விரதம் தேவை என்பதைச் சரியான முறையில் தேர்ந்தெடுத்து அதை எவ்வாறு எவ்வளவு காலம் அனுட்டிக்க வேண்டும் என்பதை விளக்கமாக அறிந்துகொண்டு தொடங்கவேண்டும். தொடங்கும்போது அதை மனத்தில் சங்கல்பித்துக்கொள்ள வேண்டும்.

உதாரணமாக, மகப்பேறில்லாத ஒருவர் குழந்தைப் பேற்றினை விரும்பி அதற்குரிய விரதமாகிய கந்த ஷஷ்டியைத் தேர்ந்தெடுக்கிறார். உரிய முறைப்படி ஆறு நாளும் உபவாசமாக இருந்து ஏழாம் நாள் பாரணை பண்ணுவதாகவும் ஆறு வருடங்கள் இப்படித் தொடர்ந்து அனுட்டித்தபின் விரத உத்தியாபனம் (விரதத்தை முறைப்படி நிறுத்துதல்) பண்ணுவதாகவும் சங்கல்பிக்கிறார். அதன்பின் மாறுபாடில்லாமல் அதே முறைப்படி ஆறு வருடமும் தொடர்ந்து அனுட்டித்தபின் பாரணை தினத்தில் நான் விரதத்தை முடிக்கிறேன் என்று சங்கல்பித்து அர்ச்சனை செய்து இறைவனிடத்தில் ஒப்புக் கொடுக்கிறார்.

இதேபோல் திருமணத்தை விரும்புவோர் கேதார கௌரி விரதம், கலயாண சுந்தர விரதம் போன்றவற்றையும் செல்வத்தை விரும்புவோர் வரலட்சுமி விரதம், சௌபாக்கிய கௌரி விரதம் போன்றவற்றையும் தர்ம நெறியிலமைந்த வாழ்வையும் முத்திப் பேற்றையும் விரும்புவோர் சிவராத்திரியையும் அனுட்டிக்கலாம்.

இதுவே விரதம் அனுட்டிக்கும் முறை. மனம்போனபடி எல்லா விரதங்களையும் அனுட்டிக்க முற்படுவோருக்கே தேவையற்ற சந்தேகங்களும் சங்கடங்களும் தோன்றுகின்றன. எல்லா விரதங்களையும் தொடங்கிவிட்டு முறையாக அனுட்டிக்க முடியாமல் மனம் சலிப்பதைவிட தனக்குத் தேவையான சில விரதங்களைத் தேர்ந்தெடுத்து அவற்றைச் சரியாக அனுட்டிப்பதே சிறந்தது.

## மார்கழி மாதத்தில் திருவெம்பாவைப் பூஜையின்போது பஞ்சபுராணம் திருப்புகழ் முதலியன ஓதுதல் ஆகாதா? காரணம் என்ன?

*திருவெம்பாவை மாத்திரமல்லாமல் மார்கழி மாதம் முழுவதுமே வழிபாடுகளில் திருவாசகம் மட்டும் ஓதும் வழக்கம் நெடுங்காலமாக இருந்துவருகிறது. சாதாரண வேளைகளில் திருமுறை தவிர்ந்த ஏனைய துதிப்பாடல்கள் பாடப்படுவது குற்றமன்று. ஆனால் திருமுறைகள் யாவும் அம்மாதத்தில் காப்பிட்டுவைப்பது மரபு என்ற காரணத்தினால் திருமுறை பாடும் வேளைகளில் திருவாசகம் மட்டும் பாடுவதே முறை.*

*இம்மரபின் வரலாற்று முக்கியத்துவம் ஆராயப்பட வேண்டியதொன்று. ஆனால் அதற்கான காரண விளக்கம் இலகுவில் புரிந்துகொள்ளத்தக்கதே. அதாவது, அந்த மாதத்தைத் தில்லை நடராஜருக்கும் அவர் பாதநிழலைச் சென்றடைந்த மணிவாசகப் பெருமானுக்கும் உரியதாக நம் முன்னோர்கள் விதித்ததனால் அவர்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பதற்காக ஏனைய திருமுறைகள் காப்பிட்டு வைக்கப்படுகின்றன.*

# நித்ய கர்மானுஷ்டானம், உபாசனை

## மந்த்ர ஜபம், அத்யயனம், ப்ரார்த்தனை

### 'ஓம்' என்ற சொல் கடவுளின் ஸ்வரூபமாகக் கருதப்படுவது ஏன்? எல்லா மந்திரங்களிலும் இது சேர்ந்து இடம் பெறுவது ஏன்?

ஓம் என்பது பிரணவ மந்திரம். ஈசுவரனை அடையாளம் காட்டும் சொல். அ - உ - ம் என்ற எழுத்துக்களை ஆதாரமாகக் கொண்ட சொல். அதனால் இது மொழி பேதமின்றி எல்லா மந்திரங்களுக்கும் ஆதார சுருதியாக அமைகிறது.

ஒரே விதமான அமைப்பையும் ஒலி வடிவத்தையும் தாங்கி நாபியிலிருந்து அழுத்தமாக உச்சரிக்கப்படும் சொல் 'ஓம்' என்பதாகும்.

அதனாலேயே எல்லா மந்திரங்களிலும் இது சேர்த்து சொல்லப்படுகிறது. இத்தகைய சக்தி வாய்ந்த சிறந்த சொல் கடவுளின் சொரூபமாகவும் கருதப்படுகிறது.

### ஸந்தியாவந்தனத்தில் பிராணாயாமம் செய்யவேண்டிய முறை எப்படி?

நம் ஹ்ருதயத்துக்குள் இருக்கும் காற்றே பிராணன் எனப்படுகிறது, ஆயாமம் என்றால் அடக்குதல், மூச்சுக்காற்றை அடக்குவதே பிராணாயாமம் எனப்படும். இது உடலின் உள்பகுதி சுத்திக்காகச் செய்யப்படுவது.

காற்றோட்டமான இடத்தில் அமர்ந்துகொண்டு, கண்களை மூடிக்கொண்டு, மௌனத்துடன் வலதுகையின் கட்டை விரலால் வலது நாஸிகையை (மூக்கை) மூடிக்கொண்டு வலது கையின் ஆட்காட்டி, நடுவிரல்களை மடக்கிக்கொண்டு, சுண்டுவிரல் மோதிரவிரல்களை நீட்டிக் கொண்டு செய்ய வேண்டும்.

கையின் நடுவிரலோ ஆள்காட்டிவிரலோ மூக்கின்மீது படக்கூடாது. இடதுகையினால் ப்ராணாயாமத்தின் எண்ணிக்கையை எண்ண வேண்டும்.

பிராணாயாமம் 1) பூரகம் 2) கும்பகம் 3) ரேசகம் என மூன்று பகுதியாக பிரிக்கப்பட்டுள்ளது.

வலதுகை கட்டைவிரலால் வலதுமூக்கை மூடிக்கொண்டு இடது மூக்கினால் காற்றை மெதுவாக இழுத்தல் பூரகம் எனப்படும்.

பிறகு மூக்கின் இரண்டு த்வாரங்களையும் மூடிக்கொண்டு உள்ளே இழுக்கப்பட்ட காற்றை ஹ்ருதயத்திலேயே அடக்கிக் கொள்ளுதல் கும்பகம் எனப்படும்.

பிறகு வலதுகையின் சுண்டு, மோதிர விரல்களால் மூக்கின் இடதுவாயிலை மூடிக்கொண்டு காற்றை மெதுவாக வலதுமூக்கு த்வாரம் வழியாக வெளியேவிடுதல் ரேசகம் எனப்படும். இவ்வாறு பூரகம், கும்பகம், ரேசகம் என்று வரிசையாக கொள்வதே முறையான ப்ராணாயாமம் ஆகும்.

தேவபூஜை, ஜபம், ஹோமம், வேத அத்யயனம், சிராத்தம், ஸ்நானம், தானம், த்யானம் இவைகளில் மும்மூன்று முறை ப்ராணாயாமம் செய்யப்பட வேண்டும்.

ஸந்த்யாவந்தனத்தில் காயத்ரி ஜபத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும் மூன்று மூன்று தடவை செய்ய வேண்டும்.

மேலும் ஸந்த்யாவந்தனத்தில் செய்யும் பிராணாயாமத்தில் ப்ரணவம் என்னும் ஓங்காரத்தை பூ: புவ: ஸுவ: முதலான ஏழு வ்யாஹ்ருதிகளுடன் சேர்த்துச் சொல்லவேண்டும். பிறகு காயத்ரி மந்த்ரம் சொல்லி தைத்திரிய உபநிஷத்தில் உள்ள காயத்ரி சிரஸ் மந்திரத்தைச் சொல்ல வேண்டும்,

இவ்வாறு பூரகம் செய்யும்பொழுது ஒரு முறையும் கும்பகம் செய்யும்பொழுது ஒரு தடவையும் ரேசகம் செய்யும்பொழுது ஒரு தடவையும் ஆக மூன்று முறை கூறிச்செய்வது ஒரு பிராணாயாமம் ஆகும். இதை பெரியவர்கள் செய்யலாம்.

ஸந்த்யாவந்தனத்தில் மேற்கூறிய முறையில் (மூச்சை உள்ளிழுத்து அடக்கி மெதுவாக விடுவதை) செய்யஇயலாத சிறுவர்கள் பத்துமுறை பிராணாயாம மந்திரத்தை ஜபம் செய்தாலே போதும் என்கிறார் பரத்வாஜ மஹர்ஷி.

மேலும் உபாஸகர்கள் ப்ராணாயாமத்தை அகர்பம், ஸகர்பம் என்னும் இரண்டு வகையாகச் செய்யலாம்.

மேலே கூறிய முறை தான் அகர்ப பிராணாயாமம்.

ஸகர்ப ப்ராணாயாமம் என்றால், மூச்சை உள் இழுக்கும் (பூரகத்தின்) போது சிவப்பு வர்ணமான ப்ரும்ம தேவரையும், மூச்சை உள் நிறுத்தும் (கும்பகத்தின்) போது ஹ்ருதயத் தாமரையில் நீலோத்பல புஷ்பம் போன்ற நிறமுடைய ஸ்ரீ மஹாவிஷ்ணுவையும், மூச்சை வெளியே விடும் பொழுது (ரேசகத்தில்) நெற்றியில் வெண்மை நிறமுடைய ஸ்ரீசர்வேஸ்வரனையும் த்யானம் செய்வதாகும். இது உபாஸ்கர்களுக்கே சிறந்தது. இந்த பிராணாயாமத்தை முறைப்படி மூன்று முறை செய்வதால் சரீரத்தாலும் வாக்கினாலும் மனதினாலும் செய்யும் பாபங்கள் உடனேயே விலகுகின்றன.

மேலும் விதிப்படி செய்யப்படும் பிராணாயாமமே மிகப் பெரிய தபஸ்ஸாகும். அதை ஒருமுறை செய்தால் நாம் ஒரு நாள் செய்த பாபம் விலகுகிறது. பன்னிரண்டு தடவை செய்யும் ப்ராணாயாமங்களால் (புத்தி) சித்தம் சுத்தமாகிறது. இருபத்து நான்கு முறை செய்யப்படும் சிறந்த தபஸ்ஸான ப்ராணாயாமத்தால் மனதில் உள்ள தோஷம் விலகி மனது சுத்தமாகிறது.

## ஸந்த்யாவந்தனத்தில் காயத்ரீ ஜபம் செய்யும்போது ஜபத்தை கணக்கிடும் முறை எப்படி?

எந்த மந்த்ர ஜபத்தையும் 10,100,1000 என எண்ணிக்கையின்றி ஜபித்தால் பலன் கிட்டாது. ஆகவே அனைத்து மந்த்ரங்களுக்கும் எண்ணிக்கை மிக முக்கியம். அனைத்து ஜபங்களையும் கைவிரல்களாலோ, அல்லது ருத்ராக்ஷம் முதலிய ஜப மாலையினாலோ எண்ணலாம்.

ஆனால் வேதஸாரமான காயத்ரீ ஜபத்தை மற்ற ஜபங்களைப்போல் கை விரல்களை மடக்கிநீட்டி எண்ணக்கூடாது. கை விரலில் உள்ள கோடுகளால் (பர்வா) ஆரோஹண/அவரோஹண முறையில் எண்ண வேண்டும். அதாவது..

நமது கைகளின் ஒவ்வொருவிரலிலும் மூன்று ரேகை(கோடு)கள் உள்ளன. வலது கை சுண்டு விரலுக்கடுத்த

1) மோதிர விரலின் நடு ரேகையில் ஒன்று என்று தொடங்கி

2) மோதிர விரலின் கீழ் ரேகை

3) சுண்டு விரலின் அடிக்கோடு

4) சுண்டு விரலின் நடுக்கோடு

5) சுண்டு விரலின் நுனிரேகை

6) மோதிர விரலின் மேல்ரேகை

7) நடு விரலின் மேல்ரேகை

8) ஆள்காட்டி விரல் நுனிக்கோடு

9) ஆள்காட்டி விரலின் நடுக்கோடு

10) ஆள்காட்டி விரல் கீழ்க் கோடு

என்பதாகப் பத்து தடைவ காயத்ரீ ஜபத்தை எண்ண வேண்டும். மேலும் எண்ணி முடிந்த விரலான..

11) ஆள் காட்டி விரல் அடியில்

12) ஆள்காட்டி விரல் நடுரேகை,

13) ஆள்காட்டி விரலின் மேல்பகுதி

14) நடுவிரலின் மேல்க்கோடு

15) மோதிர விரல் மேல்ரேகை

16) சுண்டுவிரல் மேல்ரேகை

17) சுண்டு விரல் நடுக்கோடு

18) சுண்டு விரல் அடிக்கோடு

19) மோதிர விரல் அடிரேகை

20) மோதிர விரல் நடுரேகை என்று தொடங்கிய இடத்திலேயே முடித்தால் இருபது ஆகிறது.

இதுவே ஆரோஹணம் (ஏறுதல்) என்றும், அவரோஹணம் (இறங்குதல்) என்றும், கூறப்படுகிறது.

நடுவிரலில் நடுபர்வா (கோடு) மேரு எனப்படும். இதைத் தாண்டி எண்ணக்கூடாது.

கட்டை விரலால் மற்றவிரல்களின் ரேகை (கோடு)களில் வைத்து எண்ண வேண்டும். கட்டைவிரல் ஆண் என்றும், ரேகை (கோடு)கள் பெண்என்றும், ஆண் பெண்ணுடன் கூடுவது தனிமையில் இருக்க வேண்டும் என்பதற்காகவே வஸ்திரத்தால் (துணியால்) எண்ணும் கைவிரல்களை மறைத்துக் கொண்டே ஜபத்தை செய்ய வேண்டும்.

## கடவுள் திருநாமத்தை 108 தடவை உச்சரிப்பதும் ஜபம் செய்வதும் ஏன்? அது ஏன் வேறு எண்ணாக இருக்கக் கூடாது?

ஆஞ்சநேயருக்கு 108 பெயர்கள் உண்டு என்பார்கள். பொதுவாக எந்த கடவுளையும் நாம் துதிக்கும்போது 108 பெயர்களைக் கூறி துதிப்பது வழக்கமாக இருக்கிறது. அதேபோல ஜபம் செய்வதற்கு 108 தான். அது ஏன் 108 ஆக இருக்க வேண்டும்? 110 அல்லது 112 ஆகவோ 50 அல்லது 120 ஆகவோ ஏன் இருக்கக்கூடாது? இந்த எண்ணுக்கு ஒரு தனியான மகிமை உண்டு. அதனால்தான் 108 என்று விதித்து வைத்திருக்கின்றார்கள்.

மனிதன் ஒரு மணி நேரத்துக்கு 900 தடவை வீதம் 21,600 தடவைகள் ஒரு நாளில் மூச்சு விடுகின்றான். இதில் 10,800 தடவைகள் பகல் நேரத்தில் மூச்சு விடுகிறான். ஒவ்வொரு தடவை மூச்சு விடும்போது அவன் இறைவனை எண்ணி 'நான் அவரேதான்' என்று தெய்வத்தை தன்னுள் உணர வேண்டும். இதுவே 'சோஹம்' எனப்படுவது. ஆகவே 216 அல்லது 108 என்பது இந்த உணர்வின் ஒரு முக்கிய அம்சமாக விளங்குகின்றது.

இதில் 9 என்பது பிரம்மனைக் குறிக்கும் எண்ணாகும். அது எப்படி பெருக்கினாலும் கூட்டினாலும் மாறாமல் வருகின்றது. (9X12=108: 1+8= 9. 9X9 = 81: 8 + 1 = 9 இப்படி வந்துவிடும்.) தவிர 12 என்பது சூரியனை குறிப்பது. அது 12 ராசிகளின் வழியே சஞ்சரிக்கின்றது.

ஒவ்வொரு ராசியும் ஒவ்வொரு மாதம் என்பது கணக்கு. ஒன்பது என்பது பிரமத்தைக் குறிப்பது. அதேபோல எட்டு என்பது மாயையைக் குறிப்பது. எட்டின் பெருக்கங்கள் குறைந்து கொண்டேதான் போகுமே தவிர கூடாது. எட்டை இரண்டால் பெருக்கினால் 16 வரும் (1+6=7). எட்டை மூன்றால் பெருக்கினால் 24 வரும். (2+4=6) எட்டை நான்கால் பெருக்கினால் 32 வரும். (3+2=5). எட்டை ஐந்தால் பெருக்கினால் 40 வரும். (4+0=4) எட்டை ஆறால் பெருக்கினால் 48 வரும் (4+8=12: 1+2=3). எட்டை ஏழால் பெருக்கினால் 56 வரும். (5+6=11: 1+1=2). எட்டால் எட்டால் பெருக்கினால் 64 வரும் (6+4=10: 1+0=1). இப்படி மாயையின் வடிவமான எட்டு போகப் போகப் குறைந்து கொண்டே போகின்றது.

ஆக, இப்படி உள்ள எட்டை உண்மையே வடிவமான பரப்பிரம்மத்துடன் இணைக்கும் போது, எட்டு - ஏகம் - இடையில் நாம் ஒன்றும் இல்லை என்பதை உணர வேண்டும். இதுவே 1-0-8=108 என்பதாகும். ஒவ்வொன்றுக்கும் பொருள் உண்டு. அதை மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். அப்போதுதான் அதிலிருந்து பெரிய கருத்துக்கள் கிடைக்கும். சாதாரணக் கல்லேயானாலும், இராமரின் பாதம் பட்டதினால்தான் அகலிகை தனது சுயரூபத்தை அடைய முடிந்தது.

## ஸ்ரீ ருத்ரம் புருஷஸூக்தம் போன்ற வேத மந்திரங்களை புஸ்தகம் பார்த்துச் சொல்லாமா? பலனுண்டா?

பொதுவாக வேதமந்திரங்களை நன்கு மனப்பாடம் செய்து கொண்டு புஸ்தகம் பார்க்காமல் சொன்னால்தான் முழுமையான பலன் கிட்டும். இருந்தாலும் புஸ்தகம் பார்க்காமல் சொல்வதற்கு சிலருக்கு இயலாது. புஸ்தகம் பார்த்து செல்பவருக்கு **லிகித பாடகர்** எனப்பெயர். இது மத்யமமான பலனைத்தரும். சொல்லாமலேயே இருப்பவனைக் காட்டிலும் புஸ்தகம் பார்த்துச் சொல்பவர் சிறந்தவர்.

ஆகவே புஸ்தகம் பார்த்துச் சொல்வதால் தவறேதுமில்லை. கட்டாயம் பலனுண்டு. ஆனால் புஸ்தகம் பார்த்தோ பார்க்காமலோ ஸ்வரம் மற்றும் எழுத்துப் பிழையுடன் வேதத்தை ஒரு போதும் சொல்லக்கூடாது. குரு மூலம் கற்றுக்கொள்ளாமல் தானாகவே புஸ்தகம் பார்த்தும் வேதமந்திரங்களை சொல்லக்கூடாது. இது மாறுதலான பலனையளிக்கலாம்.

## அனைத்து சாந்தி மந்திரங்களிலும் ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: என மூன்று முறை கூறுவதின் பொருள் என்ன?

நமக்கு நிகழும் துன்பங்கள் அனைத்தும்

1. ஆத்யாத்மிகம், (தன்னாலேயே வரும் துன்பம்)
2. ஆதி தைவிகம் (தெய்வத்தின் மூலம் நேரும் துன்பம்)
3. ஆதி பௌதிகம் (பஞ்ச பூதங்கள் மூலமாக ஏற்படும் துன்பம்) என் மூன்று வகைப்படும்.

காம க்ரோதாதிபீ ரோகை: தாப: ஆத்யாத்மிக: ஸ்ம்ருத:

என ஒவ்வொரு மனிதரிடமும் அமைந்துள்ள ஆசை, கோபம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் முதலிய ஆறு தீய குணங்களால் தனக்குத்தானே ஏற்படும் துன்பம் ஆத்யாத்மிகம் எனப்படும்.

ம்ருக பக்ஷி மநுஷ்யாத்யை: பிஸாசோரக ராக்ஷஸை:
ஸரீஸ்ருபாத்யைஸ்ச ந்ருணாம் ஜாயதே ச ஆதிபௌதிக:

மிருகங்கள் பறவைகள், மனிதர்கள், கண்ணுக்குத் தெரியாத பிசாசங்கள், பாம்புகள், ராக்ஷஸகர்கள் முதலிய வற்றால் (பூதங்களால்) உண்டாகும் துன்பங்கள் ஆதி பௌதிகம் எனப்படும்.

ஸீதோஷ்ண வாத வர்ஷாம்பு வைத்யுதாதி ஸமுத்பவ:
தாபோ த்விஜவர ஸ்ரேஷ்டா: தாப: ஸ்யாத் ஆதிதைவிக:

குளிர், வெப்பம், பெருங்காற்று, அடைமழை, மின்னல் முதலியவற்றால் (தெய்வங்களால்) ஏற்படும் துன்பங்கள் ஆதி தைவிகம் எனப்படும். இவ்வாறு ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் ஆகிய மூன்று துன்பங்களிலிருந்தும் நம்மை பாதுகாத்துக் கொள்ளவே நாம் சாந்தி பாடத்தின் முடிவில் ஓம் ஸாந்தி: ஸாந்தி: ஸாந்தி: என மூன்று முறை கூறுகின்றோம்.

## ஸந்த்யா காலம் என்பது எந்த நேரம்? ஸந்த்யாகாலத்தில் என்னென்ன செய்யலாம்? என்னென்ன செய்யக் கூடாது?

ஸந்த்யா என்றால் சேர்க்கை எனப்பொருள். பகலும் இரவும் ஒன்று சேரும் (ஸுரிய அஸ்தமன) நேரமும், இரவும் பகலும் ஒன்று சேரும் (ஸுர்யோதய) நேரமும் ஸந்த்யா காலம் எனப்படும்.

ஸந்த்யா காலம் என்பது மொத்தம் 48 நிமிடங்கள், அதாவது மொத்தம் இரண்டு நாழிகை காலம், ஸுர்ய உதயத்திற்கு அல்லது ஸுர்ய அஸ்தமனத்திற்கு முன்பு ஒன்றரை நாழிகையும் (36 நிமிடமும்), ஸுர்ய உதயத்திற்கு அல்லது ஸுர்ய அஸ்தமனத்திற்குப் பின்பு அரை நாழிகையும் (12 நிமிடமும்) ஸந்த்யாகாலம் எனப்படும்.

அதாவது காலை 6.00மணிக்கு ஸுர்ய உதயம் என்றால் காலை 05.24 மணி முதல் 06.12 மணிவரையிலும் ஸந்த்யாகாலம். இவ்வாறே மாலை 06.00மணிக்கு ஸுாயாஸ்தமனம் என்றால் மாலை 05.24 மணி முதல் 06.12 மணிவரையிலும் ஸந்த்யாகாலம். ஸுர்ய உதய அஸ்தமன நேரமாறுபாட்டால் இந்த நேரம் சிறிது கூடவும் குறையவும் நேரலாம். இந்த ஸந்த்யாகாலத்தில் அவரவர் தனது க்ருஹத்தில் இருப்பது நலம். குறிப்பாகப் பெண்கள் ஸந்த்யா காலங்களில் தாங்கள் க்ருஹத்தில் வாசலில் ஜலம் தெளித்து அரிசி மாவால் கோலம் போட்டும் வீட்டு வாசலிலும் பூஜையறையிலும் தீபத்தை (தானே) ஏற்ற வேண்டும், ஆண்கள் ஸந்த்யாவந்தனம் செய்ய வேண்டும்.

ஸந்த்யாகாலத்தில் மஹாலக்ஷ்மி ஸஞ்சரிக்கும் நேரமென்பதால் இந்தக் காலத்தில் நாம் வீண் பேச்சுக்கள் பேசாமல் தெய்வ ஸம்பந்தமான விஷ்ணு - லலிதா - ஸஹஸ்ரநாமம் போன்ற ஸ்தோத்ரங்கள் சொல்லலாம். ஆனால் ஸந்த்யா காலத்தில் வேதம் சொல்லக்கூடாது. எதையும் சாப்பிடக்கூடாது. படுக்கக் கூடாது. என்கிறது சாஸ்திரம்.

## ஏதாவது மந்திரங்களை உபதேசம் பெற்று ஜபம் செய்ய ஆவல். அதற்குத் தகுந்த காலம் எப்பொழுது?

மந்திரங்கள் மனிதனின் மனத்தைத் தூய்மைப் படுத்துவதுடன் தெய்வத்தின் அருளையும் நமக்கு விரைவாகப் பெற்றுத் தருகின்றது. நமது தேவைகளை நிறைவேற்றி வைப்பதில் முக்கிய பங்காற்றும் மந்திரத்தைத் தகுந்த ஆசாரியன் (குரு) மூலமாக முறைப்படி உபதேசம் பெற்று தினஸரி ஜபம் செய்து வரலாம்.

மந்திர உபதேசத்திற்கு மிகச்சிறந்த காலம் சூர்ய க்ரஹணம் மற்றும் சந்திரகிரஹணம் தான். க்ரஹணம் நிகழும் நாளில் க்ரஹண ஸமயத்தில் மந்திரங்களை உபதேசம் பெற்றுக் கொள்வதோ, அல்லது மந்த்ர ஸித்திக்காக ஜபம் செய்வதோ, விரைவில் பலனைத்தரும்.

க்ரஹணத்தில் இல்லாவிட்டால் ஒவ்வொரு ஸங்க்ரமணத்தன்றும் (தமிழ் மாதப் பிறப்பன்றும்) செய்து கொள்ளலாம். உத்தராயணம் எனப்படும் தை முதல் ஆனி முடிய ஆறு மாதங்களும், சுக்லபக்ஷம் எனப்படும் அமாவாஸைக்கு மறுநாள் முதல் பௌர்ணமி வரையுள்ள பதினைந்து நாட்களும் மிகச்சிறந்த நாட்கள்.

## மந்திரங்களை குருவினிடத்திலிருந்துதான் உபதேசம் செய்துகொள்ள வேண்டுமா?

மந்திரஸித்திக்கு குருவின் அருளே முக்கியமானது. மந்திரங்களை அவரவரின் தகுதிக்குத் தகுந்தவாறு தேர்ந்தெடுப்பதிலும், அதைமுறையாக ஜபித்து, ஸித்தியடைந்து நன்மையை பெறவும், வழிகாட்டியாக இருப்பவர் குருவே.

மந்திரம் விரைவில் ஸித்தியாக ஜபத்தின்போது நிகழும் தவறுகளைத் திருத்தி சிஷ்யனை நேர்வழிப்படுத்துபவரும் குருதான். சிஷ்யனின் தோஷங்களைத் (பாபங்களை)தான் பெற்றுக்கொண்டு சிஷ்யனுக்காக தெய்வத்திடம் பிரார்த்திப்பவரும் குருவே. ஆகவே எந்த மந்திரத்தையும் குருவிடமிருந்துதான் உபதேசம் பெற்றுக் கொண்டு ஜபம் செய்வதுதான் சிறந்தது.

## நன்கு படித்து பரீக்ஷையில் தேர்ச்சிபெற என்ன செய்யலாம்?

பொதுவாக அனைத்து வித்யைகளுக்கும் (கல்விக்கும்) அதிபதி ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவ மூர்த்திதான். ஆகவே

ஞானாநந்த மயம் தேவம் நிர்மல ஸ்படிகாக்ருதிம்

ஆதாரம் ஸர்வ வித்யானாம் ஹயக்ரீவ முபாஸ்மஹே

என்னும் பிரார்த்தனை ச்லோகத்தை தினசரி 108 முறை சொல்லலாம்.

## மந்திரங்களின் ஸ்வரம் எழுத்துக்களை மாற்றிச்சொன்னால் என்ன? மனது சுத்தமாக இருந்தால் போதாதா?

மந்திரங்கள் வேதமந்த்ரங்கள் என்றும், மற்ற மநத்ரங்கள் என்றும் இருவகை. இவற்றில் வேத மந்த்ரங்களை அதற்கான உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம், போன்ற ஸ்வரங்களுடனும், சரியான உச்சரிப்புடன் கூடிய எழுத்துக்களுடனும், நியமத்துடன் உச்சரித்தால்தான் அதற்கான பலன் கிட்டும்.

இவ்வாறே தாந்த்ரீகமான மற்ற மந்த்ரங்களுக்கு ஸ்வரம் தேவையில்லை. ஆனால் அனைத்து எழுத்துகளின் உச்சரிப்பும் ஸரியாக இருக்க வேண்டும். இல்லையேல் நேர் எதிரிடையான பலன் உண்டாகலாம்.

ஒருசமயம் நமது சிருங்கேரி ஆசார்யாளிடம் வேதாத்யயனம் செய்த ஓர் கனபாடிகள் வந்தார். அவர் ஆசார்யாளிடம், “சிலகாலம் முன்பு தெய்வாதீனமாக எனது மனைவி இறந்து விட்டாள், நான் ஸோமயாகம் முதலிய யக்ஞங்களைச் செய்துள்ளேன். தினஸரி செய்யும் அக்னிஹோத்ர ஹோமத்துக்கு மனைவி கட்டாயம் தேவை என்பதால் மறுமணம் செய்து கொண்டேன், ஆனால் அந்த மனைவியும் சில நாட்களில் இறந்து விட்டாள்” என்று மிகவும் வருத்தத்துடன் தெரிவித்து, மேலும்...

“நான் உயர்வான யக்ஞங்களைச் செய்து நித்ய கர்மாக்களான அக்னிஹோத்ர ஹோமங்களையும். தினஸரி செய்து வருகிறேன். மேலும் தேவீமாஹாத்ம்ய (சப்தசதீ) பாராயணமும் தினசரி செய்து வருகிறேன். எதனால் எனக்கு இந்த துக்கம் உண்டாகிறது?” எனக்கேட்டார்.

மந்த்ர மூர்த்தியான சிருங்கேரி ஸ்ரீ ஆசார்யாளும் சிறிது நேரம் கண்களை மூடி த்யானம் செய்துவிட்டு அவரைப்பார்த்து...

தாங்கள் தினந்தோறும் ஸப்தசதீ பாராயணம் செய்கிறேன் என்கிறீரே! அதில் முன்பகுதியில் உள்ள கவசம் என்ற பகுதியைச் சொல்லுங்கள் என்று கூறினார்.

அவரும் ஸப்தசதீயில் உள்ள கவசம் என்னும் பகுதியை ஆசார்யாள் முன்னிலையில் சொல்லிக் கொண்டே வந்தார். அப்போது ஒரு மந்ரத்தை தவறாகக் கூறினார்.

அதாவது ‘பார்யாம் ரக்ஷது பைரவீ’ என்னும் மந்ரத்தை அவர் ‘பார்யாம் பக்ஷது பைரவீ என்று ர என்னும் எழுத்திற்குப் பதிலாக ப என்னும் எழுத்துடன் சொன்னார்.

ஸ்ரீ ஆசார்யாளும், அடடா... தாங்களுக்கு ஏற்படும் துக்கங்களுக்கு இதுவே மூலகாரணம். அதாவது தாங்கள் எனது மனைவியை தேவி ரசக்ஷிக்கட்டும் என்றிருப்பதை எனது மனைவியை தேவி பக்ஷிக்கட்டும் என்னும் பொருள் வருமாறு எழுத்துப் பிழையுடன் சப்தசதீ மந்திரத்தை பாராயணம் செய்துள்ளீர்கள். இனி சரியாக உச்சரியுங்கள். உயர்வான அக்னிஹோத்ரம் முதலியவைகளைச் செய்துவரும் தங்களுக்கு இனி எந்த துக்கமும் ஏற்படாது என அனுக்ரஹம்செய்தார். ஆகவே எந்த ஒரு மந்திரங்களையும் எழுத்து, ஸ்வரம் முதலியவைகளுடன் சரியான முறையில் ஜபம் செய்தால்தான் நன்மையைப் பெற முடியும்.

## எந்தெந்த ஆஸனங்களில் உட்கார்ந்து மந்திரங்களை/ ஸ்தோத்ரங்களை ஜபம் செய்யலாம்? என்னென்ன பலன்?

மந்திரங்களையோ ஸ்லோகங்களையோ பாராயணம் மற்றும் ஜபம் செய்யும்போது பூமியில் தரையில் நேரடியாக அமராமல் ஏதாவது ஆஸனங்களில் அமர்ந்து ஜபம் செய்வதுதான் சிறந்தது.

ஒவ்வொரு பலனையடையவும் ஒவ்வொரு விதமான ஆஸனத்தை (இருக்கையை)த் தேர்ந்தெடுக்க வேண்டும் அதாவது.....

**ஸர்வான் காமான் அவாப்னோதி மனுஷ்ய: கம்பளாஸனே**

என்பதாக வெண்மையான கம்பளியால் ஆன ஆஸனத்தில் அமர்ந்து ஜபம் செய்வதால் விரும்பிய அனைத்து பலன்களையும் அடையலாம்.

**க்ருஷ்ணாஜிநே பவேத் முக்தி:** ப்ரும்மசாரி, ஸன்யாஸி அல்லது யாகம் செய்தவர் மட்டும் க்ருஷ்ணாஜினம் என்னும் மான் தோலில் அமரலாம். இதனால் மறுபிறவி என்னும் துன்பத்திலிரந்து விடுபட்டு வாழ்க்கையின் இறுதியில் மோக்ஷத்தையடையலாம்.

**மோக்ஷ ஸ்ரீர் வ்யாக்ர சர்மணி** புலித்தோலில் அமர்ந்து ஜபம்செய்தால் ப்ரும்மஞானம் ஏற்பட்டு மோக்ஷத்தையடையலாம்.

**குசாஸநே பவேத் க்ஞானம்** தர்ப்பையினால் செய்யப்பட்ட ஆஸனத்தில் அமர்ந்து ஜபிப்பதால் புத்தியில் ஏற்பட்ட/ஏற்படும் நினைவாற்றலின்மை போன்ற தோஷம் விலகி, நல்ல அறிவைப்பெற்று சிறந்த அறிவாளியாகலாம்.

**ஆரோக்யம் பத்ர நிர்மிதே** இலைகளினால் செய்யப்பட்ட ஆஸனத்தில் அமருவதால் நோய்கள் நீங்கி உடல் ஆரோக்கியத்தைப்பெறலாம்.

**பாஷாணே து:க மாப்னோதி** நேரடியாக பூமியிலோ (தரையிலோ), கருங்கல் முதலான கல்லின் மீதோ அமர்ந்து ஜபம் செய்வதால் துன்பம் (துக்கம்) ஏற்படும்.

**காஷ்டே நாநாவிதான் கதான்** மூங்கில் போன்ற ஒரு சில நிந்திக்கப்பட்ட காட்டுமரத்தாலான ஆஸனத்தில் அமர்ந்து ஜபம் செய்வதால் பலவிதமான வியாதிகள் ஏற்படும். (ஆனால் மரப்பலகையில் உட்கார்ந்து ஜபம் செய்தாலும் கால்கள் பூமியில் படுமாறு ஜபித்தால் நன்மை யுண்டாகும்.

**வஸ்த்ரே ஸ்ரிய மவாப்னோதி** துணியைப்பரப்பி அமர்ந்து செய்யும் ஜபத்தால் நிறைவான ஐச்வர்யம் (செல்வம்) ஏற்படும்.

**தர்பாஸனே தபஸ்ஸித்தி:** தர்பாஸனத்தில் அமர்ந்தது செய்யும் ஜபத்தால் தபஸ் (தவம்) அதிகரிக்கும்.

**பூமௌ மந்திரோ ந ஸித்யதி** பூமியில் (வெற்றுத்தரையில்) அமர்ந்து செய்யும் ஜபம், பாராயணம் எந்த ஒரு பலனையும் பெற்றுத்தராது.

இந்த விதிமுறைகள் அனைத்தும், அனைத்து மந்திர ஜபங்களுக்கும், விஷ்ணு ஸஹஸ்ர நாமம் லலிதா ஸஹஸ்ர நாமம் போன்ற அனைத்து ஸ்தோத்ர, ஸ்லோக பாராயணங்களுக்கும் பொருந்தும்.

மேலும் அமர்ந்து ஜபம்செய்யப்படும் இடங்களுக்குத் தகுந்தவாறும் பலன்கள் மாறுபடும். அதாவது..

**க்ருஹே த்வேககுணம் ஜப்யம் நத்யாம் து த்விகுணம் பவேத்**
**கவாம் கோஷ்டே த்ரிகுணம் அக்ன்யாகாரே தாதிகம்**
**ஸித்த க்ஷேத்ரேஷு ஸர்வேஷு தேவதாயாச ஸந்நிதெள**
**ஸஹஸ்ர தத் கோடி ஸ்யாத் அனந்தம் விஷ்ணு ஸந்நிதெள**

என்பதாக மந்திர ஜபங்கள், ஸ்தோத்ர பாராயணங்கள் முதலானவற்றை தனது வீட்டில் செய்தால் ஒரு மடங்கு பலனும், நதி, குளம், கிணறு முதலிய நீர் நிலைகளின் அருகில் செய்தால் ஒன்றுக்கு இரண்டு மடங்கு பலனும், பசு மாடுகள் இருக்கும் கொட்டிலில் (மாட்டுத் தொழுவத்தில்) செய்தால் ஒன்றுக்கு 100 மடங்கு பலனும், அக்னிஹோத்ரம், ஔபாஸனம், ஸமிதாதானம் முதலிய ஹோமங்கள் செய்த அக்னிக்கு ஸமீபத்தில் செய்தால் ஒன்றுக்கு நூற்றுக்கும் அதிகமான மடங்கு பலனும், புண்ய க்ஷேத்ரங்கள், கடவுளின் ஸந்நிதிகள், திருக்கோயில்கள் முதலான இடங்களில் ஜபம் செய்தால் 100 கோடி மடங்கு பலனையும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் ஸன்னிதியில் செய்யப்படும் ஜபம் கணக்கற்ற அளவு பலன்களையும் பெற்றுத்தரும்.

## ஸ்தோத்திர பாராயணம், மந்திர ஜபம், த்யானம் செய்தல், ஆகியவற்றில் எது மிகவும் சிறந்தது?

தெய்வத்தை ஸந்தோஷிக்கச்செய்து தெய்வ அருளைப்பெற அந்தத் தெய்வத்தை முறையாகப் பூஜை செய்தல், அந்தத் தெய்வத்தின் குணங்களை விவரிக்கும் ஸ்தோத்திரங்களைப் பாராயணம் செய்தல், அந்த தெய்வத்தின் மந்திரங்களை (குரு மூலம் உபதேசம் பெற்று) ஜபம் செய்தல், அந்தத் தெய்வத்தின் உருவத்தை மனதில் த்யானம் செய்தல் ஆகிய நான்கு வழிகளும் சிறந்தவைதான் என்றாலும்

**பூஜா கோடி ஸமம் ஸ்தோத்ரம் ஸ்தோத்ர கோடி ஸமோ ஜப:**
**ஜப கோடி ஸமம் த்⁴யானம் த்⁴யான கோடி ஸமோ லய:**

என்பதாக பூஜையை விட ஸ்தோத்ர பாராயணம் செய்வது அதிக பலனையும் ஸ்தோத்ரங்கள் சொல்வதைக் காட்டிலும் மந்திரங்களை ஜபம் செய்தல் அதிகமான பலனையும், அதைவிட மனதை ஒருமுகப்படுத்திச் செய்யும் த்யானம் (கோடிமடங்கு) அதிக பலனையும் தரும். முதலில் பூஜை செய்யத் துவங்கி சில நாட்களுக்குப் பிறகு ஸ்தோத்ரங்களைப் பாராயணம் செய்து, பிறகு (குரு மூலம் உபதேசம் பெற்று) மந்திரங்களை ஜபம் செய்து வந்து, பிறகு தெய்வ ஸ்வரூபத்தை ஹ்ருதயத்தில் த்யானம் செய்யலாம். இவ்வாறு படிப்படியாகச் செய்யும் தெய்வ ஆராதனை நம்மை மேம்படுத்தும்.

## பெண்கள் மந்திரங்களை உபதேசம் செய்து கொள்ளலாமா? எந்த மந்திரம் என எப்படித் தீர்மானிப்பது?

மந்திரங்களை ஜபம் செய்வதற்கு ஆண், பெண் வித்யாஸம் கிடையாது. ஆனால் தானாக புஸ்தகங்களைப் பார்த்தோ, வேறு விதமாகத் தெரிந்துகொண்டோ மந்த்ரங்களை ஜபம் செய்யக்கூடாது. தகுந்த ஆசாரமுள்ள தந்தை, கணவன், ஸத்குருவின் மூலம் உபதேசம் பெற்றுக் கொண்டுதான் ஜபம் செய்ய வேண்டும். எந்த மந்திரத்தை உபதேசம் செய்துகொள்வது என்பது அவரவர் குல ஆசாரப்படியோ, குருவின் ஆலோசனைப்படியோ, ஜாதகத்தைப் பரிசீலித்தோ தீர்மானிக்கலாம்.

## சதுராவ்ருத்தி தர்ப்பணம் என்றால் என்ன?

ஸ்ரீமஹாகணபதியை உபாஸிக்கும் முறைகளில் சதுராவ்ருத்தி தர்ப்பணமும் ஒன்று. ஸ்ரீமகாகணபதி மற்றும் ஆவரண தேவதைகள் அனைவருக்கும் சந்தனம், ஏலக்காய் முதலிய பொருட்கள் கலந்த வாஸனையான தீர்த்தத்தால் (ஜலத்தால்) ஸ்ரீமஹாகணபதியின் பிம்பத்தில் 444 முறை தர்ப்பணம் செய்வதுதான் சதுராவ்ருத்தி தர்ப்பணம் என்று கூறப்படுகிறது. ஸ்ரீ ஆதிசங்கரர் எழுதியுள்ள ப்ரபஞ்சஸார ஸங்க்ரஹம் என்னும் புஸ்தகத்தில் ஜாதி மத பேதமின்றி ஆண்கள், பெண்கள் என ஸ்ரீமஹாகணபதியின் அருளை விரும்புபவர் அனைவரும் இதைச் செய்யலாம் என்கிறார்.

**ஆயுராரோக்ய மைச்வர்யம் பலம் புஷ்டிர் மஹாயசா:**
**கவித்வம் புக்தி முக்தீ ச சதுராவ்ருத்தி தர்ப்பணாத்**

என்னும் வசனப்படி ஒரு மண்டலம் (48 நாட்கள்) தினஸரி சதுராவ்ருத்தி தர்ப்பணத்தை செய்து வந்தால், ஸ்ரீ மஹாகணபதியின் அருளால் நீண்டஆயுள், ஆரோக்யம், செல்வம், உடல்வலிமை, அழியாப்புகழ், புலமைத்திறன், போக மோக்ஷங்கள் ஆகிய அனைத்தும் கிட்டும். சின்னஞ்சிறிய செயலுக்கு மிகப்பெரிய பலன்.

## வீடுகளில் என்னென்ன சுவாமிப்படங்கள் வைத்திருக்கலாம், எவற்றை வைத்திருக்கக்கூடாது?

விநாயகர், இலக்குமி, வள்ளி, தெய்வானையுடன் கூடிய சுப்பிரமணியர், சரஸ்வதி, வெங்கடாஜலபதி முதலியோரும் முகம் பார்க்கும் கண்ணாடி ஒன்றும் அவசியமாக சுவாமி அறையில் வைக்கப்படவேண்டும். இவற்றைத் தவிரத் தமது இஷ்டதெய்வங்களின் படங்களை வைக்கலாம்.

பொதுவாக சாந்தமான முகத்துடன் கூடிய எந்தத் தெய்வங்களின் படங்களும் வைக்கலாம். கோர முகத்துடன் கூடிய வடிவங்களைத் தவிர்க்கலாம்.

ஆனால், குழலூதும் கண்ணன் படம் வைக்கக்கூடாது, நடராஜர் படம் வைக்கக்கூடாது என்றெல்லாம் சொல்லப்படும் அரத்தமற்ற பயமுறுத்தல்கள் தவறானவை. கண்ணனும் நடராஜரும் நமக்கு மங்கலம் தரும் சக்தி வாய்ந்த தெய்வங்கள். ஆனால் நடராஜரை சிவகாமி அம்மனுடன் சேர்ந்த படமாக வைப்பதே நல்லது.

திருவுருவங்களைச் சுவாமி அறையில் - வீடுகளில் வைத்து வழிபடுவது அவ்வளவு சிறப்பானதல்ல.

## ஸ்ரீ நரஸிஹ்ம மூர்த்தியின் படத்தை வீட்டில் வைத்துக் கொள்ளலாமா?

ஸ்ரீ ந்ருஸிஹ்மர் சிறிது உக்ரம் போல் காணப்படுவதால் இந்த ஸந்தேஹம் எழுப்பப்படுகிறது. ஸ்ரீவிஷ்ணுவுக்கு ஹிரண்ய கசிபு போன்ற அரக்கர்களை ஸம்ஹரிக்க இது போன்ற உருவமும் உக்ரமும் தேவைப்பட்டதால் உக்ர ந்ருஸிஹ்ம மூர்த்தியாக ஆவிர்பவித்தார், அப்போதும் பக்தர்களுக்கு அனுக்ரஹ மூர்த்தியாகவே காட்சி தந்தார், குழந்தை ப்ரஹ்லாதரை அருகில் அழைத்து தலையை வருடி மடியில் அமர்த்திக்கொண்ட ஸ்ரீ ந்ருஸிஹ்மர் சாந்த ஸ்வரூபம் என்பதில் என்ன ஸந்தேஹம்? தாயாரை மடியில் அமர்த்திக்கொண்டு லஷ்மீ ந்ருஸிஹ்மராக காட்சி தரும் ந்ருஸிஹ்மமூர்த்தியை-விக்ரஹத்தை - படத்தை நாம் பூஜை செய்ய பாக்யம் பெற்றிருக்க வேண்டும். ஆகவே தாராளமாக வீட்டிலும் காட்டிலும் எங்கும் ஸ்ரீ ந்ருஸஹ்மரை ஆராதிக்கலாம். நன்மைகள் ஏற்படும்.

## பூஜையறையில் முன்னோர்களின் படங்களை வைத்து பூஜை செய்யலாமா?

தெய்வங்கள் என்பவர்களும் பித்ருக்கள் என்பவர்களும் வெவ்வேறான நிலையிலிருப்பவர்கள். தெய்வங்கள் என்பவர்கள் உலக மக்கள் அனைவருக்கும் அருள் புரிபவர்கள். இவர்கள் அனைவருக்கும் பொதுவானவர்கள். பூமியில் மனிதராகப் பிறந்து காம க்ரோதத்துக்கு ஆட்பட்டு புண்ய பாபங்களைச் செய்து அதற்குத் தக்கவாறு பலனை அனுபவிப்பவர்கள் பித்ருக்கள் எனப்படுவார்கள். நமது குடும்பத்தில் பிறந்து நம்முடன் வாழ்ந்து இறந்து விட்ட தாத்தா பாட்டி அம்மா அப்பா போன்றவர்கள் பித்ருக்கள் எனப்படுவார்கள். இவர்கள் நமது குடும்பத்துக்கு மட்டுமே அருள் புரியும் - சாபம்தரும் - ஆற்றல் பெற்றவர்கள்.

ஆகவே மறைந்த நமது குடும்பத்தைச் சேர்ந்த தாத்தா பாட்டி அப்பா அம்மா போன்றவர்களின் படங்களை பூஜையறையில் மற்ற தெய்வங்களுடன் சேர்த்து வைக்கக்கூடாது. தனியாக தெற்கு நோக்கியவாறு இவர்களின் படங்களை சுவற்றில் மாட்டலாம்.

## வீட்டில் அளவில் பெரியதான தெய்வ விக்ரஹங்களை வைத்து பூஜை செய்யலாமா?

பொதுவாக ஒவ்வொரு வீட்டிலும் கண்டகீ, நர்மதா, ஸ்வர்ணமுகி, கோதாவரீ போன்ற நதிகளின் ஸாரமாக அமைந்துள்ள பஞ்சாயதன (ஐந்து) சிலைகளை (கற்களை) வைத்து பூஜை செய்வது சிறந்தது, இத்துடன் விக்ரஹத்தையும் பூஜை செய்ய வேண்டும் என்று விரும்பினால்

அங்குஷ்ட[2] பர்வாதா[3]ரப்[4]ய விதஸ்திம் யாவதே[3]வது
க்[3]ருஹேஷு ப்ரதிமா கார்யா நாதி[4]கா ஸ்யதே பு[3]தை[4]:
- (நிர்ணய ஸிந்து-பக்கம் 242)

என்பதாக பூஜை செய்பவரின் வலதுகை கட்டை விரலில் அமைந்துள்ள பர்வா(கணு) அளவு முதல் விதஸ்தி எனப்படும் 12 அங்குலம் வரையிலுள்ள (பூஜை செய்பவரின் வலது கை கட்டைவிரலின் கணு போல் 12 பங்கு அளவுள்ள) விக்ரஹத்தை வீட்டில் வைத்து பூஜை செய்யலாம், 12 அங்குலத்துக்கு மேல் அளவுள்ள விக்ரஹத்தை (அதற்குத்தகுந்த அளவு தினஸரி பூஜை நிவேதனம் செய்ய முடியாது என்பதால்) வீட்டில் பூஜை செய்வது சிறப்பானதல்ல, (விக்ரஹத்தை அளவிடும்போது விக்ரஹம் வைத்துள்ள பீடம் மற்றும் தலைப்பகுதியிலுள்ள கிரீடம் திருவாசி போன்றவற்றை கணக்கில் கொள்ளக் கூடாது.), ஆனால் ஊருக்குப் பொதுவாக அமைக்கப்பட்ட பஜனைமடம் போன்ற இடங்களிலோ ஆலயங்களிலோ 12 அங்குளத்துக்கு மேலுமுள்ள விக்ரஹங்களையும் வைத்து பூஜை செய்யலாம்.

## திருமணமான பெண்கள் தனது பிறந்த வீட்டு குலதெய்வத்தை குலதெய்வமாகக் கொள்ளலாமா?

குலதெய்வம் என்பது பரம்பரையாக நமது வம்ச முன்னோர்களால் ஆராதிக்கப்படும் தெய்வம், நமக்கு இஷ்ட தெய்வம் பல இருந்தாலும் கூட குலதெய்வ ஆராதனங்களுக்குத்தான் நாம் முதலிடம் கொடுக்க வேண்டும். இன்றும் கூட திருமணம் ஆன உடனே காவடி எடுத்தல் குழந்தை பிறந்த உடன் மொட்டை அடித்தல் ஆகியவற்றைக் குலதெய்வ ஸன்னிதியில்தான் முதலிடம் செய்கிறார்கள். ஆகவே குலதெய்வ ப்ரார்த்தனை மிகவும் முக்கியமானது

ஒருபெண்ணுக்குத் திருமணம் ஆகிவிட்டால் அந்தப்பெண் தனது கணவன் வீட்டாரோடு ஒன்றிவிடுகிறாள். கணவனின் கோத்ரமாக(குலமாக) மாறி விடுகிறாள். ஆகவே அது முதல் கணவனுக்கு எது குலதெய்வமோ அதுதான் அந்தப்பெண்ணுக்கும் குலதெய்வம். தனது பிறந்த வீட்டு குலதெய்வத்தை ஆராதிப்பதிலோ ப்ரார்த்தனை செலுத்துவதிலோ தவறில்லை. ஆனாலும் முதலிடம் கணவன் வீட்டு குலதெய்வத்துக்குத்தான்.



# நாளாந்த வாழ்வியலில்.........

## ஹிந்து என்ற சொல் எதைக் குறிக்கின்றது? அதன் சிறப்பு என்ன?

ஹிந்து என்ற சொல், நதியின் பெயரை, சமுத்திரத்தின் பெயரை, சமவெளியின் பெயரை ஒட்டி வந்ததே. நம் நாட்டு நதிகளில் சிந்துவும் ஒன்று. சிந்து நதியை ஒட்டியிருக்கும் சிந்து சமவெளியில் வாழ்ந்தவர்களின் வாழ்க்கை சிந்து சமவெளி நாகரிகம் என்றே வரலாற்றில் இடம் பெற்றிருக்கின்றது. இந்த நாகரிகத்தை ஒட்டியும், சிந்துவில் வாழ்ந்தவர்கள் என்ற வகையில் சிந்து என்ற சொல் ஹிந்து எனத் திரிந்து வழக்கில் வந்திருக்கின்றது எனக் கூறப்படுகின்றது.

ஹிந்து எனப்படுபவன் மனதால் இளகியவன். இரக்க குணம் நிறைந்தவன். பிறரை ஹிம்ஸிக்க நினைக்காதவன்.

ஹிம்ஸாம் தூயதே ஸ: ஹிந்து

என்கின்ற சமஸ்கிருத அடி இதைத்தான் வலியுறுத்துகின்றது. ஹிந்து மதம் மனதளவில் கூட பரந்த மானப்பான்மைக்கு இடம் கொடுக்கும் மதம். ஸ்ரீ விஷ்ணுவின் திரு அவதாரமாகிய ஸ்ரீ கிருஷ்ணர்கூட தத்துவபூர்வமான கருத்துக்களைக் கூறிவிட்டு, அதை அறிவு பூர்வமாக ஏற்றுக் கொள்ளும் பொறுப்பையும் விருப்பத்தையும் அர்ஜுனனுக்கே விட்டு விட்டார்.

ஹிந்து மதக் கடவுளாகிய ஸ்ரீ கிருஷ்ணரே, 'தெய்வ வாக்கே இறுதி வாக்கு' என்று வற்புறுத்தவில்லை. அதே போல, ஹிந்து மதத்தைச் சேர்ந்தவர்களும் யாரையும் எதற்கும் வற்புறுத்த மாட்டார்கள். அறிவுபூர்வமாக எடுக்கப்படும் எந்த முடிவுக்கும் ஹிந்து மதத்தில் பூரணமான சுதந்திரம் உண்டு. அன்பையும், அரவணைப்பையும் ஆதரிப்பது ஹிந்து மதம்.

'செய்யும் தொழிலே தெய்வம்' என்பது மட்டுமல்ல. 'செல்லும் இடமெல்லாம் கோயில்' என்பதும் ஹிந்துவின் நம்பிக்கை.

வித்தைகளைக் கற்றுக் கொள்ளும் இடம் வித்யாலயம்.
வேலைகளை செய்யும் இடம் காரியாலயம்.
வாழும் வழி முறைகளை வகுப்பது மந்திராலயம்.
தெய்வத்தைச் சென்று வழிபடும் இடம் தேவாலயம்.

என இப்படி செல்லுமிடமெல்லாம் கோயில், செய்வதெல்லாம் இறைவனுக்கு அர்ப்பணம் என்று புனிதத்தை மனதில், செல்லும் இடத்தில், செய்யும் செயலில் உண்டாக்கி வாழ்பவன் ஹிந்து.

## கோலம் ஏன் போடுகிறோம்?

பசுஞ்சாணி கிருமிநாசினி. அது, கரைத்து வாசலில் தெளிக்கப்படும் போது,

கிருமிகள் வீட்டுக்கள் நுழையாமல் இருக்க வழி செய்கிறது. காலை வேளை சூரியனின் கதிர்கள் சாணம் தெளிக்கப்பட்ட வாசலில் பட்டு வீட்டுக்குள் வரும்போது நல்ல ஆரோக்கியத்தை தருவதாக அமைகிறது.

சாணம் தெளித்து அரிசி மாவில் கோலம் போட்டு பளிச்சென்று இருக்கும் வாசலில் லஷ்மி அடியெடுத்து வைக்கிறாள் என்பது நம்பிக்கை. கோலத்தில் செம்மண் இடுவது, பகவானையும், தாயரையும் நம் வீட்டிற்கு வரவேற்பது போல் ஆகும்.

கோலம் போட உபயோகிக்கப்படும் அரிசி மாவு சிற்றுயிர்க்கு உணவாகும். ஹிந்துக்களுக்கு சிற்றுயிரை ரட்சித்தலும் ஐந்து யக்ஞங்களில் ஒன்றாகும்.

கோலத்தில் வைக்கப்படும் புள்ளிகளும் அதில் உள்ள நெளிவு சுளிவுகளும் அதைப் போடும் பெண்ணின் மனநிலையை அடையாளம் காட்டும்.

குனிந்து கோலம் போடும் போது நாம் நம் அவயங்களுக்கு வேலை கொடுக்கிறோம். இடுப்புப் பாகத்திற்கும் கால் கைகளுக்கும் பயிற்சி கொடுக்கிறோம். பெண்களுக்கு மணமான பின் குழந்தைப் பேற்றுக்கு இது மிகவும் உதவும். வயதான காலத்தில் மூட்டு வலியைத் தவிர்க்கவும் உதவும்.

இப்படித் தீய சக்திகள் அண்டாமல் காப்பது, உடலுக்கு ஆரோக்கியம் அளிப்பது, சிற்றுயிர்களுக்கு உணவளித்து ரட்சிப்பது, இறை சக்திகளை அருள் பாலிக்க அழைப்பது, வீட்டிற்கு அழகு சேர்ப்பது எனக் கோலம் போடுவதினால் பல நன்மைகள் உண்டு. அதனாலேயே அதை நம் முன்னோர்கள் வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

## ஆரத்தி எப்படி எடுக்க வேண்டும்?

ஆரத்தி எடுக்கும் முறை, கோவிலில் எடுக்கும் ஆரத்தியா அல்லது வீட்டு விசேஷங்களில் எடுக்கும் ஆரத்தியா என்பதைப் பொறுத்து வேறுபடும். கடவுளுக்கு எடுக்கப்படும் ஆரத்தி குங்குமத்தைக் கரைத்து, அதன் நடுவே இரண்டு நெய் ஜோதியை வைத்து எடுக்க வேண்டும். ஆரத்தி எடுத்த பின் அந்த நீரை துளசிச் செடியில் ஊற்ற வேண்டும். பகவானுக்கு ஆரத்தி எடுத்த நீரில் நம் காலடி படக்கூடாது.

வீட்டு விசேஷங்களில் எடுக்கப்படும் ஆரத்தி சுண்ணாம்பு மற்றும் மஞ்சளைக் கரைத்து எடுக்க வேண்டும். பின்னர் அந்த நீரை வீதியில் கொட்ட வேண்டும்.

## ஹிந்து மதத்தில் பசுவிற்கு இத்தகைய முக்கியத்துவம் ஏன்?

பசு தியாகத்தின் சின்னம். நமக்குப் பயன்படாத புல்லையும் வைக்கோலையையும் சாப்பிட்டுவிட்டு நமக்குப் பயனுள்ள பாலைத் தருகிறது. பால், குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அனைவரும் அருந்தக்கூடிய பூரணமான உணவு.

பசுவிடமிருந்து தயிர் நெய் சாணம் முதலிய பயன்படு பொருட்கள் கிடைக்கின்றன. பால, தயிர், நெய், கோஜலம், கோமயம் என்ற ஐந்தும் சேர்ந்து பஞ்சகவ்யம் எனப் புனிதமான அபிஷேகப் பொருளாக ஆகமங்களில் போற்றப்படுகிறது. இது எல்லாவித தோஷங்களிலுமிருந்து நம்மை விடுவிக்கவல்லது.

பிறருக்குப் பயன்படும் வகையில் வாழ்வை அமைத்துக் கொள்ள வேண்டும். அமைதியான அடக்கமான வாழ்வு வாழவேண்டும். சமூகத்திடம் நாம் கேட்பது குறைவாகவும், கொடுப்பது நிறைவானதாகவும் இருக்க வேண்டும் என்பதைப் பசுவின் வாழ்க்கை நமக்கு உணர்த்துகிறது. அதனால்தான் பசுவை கோமாதா என ஹிந்து மதத்தினர் வணங்குகின்றனர்.

## இந்துசமய விழாக்களில் மாவிலை, தோரணம் முதலியன கட்டப்படுவதன் காரணம் என்ன?

நமது சமய விழாக்கள் யாவற்றிலும் அலங்காரம் முக்கிய இடம் பெறுகிறது. அந்த அலங்காரங்கள் வெறுமனே கண்ணைக் கவருவனவாக இல்லாமல் பாரம்பரியப் பழக்க வழக்கங்களைப் பேணுபவையாக இருப்பதே அவற்றின் சிறப்பு.

இவ்வகையான அலங்காரங்களில் முக்கிய இடம்பெறுபவை வாழை மரங்களும் மாவிலை தோரணங்களும் நிறைகுடமும் ஆகும்.

விழா நிகழும் மண்டபத்தைச் சூழவும் கயிறு கட்டி அவற்றில் மாவிலைகளையும் தென்னங்குருத்தினால் செய்த தோரணங்களையும் தொங்கவிடுவார்கள். ஆங்காங்கே வாழைமரங்களைக் கட்டியிருப்பார்கள். இந்த இலைகள் சூழலைக் குளிர்மையாக வைத்துக்கொள்ள உதவுகின்றன. மேலும் விழாக்களின்போது பலர் ஒன்றுகூடுவதால் அங்கு உயிர்வாயுவாகிய ஒட்சிசன் குறைவடையுமல்லவா? இந்தப் பச்சிலைகளிலிருந்து வெளியேறும் உயிர்வாயு காற்றின் நச்சுத் தன்மையை அகற்றிச் சமநிலையைப் பேண உதவுகின்றது.

அதேநேரம் இவை கட்டப்பட்டிருக்கும் முறையிலிருந்து அதனைப் பார்க்கும் ஒருவர் அங்கு நடைபெறும் விழா மகிழ்ச்சிகரமானதா அல்லது மரணச்சடங்கு முதலியனவா என்பதைப் புரிந்துகொள்ளமுடியும்.

பூர்வக் கிரியை என்ப்படும் மங்கலச் சடங்குகளில் மாவிலைகள் உட்புறமாக மடித்துச் சொருகப்பட்டிருக்கும். தோரணங்களின் குருவிகள் நான்கிற்கு மேற்பட்டவையாகவும் மேல்நோக்கியவையாகவும் இருக்கும்.

அபரக் கிரியை எனப்படும் அமங்கலச் சடங்குகளில் மாவிலைகள் வெளிப்புறமாக மடித்துச் சொருகப்பட்டிருக்கும். தோரணங்களின் குருவிகள் மூன்றாகவும் கீழ்நோக்கியும் இருக்கும்.

## பவித்ரம் என்றால் என்ன? தர்பையால்தான் அதைச்செய்ய வேண்டுமா?

நாம் செய்யும் அனைத்தச் செயல்களையும் கையில் பவித்ரம் போட்டுக்கொண்டு செய்ய வேண்டும் என்பது சாஸ்திரம் இதனால் செய்யும் செயல்கள் விரைவாக பலனையளிக்கும்.

பவித்ரம் என்றால் தூய்மைப் படுதல், தூய்மையை ஏற்படுத்தும் தர்பை (குசம்) அறுஹம்புல் தங்கம் ஆகியவற்றை வலது கை மோதிர விரலில் சுற்றிக் கொள்ளுதல், இதற்குத்தான் பவித்ரம் எனப்பெயர்,

தெய்வங்களுக்கான பூஜைகள் ஹோமங்கள் ஸங்கல்பம் ஆகியவற்றைச் செய்யும்போது அவற்றைச் செய்பவர் கட்டாயம் பவித்ரம் அணிந்திருக்க வேண்டும். ஆகவேதான் நமது வீட்டில் நடத்தப்படும் நிகழ்ச்சிகளில் கூட நமக்கு தர்ப பவித்ரம் தந்து, அதை நம்மை அணியச் செய்து, பிறகு நமக்கு ஸங்கல்ப்பத்தை பூஜைகளை செய்து வைக்கிறார் சாஸ்திரிகள்.

குசம் (தர்பை) அறுகம்புல் ஆகியவற்றால் செய்யப்பட்ட பவித்ரங்கள் ஸ்வர்ணத்தால் (தங்கத்தால்) செய்யப்பட்ட பவித்ரத்தின் மஹிமையில் 16ல் ஒரு பங்குக்கு ஈடாகாது. ஆகவேதான் பலர் வலது கை மோதிர விரலில் ஸ்வர்ணத்தாலான மோதிரம் எப்போதும் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். இது எப்போதும் நாம் பவித்ரம் போட்டுக் கொண்டிருப்பதைப் போன்றது. மேலும் குளித்தல் சாப்பிடுதல் ஆகிய ஸமயத்தில் ஜலம் உணவு ஆகியவை தங்கத்தின் மீது படுவதால் உடலுக்கும் மனதுக்கும் ஆரோக்கியத்தை ஏற்படுத்தும்.

## பாவம் என்பது என்ன? பாவமன்னிப்புக்கு இந்து மதம் இடம் கொடுக்கிறதா?

அறிந்து செய்தாலும், அறியாமல் செய்தாலும் பிற உயிர்களைத் துன்புறுத்தும் எந்தச் செயலும் பாவமே ஆகும். மனிதருக்கு மட்டுமே ஆறறிவு உள்ளது. நல்லது எது கெட்டது எது என்பதை ஆராய்ந்து அறிந்துகொண்டு கெட்டதை ஒதுக்கும் அறிவு மனிதர்களுக்கு மட்டுமே உண்டு. ஆனால் பலர் அறியாமல் செய்த பாவம் பாதிக்காது என்றே நினைக்கின்றனர். அது தவறு. பாவத்திற்கு, அதற்குரிய பலன் கிடைத்தே தீரும்.

ஆனால், தவறு செய்தவர் தன் தவறை உணர்ந்து திருந்தி மீண்டும் அதே தவறை செய்யாமல் வாழ்ந்தால் அவர்க்கு மன்னிப்பு நிச்சயம். இது இந்து புராணக் கதைகளில் மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

## ராகு காலம் என்றால் என்ன? அது சமயம் என்ன செய்யலாம்? என்ன செய்யக் கூடாது?

நவக்கிரஹங்களில் ஒன்றான ராகுவின் ஆதிக்கத்திற்கு உட்பட்ட காலமே ராகுகாலம் என வழங்கப்படுகிறது. ஒவ்வொரு நாளும் முப்பது நாழிகையுடைய பகலின் (12 மணிநேரத்தின்) எட்டில் ஒரு பகுதியான மூன்றே முக்கால் நாழிகை (1.30 மணி) ராகு காலம் என்று அழைக்கப்படுகிறது. இது பகலின் அளவான 12 மணி நேரத்திற்கு. இதில் நிகழும் ஏற்ற இறக்கங்களையொட்டி சில நிமிடங்கள் வேறுபடலாம்.

இந்த ராகு நேரத்தில் வெளியூர் பிரயாணம், புதிய காரியம் ஆரம்பித்தல், விவாஹம், உபநயனம், கிருஹப்ரவேசம் மற்றும் அனைத்து மங்கள காரியங்களையும் தவிர்க்க வேண்டும்.

ஆனால் துர்க்கை, அங்காரன் (செவ்வாய்), பைரவர், சண்டிதேவி, ஸ்ரீநரஸிம்ஹர் முதலிய தெய்வங்களை ஆராதிப்பதற்கும், பரிகாரங்கள் செய்து கொள்வதற்க்கும் ராகு காலம் மிக சிறந்தது.

## ஹோரை என்றால் என்ன? அதை எப்படி கண்டு பிடிப்பது?

பகலும் இரவும் சேர்ந்த ஒருநாளுக்கு அஹோராத்ரம் எனப்பெயர். அஹோராத்ரம் என்னும் சமஸ்கிருதச் சொல்லின் நடுவேயுள்ள இரண்டு எழுத்துதான் ஹோரை என்னும் சொல். ஹோரை என்பது ஒரு மணிநேரம்.

இருபத்தி நான்கு மணிநேரத்தையுடைய ஒருநாளில் ஒவ்வொரு மணிநேரமும் நவக்ரஹங்களில் ஒரு க்ரஹம் ஆதிக்கம் செலுத்துகிறது. சூர்யஹோரை என்றால் சூர்யனின் ஆதிக்கத்துக்கு உட்பட்ட நேரம் எனப்பொருள்.

ஒவ்வொருநாளும் காலை சூர்யன் உதயமாகும் நேரம் (காலை 6.00 மணி) முதலாக கணக்கிட்டால் ஒவ்வொருமணி நேரத்துக்கம் ஒவ்வொரு கிரஹத்தின் ஹோரை.

மேலும் அந்தந்த கிழமைக்குரிய கிரஹத்தின் ஹோரையே முதலாவதாக வரும். உதாஹரணமாக ஞாயிறு அன்று

காலை 6.00 முதல் 7.00 மணி வரை சூர்ய ஹோரை
காலை 7.00 முதல் 8.00 மணி வரை சுக்ரஹோரை
காலை 8.00 முதல் 9.00 மணி வரை புதஹோரை

இவ்வாறே திங்களன்று முதலில்
காலை 6.00 முதல் 7.00 மணி வரை சந்திரஹோரை
காலை 8.00 முதல் 9.00 மணி வரை சனிஹோரை
என்று நாள் முழுவதும் இருபத்துநான்கு மணி நேரத்துக்கும் வரிசையாக கண்டு கொள்ளலாம்.

மந்திரி மங்கள மார்தாண்ட சுக்ர க்ஞேந்து சனைஸ்சரா: என்பதாக குரு, செவ்வாய், சூர்யன், சுக்ரன், புதன், சந்திரன், சனி, என்று நவகரஹங்களின் வரிசை க்ரமம்.

இந்த ஹோரைகளில் வெளியூர்பிரயாணம் கிளம்புதல், புதிய செயல் ஆரம்பித்தல், மற்றும் மங்கள செயல்களுக்கு குரு, சுக்ரன், புதன், சந்திரன் ஹோரைகள் நல்லது.

## வாஸ்துசாஸ்த்ரம் என்பது உண்மையா? முன்காலத்தில் இவ்வளவு வாஸ்து பரவியதாக தெரியவில்லையே? இதற்கு பிரமாணம் உண்டா?

வாஸ்துபுருஷன் என்பவர் பகவானின் கணணநீர்த் துளிகளிலிருந்து உண்டானவர் என்றும், இவரிடம் ப்ரும்மா முதலிய அனைத்து தேவர்களும் வாஸம் செய்கிறார்கள். என்றும் ஜ்யோதிஷ சாஸ்திரம் கூறுகிறது. மயமதம், விஸ்வ கர்மா மதம் என்றெல்லாம் வாஸ்து சாஸ்த்ர பிரிவுகள் உள்ளன. ஆகவே வாஸ்து சாஸ்த்ரம் என்பது உண்மையே.

வீட்டை சரியான முறையில் கட்டாததால் உண்டாகும் வாஸ்து தோஷமும் ஒரளவு உண்மைதான். வாஸ்து தோஷம் என்பது எக்காலத்திலும் உண்டு. ஆகவேதான்

நமது முன்னோர்கள் கிராமங்களில் தாங்களின் வீட்டை வாஸ்து சாஸ்திர முறைப்படியே அமைத்துக் கொண்டு வசித்து வந்தார்கள். நகரத்திலும் நமது முன்னோர்கள் வஸித்து வந்த வீடுகள் வாஸ்து சாஸ்த்ரப்படியே அமைந்திருக்கும்.

அவ்வாறு வீடு அமையாமல் இருந்திருந்தாலும் அவர்கள் தினஸரி அந்த வீட்டில் சிவபூஜை, விஷ்ணுபூஜை, மந்திரஜபம், ஔபாசனம் முதலான ஹோமம், பாராயணம் ஆகிய ஸத்காரியங்களை செய்து கொண்டிருந்ததால் வாஸ்து தோஷமானது அவர்களையோ, அந்த வீட்டையோ பாதிக்கவில்லை என்பதே உண்மை நிலை.

நாமும் இவ்வாறு நமதுவீட்டை ஆன்மீக சூழலுடன் கூடியதாக மாற்றிவிட்டால் வாஸ்து தோஷம் நம்மை எதுவும் செய்யாது.

ஆனால் தற்போதுள்ள வீடுகளில் தினஸரி தெய்வ பூஜையோ, ஜபமோ, ஸ்தோத்ர பாராயணமோ, ஹோமமோ நடைபெறாததால் வாஸ்து தோஷமானது நன்கு வெளிப்படுகிறது. ஆகவே வாஸ்து சாஸ்திரமும், வாஸ்து தோஷங்களும், அதற்கான சாஸ்த்ரீயமான பரிகாரங்களும் பலன்களும், உண்மையே!

## வெவ்வேறு விதமான விளக்குகளை வெவ்வேறு எண்ணெய்கள் விட்டு தீபமேற்றினால் வெவ்வேறு பலன்கள் கிடைக்கும் என்று சொல்லப்படுகிறதே, அவை எவை?

ஐந்து திரிகளுடன் விளக்கேற்றினால் குடும்பத்தில் ஒற்றுமை நிலவும், கல்யாணம் நடக்கும். நஷ்டமான பொருள் திரும்ப கிடைக்கும்.

செடி விளக்கு ஏற்றினால் குடும்பத்தில் எல்லோர்க்கும் சௌபாக்கியம் கிடைக்கம். புத்திரர்களுக்கு நன்மை உண்டாகும்.

தொங்கும் சரவிளக்கில் நெய்தீபம் ஏற்றினால் பாபங்கள் தீர்ந்து புண்ணியம் கிடைக்கும்.

நெய் விளக்கேற்றினால் நினைத்தது கைகூடும்.

நல்லெண்ணெயால் விளக்கேற்றினால் ஆரோக்கியம் கிடைக்கும்.

தேங்காய் எண்ணெயால் விளக்கேற்றினால் அழகு கூடும்.

இலுப்பெண்ணெயால் விளக்கிகேற்றினால் மறுபிறப்பிலும் நன்மை கிடைக்கும்.

## ருத்ராக்ஷ மாலையைப் போட்டுக்கொண்டே ஸ்நானம் செய்யலாமா?

தாராளமாகச் செய்யலாம், இதனால் தவறேதுமில்லை. ருத்ராட்ச மாலையின் மீது விழுந்த ஜலம் கங்காஜலத்துக்கு ஸமானம் என்று இருப்பதால் குளிக்கும்போது கூட ருத்ராத்தை கழுத்தில் போட்டுக் கொண்டிருக்கலாம். ஆனால் வஸ்திரமில்லாமல் குளிக்கக்கூடாது என்பதை கவனத்தில் கொள்ளவேண்டும்.

## பெண்கள் குங்குமம் இட்டுக்கொள்வதற்கு மந்திரம் ஏதும் உண்டா? தாத்பர்யம் என்ன?

பெண்களுக்கு மங்களத்தையும் அழகையும் தரக்கூடிய பொருள்களில் குங்குமம் முக்கியமானது. சுமங்கலிப் பெண்கள் நெற்றியில் எப்பொழுதும் குங்குமத்தோடு இருந்தால் மஹாலக்ஷ்மியின் அருள் கிட்டும். மற்றவர்களின் பொறாமை போன்ற தீய பார்வையால் ஏற்படும் திருஷ்டி தோஷங்கள் விலகி கணவருக்கு நீண்ட ஆயுளைப் பெற்றுத்தரும்.

கிழக்கு திசையை நோக்கியவாறு அமர்ந்துகொண்டோ, நின்றுகொண்டோ குங்குமத்தை இரண்டு கண் புருவங்களுக்கு நடுவிலும், உச்சந்தலையிலும், ஸ்ரீம் ஸ்ரீயை நம: சுபம் பூயாத் என்னும் மந்திரம் கூறி குங்குமத்தை இட்டுக் கொள்ள வேண்டும்.

## திருமாங்கல்யச்சரடு பழுதானால் எந்தெந்த நாட்களில் புதியது மாற்றிக் கொள்ளலாம்?

மஞ்சள் கயிற்றில் திருமாங்கல்யத்தைக் கோத்துப் போட்டுக் கொள்வது பர்த்தாவின் (கணவனின்) ஆயுளையும், தனது ஆயுளையும் அதிகரிக்கும்.

பொதுவாக ஆண்களுக்கு பூணலும், பெண்களுக்கு திரு மாங்கல்யச்சரடும் எப்பொழுதும் தூய்மையாகவே இருக்க வேண்டும். அவைகளில் (சாவி, ஊசி போன்ற மற்ற) எந்த ஒரு பொருளையும் சேர்க்கக்கூடாது. மேலும் அதில் நிறைய அழுக்கு சேர்ந்தாலோ அறுந்து விட்டாலோ அதை மாற்றிப் புதியதைப் போட்டுக் கொள்ளலாம்.

திங்கள், செவ்வாய், வியாழக் கிழமைகளில் காலையில், சாப்பாட்டுக்கு முன்பாக, தெய்வஸந்நிதியில் கிழக்கு நோக்கி அமர்ந்துகொண்டு புதிய திருமாங்கல்யச் சரட்டை மாற்றிக் கொள்ளலாம். பொழுது ஸாயும் மாலை இரவு நேரங்களிலும், ராகுகாலம் யம கண்டம் போன்ற நேரங்களிலும் கூடாது.

## சுவாமி திரு உலா வரும் வேளையில் வைக்கின்ற நிறைகுடத்தை உடனேயே சுவாமிக்குமுன் பூமியில் சொரிகின்றனரே, இது சரியா?

மிகத் தவறான இந்தச் செயல் பரவலாக நம்மிடையே நாளாந்தம் செய்யப்படுகிறது. அறியாமையும், சரியானதை வலியுறுத்தி அறிவுறுத்த ஆட்கள் இல்லாமையும்தான் இதற்குக் காரணம்.

நிறைகுடம் என்பது நிறைவானது. மங்கலப் பொருட்களைக் கலைப்பது எந்த நல்ல காரியத்திலும் செய்யப்படுவதில்லை. நிறைகுடம், கும்பம், பாததீர்த்தம் என்பவற்றின் வேறுபாடுகளை நம்மவர்கள் அறியவேண்டும். மங்கலமாக வைக்கப்பட்ட நிறைவான நிறைகுடத்தின் புனித நீரைக் கீழே கொட்டிக் கால்களால் மிதிக்கலாமா?

இறைவனுக்குப் பாததீர்த்தம் வழங்குகின்றோம் எனச் சிலர் விளக்கம் கூறுகின்றனர். அவ்வாறாயின் இரண்டு ஐயங்கள் எழுகின்றன. பாததீர்த்தம் யாரும்

வழங்கலாமா? அதற்கு அதிகாரமுடையவர் குருவே. அடுத்தது, எப்போது பாததீர்த்தம் வழங்குவது. ஒருவர் எமது இடத்திற்கு வரும்போது அவரை வரவேற்கும்போதுதான் பாததீர்த்தம் வழங்கவேண்டும். இறைவன் வீதி உலா முடிந்து திரும்பவும் உள்ளே வரும்போது குரு பாததீர்த்தம் வழங்கி வரவேற்கிறார். அப்படியிருக்க உங்கள் இல்லத்திற்கு எழுந்தருளிய ஆண்டவனுக்கு நிறைகுடம் வைத்து வரவேற்று நிவேதனம் செய்து அர்ச்சனை செய்தபிறகு பாததீர்த்தம் வழங்கி வழியனுப்பி வைப்பதா?

எனவே, நிறைகுடத்து நீரை அப்படியே வைத்திருந்து பின்னர் கால்படாத இடங்களில் ஊற்றுவதே முறை.

## இடது பக்கம் ஒருக்களித்துப் படுப்பது நல்லது என சொல்லப்படுவது ஏன்?

நாடி சாஸ்திரத்தின் முக்கியமான அம்சம் இது. வலது நாசி வழியே மூச்சு வந்தால், மனநிலை அமைதியாக, நல்ல எண்ணங்களோடு இருக்கும் என நாடி சாஸ்திரம் சொல்கிறது.

இடது பக்கமாகப் படுக்கும் போது, உடல் பாகங்கள் அழுத்துவதால் சுவாசம் இடது நாசி வழியே வராது. வலது நாசி வழியாகவே வரும். எனவே தான் இடது பக்கம் ஒருக்களித்துப் படுப்பது நல்லது எனக் கூறப்படுகிறது.

## தினஸரிபடுத்துக் கொள்ளும் போது எந்ததிசையில் தலையை வைத்து படுத்துக் கொள்ளலாம்?

இரவில் நாம் படுத்துக் கொள்ளும் இடத்திற்கேற்ப தலைவைத்துப் படுக்க வேண்டும். அதாவது

**ஸ்வக்ருஹே ப்ராகக்ரா: ஹ்யாயுஷ்யம் தக்ஷிணாக்ரா:**
**ப்ரத்யக்ரா: ப்ரவாஸே து ந கதாசித் உதக்ரா:**

தனது வீட்டில் படுக்கும் போது கிழக்கு திசையிலும்
மாமனார் வீட்டில் படுக்கும்போது தெற்கு திசையிலும்
வெளியூர் ப்ரயாணத்திலும் வெளியூரில் தங்கும்போதும் மேற்குத் திசையிலும் தலையை வைத்துக்கொண்டு படுத்துக்கொள்ள வேண்டும்.

ஆனால் ஒரு இடத்திலும் ஒரு போதும் வடக்கு திசையில் தலை வைத்துப் படுக்கக்கூடாது. என்கிறது தர்மசாஸ்திரம். இதையே வாஸ்து சாஸதிரமும் உறுதிப்படுத்துகிறது.

## வடக்குத் திசையில் தலை வைத்து ஏன் படுக்கக் கூடாது?

காந்த முள் வடக்கு நோக்கியே இருக்கும். வடக்குத் திசையில் மின்னணு, காந்தக் கதிர்கள் இருப்பதால் தலையை அந்த திசையில் வைத்துப் படுத்தால், அந்தக் கதிர்கள் மூளையைப் பாதிக்கும். எனவே தான் வடக்குத் திசையில் தலை வைத்து படுக்கக்கூடாது என விஞ்ஞான பூர்வமாகக் கூறுகின்றனர்.

## தாமரை இலையில் உணவு உட்கொள்ளளாமா?

திருமணமானவர்கள் தாமரை இலையிலோ மற்றும் புரச மரத்து இலையிலோ வைத்துக்கொண்டு எதையும் சாப்பிடக்கூடாது. ஆனால் ப்ரஹ்மசாரிகளும் ஸன்யாஸிகளும் தாமரை இலையில் தாராளமாக சாப்பிடலாம்.

## எந்த திசை நோக்கி உட்கார்ந்து கொண்டு சாப்பிடுவது சிறந்தது?

**ப்ராங்முகோ (அ)ந்நானி புஞ்ஜீத உச்சரேத் தக்ஷிணாமுக**
**உதங்முகோ மூத்ரம் குர்யாத் ப்ரத்யக் பாதாவநேஜநம்**

பொதுவாக ஒவ்வொரு செயலுக்கும் ஒவ்வொரு திசை சிறந்தது என்கிறது சாஸ்த்ரம். அதவாது சாப்பிடும் போது கிழக்கு நோக்கியும், வேதம் சொல்லும் போது தெற்கு நோக்கியும், மூத்ர விஸர்ஜனம் செய்யும் போது வடக்குதிசை நோக்கியும், கால்களை அலம்பும்போது மேற்கு திசை நோக்கியும் செய்வது உத்தமம் என்கிறது சாஸ்த்ரம். மேலும்

**ஆயுஷ்யம் ப்ராங்முகோ புங்க்தே யஸஸ்யம் தக்ஷிணா முக:**
**ஸ்ரீயம் ப்ரத்யங்முகோ புங்க்த ருதம் புங்க்த உதங்முக:**

என்கிற ஆபஸ்தம்ப தர்ம ஸூத்ர வசனப்படி

நீண்ட ஆயுளைப்பெற விரும்புபவர் கிழக்கு திசையை பார்க்க உட்கார்ந்து கொண்டு சாப்பிட வேண்டும்.

நல்ல புகழை அடைய வேண்டும் என்று விரும்புபவர் தெற்கு திசையை நோக்கி அமர்ந்து கொண்டும்.

நிறைய செல்வத்தை விரும்புபவன் மேற்கு திசையை நோக்கி அமர்ந்து கொண்டும் சாப்பிட வேண்டும்.

ஆனால் எக்காரணம் கொண்டும் வடக்கு திசையை நோக்கி அமர்ந்து கொண்டு சாப்பிடக்கூடாது என்று தெரிகிறது.

## காக்கைக்குச் சோறு இட்ட பின் நாம் சாப்பிடுவது ஏன்?

காக்கைக்கு சாதம் இடும் வழக்கம் காலம் காலமாக இருந்து வருகிறது. தனக்குக் கிடைக்கும் சிறு உணவையும் பங்கு போட்டு உண்ணும் பெருமையான குணம் காக்கைகளுக்கே உண்டு. அந்தக் குணத்தைப் போற்றியே, நாம் உண்ணும் முன் காக்கைக்கு உணவு இடுகிறோம்.

பித்ரு காரியங்களின்போது காக்கையை அழைத்து உணவிடுவர். காக்கைகள் சாப்பிட்டால் பித்ருக்களே சாப்பிட்டதாக நினைத்து திருப்தி அடைவர். காக்கைக்கு உணவளிப்பதால் பல விசேஷ பலன்கள் கிடைப்பதாகப் புராணங்களில் கூறப்பட்டுள்ளது.

## அக்ஷய த்ருதீயையன்று கடையில் கட்டாயமாக ஸ்வர்ணம் (தங்கம்) வாங்க வேண்டுமா?

க்ஷயம் என்றால் குறைவு அக்ஷயம் என்றால் குறைவில்லாதது எனப் பொருள். வைகாசி மாதம் சுக்லபக்ஷ த்ருதீயை திதியே அக்ஷய தருதீயை எனப்படுகிறது.

அன்று எந்தச் செயலைச் செய்தாலும் அது குறைவில்லாமல் வளரும். ஆகவே தான் அன்று தெய்வ வழிபாடு, பூஜை, ஹோமம், அன்னதானம் முதலியன செய்ய வேண்டும் என்றும் இதனால் குறைவில்லாத பலன் கிட்டும் என்றும் சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. அன்று புதியதாக சிறிதளவாவது ஸ்வர்ணம் (தங்கம்) வாங்கி சிறியவர்களுக்கு ஆசீர்வாதமாகத் தருவதும் குடும்பத்தில் செல்வத்தை வளர்க்கும்.

மேலும் அன்று கடைக்குச் சென்று தங்கத்தை வாங்குவதை விட ஏழைகளுக்கு அன்னதானம் செய்வதும் தண்ணீர் பந்தல் அமைத்து குடிக்க ஜலம் வழங்குவதும், குறைவற்ற பலனைப்பெற்றுத்தரும் என்கிறது சாஸ்த்ரம்.

## தீபாவளியன்று சாஸ்திரப்படி எண்ணை தேய்துக் குளிக்கும் முறை எவ்வாறு?

ஒரு போதும் சூர்யன் உதிப்பதற்கு முன்பு எண்ணை தேய்துக் குளிக்கக் கூடாது. ஆனால் தீபாவளியன்று மட்டும்

**தைலே லக்ஷ்மீர் ஜலே கங்கா தீபாவள்யாஸ் சதுர்தசீம்**

என்று தீபாவளியன்று மட்டும் நல்லெண்ணையில் மஹாலக்ஷ்மியும், ஜலத்தில் கங்கையும் வஸிப்பதால், சூர்ய உதயத்துக்கு முன்பே எழுந்து, பல்தேய்து, நல்லெண்ணை தேய்துக்கொண்டு சாதாரண ஜலத்தில் அல்லாமல் வெந்நீரினால் ஸ்நானம் செய்ய வேண்டும்.

பொதுவாக எண்ணை தேய்துக் கொள்ளும் முன்பாக கிழக்கு திசை நோக்கி அமர்ந்துகொண்டு

**அசுவத்தாமா பலிர் வ்யாஸ: ஹனுமாந்ஸ்ச விபீஷண**
**க்ருப: பரசுராமஸ்ச ஸப்தைதே சிரஜீவின:**

என்று சொல்லிக்கொண்டு எண்ணெய் தேய்க்கவேண்டும்.

## ஜன்ம நக்ஷத்ரத்தன்று (பிறந்த நாளன்று) வெளியூர் பிரயாணம் புறப்படலாமா?

பிறந்த நக்ஷத்ரமானது ஜன்ம நக்ஷத்ரம் என்று கூறப்படுகிறது. இது ஒவ்வொருமாதமும் வரும். ஜன்ம நக்ஷத்ரத்தன்று ஒரு சிலவற்றை தவிர்க்க வேண்டும். அதாவது

க்ஷெளரம் (வபனம்) செய்து கொள்ளுதல், வெளியூர்ப் பிரயாணம் புறப்படுதல், வைத்யம் (ஆபரேஷன்) செய்து கொள்ளுதல் ஆகியவற்றை ஜன்ம நக்ஷத்ரத்தன்று தவிர்க்க வேண்டும்.

## வாஸ்து என்றால் யார்? ஏன் இவரை பூஜை செய்ய வேண்டும்?

வாஸ்து என்பது ஒரு ஆண் தெய்வத்தின் பெயர். வாஸ்துபுருஷன் என்றும் இவர் அழைக்கப்படுகிறார். இவரைப்பற்றி பல புஸ்தகங்களில் பல சரித்ரங்கள் கூறப்பட்டிருக்கின்றன, அவற்றில் மாத்ஸ்ய புராண வரலாற்றைக் காண்போம்.

கைலாஸ வாஸியான பரமேஸ்வரன் அந்தகாஸுரனுடன் போரிட்டு அவனை வெற்றி கொண்டார். அப்போது சிவபெருமானின் நெற்றியிலிருந்து பெருகிய வியர்வைத் துளிகள் பூமியில் வீழ்ந்தன. அவற்றிலிருந்து பயங்கரத் தோற்றம் உள்ள ஒரு பூதம் தோன்றியது.

அந்த பூதம் தன் பசியை தணித்துக்கொள்ள யுத்த பூமியில் வீழ்ந்து கிடந்த அனைத்தையும் சாப்பிட்டது, அதன் பின்னரும் கூட அதன் பசி தணியாததால் சிவபெருமானைக் குறித்து தபஸ் செய்தது. தபஸ்ஸால் மகிழ்ந்து அதன்முன் தோன்றிய சிவபெருமான் 'வேண்டிய வரம் கேள்' எனக் கூறியதும், அந்த பூதம் 'மூன்று உலகங்களையும் எரித்து அழிக்கும் சக்தி எனக்கு ஏற்பட வேண்டும்' எனக் கேட்டது, சிவபெருமானும் 'அவ்வாறே ஆகுக' என வரமளித்தார்.

அந்த பூதமும் மூன்று உலகங்களையும் அழித்துவிடும் விதத்தில் முதலில் பூமியை விழுங்க முற்பட்டபொழுது, ப்ரம்ஹா முதலிய தேவர்கள் அதனைத் சூழ்ந்து நின்று அதனைக்கட்டி பூமியில் குப்புறத்தள்ளி, பூதத்தின் உடல்மீது அழுத்திப் பிடித்துக் கொண்டு மீண்டு எழாதவாறு செய்தனர்.

கவிழ்ந்த தலையுடன் பூமியில் குப்புறப்படுத்த நிலையில் உள்ள அந்த பூதம், தேவர்களை நோக்கி, 'இந்த நிலையில் உள்ள எனக்கு, என்ன உணவு?' எனக் கேட்க, ப்ரம்ஹா முதலானோர், பூமியில் உள்ளோர் வீடு முதலான கட்டிடங்கள் கட்டுவதற்கு முன், மனைப் பகுதியில் செய்யும் பூஜையில் வழங்கும் (பலி) பொருள்களும், அந்தணர்கள் அன்றாடம் செய்யும் வைச்வதேவ ஹோமத்தில் வழங்கும் பலியும் விதிமுறையின்றி செய்யப்படும் யாகங்களில் வழங்கப்படும் பொருளும் உனக்கு உணவாக ஆகட்டும் என்று கூறினார்கள்.

ப்ரம்ஹா முதலான 45 தேவர்கள் அந்த பூதத்தை மீண்டும் எழுந்துவிடாதபடி அதன்மீது அமர்ந்து பிடித்துக்கொண்டு அங்கேயே வஸித்தபடியால் அந்த பூதம் அதுமுதல் வாஸ்து என்றும் வாஸ்து புருஷன் என்றும் வழங்கப்படலாயிற்று. கட்டிடம் கட்டப்படுவதற்கு முன்பும் குடிபுகுவதற்கு முன்பும் செய்யப்படும் பூஜையும், ஹோமமும் வாஸ்துபூஜை, வாஸ்துஹோமம் என்றும் வழங்கப்பட்டது.

## க்ரஹணத்தின் போது என்ன செய்ய வேண்டும்? என்ன என்ன செய்யக்கூடாது?

ஸுர்யக்ரஹணம் மற்றும் சந்த்க்ரஹனம் நிகழும் நேரத்தில் எந்த செயல்களை செய்யலாம்? எவற்றை செய்யக் கூடாது? என்று ஒரு சில ஆராய்ச்சியாளர்களும், பாமரர்களும் கூறுவதை நாம் கேட்பதற்கு முன்பாக யோகிகளான நமது மஹர்ஷிகள்

என்ன சொல்கிறார்கள் என்பதை காண்போம்.

**க்ரஸ்தமாநே ரவௌ ஸ்நாயாத் முச்ய:மாநே நிஸாகர:**
**ஸுர்யேந்து க்ரஹணம் யாவத் தாவத் குர்யாத் ஜபாதிகம்**
**ந ஸ்வபேத் ந து புஞ்ஜீத ஸ்நாத்வா புஞ்ஜீத முக்தயோ:**

சந்த்ர, ஸுர்ய க்ரஹணங்கள் நிகழும் நேரத்தில் நமது உடலிலும் மற்றும் சுற்றுப்புறங்களிலும் சூர்ய சந்த்ரர்களின் கொடிய கிரணங்களால் ஒருசில தோஷங்கள் ஏற்படுகின்றன என்றும், இவைகள் நமக்கு நீண்ட நோய்களை வரவழைக்கலாம் என்பதால், க்ரஹணம் துவங்கியவுடனேயே ஜாதி மதமின்றி, ஆண்கள், பெண்கள், குழந்தைகள், முதியோர்கள் முதலிய அனைவரும் (பிறப்பு - இறப்பு - மாதத்தீட்டு) காப்பவர்களும் கூட) கட்டாயம் (நதியில்) ஸ்னானம் செய்யவேண்டும் என்றும், க்ரஹணம் முடிந்தபிறகு மறுபடியும் ஒருமுறை ஸ்னானம் செய்யவேண்டும் என்றும் கூறுகின்றன சாஸ்த்ரங்கள். மேலும் ஒவ்வொருவரும்

க்ரஹணம் துவங்கும்நேரம் முதல் க்ரஹணம் முடியும் நேரம் வரையில் படுத்து உறங்கக்கூடாது.

கிரஹண ஸமயத்தில் நமது வயிற்றில் உள்ள உணவுகள், நமக்கு நோயை வரவழைக்கும் என்பதால், கிரஹணம் துவங்குவதற்கு சில நேரங்கள் முன்பு முதல், கிரஹணம் முடியும் வரை, எந்த பொருளையும் சாப்பிடக்கூடாது.

கிரஹணத்தின் போது ஜலமல விஸர்ஜனம் செய்யக்கூடாது

கிரஹண காலத்தில் மற்றவர்களுடன் காரணமின்றி பேசக்கூடாது.

கிரஹணம் ஆரம்பம் முதல், கிரஹணம் முடியும் வரையில் தெய்வ ஸம்பந்தமாக ஸ்தோத்ர பாராயணங்கள், (உபதேசம் பெற்றுக்கொண்ட) மந்த்ர ஜபங்கள், ஏழைகளுக்கு தானங்கள், பித்ருக்களுக்கு தர்பணம், முதலியவற்றைச் செய்யலாம்.

## குறிப்பிட்ட நாளன்று கட்டாயம் ஒரு செயல் செய்ய வேண்டியதாயின் அன்று அதைச்செய்யக் கூடாத நாளாக இருந்தால் என்ன செய்யலாம்?

நீண்டதூர பிரயாணம் - வீட்டு மங்கள நிகழ்ச்சிகள் - முக்கியமான செயல்கள் போன்றவற்றை கரிநாள் - அஷ்டமி நவமி - பரணி – கிருத்திகை – போன்ற நாட்களிலும், ராகுகாலம், யமகண்டம் தியாஜ்யம் போன்ற நேரங்களிலும் செய்யக் கூடாது, ஆனாலும் அன்று அந்த நேரத்தில் கட்டாயம் அதைச் செய்ய வேண்டியதாக இருந்தால் ப்ராத்தனை செய்து விட்டு கீழ்கண்ட நேரங்களில் செய்யலாம் என்கிறார்கள் மஹர்ஷிகள்

**உஷ: ப்ரஸ்யமே க³ர்க: குநம் ச ப்³ருஹஸ்பதி:**
**அங்கி³ரா ச மநோத்ஸாஹ: விப்ரவாக்யோ ஜநார்தன:**

ஸூர்ய உதயத்துக்கு ஒன்றரை மணி நேரம் முன்பு முதல் ஸூர்ய உதயம் வரை உஷ:காலம் எனப்படும். இந்த நேரம் அனைத்து தோஷங்களையும் போக்கக்கூடியது ஆகவே உஷ:காலத்தில் அனைத்தையும் செய்யலாம் என்கிறார் கர்க்க மஹர்ஷி. ப்ருஹஸ்பதி என்பவரோ செயலைச் செய்யும் முன்பாக பறவைகள் விலங்குகள் மூலம் தீர்மானிக்கும் சகுனத்தை பரிசீலித்து அது நன்றாக இருந்தால் செய்யலாம் என்கிறார். அங்கிரஸ் என்னும் மஹர்ஷியோ செயலைச் செய்பவரின் மனம் உத்ஸாகமாக இருந்தால் அதுவே அந்தச் செயலைச் செய்ய நல்ல நேரம் என்கிறார். ஜனார்தனனோ (கிருஷ்ணரோ) வேதம் - சாஸ்திரம் கற்ற பெரியோரிடம் கேட்டு அவர் வாக்கால் - இப்போது நல்ல நேரம் இதைச் செய்யலாம் - என்று சொல்லி விட்டால் அதையே பிரமாணமாகக் கொண்டு செயல்களைச் செய்யலாம் என்கிறார். ஆனால் மேற்கூறிய வழிமுறைகளை ஆபத்தான காலத்தில் மட்டுமே உபயோகிக்கலாம்

## மனைவி மாதவிலக்காக இருக்கும் நாட்களில் கணவன் கோவிலுக்குப் போகலாமா?

மாதவிலக்கு என்பது அந்தப் பெண்ணுக்கு மட்டும் நான்கு நாட்களுக்கு உள்ள தீட்டு ஆகும். ஐந்தாம் நாள் எண்ணெய் தேய்த்து அல்லது பால் வைத்து முழுகியபின் அவள் சுத்தமாகிறாள். அதன்பின் அவளுக்கு எவ்வித விலக்கும் இல்லை.

அந்த நான்கு நாட்களும் அவள் **வீட்டு விலக்கு** என்ற சொல்லுக்கு இணங்க விலகி இருத்தல் வேண்டும். கோவிலுக்கு மட்டுமல்லாமல் பொது வைபவங்கள், மங்கல நிகழ்வுகளில் கலந்துகொள்ளாமல் வீட்டு வேலைகளில் ஈடுபடாமல் ஒதுங்கி இருக்கவேண்டும் என்பதே முறை. மற்றவர்கள் அவளுடன் தொடாமலும் (முட்டாமலும்), உடுப்புகள் சேர்த்துப் புழங்காமலும் இருக்கவேண்டும். அவ்வாறிருப்பின் கணவனுக்கோ மற்றவர்களுக்கோ எந்தத் துடக்கும் இல்லை. அவர்கள் ஆலயம் செல்லலாம்.

ஆனால், மாதவிலக்கான பெண்ணே வீட்டுக் காரிய மனைத்தையும் செய்ய, அவளால் சமைக்கப்பட்ட உணவை மற்றவர்கள் சாப்பிடுகிற சந்தர்ப்பம் இருக்குமாயின் மற்றவர்களுக்கும் அந்தத் துடக்கு உண்டு. அவர்கள் ஆலயம் செல்வதைத் தவிர்க்கவேண்டும்.

## கர்ப்பிணிப் பெண்கள் கோவிலுக்குச் செல்லக் கூடாதா? கர்ப்பவதிகள் விரதம் அனுட்டிக்கலாமா? தாய்மையடைந்திருக்கும்போது ஆலயத்திற்குச் செல்லலாமா?

கர்ப்பிணிகள் சுமார் நான்கு மாதம் நிறைந்து ஐந்து மாதம் ஆகியபின் கோவில் வாசலுக்குப் போவதும், அவசியமில்லாமல் வெளியிடங்களுக்குச் செல்லுதலும், அந்திப் பொழுதுகளில் வீட்டிற்கு வெளியே வருவதும் விரும்பத் தக்கதல்ல.

விரத அனுட்டானங்களிலிருந்தும் அவர்களுக்கு விலக்களிக்கப்பட்டுள்ளது. குழந்தை என்னும் தெய்வத்தை ஊட்டி வளர்க்கும் கடப்பாடு அவர்களுக்கு இருப்பதால் கர்ப்பிணிகளும் பாலூட்டும் தாய்மாரும் விரதம் அனுட்டிப்பது பெரியவர்களுக்குச் சம்மதமில்லை.

முப்பத்தொரு நாட்களில் தாயின் துடக்கு நீங்குவதில்லை. நாற்பத்தொரு நாட்களின் பின்னரே தாயும் குழந்தையும் கோவிலுக்கு முதல்முதல் செல்ல அனுமதிக்கப்படுகிறார்கள்.

## கர்ப்பிணிகளின் கணவன்மாருக்கும் இத்தகைய கட்டுப்பாடுகள் உண்டா?

ஆலயம் செல்வதற்கு அவர்களுக்கு எவ்வித தடையுமில்லை. ஆனால், ஆறு மாதத்திற்கு மேற்பட்ட கர்ப்பிணிப் பெண்களின் கணவர்கள் ஆலயத்தில் காப்புக் கட்டுதல், பவித்திரம் அணிந்து கிரியைகளில் கலந்துகொள்ளுதல் என்பவை தவிர்க்கப்படுவது நன்று.

## கர்ப்பிணிகள் மோதகம் பிடிக்கக் கூடாது என்று சிலர் சொல்கிறார்களே இதன் தாத்பர்யம் என்ன?

அப்படி ஒரு கட்டுப்பாடும் இருப்பதாகத் தெரியவில்லை.

## மனைவி கர்ப்பமாக இருக்கும் போது கணவன் என்னென்ன செயல்களை (எப்போது முதல்) செய்யக் கூடாது?

மனைவி கர்ப்பமாக (கருவுற்று) இருக்கும் போது கர்ப்ப காலத்திலிருக்கும் குழந்தையின் நன்மைக்காகவும், கர்ப்பிணிப் பெண்ணின் நலனுக்காகவும் கணவன் ஒருசில கார்யங்களை செய்யக்கூடாது என்கிறது சாஸ்த்ரம். இதற்கு கர்ப்ப தீக்ஷா நியமம் எனப்பெயர் அதாவது

**க்ஷெளரம் ஸவாநுகமனம் தூரயாத்ராம் ப்ரதிக்ரஹம்**
**ஸ்ராத்தம் ச ஸாகர ஸ்நானம் ப்ரேத நிர்ஹரணம் ததா**
**க்ருஹாரம்ப ப்ரவேஸெள ச வர்ஜயேத் கர்ப்பிணீ பதி:**

கர்ப்பிணிப் பெண்ணின் கணவன் க்ஷவரம் செய்து கொள்ளுதல், பிணத்தின் பின்னால் செல்லுதல், (வெகு) தூர தேசத்திற்கு பிரயாணம் செல்லுதல், தானம் வாங்கிக் கொள்ளுதல், ச்ராத்தம் சாப்பிடுதல், ஸமுத்திரத்தில் நீராடுதல், பிணத்தை சுமந்து (தூக்கி)ச் செல்லுதல், புதிய வீடுகட்ட ஆரம்பித்தல், புதிய வீட்டுக்கு குடிபுகுதல், ஆலயத்தில் தேவதா ப்ரதிஷ்டை செய்தல், (ஸ்வாமி தர்சனம் செய்ய) மலை மீது ஏறுதல் முதலான செயல்களை தான் தனது மனைவி மற்றும் பிறக்கப் போகும் குழந்தையின் நன்மைக்காகத் தவிர்க்க வேண்டும்.

**துரீய மாஸாதாரப்ய நகுர்யாத் கர்ப்பிணீ பதி:**
**த்வதீயே கர்ப்பே ஸம்ப்ராப்தே பஞ்சமாஸாத் விவர்ஜயேத்**
**அந்யே து கர்ப்பே ஸம்ப்ராப்தே ஸப்தமாஸாத் விவர்ஜயேத்**

என்னும் வசனப்படி இந்தக் கட்டுப்பாடுகளை முதல் குழந்தை கர்ப்பத்திலிருக்கும்போது நான்காவது மாதம் முதல் கடைப்பிடிக்க வேண்டும்.

இரண்டாவது (குழந்தை) கர்ப்பமாக இருக்கம் போது ஐந்தாவது மாதம்

முதற்கொண்டும் மூன்றாவது மற்றும் நான்காவது குழந்தை கர்ப்பத்திலிருக்கும் போது ஏழாவது மாதம் முதற் கொண்டும் கர்ப்பதீக்ஷா நியமங்களை கடைப் பிடிக்க வேண்டும். இவ்வாறு கட்டுப்பாடுகளை கடைப்பிடிப்பதால் கர்ப்பமாக இருக்கும் மனைவிக்கும், கர்ப்பத்திலிருக்கும் குழந்தைக்கும் நீண்டஆயுளும், ஆரோக்யமும் ஏற்படும் என்கிறது கௌதம ஸ்மிருதி.

**திருமணச் சடங்குகளில் மணமகனுக்குத் தலைப்பாகை வைத்தல் மற்றும் முக்கிய சந்தர்ப்பங்களில் தேங்காய் உடைத்தல் முதலிய செயற்பாடுகளில் யாருக்கு முக்கியத்துவம் உண்டு?**

பொதுவாக, மணமகன், மணமகள் இருவரதும் தாய் மாமனுக்கே இக் காரியங்களில் உரிமைப்பாடு உண்டு.

**நாமகரணம் என்னும் பெயர் சூட்டும் விழா எப்போது நடைபெறவேண்டும்? யார் அதனைச் செய்ய வேண்டும்?**

அந்தணர்கள் தமது குழந்தைகளுக்குப் பதினோராம் நாள் ஆசௌசக் கழிவின்போது செய்வதுபோல, ஏனையோர் தமது முப்பத்தோராவது நாளில் துடக்குக் கழிவு வைபவத்தின்போது பெயர்சூட்டுதலைச் செய்வதே பொருத்தம். தாய்மாமன் முதலில் ஆரம்பித்து வைக்கப் பின்னர் ஏனையோர் வயது மற்றும் உரிமை அடிப்படையில் குழந்தையின் வலது காதில் அந்தப் பெயரை மும்முறை கூப்பிட்டு இந்த நிகழ்வை நடத்துவர்.

**நமது இல்லத்தில் திருமணத்திற்கு நாள் வைத்தபின் இன்னொருவரின் திருமண விழாவிற்கு நாம் போகலாமா?**

தாராளமாகப் போகலாம். அதுவும் மங்கல காரியம். இதுவும் மங்கல காரியம். இரு பகுதியினரும் ஒருவருக்கொருவர் உதவி செய்வதும் போய் வருவதும் அவசியமானதொன்றே. எவ்வித தப்புமில்லை. ஆனால் திருமணத்திற்குப் பொன்னுருக்கல், பந்தற்கால் நடுதல் ஆகிய வைபவங்கள் நடைபெற்றால் அதன்பின் மணமகன், மணமகள் இருவரும் மட்டும் பொதுவாக எங்கும் செல்லாமல் வீட்டிலேயே இருத்தல் வேண்டும் என்பது நடைமுறையிலுள்ளது. கண் திருஷ்டி முதலியவற்றைக் கருத்திற்கொண்டு இவ்வழக்கம் வந்திருக்கலாம்.

**புதுமணத் தம்பதிகள் திருமணத்தின்பின் எப்போது முதல்முதல் கோவில் வழிபாட்டிற்குப் போகலாம்?**

திருமணச்சடங்கு முடித்தவுடனேயே அருகிலுள்ள ஆலயத்திற்குச் செல்கின்ற வழக்கம் சிலரிடம் உண்டு. அது வரவேற்கத் தக்கதே. அது தவறினால் அடுத்தநாள் போவதும் உண்டு. ஆனால், நாலாம் சடங்கு நாளில் தம்பதிகள் எண்ணெய் தேய்த்து முழுகுதல் பழைய வழக்கம். அவ்வாறு அதனைச் செய்தபின் ஆலயம் செல்வது மிகவும் பொருத்தமானது.

**புதுமணத்தம்பதிகள் எண்ணெய்க் காப்பு சாத்தலாமா?**

இதுபோன்ற புதுப்புது ஐயங்களைப் பலர் கிளப்பிவருவது சிரிப்புக்கிடமாயுள்ளது. அதைச் செய்யலாகாது, இதைச் செய்யலாகாது என வீண் புரளிகளை எழுப்புவதற்கென்றே சிலர் அவதாரமெடுத்துள்ளனர்.

புதுமணத்தம்பதிகள் தேர்த்திருவிழா பார்க்கக்கூடாது என்பது மட்டுமே பழைய வழக்கிலுள்ளது. தேர்த்திருவிழா அழித்தல் தொழிலுடன் சம்பந்தப்பட்டது என்பதால் நமது முன்னோர் அவ்வாறு தடுத்திருக்கலாம். அவ்வழக்கத்தினைத் தொடர்ந்து கைக்கொள்வது நலமே. ஆனால், புதுமணத்திற்கும் எண்ணெய்க் காப்பிற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. தாராளமாக அவர்கள் சுவாமிக்கு எண்ணெய் சாத்தி வழிபடலாம்.

**இரு புதுமணத்தம்பதிகள் ஒருவரை ஒருவர் எதிர்கொள்வது ஆகாது என்கிறார்களே.........**

இது தவறான ஒரு நம்பிக்கை. மயானத்திற்குச் செல்லும் மையம் இன்னொரு மையத்தை எதிர்கொள்ளக் கூடாது எனச் சொல்லப்படுவதுண்டு. அவ்வாறு நிகழின் அது இன்னும் துன்பங்களைத் தரும் எனப் பெரியோர் கூறுவர். இது சகுனத்தின் அடிப்படையில் கூறப்பட்டதாகலாம்.

ஆனால், இன்று பெரிய ஆலயங்களில் ஒரே நேரத்தில் பல திருமணங்கள் நடைபெறுவது வழக்கமாக உள்ளது. அத்தகைய நேரத்தில் பல புதுமணத் தம்பதியர் ஒருவரை ஒருவர் எதிர்கொள்ளுவது மிகச் சாதாரணமாக நிகழ வாய்ப்புண்டு. எனவே இதைத் தவிர்த்துக்கொள்ளவேண்டும் என எதிர்பார்ப்பது பொருத்தமானதாகப் படவில்லை.

**எண்ணெய்க் காப்பில் கலந்துகொள்வோர் எத்தனை நாட்களுக்கு சுத்த போசனராக இருக்கவேண்டும்? (மச்சம், மாமிசம் உண்டவர்கள் எண்ணெய்க் காப்பில் கலந்துகொள்ள முடியாதல்லவா?)**

இது நகைப்புக்குரிய ஒரு கேள்வி. சைவ சமயத்தவர்கள் என்றாலே அவர்கள் எந்நாளும் சுத்த போசனமுடையவர்களாகத்தானே இருக்கவேண்டும். தவறு என்று நன்றாகத் தெரிந்துகொண்டு மச்சம், மாமிசம் உண்போர் அதைச் சாப்பிட்டுவிட்டு எதையும் செய்யலாம் தானே! இன்றைய சைவ அன்பர்களுக்கு முன்புபோல இவ்விடயங்களில் அதிக பயம் இல்லை. கூதல் விட்டுப்போய்விட்டது. காலையில் மச்சம் சாப்பிட்ட பலர் மாலையில் கோவில் சென்று சுவாமி காவுகிற சந்தர்ப்பங்களும் உண்டு. (அதனால்தான் இன்று நமக்கு இந்த நிலை)

பொதுவாக, எண்ணெய்க் காப்பிற்கு முதல்நாளும், அன்றும், அடுத்த நாளும் என மூன்று நாட்களாவது சுத்த போசனராக இருத்தல் அவசியம்.

**வீடுகளில் புதுமனை புகுதல் போன்ற நிகழ்ச்சிகளின்போது நடைபெறும் சாந்தி நிகழ்ச்சிகளில் பெண்கள், குழந்தைகள் கலந்துகொள்ளலாமா?**

புதுமனை புகுதலின்போதோ அல்லது கிரகதோஷம் நீங்கி நல்வாழ்வு கிட்ட வேண்டியோ வீடுகளில் சாந்திகள் நடத்தப்படுவதுண்டு. இதில் விநாயகர், இலக்குமி, முருகன், நவக்கிரகங்கள் ஆகியோருக்குக் கும்பங்கள் வைத்துப் பூஜை செய்வதோடு ஹோமங்கள் நடத்துவதே வழக்கம். இதில் பயப்படக் கூடிய கிரியைகள் எதுவும் இல்லை. யாவரும் கலந்துகொள்ளலாம்.

சாந்திக் கிரியைகளை செய்வினை, சூனியம் முதலியவை போன்று கழிப்புக் கிரியைகளாகக் கருதத் தேவையில்லை. சாந்தமான கிரியைகளே அவை.

**ஆலயங்களில் கொடியேற்று விழாவுக்கு முதல்நாள் நடைபெறும் கிராமசாந்தி முதலியவற்றையும் கொடியிறக்கு வைபவத்தையும் சிறுவர்கள் பெண்கள் பார்க்கலாகாது என்கிறார்களே, உண்மையா?**

அப்படி எதுவுமில்லை. கிராம சாந்தி என்பது பூத பைசாசங்கள் எனும் துர்த் தேவதைகளைத் திருப்தி செய்து அவற்றின் தொந்தரவை இல்லாமல் செய்தலும் கிராமத்தின் காவல் தெய்வமான வைரவப் பெருமானை வழிபட்டுக் காவலை உறுதிப் படுத்துவதுமேயாகும்.

கொடியேற்றுவிழாவில் கொடித் தம்பத்தில் எழுந்தருளுமாறு ஆவாஹனம் செய்து பத்து நாளும் வழிபட்ட அனைத்துத் தெய்வங்களையும் அவரவர் இருப்பிடங்களுக்குத் திருப்பி அனுப்புவது கொடியிறக்க நாளில் நடைபெறுகிறது. இதைப் புரிந்துகொள்ளாமல் வைரவரைக் கட்டுதலும் அவிழத்தலும் என்கிறார்கள் சிலர். யாவரும் அனைத்துக் கிரியைகளிலும் கலந்துகொள்ளலாம்.

**கருடபுராணம் நூலை வீட்டில் வைத்திருக்கலாமா? அதனை சாதாரணமாக யாவரும் படிக்கலாமா?**

கருடபுராணம் என்பது இறந்த உயிர்க்ளுக்கு என்ன நடைபெறுகிறது என்ற மர்மத்தை அற்புதமாக விபரிக்கும் அரிய புராண நூல். நமது இவ்வுலக வாழ்க்கை முடிவடைந்தபின் நமது உடலுக்கு என்ன நடக்கும் என்பதை நாம் அறிவோம். ஆனால் நமது உயிருக்கு என்ன நடக்கும் என்பதை அறிய முடியாமலுள்ளது. அதனை நமது முன்னோர்களான முனிவர்கள் அறிந்து கூறியுள்ளனர். அதனை நாம் புராணங்கள் வாயிலாக அறிய முடிகிறது.

உயிர்கள் யம கிங்கரர்களால் அழைத்துப் போகப்படுதல், போகும் வழியில் ஏற்படக்கூடிய கஷ்டங்கள், அதனைத் தீர்ப்பதற்கு அவர்களது சந்ததியார் என்ன செய்ய முடியும் என்பதையெல்லாம் நாம் கருடபுராணத்தில் அறியலாம். பாபம் செய்தவர்களுக்கு என்னென்ன தண்டனைகள் வழங்கப்படுகின்றன, புண்ணியம் செய்தோர் என்ன அனுபவிப்பர் என்பதையெல்லாம் இந்நூல் விபரிக்கிறது.

இதனைப் படிப்போர் மனத்தில், "பாபம் செய்யக்கூடாது, புண்ணியம் செய்ய வேண்டும்" என்ற நல்லெண்ணம் தோன்ற வகை செய்கிறது கருடபுராணம். மேலும், பிதிர்கள் பற்றியும் பிதிர் காரியங்கள் பற்றியும் தெரிவிக்கப்படுவதால் திவசம் முதலிய பிதிர் காரியங்களை அக்கறையுடன் விஷயம் தெரிந்து செய்ய வாய்ப்புக் கிடைக்கிறது.

அதனால் யாவரும் கருட புராணத்தை அவசியம் படிக்கவேண்டும். எல்லோருடைய வீட்டிலும் அந்தப் புத்தகம் இருக்கவேண்டும்.

## திருமண நாள் குறித்தபின் வீட்டில் முன்னோர்களின் திதி வந்தால் அந்த நாளில் திவசம் செய்யலாமா?

அவசியம் செய்யவேண்டும். திவசம் முதலியன அமங்கலமானவை எனப் பலர் தவறாக நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படியன்று. திருமண தினத்தில் ஆரம்பத்தில் அந்தணர்களுக்கு அரிசி, காய்கறி தானமாக வழங்கும் நிகழ்வு ஒன்று நடைபெறுவதைப் பாரத்திருப்பீர்கள். அதனை நாந்தி சிராத்தம் என்பர். தமது வம்சத்தவர்களின் மங்கல நிகழ்வைக் காணவும் ஆசி வழங்கவும் ஆவலுடன் வருகின்ற நமது முன்னோர்களான பிதிர்களின் ஆசி வேண்டியே அந்த நிகழ்வு நடைபெறுகிறது. எனவே மங்கல நாள் குறித்தபின் திவசம் நடத்துவதில் எவ்வித தவறும் இல்லை. அதனைச் செய்யாமல் விடுவதுதான் மாபெரும் தவறு.

**கண் தானம் மற்றும் உறுப்பு தானங்கள் இந்நாட்களில் சகஜமாக இருக்கின்றன. சாஸ்திரம் இவற்றைப் ஒப்புக் கொள்கின்றதா?**

உடலில் இருந்து உயிர் பிரிந்தபின், அழிந்து சாம்பலாகப் போகும் உறுப்புகளை தானம் செய்தால், உயிர் வாழப் போகும் பிறருக்காகவது பயன்படும் என்னும் விழிப்புணர்வு இன்று பெருகிக் கொண்டுதான் வருகின்றது.

இந்துக்களோ, கிறிஸ்துவர்களோ, வேறு எந்த மதத்தவரோ - எல்லோருக்குமே இறந்தபின் ஆத்மா நல்லபடியாக இறைவனை அடைய வேண்டும் எனச் சடங்குகள் கூறப்பட்டுள்ளன.

இந்து மதத்தில், உயிர் பிரிந்த பின், கல் ஊன்றி, அதில் போன உயிரின் சக்தியை வரிக்கின்றனர். கோவிலில் கல் விக்ரஹங்களுக்கு அபிஷேகமும் பூஜையும் செய்ய ஸாந்நித்யம் உண்டாவதற்கு ஒப்பாக இதைச் சொல்லலாம். ஆத்மா செல்லும் வழியில் நெருப்பும் நீரும் பெருக்கெடுத்து ஓடுவதால், அவற்றைக் கடக்க உதவப் பசு மாடு, கன்றுக்குட்டி ஆகியவை தானமாக கொடுக்கப்படுகின்றது.

பூலோகத்தில் நாம் என்ன தானம் சொய்கிறோமோ அதுவே தேவலோகம்வரை உடன் வரும்.

தானங்கள் பல செய்து, தன் வாக்கைக் காப்பாற்ற, உயிரை நீத்த கர்ணன் தேவலோகத்திற்கு போனபோது, அவன் செய்த புண்ணிய காரியங்கள் அவனைச் சுற்றி வைர வைடூரியமாக காட்சியளித்தன. ஆனால், அன்னம் மட்டும் அங்கே இல்லை. ஏன் என அவன் கேட்டபோது, நீங்கள் அன்னதானம் செய்யவில்லையே என்றனராம் தேவலோகத்தார். அதனால், அவர் கும்பகோணத்தில் ஆழ்வாராகப் பிறந்து, அன்னதானம் செய்தார் என ஒரு புராணக்கதை கூறுகின்றது.

தானம் செய்வதில் சிறந்தவனான கர்ணனுக்கே இந்த நிலை எனில், சாமானியரைப் பற்றி சொல்லவேண்டுமா?

ஒருவர் செய்யும் தானமே அவருடன் இறுதி வரைவரும் என இந்தக் கதை தெள்ளத் தொளிவாக கூறுகின்றது.

வாழும்போது சேர்த்து வைக்கும் சொத்தில் ஒரு பைசாவைக் கூட நாம் எடுத்துப்போக முடியாது. இதை மானிடராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் உணர வேண்டும். கண், மற்ற உறுப்பு தானம் செய்யும்போது கிடைக்கும் புண்ணியம் நிச்சயமாக கூட வரும்.

ஆத்மா செல்லும் வழியில், இருட்டில் வழி தெரிய விளக்கு தானம், அடுத்த பிறவியில் கண் பார்வையுடன் பிறக்க தீப தானம், ஊமையாக பிறக்காமல் இருக்க புஸ்தக தானம் காது கேட்க மணிதானம் - இப்படி பலவகை தானங்களைப் பன்னிரண்டாம் நாள் காரியங்களின்போது செய்கின்றனர். ஆனால், கண் தானம் பற்றி சாஸ்திரத்தில் பேசப்படவில்லை. இன்னும் சொல்லப் போனால் இறந்த பின் அங்கங்கள் பங்கப்படுவதைப் பற்றி சாஸ்திரம் ஏதும் சொல்லவில்லை. ஆனால் உடல் எரியும்போது கண்ணும் வெந்து தானே போகும். சாம்பலாகிப் போகும் உறுப்புகள் உடன் வருவதில்லையே! அவற்றைத் தானம் செய்யும்போது கிடைக்கும் புண்ணியமாவது உடன் வந்து உதவுமே. ஆகையால், பகுத்தறிவுக்குச் சரியெனத் தெரியும் செயல்களை செய்து புண்ணியம் தேடுவதில் தவறு ஏதும் இல்லை.

இப்படி கண் தானம் செய்தவர்களுக்கு சம்ஸ்காரம் செய்வது சாத்தியமா என்ற கேள்வி எழும்போது, விபத்துக்களில் உறுப்புக்களை இழந்தவர்களுக்கும், நெருப்பில் எரிந்து உயிரை இழந்தவர்களுக்கும் தர்ப்பையால் உடலை வரித்து ஈமக் கடன்களை செய்ய வேண்டும் என சாஸ்திரம் சொல்கின்றது..

ஆகையால் இத்தகையோர்க்கும் ஈமக்கடன்கள் செய்வது சாஸ்திரப்படி சாத்தியமே.

**ஒரு சிலர் பூஜை செய்யும் போது ஏராளமான நகைகளை அணிந்து தன்னை அலங்காரம் செய்து கொண்டு ஆடம்பரமாக பூஜை செய்கிறார்களே? இது ஸரியா?**

இது ஸரிதான், ஏனென்றால் தெய்வத்தின் அருளால் நமக்குக் கிட்டிய நகைகளை, ஆபரணங்களை நாம் அணிந்து கொண்டு ஆபரணத்துடன் கூடிய கைகளால் அந்த தெய்வத்தைப் பூஜிப்பதுதானே முறை. பரசுராம கல்ப ஸுத்ரம் என்னும் புஸ்தகத்தில் தேவீ பூஜையை செய்யும் வழிமுறைகளைக் கூறும் மஹர்ஷி பரசுராமர்

**யாக மந்திரம் கத்வா க்லுப்தா (ஆ)கல்ப: ஸங்கல்பா (ஆ)கல்போவா** என்கிறார்.

அதாவது ஆகல்ப: என்றால், மோதிரம், சங்கிலி, கடுக்கன், தோடு, வளையல் முதலான ஆபரணம், க்லுப்தாகல்ப: என்றால் ஆபரணங்களை அணிந்து கொண்டு என்று பொருள், ஆபரணங்களை நிறைய அணிந்து கொண்டு பூஜையறைக்குச் சென்று தேவியை பூஜை செய்ய வேண்டும் என்கிறார் பரசுராமர்.

ஆகவே தாயார் லலிதாதேவீ முதலிய அனைத்து அம்மன் பூஜைகளையும் ஏன்? ஹோமங்கள் செய்யும் போதும் கூட நிறைய ஆபரணங்களையணிந்து கொண்டு தூய்மையான ஆடைகளை உடுத்திக்கொண்டு (தேவீ உபாஸகர்கள் தாம்பூலத் தால் தனது வாக்கையும் வாஸனையானதாகச் செய்து கொண்டு) தன்னை அலங்காரம் செய்து கொண்டு செய்வதுதான் சரியான வழிமுறை, அப்படி என்றால் ஆபரணங்கள் ஏதும் இல்லாத ஏழைகள் தேவீ பூஜையைச் செய்ய முடியாதா? என்னும் ஸந்தேஹம் வரும், அதற்காகத்தான்

ஸங்கல்பா(ஆ) கல்போவா என்கிறார். அதாவது ஏழைகள் கூட தெய்வத்திற்குப் பூஜைகள் பிரார்த்தனைகள் செய்யும்போது தான் நிறைய நகைகளை (ஆபரணங்களை) அணிந்து கொண்டிருப்பதாக (ஸங்கல்பத்தால்) மனதால் கற்பனை செய்துகொண்டு, பூஜை செய்யவேண்டும் என்கிறார். ஆகவே நல்ல சுத்தமான ஆடைகளுடன் விலையுயர்ந்த மோதிரம், சங்கிலி போன்ற நகைகளை அணிந்துகொண்டு தன்னை அலங்கரித்துக் கொண்டு பூஜை செய்வதால் எந்த ஆடம்பரமும் இல்லை. இதுதான் ஸரியான வழிமுறை.



# ஆசௌச நடைமுறைகள்

## ஆலயத்திலிருந்து எத்தனை தூரம் வரை இறந்தவரின் உடல் இருந்தால் ஆலயத்தில் பூஜைகள் நடத்தக் கூடாது?

பொதுவாக ஓர் வீட்டில் - பிளாட்டில் - தெருவில் - கிராமத்தில் இறந்தவரின் உடல் இருந்தால் அங்கு அந்த:சவத்வம் என்னும் தோஷம் ஏற்படுகிறது என்றும், சவம் அங்கிருந்து அப்புறப்படுத்தப்படும் வரை அங்கே பூஜை அர்ச்சனை அபிஷேகம் ஜபம் ஹோமம் சமைத்தல் போன்றவற்றை செய்யக்கூடாது என்றும் கூறுகிறது சாஸ்திரம். ஆகவே கூடியவரை சவம் அப்புறப்படுத்தும்வரை வீட்டிலும் - ப்ளாட்டிலும் - ஆலயத்திலும் பூஜைகளைத் தவிர்ப்பது நல்லது.

இருந்தாலும் சவம் இருக்கும் இடமானது, 88அடிக்கப்பால், வேறு தெருவில் இருந்தாலோ, அல்லது நடுவில் சதுஷ்பதத்தால் (நான்குரோடு கூடுமிடத்தில்) பிரிக்கப்பட்டிருந்தாலோ அந்த:சவத்வ தோஷமில்லை. இதிலும் கூட ஆயிரம் பேருக்கு மேல் வஸிக்கும் நகரத்துக்கு விசேஷ விதி விலக்கு உண்டு,

**ஸஹஸ்ர விப்ர ஸம்பூர்ணே க்3ராமே தத3தி4கேபி வா**
**ஆலயஸ்ய ஸமீபே து தரிம்சத் த3ண்டாந்தரே ம்ருதௌ**
**அர்ச்சன ஸ்நபநாதீ3நி ந குர்யாதே3வ தத்ர து** (வைத்-தீ-பக்-304)

ஸுமார் ஆயிரம் பேருக்கு மேல் வஸிக்கும் ஊரில், வீட்டிற்கு அல்லது ஆலயத்துக்கு30 தண்டத்துக்குள் அதாவது ஸுமார் 240 அடிக்குள் சவம் இருந்தால் அர்ச்சனம் ஸ்நபனம் (அபிஷேகம்) முதலியவற்றை விலக்க வேண்டும் என்னும் மேற்படி வசனத்தால் 240 அடிக்குப்பிறகு சவம் இருந்தால் தோஷமில்லை எனத் தெரிகிறது,

ஆகவே பெரிய நகரங்களில், சவமானது ஒரே வீதியில் (தெருவில்) இருந்தாலும். நடுவில் நாற்சந்தியோ சந்து போன்ற சிறிய பாதையோ இருந்து சவமிருக்குமிடம் ஆலயத்துக்கு 240 அடிக்கு மேல் இருந்தால் ஆலயத்தில் பூஜை முதலியவற்றைச் செய்யலாம். இவ்வாறு நடுவில் ரோடு இல்லையென்றாலும் 240 அடிக்கு மேல் சவமிருந்தால், துணி முதலியவற்றால் ஆலயத்தின் வெளிப்புறச் சுவற்றில் திரை போல் கட்டிவிட்டு ஆலயபூஜைகளை நடத்தலாம்.

## மரண வீடுகளில் கலந்துகொள்வோர் அங்கு நடைபெறும் நிகழ்ச்சிகளில் கலந்துகொள்வதால் ஏற்படும் தீட்டு (துடக்கு) எத்தனை நாட்களில் கழியும்?

பொதுவாக நமது உறவினர்கள், நண்பர்கள், அயலவர்கள் அனைவரது துக்கங்களிலும் கலந்துகொள்ள வேண்டிய கடப்பாடு நமக்கு உண்டு. மரணச் சடங்கின்போதும் அதற்குப்பின் நடைபெறும் கிரியைகளிலும் கலந்துகொண்டு அவர்களுக்கு வேண்டிய உதவிகளை அனைவரும் செய்ய வேண்டும். ஆனால், அதில் சில வரையறைகள் உண்டு.

புதிதாகத் திருமணம் செய்தோர், கர்ப்பமுற்றிருக்கும் பெண்ணின் கணவன், விசேஷ தீக்ஷை பெற்று நித்ய சிவபூஜை செய்வோர், வீட்டில் திருமணம் முதலிய மங்கல நிகழ்ச்சிக்கு நாள்குறித்தோர், அடுத்துவரும் நாட்களில் தமது வீட்டில் திவசம் முதலிய பிதிர்காரியம் செய்யவிருப்போர் முதலியவர்கள் மிக மிக நெருங்கிய உறவினர்கள் அல்லாதோரின் மரணச்சடங்குகளில் கலந்துகொள்வதைத் தவிர்த்துக்கொள்ளவேண்டும். அடுத்துவரும் நாட்களில் அங்கு சென்று துக்கம் விசாரிப்பதன்மூலம் தமது கடப்பாட்டை இவர்கள் நிறைவேற்றிக் கொள்ளலாம். சமூகம் இதனை அவசியம் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

மரணச்சடங்கில் சவத்தை நெருங்கிக் கடமைகள் புரிவது, வாய்க்கரிசி போடுவது, குளிப்பாட்டுவது முதலியவற்றிலும் அடுத்துவரும் நாட்களில் அங்கு நிகழும் உரிமைச் சோறு சாப்பிடுதல், எட்டுச் செலவு முதலிய சடங்குகளிலும் மிக நெருங்கிய - ஆசௌச உரித்துடையோர் மட்டும் கலந்துகொள்ளவேண்டும். அவ்வாறு கலந்துகொள்ளுவோர் சம்பந்தப்பட்டவர்களின் துடக்கு கழியும்வரை (முப்பத்தொரு நாள்) தாமும் துடக்குக் காக்க வேண்டும். முக்கியமாக மரணம் நிகழ்ந்த வீட்டில் உணவருந்துதல், தேநீர் பருகுதல் முதலியவற்றைச் செய்வோர் இவ்வாறு காக்க வேண்டும்.

சவத்தைக் காவுவோர் மூன்று நாட்களாவது ஆலயம் செல்லுதல், சுவாமி காவுதல், பூஜை வழிபாடுகளில் சங்கல்பம் செய்து கலந்து கொள்ளுதல் முதலியவற்றைத் தவிர்ப்பது நலம்.

சாதாரணமாக மரண வீட்டிற்குச் சென்று துக்கம் விசாரித்துவரும் ஒருவர் அன்றைய தினம் மட்டும் அதாவது வீடு திரும்பியதும் ஸ்நானம் செய்யும்வரை அசுத்தமுடையவராகிறார்.

இறந்தவரின் ஆசௌச உரித்துடையோர் முப்பது இரவுகள் முழுமையாக ஆசௌசம் காக்கவேண்டும். கர்த்தா (கொள்ளி வைத்தவர்) ஒரு வருட காலத்திற்கு ஆலயத்தினுள் செல்வதில்லை என்பதும் கிரியைகளில் கலந்துகொள்வதில்லை என்பதும் பொதுவான ஒரு வழக்கு. ஆனால், சிவபூஜை, சிவாலய பூஜை செய்வோருக்கு இந்த வழக்கம் பொருந்தாது.

## உறவினர் ஒருவர் இறந்து விட்டால் எத்தனை நாட்கள் வரை வீட்டில் பண்டிகைகள் கொண்டாடக்கூடாது?

பொதுவாகக் குடும்பதத்தில் உறவினர் ஒருவர் இறந்து விட்டால் அவருக்காக மாதாமாதம் மாஸிகம் செய்யப்படுவதால் ஒரு வருஷம் முடியும் வரை உறவினாகள் பண்டிகை கொண்டாடுவதையும் ஆலயங்களிலும் வீட்டிலும் தெய்வ விக்ரஹங்களுக்கு விசேஷ அபிஷேக அர்ச்சனை ஆராதனைகளையும் தவிர்க்கவேண்டும். இது சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள முக்ய பக்ஷம்.

இறந்தவருக்கு கர்மா செய்துவிட்டு மாதாமாதம் மாஸிகம் செய்யும் நபரும் அவரது ஸஹோதரர்களும் ஒருவருடம் வரை இந்த நியமங்களை கட்டாயம் கடைப்பிடிக்கவேண்டும்.

ஆனால் இன்றைய சூழ்நிலையில் நம்மைச்சுற்றி ஏராளமான உறவினர்கள் ஒவ்வொரு வருடமும் யாரோ ஒருவர் இறக்கிறார் என்பதால் ஒரு வருஷம் என்று வைத்துக் கொண்டால் பண்டிகைகள் கொண்டாடப்படும் வருஷம் மிக அரிதாகி விடும். ஆகவே சாஸ்திரங்களில் கூறிய கௌணபக்ஷத்தை கடைப்பிடிக்கலாம்.

அதாவது ஒருவர் இறந்ததாக பத்து நாட்கள் தீட்டுக்காத்தவர்கள் ஆறுமாதம் வரையிலும், மூன்று நாட்கள் தீட்டுக்காத்தவர்கள் மூன்றுமாதம் வரையிலும் ஒரு நாள் தீட்டுக் காத்தவாகள் 45 நாட்கள் வரையிலும் மேற்கூறியபடி பண்டிகை களையும் விசேஷமான பூஜை ஹோமங்களையும் தவிர்க்க வேண்டும்.

ஆனால் யாவரும் தீட்டுப்போன நாள் முதல் அனைத்து நாட்களிலும் தினஸரி வீட்டில் விளக்கேற்றதல், நித்யமான பூஜைகளைச்செய்தல், புராணம் - ஸ்தோத்ரம் - பாராயணங்களைச் செய்தல், ஸந்த்யாவந்தனம் ஔபாஸனம் போன்றவற்றையும் தாராளமாகச் செய்யலாம். காமனையாக (விருப்பத்தை நிறைவேற்ற)ச் செய்யும் ஸுதர்சன ஹோமம் கணபதி – நவக்கிரஹ ஹோமம் போன்றவற்றை மேற்குறிப்பிட்ட காலம் வரை கட்டாயம் தவிர்க்க வேண்டும்.

**காசிக்கு போய்விட்டு கயாசிராத்தம் செய்து வந்தபிறகு மறுபடி வருடாவருடம் செய்யவேண்டிய சிராத்தம் செய்யத் தேவையில்லை என்று கூறுகிறார்களே? அதற்குப் பிரமாணம் உண்டா?**

இது மிகவும் தவறானது. அவ்வாறு காசியிலோ கயையிலோ வஸிப்பவர்கள் யாரும் கூறுவதாகத் தெரியவில்லை. காசியிலும் கயையிலும் செய்யப்படும் ச்ராத்தம் வேறு, ஒவ்வொரு வருஷமும் செய்யும் ச்ராத்தம் வேறு, ஆகவே எந்தக் காலத்திலும் நமது தாய், தந்தையர்க்கு வருடாவருடம் செய்யும் ப்ரத்யாப்திக சிராத்தத்தை செய்யாமல் விடக்கூடாது.

அவ்வாறு ச்ராத்தம் செய்யாமல் இருப்பவர் செய்யும் எந்த ஒரு புண்ய, தர்மகாரியங்களும் பலனைத்தராது. பித்ருக்களின் ஆசீர்வாதத்தோடு செய்யப்படும் பூஜை, ஜபம், ஹோமம் முதலிய தேவகாரியங்களதான் பூரணமான பலனைத்தரும்.

ஆகவே கயைக்கு, காசிக்கு சென்று வந்த பிறகும், முன்போல் தாய் தந்தையரின் சிராத்தத்தை கட்டாயம் செய்யத்தான் வேண்டும்.

**எங்களது தந்தையின் சிராத்தம் குறிப்பிட்ட திதியில் செய்ய இயலவில்லை. தற்சமயம் ஏதாவது ஒரு நாளில் செய்யலாமா? அல்லது அடுத்த வருடம் குறிப்பிட்ட மாதம் திதியில்தான் செய்யவேண்டுமா?**

தாய் தந்தையரின் ச்ராத்தத்தை எக்காரணம் கொண்டும் விடக்கூடாது. அந்த மாதம், திதியை, முன்பே அறிந்து கவனத்துடன் ச்ராத்தம் செய்வதே உத்தமம்.

ஆனால் ச்ராத்தம் செய்பவருக்கு உடல்நலக்குறைவு, சிராத்தம் செய்யும் நாளன்று பிறப்பு இறப்பு தீட்டினால் அசுத்தி, ச்ராத்த நாள் மறந்து போகுதல்,

ச்ராத்தத்தன்று வெளியூரில் இருத்தல், முதலிய தவிர்க்க இயலாத காரணங்களால் சிராத்தம் குறிப்பிட்ட மாதத்திதியில் செய்ய முடியாமல் போகலாம். அப்போது,

ஆசௌசம் ஆகியவைகளால் செய்யாமல் விட்டுப்போன ச்ராத்தத்தை கர்த்தாவானவர்

**தேயே ப்ரத்யாப்திகே ச்ராத்தே த்வாந்தரா ம்ருத ஸூதகே**
**ஆஸெசானந்தரம் குர்யாத்......**

என்பதாக ஆசௌச முடிவில் செய்யவேண்டும்.

ஞாபக மறதி, உடல்நலக்குறைவு, வெளியூர்வாஸம் முதலியவற்றால் நின்றுபோன சிராத்தத்தை, கிருஷ்ண பக்ஷம் (தேய்பிறை) அஷ்டமி, ஏகாதசி, அல்லது அமாவாஸை திதியன்று பிராயஸ்சித்தம் செய்துவிட்டுச் செய்யவேண்டும்.

ஆகவே ச்ராத்தம் செய்யும்வரை கர்த்தாவுக்கு தெய்வ கார்யங்களைச் செய்ய ஸூத்தி இல்லை என்பதால், விட்டுப்போன ச்ராத்தத்தை கூடியவரை விரைவான நாட்களில் செய்து விடவேண்டும். அடுத்த வருடம் வரை காத்திருக்கக்கூடாது.

**தாய் தந்தையர்களுக்கு செய்யும் ச்ராத்தத்தை எத்தனை வருஷங்கள் செய்ய வேண்டும்? நான் 25 வருஷங்கள் ச்ராத்தம் செய்து விட்டேன்.**

இவ்வாறு கேட்பதே தவறு. நான் சுமார் ஐம்பது வருஷங்கள் வரை தினந்தோறும் சாப்பிட்டு விட்டேன்? இனி சாப்பிடுவதை நிறுத்தி விடலாமா? எனக்கேட்பது போன்றது.

புத்ரனாகப் பிறந்தவன் தனது தாய் தந்தையர்களுக்குச் செய்ய வேண்டிய பற்பல கடமைகளில் மிக முக்கியமானது அவர்களுக்கு ஒவ்வொரு வருஷமும் ச்ராத்தம் செய்வது. வருடத்திற்கு ஒருதடவை செய்யப்படும் ச்ராத்தத்தை எக்காரணம் கொண்டும் விடக்கூடாது.

ச்ராத்தம் செய்யக் கடமைப்பட்ட புத்ரன் போன்றவர்கள் இறந்து போன தாய் தந்தையர்களுக்கு உணவளிக்கும் ச்ராத்தத்தை, தமது கடைசி மூச்சு உள்ளவரை கட்டாயம் செய்யத்தான் வேண்டும்.

**ச்ராத்தத்தன்று ஒரு சில அசௌகர்யங்களால் ச்ராத்தம் செய்ய முடியவில்லை, எனது உறவினரின் ஆலோசனையின் பேரில் ஒரு தர்ம ஸ்தாபனத்தில் சாப்பாடு போட்டு விட்டேன். இது சரியா?**

இது மிகப்பெரிய தவறு. குடும்ப சூழ்நிலை, உடல் உபாதை, பொருளாதார வஸதி, ஞாபகமின்மை முதலியவைகள் ச்ராத்தம் செய்வதற்க காரணமாக ஏற்றுக் கொள்ள முடியாது. ஏனெனில் அவரவர்களின் வஸதிக்குத் தக்கவாறு ச்ராத்தத்தை பல வழிகளில் செய்ய நமது சாஸ்த்ரம் அனுமதியளிக்கிறது.

ஆனால் ச்ராத்தத்துக்கு பதிலாக அன்னதானம் முதலிய எதையும் செய்ய அனுமதிக்கவில்லை. ச்ராத்தத்தன்று ச்ராத்தம் செய்துவிட்டு அன்னதானம் முதலிய மற்ற தானதர்மங்களை செய்யவேண்டும் என்பதே சாஸ்த்ரங்களின் ஸித்தாந்தம்.

அவ்வாறு ச்ராத்தம் செய்யாமல் ச்ராத்தத்தன்று செய்யப்படும் தானதர்மங்கள் நமது இல்லத்தில் வஸிக்கும் வயதான தாய் தந்தைக்கு உணவளிக்காமல் மற்றவர்களுக்கு அன்னதானம் செய்வது போன்றது. அவைகள் முழுமையான பலனை அளிப்பதில்லை.

வேத பாடசாலை, அனாதை இல்லம், கல்வி நிலையங்கள் முதலிய இடங்களில் செய்யப்படும் அன்னதானத்துக்குத் தனியே மிகப்பெரிய புண்யம் உண்டு. ஆனால் தாய் தந்தையர்களின் ச்ராத்தத்தன்று ச்ராத்தத்தைச் செய்துவிட்டு இவைகளையும் செய்வதே உத்தமம். ஆகவே வருடத்திற்கு ஒருமுறைசெய்யப்படும் பித்ரு கார்யமான ச்ராத்தத்தை ச்ரத்தையாகச் செய்து நமது முன்னோர்களின் ஆசியைப்பெற்று நன்மையடைவோம்

## நாந்தி பித்ருக்கள் என்றால் யார்?

வாழ்ந்து மறைந்த மூன்று தலைமுறையைச் சேர்ந்த பிதா (தந்தை), பிதாமஹர் (தந்தையின்தந்தை), ப்ரபிதாமஹர் (அவரின் தந்தை), அவர்களின் மனைவிகள், மற்றும் மாதாமஹர் (தாயின் அப்பா), மாது பிதாமஹர் (அவரின் அப்பா), மாது ப்ரபிதாமஹர் (அவரின் அப்பா), மாதாமஹி (அவர்களின் மனைவிகள்) முதலிய முன்னோர்களுக்கு, நாந்தீசோபன பித்ருக்கள் (மங்களமான பித்ருக்கள்) எனப்பெயர்.

இவர்கள் நமது வீட்டில் திருமணம், உபநயனம் போன்ற மங்கள நிகழ்ச்சிகள் நடைபெறும்போது, ஒரு சில நாட்கள் முன்னதாகவே நம்முடைய இருப்பிடத்துக்கு ஸந்தோஷத்துடன் ஆசிகூற அவர்களாகவே வருகிறார்கள்.

அவ்வாறு வரும் அவர்களுக்கு நல்ல வஸ்த்ரம் தந்து, ஸாப்பாடு போட்டு, சந்தோஷப்படுத்தி அவர்களின் ஆசியைப்பெறும் செயல்தான் நாந்தி.

## நாந்தீ ச்ராத்தம் என்றால் அமங்களமாகத் தோன்றுகிறதே இதை விவாஹம் போன்ற மங்கள நிகழ்ச்சிகளில் செய்யலாமா?

ச்ராத்தம் என்றால் ச்ரத்தையுடன் (ஈடுபாட்டுடன்) செய்வது எனப்பொருள். இது மிகவும் மங்களமானது தான். இதில் அமங்களம் இல்லை. கட்டாயம் செய்ய வேண்டும். இதைச்செய்வதால் முன்னோர்களின் அனுக்ரஹம் கிட்டும்.

## நாந்தியை எந்தெந்த மங்கள நிகழ்ச்சிகளில் செய்ய வேண்டும்?

ஸீமந்தம். விவாஹத்துக்கு முன்பு செய்யப்படும் நான்கு வேதவ்ரதங்கள், சௌளம், நாமகரணம் (பெயர்சூட்டுதல்), அன்னப்ராசனம் (சோறூட்டுதல்), உபநயனம் (பூணல் போடுதல்), ஸமாவர்த்தனம், அக்னி ஆதானம், விவாஹம், யாகம், குழந்தை பிறத்தல், தேவதாப்ரதிஷ்டை  பும்ஸுவனம், க்ருஹப்ரவேசம் ஸன்யாஸ ஆஸ்ரம

ஸ்வீகாரம், ராஜபட்டாபிஷேகம், ப்ரதமார்தவ சாந்தி, முதலிய மங்கள கார்யங்களில் கட்டாயம் நாந்தியைச் செய்ய வேண்டும் என்கிறார் ஆபஸ்தம்ப மஹர்ஷி

## நாந்தியை எப்படி....எப்பொழுது செய்ய வேண்டும்?

விவாஹம் உபநயனம் போன்ற மங்களமான நிகழ்ச்சிகளுக்கு சில தினங்கள் முன்னதாகவே நாந்தி ச்ராத்தத்தை, எட்டு அல்லது பத்து ப்ராஹ்மணர்களை வரித்து, சாப்பாடு போட்டு, பித்ரு வர்க்கம் மாதாமஹ (தாய்வழி தாத்தா) வர்க்கம் ஆகிய இரண்டு வர்க்கத்துக்கும் ஹோமம் செய்து, மற்ற ச்ராத்தங்கள் போல் பார்வணமாக (அன்னரூபமாக)ச் செய்ய வேண்டும். ஆனால் இதில் கறுப்பு எள்ளையோ, ஸ்வதா என்னும் சொல்லையோ உபயோகிப்பதில்லை).

அல்லது ஹோமம் இல்லாமல் ஸங்கல்பமாகச் செய்யலாம். அரிசி, வாழைக்காய் முதலியன தந்து ஹிரண்ய சிராத்தமாகவாவது முன் குறிப்பிட்ட நிகழ்ச்சிகளில் கட்டாயம் செய்ய வேண்டும்.

## நாந்தியை தந்தை உள்ளவர்களும் செய்யலாமா?

ஜீவத்பிதாவானவர் (தந்தையுள்ளவர்) ஒருசில காலங்களில் நாந்தி முதலியவைகளைத் தானே செய்யலாம்.

**உத்வாஹே புத்ர ஜநநே பித்ரேஷ்ட்யாம் ஸௌமிகே மகே**
**தீர்த்தே ப்ராஹ்மண ஆயாதே ஷடதே ஜீவத: பிது:**

மகன், மகள் ஆகியோரின் விவாஹ ஸமயத்திலும்,

பிறந்த குழந்தைக்கு செய்யப்படும் ஜாதகர்மாவிலும்,

சாதுர்மாஸ்ய யாக, ஸாகமேத பர்வா பித்ர்யேஷ்டியிலும்,

ஸோமயாகம் செய்யும் போதும்

காசி முதலிய புண்ய சேஷத்ரங்களிலும்

உத்தமரான ப்ராஹ்மணர் வருகை தந்த போதும்

தந்தை இருப்பவரும் நாந்தீச்ராத்தம் முதலியவைகளை மறைந்த முன்னோர்களுக்காகத் தானே செய்யவேண்டும் என்கிறது தர்மசாஸ்திரம். ஆகவே நாந்தியை தந்தையுள்ளவர்களும் செய்யலாம். ஒரு சில நிகழ்ச்சிகளில் நாந்தியை தந்தைதான் செய்ய வேண்டும். ஒரு சிலவற்றில் தானே செய்ய வேண்டும்.

## விவாஹம் செய்து கொள்ளும்போது நாந்தியை யார் செய்ய வேண்டும்? தந்தையா அல்லது விவாஹம் செய்து கொள்ளும் மாப்பிள்ளையா?

நாந்தீ ச்ராத்தம் பிதா குர்யாத் ஆத்ய பாணிக்ரஹாவதி
அத ஊர்த்வம் ப்ரகுர்வீத ஸ்வயமேவ து நாந்திகம்

என்னும் வசனப்படி குழந்தையின் ஜாதகர்ம, நாமகரணம், அன்னப்ராசனம், சௌளம், மற்றும் விவாஹம்வரை உள்ள நாந்தியைக் குழந்தையின் தந்தைதான் செய்ய வேண்டும். விவாஹத்துக்கு பிறகு செய்யும் நாந்தியைத் தானே செய்ய வேண்டும். ஆகவே விவாஹ நாந்தியையும் தந்தைதான் செய்ய வேண்டும்.

**குழந்தை பிறத்தல், அல்லது யாராவது உறவினர்கள் இறத்தல் முதலானவை நடு இரவு நேரங்களில் நிகழ்ந்தால் முதல் நாளா? மறுநாளா? என எவ்வாறு தீர்மானிப்பது?**

பொதுவாக ஆங்கிலக் கணக்குப்படி இரவு 12 மணிக்கு பிறகு மறுநாள் தொடங்குகிறது. ஆனால் சாஸ்திரங்களில் சூர்யோதய காலமாகும் காலை ஆறுமணி முதல் மறுநாள் சூர்யோதயமாகும் காலை ஆறுமணிவரை ஒருநாள் என்று கணக்கிடப்படுகிறது.

காலை ஆறு முதல் மாலை ஆறுமணி வரை பகல் முப்பது நாழிகையாகவம் மாலைஆறு முதல் மறுநாள் காலை ஆறு மணிவரை இரவு முப்பது நாழிகையாகவுமாக அறுபது நாழிகையைக் கொண்ட 24 மணிநேரம் ஒருநாள்.

மேலும் இரவு முப்பது நாழிகையானது (12 மணி) ஒவ்வொரு யாமத்துக்கும் ஏழரை நாழிகைவீதம் (180 நிமிடம்) நான்கு யாமங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

இதில் முதல் இரண்டரை யாமத்துக்குள் (இரவு சுமார் 1.40 மணிவரை) நிகழும் பிறப்பு, இறப்பு, ரஜஸ் (மாதத்தீட்டு) முதலியவற்றை முதல் நாள் என்றும்,

இரண்டரை ஜாமத்துக்கு மேல் (இரவு 1.40 மணிக்குப்பிறகு) நிகழும் பிறப்பு, இறப்பு, ரஜஸ் முதலியவற்றை மறுாள் என்றும் கணக்கிடப்படுகிறது.

ஆகவே பிறப்பு அல்லது இறப்பு, நடு இரவு 1.40 மணிக்கு முன்பாக நிகழ்ந்தால் அது முதல் நாள் என்றும், 1.40 மணிக்குப் பிறகு என்றால் மறுநாள் என்றும் தீர்மானம் செய்து கொள்ளலாம்.

இங்கு காலை 6 மணிக்கு சூர்யோதயம், மாலை 6 மணிக்கு சூர்யாஸ்தமனம் என்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. ஆகவே சூர்ய உதய அஸ்தமனத்திற்குத் தக்கவாறு இதில் ஒரு சில நிமிடங்கள் கூடவோ குறையவோ செய்யலாம்.

**ஒரு பெண் சாமர்த்தியப்படும்போது (இருது ஜனனம்) யார் யாருக்கு எத்தனை நாள் துடக்கு உண்டு?**

ருதுவாகும் பெண்ணுக்கு மட்டுமே சாஸ்திரங்களில் துடக்கு சொல்லப் பட்டுள்ளது. அதுவும் அவள் சுத்தமாகி ஐந்தாம், ஏழாம், ஒன்பதாம் நாளில் தலைக்குத் தண்ணீர் வார்த்ததும் அந்தத் துடக்கு நீங்கிவிடுகிறது. ஆனால், துடக்கு இல்லாவிட்டாலும் ஆலயத்திற்கோ அல்லது வேறு பொது நிகழ்வுகளுக்கோ செல்வதை சுமார் ஒரு மாதத்திற்கு (மறுசாமர்த்தியம் வரைக்கும்) தவிர்ப்பது பெரியோர்களின் வழக்கம்.

அவளது தாய் தந்தையர்க்கோ ஏனையவர்களுக்கோ ஆசௌசம் சொல்லப்படவில்லை. ஆனால், சாமர்த்தியப்பட்ட பெண்ணைத் தனியாக வைத்திருந்து கவனிப்பவர்களுக்கு இந்த விதி பொருந்தும். அந்தப் பெண் வீடு முழுவதும் புழங்குபவளாக, அல்லது அந்தப் பெண்ணின் தாயார் முதலியோர் அப்பெண்ணின் ஆடைகளைக் கையாள்பவர்களாக இருந்தால் அவர்களும் ஆசௌசம் காக்க வேண்டும். ஆனால் சாமர்த்தியத்திற்கு முப்பது நாள் துடக்கு இல்லை.

**பெற்றோர் இறக்கும்போது கிரியைகளைச் செய்யும் உரித்துடையவர் மூத்த மைந்தனா, இளைய மைந்தனா?**

மூத்த மகனே தாய், தந்தை இருவரதும் பிதிர்காரியங்களுக்கு உரித்துடையவன். தந்தையின் கிரியைகளை மூத்த மைந்தனும், தாயின் கிரியைகளை இளைய மைந்தனும் செய்கின்ற ஒரு நாட்டு வழக்கம் இருக்கிறது. ஆனால் இதற்கு சாஸ்திரங்களில் எந்த ஆதாரமும் கிடையாது. எல்லாப் புதல்வர்களும் ஒன்றாகச் சேர்ந்து அனைத்துக் காரியங்களையும் செய்வதும் பொது வழக்காக உள்ளது. எனினும் சாஸ்திர விதிப்படி மூத்தமகனே அனைத்துப் பிதிர்காரியங்களையும் செய்யவேண்டும்.

**பிரமச்சாரிக்குத் துடக்கு இல்லை எனக் கூறப்படுவதன் விளக்கம் என்ன?**

பிரமச்சரியம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்ற நான்கு படிநிலைகளில் கிருஹஸ்தனுக்கு மட்டுமே ஆசௌசம் சொல்லப்பட்டுள்ளது. ஏனைய மூன்று நிலையிலுள்ளவரை ஆசௌசம் தீண்டாது. அவ்வகையில், பெற்றோருடன் தொடர்பற்று விலகி இருக்கும்போது பிரமச்சாரிக்குத் துடக்கு இல்லை. ஆனால், தகனம் முதலியவற்றில் நேரடியாகத் தொடர்புபடும்போது பிரமச்சாரிக்கும் துடக்கு உண்டு.

**தற்கொலை செய்து இறப்பவர்களுடைய துடக்கு எவ்வாறு கணக்கிடப்படுகிறது.**

தற்கொலை மரணத்திற்கு ஆசௌசம் இல்லை. அதாவது ஒருவர் தற்கொலை செய்து இறப்பாராயின் அவரது உறவினர்கள் யாரும் துடக்குக் காக்கத் தேவையில்லை. ஆனால், அவரது புதல்வர் முதலியவர்கள் அவரைத் தகனம் செய்வதனால் அவர்கள் அந்தத் துடக்கைக் காக்கவேண்டும். (அல்லது யார் தகனம் செய்கிறார்களோ, அவர்களுக்கு உரிய முறைப்படி துடக்கு உண்டு.)

**துர்மரணத்திற்கு உடனடியாகக் கிரியைகள் இல்லை என்பதன் விளக்கம் என்ன?**

துர்மரணங்களில் இருவிதங்களுண்டு. ஒன்று புத்திபூர்வமான தற்கொலை. மற்றது அபுத்திபூர்வமானவை. அதாவது நீரில் மூழ்கி இறத்தல், விஷம் தீண்டி இறத்தல், விபத்தில் இறத்தல் முதலியன.

புத்திபூர்வமாக நிகழும் தற்கொலைக்கு ஆறு மாதம் கழிந்த பின்னரே கிரியைகள் செய்யவேண்டும். அபுத்திபூர்வமான, அதாவது தற்செயலாய் நிகழும் விபத்து மரணங்களுக்கு உடனே கிரியைகள் செய்யலாம்.

**இன்னாருக்கு இத்தனை நாள் துடக்கு எனக் கூறப்படுவதற்கு ஆதாரம் என்ன?**

சுவாயம்புவ ஆகமத்தில்,

**"ப்ராம்மணானாம் தசாஹம் ச க்ஷத்ரியாணாம் த்வாதசாஹகம்**
**வைஸ்ய பஞ்ச தசாஹம் ச சூத்ரே த்ரிம்சத் தினம் ததா"**

எனக் கூறப்பட்டதற்கிணங்க பிராமணருக்குப் பத்து நாளும், சத்திரியருக்கு பன்னிரண்டு நாளும், வைசியருக்கு பதினைந்து நாளும் நாலாம் வருணத்தவருக்கு முப்பது நாளும் ஆசௌசம் உண்டு. சூத்திரருள் பரம்பரையாக மது, மாமிச போசனமில்லாத நற்குலத்தோருக்கு, அவர்கள் விசேட தீட்சை பெற்று விபூதி, ருத்ராட்ச தாரிகளாக சிவபூசை செய்துவரின் அவர்களுக்குப் பதினைந்து நாள் ஆசௌசம். இதனை ஞானரத்னாவளி என்ற நூல் பின்வருமாறு கூறும்.

**"அமத்யப குலீனஸ்ச நித்யம் தர்ம பராயண:**
**தீக்ஷிதஸ்ச பவேத் சூத்ர: பக்ஷைகம் மாசமன்யதா.**

**ஓர் ஆசௌசம் இருக்கும்போது இடைநடுவில் இன்னொரு ஆசௌசம் வந்தால் எவ்வாறு அந்தத் தீட்டைக் கழிப்பது?**

பிறப்புத் தீட்டு அல்லது இறப்புத் தீட்டு எதுவாயினும் சரி ஒன்றிற்குள் இன்னொன்று வரும்போது, முதலாவது தீட்டு முடிவில் இரண்டாவது ஆசௌசமும் கழிந்துவிடும். ஆனால் ஞாதிகள் அதாவது துடக்குரிமையுள்ள உறவினருக்கே இவ்விதி பொருந்தும்.

பிறப்பாயின் குழந்தையின் தாய்தந்தையரும் இறப்பாயின் இறந்தவரின் நேரடி உறவுகளான தாய், தந்தை, கணவன் - மனைவி, ஆண்பிள்ளைகள், மணமாகாத கன்னிப் பெண்கள் ஆகியோர் இரண்டாவது ஆசௌசத்தையும் முழுமையாகக் காக்கவேண்டும்.

**தாய் தந்தையரில் ஒருவர் இறந்து ஒரு வருடம் நிறைவு பெறமுன்னர் மற்றவரும் இறந்துவிட்டால் முன்னவருக்கான மாசிகங்கள், ஆட்டுத் திவசம் முதலியவற்றைச் செய்வதில் ஆட்சேபம் உண்டா?**

இல்லை. முன்னவருக்கான சபிண்டீகரணம் 31ஆம் நாள் (அந்தணராயின் 12ஆம் நாள்) செய்து முடிந்துவிட்டதனால் இன்னொரு கிரியை செய்வதற்கு முன்னவரின் இறப்பால் தடையும் இல்லை. அதேபோல் பின்னவரின் இறப்பால் முன்னவரின் கிரியைகளுக்குத் தடையும் இல்லை. ஆனால், பின்னவரின் சபிண்டீகரணத்திற்குள் முன்னவரின் மாசியம் வருமாயின் அதை மட்டும் செய்யாமல்

தவிர்க்க வேண்டும். இரண்டாமவரின் சபிண்டீகரணம், வீட்டுக் கிருத்தியம் முடிவடைந்த பின்னர் இருவரது காரியங்களையும் அந்ததந்தத் திதியில் முறைப்படி செய்து ஒவ்வொருவரின் ஒரு வருட முடிவில் தனித்தனியே அந்தந்த ஆட்டுத் திவசத்தையும் செய்து முடிக்கவேண்டும்.

**எனக்குப் பெண்ணோ பிள்ளையோ கிடையாது. நான் இறந்த பிறகு எனக்கு யார் இறுதிக் கர்மங்களை செய்வார்கள்? நான் கடைத்தேற வழி என்ன?**

பூமியில் பிறந்த ஒவ்வொரு மனிதனின் வாழ்வும் முடிந்தவுடன் அவனுக்கு சாஸ்திரத்தில் கூறியவாறு கர்மங்களை செய்து அந்த ஜீவனை நல்லகதியடைய செய்ய வேண்டும்.

பிள்ளை, பெண் போன்ற குழந்தைகள் இருந்தால் அவர்களே இதைச் செய்ய வேண்டும். மகனோ, மகளோ இல்லாதவர்களுக்கு இறுதியில் செய்யப்பட வேண்டிய அந்த ஸம்ஸ்காரங்கள் நின்று போகாது.

இறக்கும் ஒவ்வொரு ஜீவனுக்கும் இறுதி ஸம்காரம் செய்வதற்கு முப்பத்தைந்து நபர்களுக்கு சாஸ்திரங்கள் தகுதி வழங்கியுள்ளன.

இவர்களின் பையன் (புத்ரன்) முதன்மையானவன்.. அவன் இல்லாவிடில் அடுத்தவர், அவரில்லையேல் மற்றொருவர் கர்த்தா, இவ்வாறு அனைத்து ஞாதிகளும் தாயாதிகளும் உறவினர்களும் அந்த ஜீவனுக்கு கர்மாவைச் செய்யக் கடமைப்பட்டவர்கள்.

**கர்த்ரு க்ரமங்கள்** (யார் யார் கிரியை செய்யவேண்டும் என்ற வரிசைக் கிரமம்.)

1. புத்ரன் (மூத்த பையன்). பல பையன்களில் முதலில் பிறந்தவனே மூத்தவன். மேலும் இரட்டைப்பிள்ளைகளாக இருந்தால் இரண்டாவதாகப் பிறந்தவன் மூத்தவன். ஒன்றுக்கும் மேற்பட்ட மனைவிகளுக்கும் பிள்ளைகளிருந்தால் வயதில் பெரியவனே மூத்தவன். ஸவீகாரம் செய்து கொண்ட பிறகு தனக்குப்பிள்ளை பிறந்தால் தனது பையனே மூத்தவன்.

2. பௌத்ரன் = பிள்ளையின் பிள்ளை

3. ப்ரபௌத்ரன் = பௌத்ரனின் பிள்ளைகள்

4. தத்த: = ஸ்வீகாரம் செய்து கொண்ட புத்ரன், ஸ்வீகாரம் செய்த கொண்ட புத்ரனின் பிள்ளைகள், ஸ்வீகாரம் கொடுக்கப்பட்ட புத்ரன்.

5. தத்த புத்ர: = தத்தகனின் பிள்ளைகள்

6. தனஹாரீதௌஹித்ரன் = சொத்தையடையும் பெண்ணின் பிள்ளை

7. தனக்ரஹணாபாவேபி தௌஹித்ர: சொத்தை அடையாவிட்டாலும் தௌஹித்ரன்

8. பத்னீ = மனைவி

9. ஜ்யேஷ்ட ப்ராதா = மூத்த ஸகோதரன்

10. ஸ்த்ரீகளுக்கு (பிள்ளைகள் இல்லாவிடில்) ஸபத்னீ புத்ரன் = சக்களத்தியின் பிள்ளைகள்.

11. பர்த்தா – கணவன்

12. புத்ரீ – பெண்

13. ப்ராதா - ஸஹோதரர்கள்

14. ப்ராத்ரு புத்ர: - ஸஹோதரனின் புத்ரர்கள்

15. சித்தப்பா/ பெரியப்பாவின் பிள்ளைகள்

16. சித்தப்பா/ பெரியப்பாவின் பிள்ளைகளின் பிள்ளைகள்

17. பிதா – தந்தை

18. மாதா – தாய்

19. ஸ்நுஷா – நாட்டுப்பெண்

20. பௌத்ரீ – பையனின் பெண்

21. தௌஹித்ரீ – பெண்ணின் பெண்

22. பௌத்ரஸ்ய பத்னீ – பேரனின் மனைவி

23. பௌத்ரஸ்ய புத்ரீ – பேரனின் பெண்

24. தத்தஸ்ய பத்நீ – தத்தனுடைய மனைவி

25. பகிநீ – தங்கை அல்லது அக்காள் (சகோதரி)

26. பாகிநேய: = மருமகன்

27. ஸபிண்டன்

28. ஸமானோதகன்

29. மாத்ரு ஸபிண்டன

30. மாத்ரு ஸமானோதகன்

31. ஸகோத்ர: - இறந்தவரின் கோத்ரத்தைச் சேர்ந்தவர்

32. சிஷ்யன்

33. ஜாமாதா – மாப்பிள்ளை

34. ஸகா – நண்பண்

35. தன ஹாரீ – சொத்தை அடைபவன்

இவர்களுக்குள் முதல் நபர் இல்லாவிட்டால் அடுத்தவருக்கு கர்த்ருத்வம் ஏற்படுகிறது. இந்த வரிசையிலே கர்த்ருத்வம் நிர்ணயிக்கப்படுகிறது.

கர்மாசெய்பவர்களுக்கு இறப்பவரின் சொத்தில் பாகம் தந்து அவர்களைக் கொண்டு இறுதிகர்மாவை செய்யச் சொல்லலாம்

உறவினர்கள் யாருமே இல்லாதபக்ஷத்தில் கர்மாசெய்ய கடமைப்பட்ட நபர்களுக்குள் கடைசியாக அந்த தேசத்தின் அரசன் இருப்பதால் அரசனுக்கு தெரிவித்து ராஜாங்கம் மூலமாக கர்மாவை செய்யச் சொல்ல வேண்டும் என்கிறது சாஸ்திரம். ஆக இறக்கும் எந்த ஒரு ஜீவனுக்கும் ஸம்ஸ்காரம் நடைபெறாமல் இருக்கக் கூடாது என்பதுதான் சாஸ்திரங்களின் நிலை.



நாம் அனைவருமே நமக்குள்ளே ஒரு தெய்வீக அக்னியுடன் பிறந்திருக்கிறோம். இந்த அக்னியைக் கொழுந்துவிட வைத்து அதன் பொன்னொளியை இந்த உலகத்தில் பரப்புவதற்காக முனைவது நமது கடமை. - ஏ. பி. ஜே. அப்துல் கலாம்.

GOD always has something for you, a key for every problem, a light for every shadow, a relief for every sorrow and a plan for every tomorrow.

யாரும் உயர்ந்தவனோ தாழ்ந்தவனோ அல்ல. எல்லோரும் சகோதரர்கள்தான். எல்லோருடைய நன்மைக்காகவும் எல்லோரும் முனைந்து ஒரு கூட்டாகவே முன்னேற வேண்டும். - ரிக் வேதம் ஐந்தாவது மண்டலம்.

When 'i' is replaced By 'we'

Even 'illness' Becomes 'Wellness'

"………ஏன்? எப்படி? எவ்வாறு? என வேண்டும்போதெல்லாம் வினா எழுப்பி அவற்றுக்கு விடை காணும் திறன் மக்களிடையே மலர்ந்தாலன்றி கருத்துத் தெளிவு, சிந்தனைத் திறம் என்பன கைவரப்பெற்று அவர்கள் மேம்பாடடைதல் சாலாது. இத்திறன் மலர வழி சமைத்தலே சமுதாய நலனில் நாட்டமுள்ள அறிஞர் பணி

"…………இதேபோன்று மக்கள் நலனில், சமுதாய மேம்பாட்டில் நாட்டமுள்ள நன்னெஞ்சினர் ஓரணியில் திரண்டு பயன் விளைக்கும் செயல்களில் ஈடுபடும் வலிமை பெறுவார்களாக."

'செந்தழல்'

*உதயன் 24 - 08 - 2001*

# அந்தணர்க்குரிய நியமங்கள் சில.....

பெரியோரைக் கண்டவுடன் எழுந்து நமஸ்காரம் செய்ய வேண்டும். ஆண்களுக்கு "அபிவாதயே" சொல்ல வேண்டும்.

நமஸ்காரம் செய்தபின் அபிவாதயே கூறி நமது கைகளைக் கத்தரிக்கோல் போல் (அதாவது ஒரு கை மீது ஒரு கையை வைத்து) ஏககாலத்தில் இரு கரங்களாலும் அவர்களின் இரு திருவடிகளையும் தொடவேண்டும். அப்படி செய்தால் நமது வலது கையால் அவர் வலது காலையும் இடது கரத்தால் இடது காலையும் தொடமுடியும். தொடமுடியாத போது பாதத்தின் அருகே அம்மாதிரிகளை வைத்து பூமியைத் தொடவேண்டும். பெரியோர் பாதம் மஹிமை உள்ளது.

சாவுதீட்டு, ப்ரஸவ தீட்டு நீங்கிய தினத்தில் ஆண்கள் காலையில் வழக்கப்படி ப்ராதஸ்நாநம், ஸந்த்யாவந்தனம் முதலிய கர்மங்களை செய்து தீட்டு நீங்குவதற்காக காலை 8.30 மணிக்கு மேல் முழுகி ஸ்நானம் செய்ய வேண்டும். பழைய பூணூலைக் களைந்து புதுப்பூணூலைத் தரிக்க வேண்டும்.

மனைவி கர்ப்பம் என்று ஸ்பஷ்டமாகத் தெரிந்தபின் பதிக்கு கர்ப்ப தீசைஷ முதலிய நியமங்களுண்டு. கர்ப்ப தீசைஷ உள்ளவன் தானம் வாங்கக் கூடாது. வபநம் செய்து கொள்ளக் கூடாது. ப்ராம்மணார்த்தம் சாப்பிடக்கூடாது. ஸமுத்ர ஸ்நானம் செய்யக் கூடாது. யாத்திரைப் போகக் கூடாது. பிணம் சுமத்தல், சுடுகாடு போதல் கூடாது. இதை மீறி நடந்தால் அவனுக்கு நரகமும் சிசுவுக்கு துன்பமும் ஏற்படும்.

பூமியில் படுக்கை, பிரம்மச்சரியம், மௌனம், அஸூயை இன்மை, மூன்று வேளை ஸ்நானம், அற்பமான காரியங்களை விலக்குதல், நித்ய பூஜை, நித்ய தானம், தேவதாஸ்துதி, தினசரி செய்ய வேண்டிய பூஜைகள், பண்டிகைகள், விரதம், ஜபத்தில் ஈடுபாடு இவை எல்லாம் மந்திரஸித்தி அளிக்கக் கூடியவை.

தன் ஊரில் தன் வீட்டிலுள்ளபோது சாஸ்த்ரம் கூறியபடி ஆசாரத்தைக் கைக்கொள்ள வேண்டும். வெளி ஊர் சென்றால் அதில் பாதி ஆசாரம் அனுஷ்டித்தால் போதும். நகரங்களில் கால்பங்கும், ப்ரயாணம் செய்யும் போது வழியில் முடிந்தவரையிலும் ஆசாரம் அனுஷ்டித்தால் போதுமானது.

சாப்பிடும்போது வலது புறத்தில் தீர்த்த பாத்ரத்தை வைத்துக் கொள்ள வேண்டும். இடது புறத்தில் வைத்த தீர்த்தம், போஜன காலம் தவிர மற்ற காலத்தில் இடது கையால் குடிக்கும் தீர்த்தம், நின்றுகொண்டே குடிக்கும் தீர்த்தம், நாமோ பிறரோ குடித்து மிகுந்த தீர்த்தம் இவை, கள் குடிப்பதற்கு சமம்.

பங்க்தியில் ஒருவர் எழுந்திருந்தால் மிகுதி இலைகள் எல்லாம் எச்சிலாகும். அவசரம் நேர்ந்தால், இருபுறமும் ஜலத்தால் கோடு போட்டு எழுந்திருக்கலாம். அது பங்க்தியை வேறாக செய்கிறது.

உத்தர ஆபோசனமும் பிறரே போடவேண்டும். அதை உடனே உட்கொள்ளலாம். எல்லோரும் சேர்ந்து சாப்பிட வேண்டும் என்ற நியமம் இல்லை. அந்த தீர்த்தத்தை பாதி உட்கொண்டு, மிகுதியை இலையைச் சுற்றி வலதுபுறம் அடியில் பித்ரு தீர்த்தத்தால் கட்டை விரலுக்கும் ஆள்காட்டி விரலுக்கும் நடுவில் விட வேண்டும். (விரல்களின் நுனியால் விடுவது தேவ தீர்த்தம் அடியால் விடுவது ப்ரும்ம தீர்த்தம். சுண்டு விரல் பக்கமாக விடுவது ரிஷி தீர்த்தம். கட்டை விரல் பக்கமாக விடுவது பித்ரு தீர்த்தம்)அந்த உச்சிஷ்ட தீர்த்தம் ரௌரவ நரகத்திலிருந்து "தாஹம், தாஹம்" எனக் கதறுபவருக்கு அக்ஷய்யமான தீர்த்தமாகச் செல்லுமாம்.

அன்னம் கொண்டு வரும்பொழுது "அஸ்மாகம் நித்யம் அஸ்து ஏதத்"- இது நமக்கு நித்யம் கிடைக்கட்டும் என்று கூறவேண்டும். எழுந்திருக்கும் போது "அன்ன தாதா ஸுகீ பவ"- அன்னம் அளித்தவரே ஸுகமாக இரும் என்று கூறவேண்டும்.

காலையில் ஸந்த்யாவந்தனம் செய்யாமல் எவ்வித பூஜை, ஜபம், ஹோமம், பாராயணம் முதலானவற்றைச் செய்யக்கூடாது.

தெற்கு அல்லது மேற்கு திசை நோக்கியும், நின்றுகொண்டும் ஆசமனத்தை செய்யக்கூடாது.

ஒரேவருடத்தில் இரண்டு முறை சுமங்கலிப் பிரார்த்தனையைச் செய்யத்கூடாது.

வாய்க்குச் சென்ற அன்னத்தின் (சாப்பாட்டின்) மிகுதியையும், பல்லினால் கடித்து கீழே வைக்கப்பட்டவைகளையும், மறுபடியும் சாப்பிடக்கூகூடாது.

காலையும் மாலையும் சேரும் ஸந்தியா (ப்ரதோஷ) காலங்களிலும், நடுஇரவு நேரத்திலும், எதையும் சாப்பிடக் கூடாது.

வெளிச்சம் இல்லாமல் எதையும் சாப்பிடக்கூடாது.

பல நபர்கள் ஒன்றாக அமர்ந்து சாப்பிடும்போது ஒரே பலகை, ஒரே பாய், ஒரே ஜமக்காளம், முதலிய ஒரேஆஸனத்தில் அமர்ந்து உண்ணக்கூடாது. (அதன் மீது துண்டு போட்டுக் கொண்டு அமரலாம்)

தர்ப்பத்தால் செய்த பவித்ரத்தை போட்டுக் கொண்டு பால், காப்பி, தீர்த்தம் முதலியவற்றை அருந்தக் கூடாது.

திருமணமானவர்கள் தாமரை இலையில் உணவு உட்கொள்ளக்கூடாது.

சாப்பிடும் பொழுது இலை, தட்டு ஆகியவற்றை வலது கையால் தொட்டுக்கொள்ளாமல் நீர் அருந்தக்கூடாது.

உபநயனம் ஆன ஆண்கள் அனைவரும் சாப்பிடும் உணவிற்கு பரிஷேசனம் செய்யாமல் சாப்பிடக்கூடாது.

தாயாரைத்தவிர மற்ற பெண்களக்கு நமஸ்காரம் செய்யும்போது, அபிவாதனம் சொல்லக் கூடாது.

துறவி (ஸன்யாஸி) களுக்குச் செய்யும் நமஸ்காரத்துக்கு அபிவாதனம் சொல்லக்கூடாது.

ச்ராத்தம் செய்பவர் ச்ராத்தத்திற்கு ஒரு மாதம் அல்லது 15 நாட்களுக்கு முன் பரான்னம், (வெளியில் சாப்பாடு) க்ஷவரம், எண்ணை தேய்த்துக் கொள்ளல், ஸ்த்ரீ ஸங்கமம் இவைகளைச் செய்யக்கூடாது. குரு, மித்ரன், மாமனார், சகோதரி இவர்கள் அன்னம் பரான்னமாகாது. சாப்பிடலாம். அவசரமும் அவசியமும் ஏற்பட்டால் ஒரு வாரத்திற்கு முன்பேனும் இந்த நியமங்களைக் கைக்கொள்ள வேண்டும். அதம (கடைசி) பசஷமாக, ச்ராத்தத்திற்கு மூன்றுநாள் முன்பேனும் இவைகளைக் கவனிக்க வேண்டும். இதுமிக அவசியமானது.

**நமஸ்காரம் செய்தபிறகு சொல்லப்படும் அபிவாதயே ப்ரவரத்தை எங்கெங்கே, யார் யாருக்குச் சொல்லலாம்? யார் யாருக்குச் சொல்லக் கூடாது**

பூணூல் போட்டுக்கொண்ட ஒவ்வொருவரும் பெரியவர்களுக்கு நமஸ்காரம் செய்தால் நமஸ்காரம் செய்துவிட்டு, தனது இருகாதுகளிலும் இருகைகளை வைத்துகொண்டு தனது வம்ச ரிஷிகள், தன்னுடைய கோத்ரம், தனது வேதம், தனது சர்மா (பெயர்) முதலானவற்றை விளக்கும் அபிவாதயே ப்ரவரத்தைச்சொல்லி பெரியோர்களின் கால்களைத் தொட்டு வணங்க வேண்டும். இது பொது விதி, ஆனால்,

**தேவாந் நத³ன் ஸபாம் வ்ருக்ஷான் அக்னிகார்யம் ததா யதிம்**
**தண்டவத் ப்ரணமேத் பூமௌ ந அபிவாதன மாசரேத்**

தெய்வங்களுக்கு முன்பாக நமஸ்காரம் செய்தாலும்,
பலபேர் கூடியிருக்கும் ஸபையில் நமஸ்காரம் செய்தாலும்,
அச்வத்தம் (அரசு) பலாசம் போன்ற மரங்களுக்குச் செய்யும் நமஸ்காரத்துக்கும், ஸமிதாதானம், ஔபாஸனம் முதலான ஹோமங்களைச்செய்த அக்னியின் முன்பாக நமஸ்கரித்தாலும், அபிவாதயே சொல்லக்கூடாது.

**பரிஷேசனம் செய்யும் போது அன்னத்தை எந்த விரலால் எடுத்து வாயில் போட்டுக்கொள்ள வேண்டும்? ஏதாவது விதிமுறை உண்டா?**

பரிஷேசனத்துக்கு ப்ராணாஹு³தி எனப்பெயர்,

**அஹம் வைச்வாநரோ பூத்வா ப்ராணிநாம் தேஹமாரித:**
**ப்ராணா(அ)பாந சமாத்யுத்த: பசாம்யன்னம் சதுர்விதம் (பகவத் கீதை)**

என்னும் பகவத்கீதை வசனப்படி நம் ஒவ்வொருவரிடமும் உள்ளிருந்து சாப்பிடுபவர் பகவான்தான், ஆகவே ஜடராக்னி என்னும் அக்னியில் ஹோமம் செய்யும் விதமாகவே நமது சாப்பாடு அமைகிறது. ஆகவேதான் ஸ்வாஹா என்னும் மந்திரம் சொல்லி முதலில் வயிற்றில் இருக்கும் பகவானுக்கு ஹோமம் செய்கிறோம். இதற்குத்தான் ப்ராணாஹு³தி எனப்பெயர் இதில் மொத்தம் ஆறுமுறை சாதத்தை எடுத்து வாயில் போட்டுக்கொள்ள வேண்டும் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு மந்திரம்,

1) முதல் (ப்ராணாய ஸ்வாஹா) மந்திரம் சொல்லி ஆள்காட்டி விரல் + நடு விரல் + கட்டை விரல் ஆகிய மூன்று விரல்களாலும் அன்னத்தை எடுத்து வாயில் போட்டுக் கொள்ள வேண்டும்.

2) 2ஆவது (அபாநாய ஸ்வாஹா) மந்திரம் சொல்லி நடுவிரல் + மோதிர விரல் + கட்டை விரல் ஆகிய மூன்று விரல்களாலும்,

3) மூன்றாவது (வ்யாநாய ஸ்வாஹா) மந்திரம் சொல்லி சுண்டு விரல் + மோதிர விரல் + கட்டை விரல் ஆகிய மூன்று விரல்களாலும்,

4) நான்காவது (உதாநாயஸ்வாஹா) மந்திரம் சொல்லி ஆள்காட்டி விரல் தவிர மற்ற நான்கு விரல்களாலும்.

5) ஐந்தாவது (ஸமாநாய ஸ்வாஹா) மந்திரம் சொல்லி ஐந்து விரல்களாலும்,

6) ஆறாவது (ப்ருஹ்மணே ஸ்வாஹா) மந்திரம் சொல்லி ஐந்து விரல்களாலும் சாதத்தை எடுத்து பல்லில் படாமல் விழுங்க வேண்டும். இதுவே ப்ரணாஹுதி செய்யும் முறை.

இங்கு கூறியமந்திரங்கள் யஜுர்வேதத்தை அனுசரித்தது. மற்ற வேதங்களுக்கு மந்திரங்களைக்கூறும் வரிசைக்ரமம் மட்டும் மாறலாம், ஆனால் செய்ய வேண்டிய முறைமாறாது. இவ்வாறு ப்ராணாஹுதியை முறையாகச் செய்வதால் சாப்பிடும் உணவு நன்கு ஜீர்ணமாகி நல்ல உடல் மற்றும் உள்ள வலிமை ஏற்படும்.

## திவ்யதேச யாத்திரை சென்று வந்துவிட்டால் பிறகு ஸந்தியாவந்தனம் செய்ய வேண்டாமா?

இது தவறான கருத்து, ஆஸ்திகர்கள் மத்தியில் சிலர் இவ்வாறு குழம்பிப்போயிருக்கிறார்கள். திவ்யதேச யாத்திரை ஸமாரயணம், ப்ரபத்தி முதலியவைகள் பக்திமார்க்கம். ஸந்தியாவந்தனம், ச்ராத்தம், தர்ப்பணம் போன்றவைகள் கர்மமார்கம். இவை இரண்டும் வெவ்வேறானவை ஒன்று செய்வதால் மற்றவற்றைச் செய்வதாக ஆகாது, ஒவ்வொருவரும் அவரவர்களுக்கு விதிக்கப்பட்ட ஸந்த்யாவந்தனம் முதலிய நித்ய கர்மாக்களை வாழ்நாள் முழுவதும் பலனை எதிர்பாராமல் செய்யத்தான் வேண்டும். இதனால் அவ்வப்போது சேரும் பாபங்கள் விலகுகின்றன. ஆகவே புத்திசாலியான மனிதன் ஸந்யாவந்தனம், பித்ரு ச்ராத்தம், தர்ப்பணம் முதலானவற்றை எக்காலத்திலும் விடாமல் செய்து வரத்தான் வேண்டும்.

## காலையில் குளிக்காமலேயே (ஸுர்ய உதய காலத்தில்) ஸந்தியா வந்தனம் செய்யலாமா?

அந்தணராகப் பிறந்த அனைவரும் ஸந்தியா காலமென்னும் ஸுர்யஉதயம் மற்றும் சூர்யஅஸ்த்தமன காலங்களில் கட்டாயம் செய்ய வேண்டிய கர்மாதான் ஸந்த்யாவந்தனம். ஆகவே அந்த ஸந்த்யா காலங்களில் கட்டாயம் ஸந்த்யாவந்தனம் செய்யவேண்டும் என்பதால் ஸந்த்யா காலங்களில் விபூதி இட்டுக் கொண்டு ஸந்த்யா வந்தனம் செய்துவிட்டு பிறகு ஸ்னானம் செய்யலாம். தவறில்லை.

**'ஸுசிர் வாபி அஸுசிர் வாபி காலே ஸந்த்யாம் ஸமாசரேத்'**

(சுத்தனாயினும், அசுத்தனாயினும் உரிய காலத்தில் ஸந்த்யாவந்தனத்தைச் செய்யவேண்டும்) என்னும் ஸ்ம்ருதி வாக்யமே இதற்கு ப்ரமாணம்.

## ஆண்கள் வேஷ்டியை பஞ்சகச்சமாகவும் பெண்கள் புடவையை மடிஸாராகவும் கட்டிக்கொள்வது ஏன்?

பொதுவாக நாம் உடுத்தும் உடைபற்றி சாஸ்திரங்களில் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன.

தலைப்புடன் கூடிய வஸ்திரத்தைத்தான் உடுத்த வேண்டும். அவ்வாறு உடுத்தும்போது வேஷ்டி அல்லது புடவையின் நுனி தரையைநோக்கி தொங்கக்கூடாது. அப்படி தரையை நோக்கி தொங்கினால் நாம் செய்யும் பூஜை, ஜபம் ஹோமம் முதலியவற்றின் பலன்கள் அனைத்தும் நம்மிடமிருந்து விலகி பூமாதேவியைச் சென்றடையும்.

நாம் செய்யும் நற்செயல்கள் நம்மிடம் தங்குவதற்காகவே வேஷ்டி/புடவையின் இரு தலைப்புகளையும் உள்ளே செருகி நாம் பஞ்சகச்சம் மற்றும் மடிசார் என்னும் முறையில் கட்டிக்கொள்கிறோம்.

எப்பொழுதும் இவ்வாறு உடுத்திக்கொள்ள முடியாவிட்டாலும் பூஜை, ஜபம் ஹோமம், பஜனை, பாராயணம் போன்ற கார்யங்களில் ஈடுபடும் போதாவது ஆண்கள் பஞ்சகச்ச முறையிலும் பெண்கள் மடிஸார் முறையிலும் வஸ்த்ரம் உடுத்திக் கொண்டால் அந்தந்த கர்மாவின் பலன்கள் அவர்களிடமே தங்கி விரைவில் நல்ல பலனைத்தரும்.

## நாம் உடலில் பூணூலை எப்படி போட்டுக்கொள்ள வேண்டும்?

**உபவீதம், நிவீதம்,** ப்ராசீனாவீதம் என்று மூன்று விதமாகப் பூணூலை போட்டுக் கொள்ளலாம், அதாவது உபவீதம் என்பது இடதுபக்கத் தோளில் பூணல் இருக்குமாறு மார்பின் குறுக்கே போட்டுக் கொள்வது, தெய்வங்களுக்கு ப்ரீதியான செயல்களைச் செய்யும்போது இவ்வாறு அணிந்து கொள்ள வேண்டும். ஒவ்வொருவரும் செய்யும் (காலை எழுந்திருத்தல் பல் தேய்த்தல் குளித்தல் சாப்பிடுதல் தூங்குதல் போன்ற) அனைத்து செயல்களும் சாஸ்திரங்களில் கூறியபடி செய்வதால் அனைத்தும் தெய்வ ப்ரீதியாக ஆகிறது, ஆகவே நாம் எப்போதும் பூணூலை உபவீதமாகவே அணிந்து கொள்கிறோம், மனிதன் மற்றும் மஹர்ஷிகளின் ப்ரீதிக்காகச் செய்யும் (ரிஷி தர்ப்பணம் போன்ற) கர்மாக்களை நிவீதம் என்னும் முறையில் பூணூலை மாலைபோல் கழுத்தில் தொங்க விட்டுக் கொண்டு செய்ய வேண்டும். மறைந்த முன்னோர்களக்கு – பித்ருக்களுக்கு – செய்யம் தர்ப்பணம் ச்ராத்தம் முதலானவற்றை ப்ராசீனாவீதம் என்னும் முறையில் அதாவது பூணல் வலது பக்க தோளில் படுமாறு மார்புக்கு குறுக்கே போட்டுக் கொண்டு செய்ய வேண்டும். ஆக தேவ – ரிஷி - பித்ருக்கள் எனப்படும் மூவருக்கான கர்மாக்களிலும் உபவீதம், நிவீதம், ப்ராசீனாவீதம் என மூன்று விதமாக பூணலை போட்டுக் கொள்கிறோம்.

## வெளியூருக்குப் புறப்படும்போது விட்டுப்போகாமல் இருக்க அடுத்த வேளை ஸந்த்யாவந்தனத்தை முன்கூட்டியே செய்து விடலாமா?

ஸந்த்யாவந்தனம் ஸமிதாதானம் ஔபாஸனம் போன்றவைகள் நித்யகர்மாக்கள் எனப்பெயர். இவைகளுக்கு தனித்தனியே வெவ்வேறு காலங்கள். ஸந்த்யாவந்தனத்தை ஸுர்யோதயம் - ஸுர்ய அஸ்தமனத்துக்கு சிறிது நேரம் முன்பு ஆரம்பித்து உதயம் - அஸ்தமனம் ஆகிய சிறிது நேரத்துக்குப் பிறகு முடிக்க வேண்டும். குறிப்பிட்ட

காலத்தில் செய்ய இயலாவிட்டால் காலம் கடந்து (ப்ராயஸ்சித்தம் செய்து) செய்யலாம். தவறில்லை.

ஆனால் ஸந்த்யாவந்தனம் போன்ற நித்ய கர்மாக்கள் அனைத்தையும் உரிய காலத்துக்கு முன்பே செய்து முடிக்க சாஸ்திரம் அனுமதிக்கவில்லை அவ்வாறு முன்கூட்டியே செய்து விட்டால் **அகாலே க்ருதம் அக்ருதம்** என்பதாக அது செய்யப்படாததாகவே ஆகும். ஆகவே ப்ரயாணத்தின் நடுவிலோ அல்லது செல்ல வேண்டிய இடத்துக்குச் சென்ற பிறகோ, (விட்டுப்போன) ஸந்த்யாவந்தனத்தைச் செய்ய முயற்சிக்கலாம். குறிப்பிட்ட காலத்துக்கு முன்பு செய்யக்கூடாது.

## ப்ரும்ஹயக்ஞும் என்றால் என்ன? அதனால் என்ன பலன்?

அந்தணர் ஒவ்வொருவரும் ஒவ்வொருநாளும் தான் கற்றுக் கொண்ட வேதத்தை தினஸரி சிறிதளவாவது சொல்வதற்குத்தான் ப்ரும்ஹ யக்ஞும் என்று பெயர்,

தினஸரி காலையில் ஸந்த்யாவந்தனம் (ஔபாஸனம்) பூஜை முதலியவற்றை முடித்துவிட்டு (குருமுகமாக கற்றுக்கொண்ட) புருஷஸூக்தம் ஸ்ரீருத்ரம் சமகம் போன்ற வேதபாகங்களை சிறிதாவது சொல்ல வேண்டும், அல்லது வேதத்திற்கு பதிலாக காயத்ரீயையாவது சொல்லலாம்.

கிழக்கு திசை நோக்கி தர்பத்தின் (ஆஸனத்தின்) மீது அமர்ந்து கொண்டு திறந்த வெளியில் வலது காலை இடது தொடையின் மேல் போட்டக் கொண்டு வேதத்தைச் சொல்ல வேண்டும்.

முழுமையாக வேதம் கற்றவர்கள் முதல்நாள் முடிவடைந்த பகுதியில் தொடங்கி தொடர்ந்த அடுத்த நாள் சொல்ல வேண்டும். இதற்கு பிறகே தேவர்கள் மஹர்ஷிகள் ஆகியோருக்கு ஜலத்தால் தர்ப்பணத்தை செய்ய வேண்டும். இதுவே ப்ரும்ஹயக்ஞும் எனப்படும்.

தேவர்கள், மஹர்ஷிகள், பித்ருக்களின் அருளை மிகச்சுலபமாக பெற்றுத்தரும் இந்த ப்ருஹம் யக்ஞு தர்பணத்தை தினஸரி செய்ய முயற்சிக்கலாம்.

தினஸரி ப்ருஹ்ம யக்ஞும் செய்து வருபவர் இறந்த பின்னால் ஸ்வர்க்கத்துக்குச் செல்வார் என்றும் இவ்வுலகில் ஜீவித்திருக்கும்வரை தனக்குச் சமமானவர்களுக்குள் சிறந்தவனாக இருப்பார் என்றும் செல்வம் நிறைந்த பூமி முழுவதையும் தானம் செய்பவருக்கு எந்தப் பலனுண்டோ அந்த பலன் ஏன்! அதற்கும் அதிகமான பலன் கிட்டும் என்றும் அபம்ருத்யு என்னும் துர்மரணம் ஏற்படாது என்றும் மறுபடியும் பூமியில் பிறக்காதபடி ஸ்வர்கத்தை அடைவான் என்றும் இறுதியில் ப்ருஹ்ம ஸாயுஜ்யமென்னும் முக்தியை அடைவான் என்றம் கூறுகிறது க்ருஷ்ண யஜுர்வேதம் தைத்திரீய ஆரண்யகம்.

## ப்ருஹ்மயக்ஞுத்தை மாத்யாஹ்னிகம் செய்துவிட்டுத்தான் செய்ய வேண்டுமா?

ப்ரும்ஹயக்ஞும் என்பது இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளது. முதல் பகுதி வேதத்தைச் சொல்லும் பகுதி. இரண்டாவது தேவர்கள் - மஹரிஷிகள் பித்ருக்களுக்கு தர்ப்பணம் செய்யும் பகுதி.

இந்த இரண்டில் முதல்பகுதியைக் காலையில் செய்யலாம். இரண்டாம் பகுதியான தேவரிஷிபித்ரு தர்ப்பணத்தை மதியம் மாத்யாஹ்னிகம் செய்துவிட்டுத்தான் செய்யவேண்டும். மாத்யாஹ்னிகத்துக்கு முன்பாக தேவர்ஷிபித்ரு தர்ப்பணத்தைச் செய்யக்கூடாது. மாத்யாஹ்னிகம் செய்த பிறகு இரு பகுதிகளையும் சேர்த்தும் செய்யலாம்.

**ப்ருஹ்மயக்ஞுத்தை பித்ரு தர்ப்பண நாட்களில்தான் செய்ய வேண்டுமா? தினஸரி செய்யலாமா?**

ப்ரும்ஹயக்ஞுத்தை ஸந்த்யாவந்தனத்தைப்போல் ஒவ்வொருநாளும் (ப்ருஹ்மசாரி உட்பட) அனைவரும் செய்ய வேண்டும். சிலர் அமாவாஸை போன்ற நாட்களில் தர்ப்பணம் செய்து விட்டு அன்று மட்டும் செய்ய வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அது தவறு, ப்ருஹ்மயக்ஞுத்துக்கும் தர்ப்பணத்துக்கம் ஸம்பந்தமில்லை. எல்லா நாட்களிலம் ப்ருஹ்மயக்ஞும் செய்யலாம்.

**ப்ரஹ்மயக்ஞுத்தில் தகப்பனார் உள்ளவரும் இடம் போட்டுக் கொண்டு தர்ப்பணம் செய்ய வேண்டுமா?**

ப்ருஹ்ம யக்ஞும் என்பது வேதங்களைச் சொல்லுதல், முறையாக நான்கு வேதங்களையும் (ஆரம்பத்தையும்) சொல்லிவிட்டு அதன் முடிவில் தேவரிஷி பித்ரு தர்ப்பணம் கரிஷ்யே என்று ஸங்கல்பம் செய்து கொண்டு தர்ப்பணம் செய்யப்படுகிறது. ஆகவே ப்ருஹ்ம யக்ஞுத்தைத் தொடர்ந்து செய்யப்படும் தர்ப்பணத்தையும் ப்ருஹ்மயக்ஞும் என்று சொல்கிறோம்.

பித்ருக்கள் என்பவர் பல வகையாக (குழுவாக) இருக்கிறார்கள். இவர்கள் நித்ய(திவ்ய) பித்ருக்கள் என்பவர் சிலர். தினஸரி ஸ்நானம் செய்த பிறகும் ப்ருஹ்மயக்ஞ முடிவிலும் செய்யும் தர்ப்பணத்தை இந்த நித்ய(திவ்ய) பித்ருக்களுக்குத்தான் செய்கிறோம், அமாவாஸை முதலிய நாட்களில் அதிவ்ய பித்ருக்களுக்குச் செய்கிறோம்.

ஆகவே தந்தையுள்ள – தந்தையில்லாத – அனைவரும் ப்ரும்ஹயக்ஞ முடிவில் தேவர்கள் ரிஷிகள் ஆகியவர்களுக்குத் தர்ப்பணம் செய்துவிட்டுப் பூணூலை இடம் போட்டுக்கொண்டு பித்ரு தர்பணத்தைச் செய்ய வேண்டும். இதனால் தர்ப்பணம் செய்பவருக்கும் அவரின் பெற்றோருக்கும் ஆயுஸ் அதிகரிக்கும்.

**சாப்பிடும்போது ஒரு சிலர் இலையின் அருகில் சிறிது சாதத்தை வைத்து ஏதோ மந்திரம் சொல்கிறார்களே?, இது என்ன?**

திருமணம் ஆன ஒவ்வொருவரும் சாப்பிடும் முன்பாக ஸமைக்கும் போது ஏற்படும் சில தவறுகளைப் போக்க (அன்னத்தால் தேவதைகளுக்கு பலிபோட்டு)

வைஸ்வதேவம் என்னும் ஹோமத்தை செய்ய வேண்டும். இவ்வாறு வைச்வதேவம் செய்ய இயலாதவர்கள் சாப்பிடும் முன்பாக சித்ராதி தேவதைகளுக்கு பலி போடலாம்

அதாவது சாப்பிடும் முன்பு பரிஷேசனத்தின் முடிவில் (அம்ருதோபஸ்தரணமஸிக்கு முன்பு) கையில் சிறிது சாதம் எடுத்துக்கொண்டு 1) சித்ராய நம:, 2) சித்ர குப்தாய:, 3) யமாய நம:, 4) தர்மராஜாய நம:, 5) ஸர்வபூதேப்யோ நம: என்று மந்திரங்கள் சொல்லி சாப்பிடும் இலையின் (தட்டின்) வலதுபக்கத்தில் இலையை ஒட்டி வரிசையாக 5 இடங்களில் பலி போடவேண்டும். இதனால் வைச்வதேவம் செய்த பலன் கிட்டும், மேலும் ஸமைக்கும் போது ஏற்பட்ட பல தோஷங்களும் விலகும். சாப்பிடும் உணவும் சுத்தமானதாக ஆகும். கர்நாடக தேசத்தைச் சேர்ந்த பலரும் இன்றும் சாப்பிடும்போது இதைத்தான் செய்து வருகிறார்கள்.

**அமாவாஸையன்று காலையில் பூஜையை முடித்துவிட்டு மதியம் தர்ப்பணம் செய்யும்முன்பு கட்டாயம் ஸ்நானம் செய்யவேண்டுமா?**

க்ருஹஸ்தர்கள் (திருமணமானவர்கள்) ஒவ்வொருநாளும் மதியம் மாத்யாஹ்நிக ஸ்னானம் செய்ய வேண்டும். அமாவாஸை முதலிய பித்ரு நாட்களிலாவது மதியம் ஸ்னானம் செய்துவிட்டு தர்ப்பணம் செய்வதுதான் உத்தமம், பூஜைக்கும் இதற்கும் சம்பந்தமில்லை.

**தர்ப்பணத்துக்கு எள்ளுடன் அக்ஷதையை எந்தெந்த நாட்களில் சேர்த்துக் கொள்ள வேண்டும்?**

பொதுவாக பித்ரு தர்ப்பணம் கறுப்பு எள்ளைக்கொண்டே செய்ய வேண்டும், ஆனால்

**ப்ருக்வாதித்யார வாரேஷு பித்ரு த்ருப்த்யை திலாஞ்சலீன்**
**ஸாக்ஷதான் ஸந்திசேத் தீமான் தத்தத் தர்மாதிகே திநே**

என்பதாக வெள்ளி, ஞாயிறு, செவ்வாய்கிழமைகளிலும் மற்றும் ஜன்ம (பிறந்த) நக்ஷத்ரத்தன்றும் எள்ளினால் மட்டும் தர்ப்பணம் செய்யக்கூடாது. எள்ளுடன் அக்ஷதையையும் சேர்த்துக்கொண்டுதான் தர்ப்பணம் செய்ய வேண்டும்.

**அமாவாஸை முதலிய காலங்களில் செய்யும் தர்ப்பணத்தில் எள்ளைச் சேர்த்துக்கொள்ள ஏதாவது அளவு உண்டா?**

முன்னோர்களுக்கு மிகவும் சந்தோஷத்தைத் தரும் பொருட்களில் கறுப்பு எள்ளும் ஒன்று. கறுப்பு எள்ளு கலந்த ஜலத்தால் செய்யும் தர்ப்பணத்தால் பித்ருக்கள் மிகவும் சந்தோஷத்தை அடைகிறார்கள்.

ஒவ்வொரு தடவையும் (தர்ப்பயாமி என்று சொல்லிச்செய்யும் ஒவ்வொரு தர்ப்பணத்திற்கும்) ஏழு அல்லது எட்டு எள்ளைச்சேர்த்தக் கொள்ள வேணும்.

**திலை: ஸப்தாஷ்டபிர்வாபி ஸமவேதம் ஜலாஞ்ஜலிம்**
**பக்திநம்ரஸ் ஸமுத்திச்ய புவ்யஸ்மாகம் ப்ரதாஸ்யதி**

பூமியில் எங்களது புத்ரன் (பிள்ளை) பக்தியுடன் வணங்குகிறவனாக, நமக்கு ஏழு அல்லது எட்டு எள்ளுடன் கூடிய ஜலத்தால் தர்ப்பணம் செய்யப் போகிறான் என்று பித்ருக்கள் எதிர்பார்க்கிறார்கள் என்கிறது விஷ்ணுபுராணம்.

ஆகவே தர்ப்பணத்தில் ஒவ்வொரு தடவையும் தர்ப்பயாமி என்று சொல்லும் போது ஏழு அல்லது எட்டு எள்சேர்த்துக் கொண்டு தர்ப்பணம் செய்வது சிறந்தது.

**சூர்ய/சந்த்ர கிரஹணத்தன்று பித்ருக்களுக்கு தர்ப்பணத்தை எப்பொழுது செய்யவேண்டும்?**

பொதுவாக பித்ருக்களுக்குச் செய்யப்படும் தர்ப்பணம் க்ருஷ்ண பக்ஷத்திலேயே செய்ய வேண்டும். பௌர்ணமியில் தொடங்கி க்ருஷ்ணபசஷ ப்ரதமையில் முடியும் சந்திரகிரஹணத்தில்; கிரஹணம் ஆரம்பித்தவுடன் ஸ்நானம் செய்து, க்ரஹணத்தின் நடுப்பகுதிவரை காத்திருந்து, நடுப்பகுதிக்கு பிறகு, க்ரஹணம்முடியும் முன்பாக, பித்ருக்களுக்கு தர்ப்பணம் செய்ய வேண்டும்.

அவ்வாறே க்ருஷ்ண பக்ஷத்தில் (அமாவாஸையில்) தொடங்கி சுக்லபக்ஷ ப்ரதமையில் முடியும் ஸுர்யக்ரஹணத்தில், க்ரஹணம் ஆரம்பித்தவுடனேயே ஸ்நானம் செய்து, தர்ப்பணத்தை (க்ரஹணத்தின் நடுப்பகுதிக்குள்) செய்து விடவேண்டும்.

**விவாஹம் அல்லது உபநயனம் ஆனவுடன் வரும் அமாவாஸை முதலிய நாட்களில் பித்ரு தர்ப்பணம் செய்யலாமா?**

பித்ருக்களுக்குச் செய்யும் தர்பணத்தை எக்காலத்திலும் முக்கிய காரணமில்லாமல், செய்யாமல் விடக்கூடாது.

விவாஹம் உபநயனம் போன்ற மங்கள காரியங்கள் நடந்த பிறகு தினஸரிசெய்யும் தர்ப்பணத்தை ஒரு சிலகாலம் கறுப்பு எள்ளைச் சேர்த்துக்கொண்டு செய்யக்கூடாது என்றும், எள்ளுக்குப் பதிலாக அக்ஷதையம், தர்ப்பைக்கு பதிலாக அருகம்புல்லும் சேர்த்துக் கொண்டு தர்ப்பணம் செய்ய வெண்டும் என்றும் போதாயன மஹர்ஷியின் வசனம்.

**விவாஹே சோபநயனே சௌளே ஸதி யதா க்ரமம்**
**வர்ஷம் அர்த்தம் ததர்தம் ச நைத்யகே தில தர்ப்பணம்**

விவாஹத்திற்குப்பிறகு ஒரு வர்ஷமும், உபநயனத்திற்குப் பிறகு ஆறுமாதமும், சௌளத்திற்குப் பின்பு மூன்றுமாதமும், (பித்ருஸம்ஸ்காரம் சிராத்தம் தவிர மற்றநாட்களில்) கறுப்பு எள்ளினால் தர்ப்பணம் செய்யக் கூடாது, ஆனால் எள்ளுக்கு பதிலாக அக்ஷதைதையும், தர்ப்பைக்கு பதிலாக அருகம்புல்லையும் சேர்த்துக் கொண்டு தர்ப்பணம் செய்ய வேண்டும்.

**ச்ராத்தம் செய்பவர் சில நாட்கள் பரான்னம் சாப்பிடக்கூடாது என்கிறார்களே, பரான்னம் என்றால்?**

தன்னைச் சேராதவர் பரர் என அழைக்கப்படுகிறார். அவர்களின் உணவை சாப்பிடாமல் இருப்பதே பரான்ன நியமம் எனப்பெயர். எப்பொழுதும் இவ்வாறு (கண்ட

இடங்களில் சாப்பிடாமல்) நியமம் இருப்பது மிகச்சிறந்தது, முடியாதவர்கள் தனது தாய் தந்தையர்களுக்கு ச்ராத்தம் செய்யும் மாதத்திலா வது அதாவது ஒரு மாதம் அல்லது ஒரு பக்ஷம் (15 நாள்) முன்பாவது இவ்வாறு பரான்ன நியமம் இருக்கலாம். பொதுவாக மற்றவரின் உணவு பரான்னம் என்ற போதிலும் ஒருசிலர் மற்றவர்கள் ஆகமாட்டார்கள். அதாவது

**ஸுஹ்ருதன்னம் குரோரன்னம் யதன்னம் மாதுலஸ்ய ச**
**ஸ்வஸு: ஸ்வஸுரயோரன்னம் பரான்னம் ந விதுர்புதா:**

தனது நெருங்கிய நண்பன், தனது ஆசிரியர், தனது தாயின் ஸஹோதரன் (மாமா), தன்னுடன் கூடப்பிறந்த அக்காள் - தங்கை, மாமனார், ஆகியோர் பரர் (மற்றவர்) இல்லை, ஆகவே இவர்களின் வீட்டில் சாப்பிடுவது பரான்ன நியமத்துக்கு இடையூறாக ஆகாது.

**எனது தந்தை இறந்து விட்டார். அவருக்கு நல்லகதி கிடைக்க மகளான நான் என்ன செய்யலாம்?**

பெண்ணாகப் பிறந்தவர் ஒவ்வொரு மாதமும் ஸஹோதரர் செய்யும் மாஸிகங்களுக்குக் ஸஹோதரர்களுடன் கூட இருந்து, ஸமையலுக்கு (சாப்பட்டுக்கு) உதவி செய்து, சாப்பிடுபவர்களுக்கு ஆபோசனம் (தீர்த்தம்) போட்டு, பிண்டம் பிடித்துத்தந்து உதவி செய்யலாம். இதைத்தவிர அருகிலுள்ள தேவாலயம் சென்று நரஸிம்ஹர் அல்லது தக்ஷிணாமூர்த்தி ஸன்னதியில் இறந்தவரின் நினைவாக இறந்த ஒருவருடம் முடியும் வரையில் தினந்தோறும் தெற்குமுகமாக நல்லெண்ணையால் விளக்கேற்றி வைக்கலாம். மேலும் மக்கள் செல்லும் (கரடு முரடான) பாதையில் விளக்கு வஸதி செய்து தருவதும் இறந்தவருக்கு நல்ல கதியை பெற்றுத்தரும்.

**ஒருவர் தனது உடலை (மருத்துவமனைக்கு) தானம் செய்து விட்டார். ஸம்ஸ்காரம் செய்ய அவா உடல் இல்லாததால் அவருக்கு கர்மா செய்ய இயலவில்லை? என்ன செய்யலாம்.?**

ஒருவர் இறந்த பிறகு செய்யப்படும் (அபர) கர்மா அவரது உடலுகு மட்டுமல்ல அந்த உடலில் இத்தனை நர்களாக வஸித்த ஜீவனுக்கும் தான். உடல் வேண்டுமானால் கிடைக்காமல் இருக்கலாம் ஆனால் ஜீவன் அங்கேதானே இருக்கிறது. அதற்கு செய்ய வேண்டிய கர்மாக்களை ஸரியாக செய்தால்தானே அந்தந்த ஜீவனுக்கு நல்லகதி கிட்டும், ஆகவேதான் இப்படிப்பட்ட சூழ்நிலையில் ப்ரதிகிருதி (தர்ப்ப) **ஸம்ஸ்காரம்** செய்யவேண்டும் என்று கூறுகிறது நம் சாஸ்திரம்.

அதாவது எப்போது இறந்தவரின் உடல் (எலும்பு) நமக்கு கிடைக்கவில்லையோ அப்போது பலாச இலை அல்லது தர்பையால் ஓர் உடல்போல் செய்து அதை சரீரமாக (உடலாக) பாவித்து அதில் ஸம்ஸ்காரம் செய்யப்பட வேண்டும் என்றும் ஒரு போதும் ஸம்ஸ்காரத்தை செய்யாமல் இருக்கக்கூடாது என்றும் கூறுகிறது சாஸ்திரம்.

**ஒரே நாளில் அடுத்தடுத்து இரண்டு முறை தர்ப்பணம் செய்ய நேர்ந்தால் எவ்வாறு செய்வது? இரண்டு முறை ஸ்நானம் செய்ய வேண்டுமா?**

ஷண்ணவதி தர்ப்பணம் செய்பவர்களுக்கு ஒரே நாளில் இரண்டு தர்ப்பணம் செய்யுமாறு நேரும். அப்போது முதல் தர்ப்பணத்தைக் கடைசிவரை செய்து முடித்துவிட்டுத் தர்ப்பணம் செய்த பாத்ரங்களை அலம்பி விட்டுப் புதிதாக ஜலம் எடுத்து வந்து அடுத்த தர்ப்பணத்தை ஸங்கல்பம் முதல் ஆரம்பித்துக் கடைசிவரை செய்ய வேண்டும். இரண்டாவது தர்பணத்துக்காக மறுபடியும் ஸ்நானம் செய்ய வேண்டாம்.

**மாதப்பிறப்பன்று செய்யும் பித்ரு தர்ப்பணத்தை எப்போது செய்ய வேண்டும்?**

பித்ருக்களுக்கு (முன்னோர்களுக்கு)ச் செய்யும் தர்ப்பணத்தை அமாவாஸை போன்ற நாட்களில் மதியம் மாத்யாஹ்னிகம் செய்து விட்டுத்தான் செய்ய வேண்டும். ஆனால் மாதப்பிறப்பன்று செய்யும் பித்ரு தர்ப்பணத்தைக் காலையிலேயே (மாத்யாஹ்னிகம் செய்யாமலும்) செய்யலாம், இது மாதம் பிறக்கும் நேரத்தைப் பொறுத்தது.

மாதம் பிறக்கும் நேரத்துக்கு எவ்வளவுக்கு எவ்வளவு ஸமீபத்தில் தர்ப்பணம் செய்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு அதிகமான புண்யம் உண்டு என்பதால் சக்தியுள்ளவர்கள் மாதம் பிறக்கும் நேரத்துக்கு ஸமீபமான நேரம் வரை காத்திருந்து தர்ப்பணம் செய்வது சிறந்தது. இயலாதவர்கள் மாதப்பிறப்பு நாளன்று காலையிலே (ஸந்த்யாவந்தனம் செய்து விட்டு) தர்ப்பணத்தை செய்து விடலாம், தவறில்லை.

**அமாவாஸை தர்ப்பணம் மற்றும் ச்ராத்தம் செய்யவேண்டிய மிகச்சரியான நேரம் எது?**

அமாவாஸை முதலிய நாட்களில் தர்ப்பணத்தையும், ஒவ்வொரு வருஷமும் இறந்த திதியன்று செய்யப்படும் சிராத்தத்தையும் செய்வதற்கு குதப காலம் என்னும் காலமே சரியான காலம் ஆகும்.

அஹ்னோ முஹுூர்தா: விக்யாதா: தச பஞ்ச ச ஸர்வதா
தத்ர அஷ்டமோ முஹுூர்த்தோ ய: ஸ கால: குதப: ஸ்ம்ருத:

என்பதாக ஒரு நாளில் பதினைந்து முகூர்த்தமுள்ள பகலின் எட்டாவது முகூர்த்தம் (காலை சுமார் 11-36 மணிக்கு மேல்) குதபகாலம் எனப்படும்.

ச்ராத்தம், தர்ப்பணம் முதலியவற்றை இந்த நேரத்தில் ஆரம்பித்துச் செய்வதே மிகஉத்தமம். (ஆனால் மாதப்பிறப்பு மற்றும் க்ரஹண தர்ப்பணங்களுக்குக் காலம் வேறுபடும்.)

குதபகாலம் வரை காத்திருக்க இயலாதவர்கள் குதப காலத்திற்கு முன்பு உள்ள காந்தர்வ காலத்தில் (காலை ஸுமார் 10-48 மணிக்கு மேல்) செய்யலாம்.

அதுவும் இயலாதவர்கள் ஸங்கவ காலத்தில் (காலை 8.24க்கு மேல்) மாத்யாஹ்னிகம் செய்து விட்டுச் செய்யலாம். ஆனால்,

ப்ராத: காலே து ந ச்ராத்தம் ப்ருகுர்வீத த்விஜோத்தம:

என்று ப்ராத: காலத்தில் காலை 8.24 மணிக்கு முன்பு ச்ராத்தமோ, தர்ப்பணமோ செய்யக் கூடாது.

ஆகவே காலையில் ஸந்தியாவந்தனம் செய்து மாத்யாஹ்ணிகம் செய்வதற்கான காலம் வந்த பிறகு (10-48 மணிக்குமேல்) மாத்யாஹ்ணிகமும் செய்துவிட்டுதான் அமாவாஸை தர்ப்பணம் செய்யவேண்டும்

உஷ:காலமான விடிகாலையிலோ, காலை நேரங்களிலோ, அமாவாஸையன்று பித்ருக்களுக்கு தர்ப்பணம் செய்ய பிரமாணம் கிடைக்கவில்லை.

## ஷண்ணவதி தர்ப்பணம் என்றால் என்ன? எப்போது செய்யவேண்டும்?

ஷண்ணவதி என்கிற சம்ஸ்கிருதச் சொல்லுக்குத் தொண்ணூற்றாறு (96) என்று பொருள்.

ஒவ்வொருவரும் அவரவர்களின் பித்ருக்(முன்னோர்)களின் த்ருப்திக்காக ஒருவருடத்தில் 96 நாட்கள் தர்ப்பணங்களைச் செய்யவேண்டும். இவைகளே ஷண்ணவதி தர்ப்பணங்கள் என்று கூறப்படுகின்றன.

அமாயுக மனு க்ராந்தி த்ருதி பாத மஹாளயா:

அஷ்டகா அன்வஷ்டகா சேதி ஷண்ணவத்ய: ப்ரகீர்திதா:

என்கிற வசனப்படி ஒரு வருடத்தில் 96 நாட்கள்.

அமாவாஸை நாட்கள் பன்னிரண்டு

க்ருதயுகம் முதலிய யுகாதி நாட்கள் நான்கு

ஸ்வாயம்புவம் முதலிய மன்வாதி நாட்கள் பதினான்கு

(தமிழ்) மாதப்பிறப்பு புண்யகால நாட்கள் பன்னிரண்டு

ஒவ்வொரு மாதமும் வரும் வைத்ருதி நாட்கள் பதின்மூன்று

ஒவ்வொரு மாதமும் வரும் வ்யாதீபாதம் நாட்கள் பதின்மூன்று

மஹாளயபக்ஷம் நாட்கள் பதினாறு (மார்கசீர்ஷம் முதல் நான்கு மாதங்களும்)

அஷ்டகா நான்கு நாட்கள்

அஷ்டகைக்கு மறுதினம் அன்வஷ்டகா நான்கு நாட்கள்

பரேத்யு எனப்படும் திஸ்ரோஷ்டகா நாட்கள் நான்கு

என்பதாக ஆக மொத்தம் ஒரு வருடத்தில் 96 தினங்கள் பித்ரு தினம், இவைகள் எந்தெந்த நாட்களில் நிகழ்கின்றன என்பதைப் பஞ்சாங்கத்தைப் பார்த்து அறிந்து கொள்ளலாம்.

இந்த ஷண்ணவதி நாட்களில் பித்ருக்களுக்கு தர்ப்பணம் செய்ய வேண்டும். ஒவ்வொரு வருடமும் இவ்வாறு 96 நாட்களும் தர்ப்பணம் செய்ய முடியாவிட்டாலும் வாழ்நாளில் ஒரு வருஷமாவது இவ்வாறு 96நாட்களும் பித்ருக்களுக்கு தர்ப்பணம் செய்வது குடும்பத்தில் நிம்மதியை தரும்.

இந்த 96 நாட்களும் தர்ப்பணம் செய்ய இயலாதவர்கள் அமாவாஸ்யை 12 நாட்கள், மாதப்பிறப்பு 12 நாட்கள், மஹாளயம் 16 நாட்கள், ஆகிய நாட்களிலாவது தர்ப்பணம் செய்யலாம்.

அதுவும் இயாலாதவர்கள் 12 மாத அமாவாஸை, மற்றும் மாதப்பிறப்பு நாட்களிலாவது தர்ப்பணம் செய்யலாம்.

## ஷண்ணவதி தர்ப்பணம் செய்வதை எப்போது முதல் ஆரம்பிக்கலாம்? என்ன பலன்?

வருஷத்தில் 96 நாட்கள் செய்யப்படும் ஷண்ணவதி தர்ப்பணத்தால் நமது முன்னோர்களுக்கு த்ருப்தி ஏற்படுகிறது. நல்ல குழந்தை பிறந்து வம்சவ்ருத்தி உண்டாகும். பித்ருதோஷம் போய்விடும். பித்ருக்கள் சந்தோஷமடைந்து நமக்கு நீண்ட ஆயுள், ஆரோக்கியம், குடும்பத்தில் நிம்மதி, மனஸ்சாந்தி முதலியவைகளைத் தந்து அனுக்ரஹிக்கிறார்கள்.

ஜன்மாவில் ஒரு வருஷமாவது இந்த 96 தர்ப்பணங்களையும் செய்யவேண்டும். தமிழ் வருஷப்பிறப்பன்றோ, அல்லது தாய் தந்தைக்குச் செய்யப்படும் வருஷாந்த்ர ச்ராத்தம் முடிந்த உடனேயோ, ஆரம்பித்துச் செய்யலாம்.

## அமாவாஸை தர்ப்பணம் சிரார்த்தம் போன்ற பித்ரு கார்யங்களை நெற்றியில் புண்ட்ரம் இட்டுக்கொண்டுதான் செய்ய வெண்டுமா?

பொதுவாக சிராத்தம் தர்ப்பணம் போன்ற பித்ரு கார்யங்களை செய்யும் போது நெற்றியில் திலகத்தைக் கண்டால் பித்ருக்கள் ஓடிப்போய் விடுவார்கள் என்பதால் திருமண், விபூதி போன்றவைகளை (புண்ட்ரம்) இட்டுக்கொள்ளக் கூடாது என்று சில சில புஸ்தகங்களும் (ஸ்மிருதிகளும்)

புண்ட்ரம் வேறு திலகம் வேறு, புண்ட்ரம் என்பது நெற்றியில் மேல் நோக்கியோ அல்லது குறுக்காகவோ இட்டுக் கொள்வது, திலகம் என்பது பொட்டாக வைத்துக்கொள்வது, ஆகவே திலகம்தான் கூடாது என்று கூறப்பட்டுள்ளதே தவிர

புண்ட்ரம் இட்டுக்கொள்ளக் கூடாது என்று கூறப்படவில்லை. ஆகவே புண்ட்ரம் இட்டுக்கொள்ளலாம் என்று சிலரும் கூறுகிறார்கள். ஆகவே இது விஷயத்தில் சிஷ்டாசாரமே ப்ரமாணம் என்பதால் அவரவரது முன்னோர்கள் எவ்வாறு செய்து வந்தார்களோ, அவ்வாறே செய்ய வேண்டும். அதை மாற்றிக் கொள்ளக்கூடாது என்று தெரிகிறது.

### பிறப்பு, இறப்பு தீட்டு நாட்களில் அமாவாஸை தர்ப்பணம் மற்றும் கிரஹண தர்ப்பணம் செய்ய வேண்டுமா? செய்ய வேண்டாமா?

உறவினர்களின் பிறப்பு, இறப்பு ஸம்பந்தமாக தீட்டுக் காக்கும் நாட்களில் அமாவாசை திதி வந்தால் (அன்று நமக்கு தூய்மையில்லை என்பதால்) பித்ரு தர்ப்பணம் செய்யக்கூடாது. ஆனால் நாம் தீட்டுக் காத்துக்கொண்டிருந்தாலும் கூட ஸுர்ய சந்த்ர க்ரஹணத்தின் போது அனைவருக்கும் தாற்காலிகமாக சுத்தி உண்டாகிறது என்னும் சாஸ்த்ரப்படி முன்னோர்களுக்குச் செய்ய வேண்டிய தர்ப்பணத்தை கட்டாயம் செய்ய வேண்டும். செய்யாமல் விடுவது பாபமாகும். மேலும் இந்த க்ரஹண தர்ப்பணத்தை க்ரஹணம் நடைபெறும் போதே செய்ய வேண்டும். க்ரஹணம் முடிந்த பிறகு செய்யக்கூடாது.

### முதல்நாள் ச்ராத்தம் சாப்பிடுபவர் மறுநாள் மற்றொரு ச்ராத்தத்தில் சாப்பிடலாமா?

சிராத்தம் செய்யும் கர்த்தாவுக்கு ஒருசில கட்டுப்பாடுகள் இருப்பதைப்போல் போக்தாவுக்கும் (ச்ராத்தம் சாப்பிடும் நபருக்கு) சில நியமங்கள் இருக்கின்றன. இந்த நியமங்களில் ச்ராத்தத்தில் சாப்பிடும் ப்ராஹ்மணர் குறிப்பிட்ட காலம் வரையில் மற்ற ச்ராத்தத்தில் சாப்பிடக் கூடாது. மேலும் அன்று வேறு எந்தஒரு விசேஷமான பூஜைகள் மற்றும் ஹோமங்களில் கலந்து கொள்ளக்கூடாது.

**ப்ரத்யப்தே த்வக மேகாஹம் மாஸிகேஷுச ஷட்திநம்**
**ஷண்மாஸாநபி ஸாபிண்டயே ஏகோத்திஷ்டே து வத்ஸரம்**
**ஊநே ஸப்ததினம் ப்ரோக்தம் ஆப்திகே ஸப்தராத்ரகம்**

(வருடத்திற்கு ஒரு முறை செய்யப்படும்) ப்ரத்யாப்தீக ச்ராத்தம் சாப்பிடுபவருக்கு ஒருநாள் அதாவது மறுநாள் ஸுத்தியில்லை.

(இறந்த பிறகு ஒரு வருடம் வரை ஒவ்வொரு மாதமும் இறந்த திதியில் செய்யும்) மாஸிகத்தில் சாப்பிட்டால் ஆறு நாட்களும்,

(இறந்த 12ஆவது நாளன்று செய்யப்படும்) ஸபீண்டீகரண ச்ராத்தத்தில் சாப்பிட்டால் ஆறுமாத காலமும்,

(இறந்த 11ஆவது நாள் செய்யும்) ஏகோத்திஷ்ட ச்ராத்தத்தில் சாப்பிடுபவருக்கு ஒரு வருஷம் வரையிலும்,

(இறந்த 27ஆவது, 45ஆவது நாட்களிலும், 6ஆவது, 12ஆவது மாதங்களிலும் செய்யப்படும்) ஊனமாஸிகங்களில் சாப்பிடும் நபருக்கு ஏழு நாளும்.

(இறந்த முதல் வருஷம் முடிவில் செய்யும்) ஆப்திக ச்ராத்தத்தில் சாப்பிடும் ப்ராஹ்மணருக்கு ஏழு நாட்களும் சுத்தி யில்லை என்கிறது தர்மசாஸ்திரம்.

ஆகவே ச்ராத்தம் சாப்பிடுபவர்கள் மேற்கூறிய சுத்தியற்ற நாட்களில் ச்ராத்தத்தில் போக்தாவாக கலந்து கொள்வதைத் தவிர்க்க வேண்டும்.

**ஷண்ணவதி தர்ப்பணம் ஒரு வருடம் செய்வதாக ஆரம்பித்துச்செய்யும் போது நடுவில் (வ்ருத்தி ஆசௌசத்தால்) சில தர்ப்பணங்களைச் செய்யாவிட்டால் தோஷமுண்டா?**

தர்பணம் செய்து முன்னோர்களின் அருளைப் பெறுவது என்பது மிக முக்கியமான செயல், ஷண்ணவதி என்னும் 96 தர்ப்பணங்களை ஒவ்வொரு வருஷமும் செய்வது உத்தமம் அல்லது வாழ்க்கையில் ஒரு முறையாவது கட்டாயம் செய்து விட வேண்டும். இந்த தர்ப்பணங்களை செய்ய ஆரம்பித்து நடுவில் செய்ய இயலாவிட்டால் (நடுவில் விட்ட) தோஷம் வராது செய்தவரையில் பலன் உண்டு. இங்கு (நித்ய கர்மாக்களுக்கு) ஆரம்பித்து பாதியில் விடுதல் என்னும் தோஷம் கிடையாது என்கிறார் ஸ்ரீ கிருஷ்ணர் பகவத்கீதையில். ஆகவே தர்ப்பணத்துக்கு மட்டுமில்லாமல் பூஜைகள் ஏகாதசி போன்ற விரதங்கள் முதலானவற்றையும் (எங்கே ஆரம்பித்து பாதியில் நிறுத்தினால் தோஷம் ஏற்படுமோ? என்னும் பயத்தில்) செய்ய ஆரம்பிக்காமலே இருக்கக் கூடாது. செய்தவரை லாபம் என்று கருதி ஆரம்பித்துச் செய்ய வேண்டும். விட்டுவிடக்கூடாது.

**ஸூர்யகிரஹணத்தன்று கிரஹண தர்ப்பணம்மட்டும் செய்தால் போதுமா? அன்று காலையில் அமாவாஸை தர்ப்பணமும் செய்ய வேண்டுமா?**

ஓரேநாட்களில் ஒரேபித்ருக்களைக்குறித்து இரண்டு முறை ச்ராத்தம் (தர்ப்பணம்) செய்ய நேரிட்டால், அதற்கு பதிலாக ஒரே முறை செய்தாலும் போதும் (போனால் போகிறது என்பதைப்போல்) என்று அனுமதிக்கிறது சாஸ்திரம் இதற்கு

அப்யநுக்ஞா விதி: எனப் பெயர். இரண்டு முறை ச்ராத்தம் (தர்ப்பணம்) செய்வதை சாஸ்திரம் தடுக்கவில்லை. இரண்டுமுறை செய்தால் தோஷம் என்பதும் குறிப்பிடவில்லை. மேலும் இவ்வாறு இரண்டு செயல்களை ஒன்றாக சேர்ந்து செய்வதற்கு மீமாம்ஸா சாஸ்திரத்தில் தந்திரானுஷ்டானம் என்று பெயர் அதாவது இரண்டு செயல்களும் ஒரே மாதிரியாக இருந்தால் ஒன்றாக இணைத்துச் செய்யலாம்.

இங்கு ஒரே மாதிரியாக என்றால் என்ன பொருள்? என்றால் **தேசகால கர்த்ரைக்யே தந்த்ரம்** என்பதாக தேசம்(செய்யவேண்டிய இடம்) காலம் (செய்ய வேண்டியய காலம்) கர்த்தா (செய்யும் காத்தா நபர்) ஆகிய மூன்றும் இரண்டு செயல்களுக்கும் ஒன்றாக இருந்தால்தான் தந்த்ரானுஷ்டானம் என்பது வரும்.

அமாவாஸை தர்ப்பணத்துக்கும் கிரஹண தர்ப்பணமும் வெவ்வேறு காலங்களில் ஸம்பவிப்பதால் தந்த்ரானுஷ்டானம் செய்ய இயலாது, ஆகவே அன்று

காலையில் வழக்கம்போல் அமாவாஸை தர்ப்பணம் செய்து விட்டு மாலையில் கிரஹண காலத்தில் ஸூர்யகிரஹண நிமித்தமான தர்ப்பணத்தையும் தனித்தனியாக செய்ய வேண்டும் என்பதே தர்மசாஸ்திரக்காரர்களின் அபிப்ராயம்.

## வயதான நிலையில் (உடல் ஆரோக்யம் காரணமாக) ச்ராத்தம் செய்ய இயலாவிட்டால் என்ன செய்வது?

தாயும் தந்தையும் செய்த உபகாரத்திற்காக ஒவ்வொருவரும் தனது உடலில் கடைசி மூச்சுள்ள வரை தாய் தந்தையர்களுக்கு கட்டாயம் ச்ராத்தம் செய்துதான் ஆகவேண்டும், இது பிள்ளைகளின் கடமை. வீட்டில் ச்ராத்தம் செய்ய வசதி இல்லாவிட்டால் இடத்தை மாற்றி வேறு இடத்தில் செய்யலாம் உடல் ஆரோக்யக் குறைவு போன்ற காரணங்களால் ச்ராத்தம் செய்ய இயலாவிட்டால்
தனக்கு சக்தியற்ற நேரத்தில் (தக்ஷிணை தந்து) ருத்விக், மகன், ஸஹோதரர், மருமான், மாப்பிள்ளை ஆகியவர்களைக் கொண்டு ஹோமம் செய்தால் தானே செய்த பலன் கிட்டும் என்னும் வாக்கியப்படி, ச்ராத்தத்தில் தான் ஸங்கல்பம் மட்டும் செய்துகொண்டு தனக்குப் பதிலாக ச்ராத்தம் செய்ய தர்ப்பை தந்து அனுமதித்து தனது மகன் அல்லது மற்றவர்கள் மூலம் ச்ராத்தத்தை ஹோமத்துடன் செய்யச் சொல்லலாம். ஹோமம் செய்து சாப்பாடு போட்டு பிண்ட ப்ரதானம் செய்து ச்ராத்தம் செய்வது முக்கியம். இதைப்போன்றே ஔபாஸனம் முதலான ஹோமங்களையும் தனக்குப் பதிலாக மேற்கூறியவைகளை செய்யச் சொல்லலாம்.

## பித்ருசேஷம் என்றால் என்ன? அதை எப்போது யார் சாப்பிட வேண்டும்? என்ன பலன்?

ச்ராத்தத்திற்காகத் தயாரிக்கப்படும் உணவு, ப்ராஹ்மணர்களுக்கு அளிக்கப்பட்டு மிகுதியான உணவிற்கும் பட்சணங்களுக்கும் பித்ருசேஷம் எனப்பெயர்,

ச்ராத்தம் செய்பவரின், (அன்ன சேஷை: கிம் க்ரியதாம்) மிகுந்த அன்னத்தை (உணவை) என்ன செய்யட்டும்? என்னும் கேள்விக்கு ச்ராத்தம் சாப்பிட்டப்ராஹ்மணர்கள்

(இஷ்டை:ஸஹோபபுஜ்யதாம்) ப்ரியமானவர்களுடன் சேர்ந்து உணவு சாப்பிடப்படட்டும். என்று பதில் கூறியபிறகு, ச்ராத்தம் செய்யும் கர்த்தா பித்ரு சேஷத்தை தனத உறவினர்களுடன் சேர்ந்து சாப்பிட வேண்டும்.

பித்ருசேஷத்துக்காக சேஷம் (மிகுதி) இல்லாவிட்டால் தனியாக ஸமையல் செய்து கர்த்தா க்ஞாதிகளுக்கு அளித்துத் தானும் பித்ரு சேஷத்தை சாப்பிட வேண்டும். உறவினாகளுக்கு பட்சணங்களையாவது தந்து அவர்களை பித்ரு சேஷம் சாப்பிட செய்ய வேண்டும்.

க்ஞாதிகளும் (உறவினர்களும்) ச்ராத்தம் நடைபெறும் நாளன்று தாமாகவே ச்ராத்தம் நடைபெறுமிடத்துக்கு சென்று நமஸ்கரித்து ஆசிபெற்று பித்ருசேஷத்தைச் சாப்பிடவேண்டும். இதனால் பித்ருசேஷம் அளிப்பவர்க்கும் சாப்பிடுபவருக்கும் இறந்தவரின் ஆசியுடன் நீண்ட ஆயுளும் ஆரோக்யமும் கிட்டுகிறது என்கிறது சாஸ்திரம்.

## ச்ராத்த (பித்ரு) சேஷம் யார் சாப்பிடலாம்? யார் சாப்பிடக்கூடாது?

பித்ருசேஷமான உணவு பட்சணம் முதலியவற்றை ச்ராத்தம் முடிந்த பிறகு கர்த்தாவுடன் மேலும் சிலர் மட்டும்தான் சாப்பிடலாம் அதாவது ச்ராத்தம் யாருக்கு நடைபெறுகிறதோ, அவருடைய கோத்ரத்தைச் சேர்ந்த - அவரது குலத்தில் பிறந்த அவருக்காகத் தீட்டுகாத்த - க்ஞாதிகள் மட்டும் ச்ராத்த சேஷத்தைச் சாப்பிடலாம் என்கிறார் மார்க்கண்டேயர். உறவினர்களல்லாதவர்கள் ச்ராத்தம் நடந்த வீட்டில் ச்ராத்த நாளன்று ச்ராத்தத்துக்கு முன்போ பின்போ எதையும் சாப்பிடக்கூடாது. இது சாப்பிடுபவர்களுக்கும் பாபத்தையும் துக்கத்தையும் தரலாம்.

ஆனால், மாமனாரின் ச்ராத்தத்தில் மாப்பிள்ளையும் (வித்யா) குருவின் ச்ராத்தத்தில் சிஷ்யரும், மாமாவின் ச்ராத்தத்தில் மருமகனும், மூத்த அண்ணாவின் ச்ராத்தத்தில் தம்பியும், புத்ரனின் ச்ராத்தத்தில் தந்தையும், ப்ருஹ்மநிஷ்டரான யோகீஸ்வரரின் ச்ராத்தத்தில் அவரது சிஷ்யர்களும் ச்ராத்த சேஷம் சாப்பிடலாம் என்கிறார் ஜாபாலி மஹர்ஷி.

## ச்ராத்தத்தில் எப்படிப்பட்டவரை சாப்பிடச் சொல்லக்கூடாது?

மிகவும் கஷ்டப்பட்டு ஏராளமான பொருட்செலவுடன் செய்யப்படும் ச்ராத்தத்தில் நமது பித்ருக்களாக ஆவாஹனம் செய்து சாப்பிடச்செய்யும் நபர் மிக முக்கியமானவர். ஆகவே ச்ராத்த போக்தாவை (சாப்பிடும் நபரை) தேர்ந்தெடுப்பதில் சிறிது அதிக கவனம் தேவைப்படுகிறது.

முதல்நாள் ச்ராத்தம் சாப்பிட்ட நபரை மறுநாள் ச்ராத்தத்திலும் சவத்தை (ப்ரேதத்தை) பின்தொடர்ந்து சென்றவரை அன்றைய நாளிலும் ப்ரேதகார்யம் நடக்கும் இடத்திற்குச் சென்று வந்தவரை அன்றைய தினமும் ச்ராத்தத்தில் சாப்பிடச் சொல்லக்கூடாது. மேலும்,

மனைவி (ஔபாஸன அக்னி) இல்லாதவரையும், கர்ப்பிணிப்பெண்ணின் கணவரையும், ச்ராத்தத்தில் சாப்பிடச்சொல்லக்கூடாது, அப்பா தந்தை ஆகிய இருவரையும் அண்ணன் தம்பி (ஸஹோதரர்கள்) இருவரையும் ஒன்றாக ச்ராத்தத்தில் சாப்பிடச்சொல்லக்கூடாது. மேலும், மாதாமாதம் பெண்களுக்கு ஏற்படும் அசுத்தமான நாட்களில் இருக்கும் பெண்களின் கணவரையும் குழந்தை பிறந்த 40நாட்கள்கூட ஆகாத பெண்களின் கணவரையும், தேவ கார்யம் பித்ருகார்யம் (ச்ராத்தம்) ஆகியவற்றில் (அவர்களுக்க அசுத்தி என்பதனால்) கலந்து கொள்ள – சாப்பிடச்செய்யக் கூடாது.

## ச்ராத்தம் செய்பவரின் கோத்ரத்தைச் சேர்ந்தவரை ச்ராத்தத்தில் சாப்பிடும் ப்ராஹ்மணராக வரணம் செய்யலாமா?

பொதுவாக ஒவ்வொரு வருஷமும் பெற்றோர்களுக்கச் செய்யும் ச்ராத்தத்தில் கர்தாவின் (ச்ராத்தம் செய்பவரின்) கோத்ரத்தைச் சேர்ந்தவரை ச்ராத்தம் சாப்பிடும் ப்ராம்ஹணராக வரிக்கக்கூடாது. ஆனால்

இறந்த முதல்வருஷம் முழுவதும் ஒவ்வொருநாளும் செய்யப்படும் நித்ய ச்ராத்தத்திலும், கயையில் செய்யப்படும் கயாச்ராத்தத்திலும், ஸோதகும்ப ராத்தத்திலும், ஒரே கோத்ரத்தை சேர்ந்தவரை ச்ராத்தம் சாப்பிடும் ப்ராம்ஹணராக வரணம் செய்யலாம், தவறில்லை என்கிறார் ப்ருஹஸ்பதி.

## ச்ராத்தத்தில் சாப்பிட இரண்டு இலை போடப்படுகிறதே ஏன்?

ச்ராத்தத்தில் சாப்பிடும் நபருக்கு நுனி - அடிப்பாகமுள்ள இரண்டு வாழைஇலைகளைப் போடவேண்டும்.

வாழை இலை நுனியோடு கூடியதாகவும் நடுவில் இருக்கும் நரம்புப்பகுதி கிழிக்காததாகவும் மூன்று சாண் நீளமுள்ளதாகவும் இருக்க வேண்டும். இரண்டு இலைகளை ஒன்றின் மீது ஒன்றாக போடவேண்டும், மேல் பகுதியிலள்ள முதல் இலையில் காய்கறிகள் முதலான உப்புள்ள பொருட்களையும் கீழ் பகுதியிலுள்ள மற்றொரு இலையில் (நரம்பிற்கு அடிப்பகுதியில்) பாயாஸம் அன்னம் முதலான உப்பில்லாத பொருட்களையும் பரிமாற வேண்டும்.

மேலும் வாழை இலையின் (இடதுபுற) நுனிப்பகுதியில் மற்றொரு சிறிய இலைத்துண்டு போட்டு அவற்றில் பழங்கள் பசஷணங்களையும் இலையின் வலது புறத்தில் அடிப்பகுதியின் அருகில் ஒரு சிறிய இலையில் (தொன்னைகளில்) நெய், பருப்பு ஆகியவற்றையும் வைக்க வேண்டும்.

ச்ராத்தம் செய்பவர் (கர்தா) சாப்பிடும் முன்பு இலையிலுள்ள பொருட்களை தத்தம் செய்து பரிஷேசனம் செய்யும்போது உப்பில்லாத அன்னம் பாயாஸம் முதலான பொருட்களை மட்டும் பரிஷேசனம் செய்ய வேண்டும். இவ்வாறு தனித்தனியாகப் பிரிக்கவே இரண்டு இலைகள் போடப்படுகின்றன.

## மஹாளய பக்ஷத்தில் எந்த நாளில் மஹாளயம் செய்வது சிறந்தது?

மறைந்த முன்னோர்கள் மஹாயள பசஷம் 15 நாளும் பூமிக்கு வந்து தங்குவதாகவும் ஆகவே ஒவ்வொருவரும் அவரவர் குடும்ப முன்னோர்களுக்கு ச்ராத்தம் அல்லது தர்ப்பணம் செய்து அவர்களை ஸந்தோஷப்படுத்த வேண்டும் என்றும் சாஸ்திரம் கூறுகிறது, இவ்வாறு மஹாயள பசஷம் முழுவதும் தினஸரி தர்ப்பணம் (ச்ராத்தம்) செய்பவர்கள் தாராளமாகச் செய்யலாம்.

ஆனால் ஏதாவது ஒருநாள் மட்டும் ஹ்ரண்ய ச்ராத்தமோ தர்ப்பணமோ செய்ய நினைப்பவாகள் ஒரு சில நாட்களில் செய்யக்கூடாத, அதாவது பஞ்சமிக்கு முன்பும் நந்தா திதி, வெள்ளிக்கிழமை, செய்பவரின் மற்றும் அவர் மனைவி மக்களின் ஜன்ம நக்ஷத்ரம் முதலான நாட்களில் ஸக்ருத் மஹாளயம் (ஒருநாள் மட்டும் செய்யும் மஹாளயம்) செய்யக்கூடாது என்று ஸ்ம்ருதிகள் நம்மை பயமுறுத்துகின்றன, ஆனால்

அமாவாஸை மஹாவ்யதீபாதம், மஹாபரணீ, த்வாதசிதிதி, மஹாளய பக்ஷம் நடுவில் வரும் மத்யாஷ்டமீ, கஜச்சாயை ஆகிய நாட்களில் (ஸக்ருத்)மஹாளயம்

செய்யலாம். இந்த நாட்களுக்கு திதி நக்ஷத்ரம் கிழமை ஆகியவற்றால் ஏற்படும் எந்த தோஷமும் கிடையாது. நிறைவான பலன் கிட்டும் என்கிறது ஹோமத்ரி புஸ்தகம்.

**தாயார் இறந்து தந்தை ஜீவித்திருக்கும்போது பையன் மஹாளயம் செய்யலாமா?**

தந்தை ஜீவித்திருப்பவருக்கு ஜீவத்பிதா எனப்பெயர். இப்படிப்பட்ட நபர், தந்தை உயிரோடு இருக்கும்வரை மஹாளய ச்ராத்தமோ, அமாவாஸை – மாதப்பிறப்பு - தர்ப்பணமோ செய்யக்கூடாது,

இது தந்தைக்கு ஆயுள் குறைவை ஏற்படுத்தலாம். தந்தை செய்யும் மஹாளய ச்ராத்தம் மற்றும் தர்ப்பணங்களாலேயே தாய்க்கும் த்ருப்தி ஏற்பட்டுவிடுகிறது. வருடாவருடம் தாய்க்குச்செய்ய வேண்டிய ச்ராத்தத்தை மட்டும் ச்ரத்தையுடன் செய்து வந்தாலே போதும்.

## உணவு உண்ணுதலும் பரிமாறுதலும்

*இலையின் தலைப்பக்கம் சாப்பிடுபவரின் இடப்பக்கம் இருக்கவேண்டும். இலையில் நீர் தெளித்துத் துடைத்தபின்னரே பரிமாற வேண்டும். வலது கீழ்ப்புறத்தில் முதலில் இனிப்புப் பண்டம் பரிமாறவேண்டும் (பாயசம்)*

*வலது மேற்புறத்தில் பச்சடியை அதன்பின் பரிமாறி ஏனைய கறிகளை வரிசையாக வைக்கலாம்.*

*இடது புறத்தில் அப்பளம், பொரியல் முதலியன இடம்பெற வேண்டும். தண்ணீர் வலது புறத்திலேயே இருக்கவேண்டும்.*

*சாப்பிடும்போது மட்டும் இடக்கையால் தண்ணீர் அருந்தலாம். அதுவும் அவ்வேளையில் வலதுகை இலையைத் தொட்டுக்கொண் டிருக்கவேண்டும்.*

## இரண்டின் அழகு

வருவதும் போவதும் இரண்டு - இன்பம், துன்பம்.
வந்தால் போகாதவை இரண்டு - புகழ், பழி.
போனால் வராதவை இரண்டு - மானம், உயிர்.
தானாக வருபவை இரண்டு - இளமை, முதுமை.
நம்முடன் வருபவை இரண்டு - புண்ணியம், பாவம்.
அடக்கமுடியாதவை இரண்டு - ஆசை, துக்கம்.
தவிர்க்கமுடியாதவை இரண்டு - பசி, தாகம்.
நம்மை விட்டுப் பிரியாதவை இரண்டு - பந்தம், பாசம்.
அழிவைத் தருபவை இரண்டு - பொறாமை, கோபம்.
எல்லோர்க்கும் சமமானவை இரண்டு - இறப்பு, பிறப்பு.

## மூன்றால் முன்னேற..........

**தவிர்க்க வேண்டிய மூன்று ~ புகைத்தல்,குடித்தல்,சூதாடல்.**
**அடக்க வேண்டிய மூன்று ~ நாக்கு, கோபம், ஆசை.**
**கவனிக்க வேண்டிய மூன்று ~ பேச்சு, நடைமுறை, செயல்.**
**ஒழிக்க வேண்டிய மூன்று ~ திருட்டு, பொய், சோம்பல்.**
**ஆதரிக்க வேண்டிய மூன்று ~ வாக்குறுதி, நட்பு, அன்பு.**
**மதிக்க வேண்டிய மூன்று ~ முதியோர், மார்க்கம், சட்டம்.**
**நேசிக்க வேண்டிய மூன்று ~ தூய்மை,நேர்மை,கடினஉழைப்பு.**
**பேற்ற வேண்டிய மூன்று ~ தைரியம், மனமகிழ்ச்சி, திருப்தி.**

## எண்ணித் துணிக

பேசுவதற்குமுன் செவி கொடுங்கள்.
எழுதுவதற்குமுன் சிந்தியுங்கள்.
குறைகூறுவதற்குமுன் பொறுத்திருங்கள்.
பிரார்த்தனை செய்யுமுன் மன்னியுங்கள்.
எதையும் கைவிடுமுன் முயலுங்கள்.
மரணத்துக்குமுன் மற்றவர்க்கு உதவுங்கள்.

கட்டளையிடக்கூடிய பதவி வேண்டுமெனில்
முதலில் கீழ்ப்படியக் கற்றுக்கொள்ளுங்கள்.

~விவேகானந்தர்.







## குழந்தைகளுக்கான அறிவுரைகள்

இறைவனை வணங்குக, இனிமையாகப் பேசுக.
உண்மையே பேசுக, அன்பாகப் பேசுக.
நன்மையே பேசுக, மெதுவாகப் பேசுக.
சிந்தித்துப் பேசுக, சபையறிந்து பேசுக.
சொல்வதையே செய்க, சோம்பலை அகற்றுக.
கோபத்தை நீக்குக, செருக்கினை அடக்குக.
உயர்வை எண்ணுக, நல்லதைச் செய்க.
அறிவைப் பெருக்குக, அன்பைப் பேணுக.
பண்பை வளர்க்குக, பரிவினைக் காட்டுக.
நிந்தனை செய்யற்க, நிதானமாய் நடந்துகொள்க.

# 32 கணபதிகள்

**1. பால கணபதி**



நான்கு திருக்கரங்களில் வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம், கரும்பு இவற்றை ஏந்தியபடி உதய சூரியன் போன்ற நிறமும் ஒளியும் கொண்ட குழந்தைத் திரு மேனியுடன் இவர் காணப்படுவர். இவரது துதிக்கையில் மோதகம் காணப்படும்.

**2. தருண கணபதி**



எட்டுத் திருக்கரங்களில் பாசம், அங்குசம், அபூபம், விளாம்பழம், நாவற்பழம், தந்தம், நெற்கதிர், கரும்பு ஆகியவற்றைக் கொண்டிருப்பவர். நண்பகல் சூரியன் போன்று பிரகாசிக்கும் இவர் சிவந்த வர்ணம் உடையவர்.

**3. பக்தி கணபதி**



சரத்காலச் சந்திரன்போன்ற வெண்மையான நிறத்துடன் பெலிவுறும் பக்த கணபதி நான்கு திருக்கரங்களில் தேங்காய், மாம்பழம், வாழைப்பழம், பாயசம் இவற்றைத் தாங்கியிருப்பார்.

**4. வீர கணபதி**



செந்நிறத்தவரான வீரகணபதி பதினாறு கரங்களில் வேதாளம், சக்தி, அம்பு, வில், சக்கராயுதம், கத்தி, கட்வாங்கம், இரும்புலக்கை, கதாயுதம், அங்குசம், நாகம், பாசம், சூலம், குந்தம், மழு, துவஜம் ஆகியவற்றைத் தாங்கியவர்.

**5. சக்தி கணபதி**



செவ்வந்தி வானம்போன்ற நிறத்தை உடையவராகவும் பச்சை வண்ணம் உடைய சக்தியை இடுப்பில் தழுவிக்கொண்டிருப்பவராகவும் பாசம், அங்குசம் ஆகியவற்றைத் தரித்திருப்பவராகவும் பயங்களைப் போக்குபவராகவும் சக்திகணபதி காணப்படுகிறார்.

### 6. துவிஜ கணபதி



நான்கு முகங்களையும் நான்கு திருக்கரங்களையும் உடைய துவிஜ கணபதி சந்திரன்போல் வெண்ணிறம் உடையவர். கைகளில் மின்னுகின்ற ஆபரணங்கள் அணிந்தவர். புஸ்தகம், அக்ஷமாலை, தண்டம், கமண்டலம் ஆகியவற்றைத் தாங்கியிருப்பவர்.

### 7. ஸித்தி கணபதி



மாம்பழம், பூங்கொத்து, கரும்புத்துண்டு, எள்ளுக் கொழுக்கட்டை, மழு என்பவற்றைத் தரித்திருப்பவர். தங்கம் போன்ற மஞ்சள் நிறமுடையவர். ஸ்ரீதேவி, ஸம்ருத்தி தேவி இவர்களுடன் இருப்பவர் சித்தி கணபதி.

### 8. உச்சிஷ்ட கணபதி



நீல நிறம் உடைய உச்சிஷ்ட கணபதி நீலோத்பலம்,வீணை, மாதுளம்பழம், நெற்கதிர், குன்றிமணி யாலான ஜபமாலை ஆகியவற்றைத் துதிக்கையுட்பட ஐந்து கரங்களில் தாங்கியவர்.

### 9. விக்ன கணபதி



தங்கம்போல் நிறமுடைய விக்ன கணபதி பத்துக் கரங்களுடையவர். சங்கு, கரும்புவில், புஷ்ப பாணம், கோடரி, பாசம், சக்கரம், தந்தம், மழு, பூங்கொத்து, அம்பு, ஆகியன தாங்கியவர். நிறைய ஆபரணங்கள் அணிந்து விளங்குபவர்.

### 10. க்ஷிப்ர கணபதி



செவ்வரத்தம்பூ வண்ணத்தரான க்ஷிப்ர கணபதி தந்தம், கற்பக மரக்கிளை, ரத்தினக் கலசம், அங்குசம் ஆகியவற்றைத் தாங்கியவர்.

**11. ஏரம்ப கணபதி**



பஞ்சமுக விநாயகராகக் காட்சிதரும் ஹேரம்ப கணபதி பசுமைகலந்த கருமை நிறத்தவர். (மஞ்சள் நிறத்தவர் என்றும் கூறுவர்) சிம்ம வாஹனத்தில் வீற்றிருப்பவர். பாசம், தந்தம், அக்ஷமாலை, அங்குசம், கோடரி, இரும்பு உலக்கை, மோதகம், பழம் ஆகியவற்றுடன் அபய வரத ஹஸ்தங்களுமாகப் பத்துக் கரங்களுடன் காட்சியளிப்பவர்.

**12. லட்சுமி கணபதி**



கிளி, மாதுளம்பழம், மாணிக்கக் கலசம், அங்குசம், பாசம், கற்பகக் கொடி, கத்தி ஆகியவற்றுடன் வரதஹஸ்தமுமாக எட்டுக் கரங்களுடன் இருபுறமும் நீலோத்பலம் தாங்கிய சக்தியருடன் மஞ்சள் நிறத்தில் காட்சி தருபவர்.

**13. மஹா கணபதி**



சந்திரனைத் தரித்தவரும் முக்கண்கள், உடையவரும், தாமரை மலரை ஏந்திய சக்தியை மடியிலிருத்தி ஆலிங்கனம் செய்துகொண்டிருப்பவரும் செங்கதிர்போல் நிறம்கொண்டவருமான மஹாகணபதி தமது பத்துக் கரங்களில் மாதுளம்பழம், கதாயுதம், கரும்புவில், சக்கரம், தாமரைமலர், பாசம், நீலோத்பலம், நெற்கதிர், தந்தம், ரத்னக் கலசம் ஆகியவற்றைத் தாங்கியுள்ளார்.

**14. விஜய கணபதி**



செந்நிறமான விஜய கணபதி பெருச்சாளி வாகனத்தில் அமர்ந்திருக்கும் கோலம் உடையவர். பாசம், அங்குசம், தந்தம், மாம்பழம் ஆகியவற்றைத் தரித்திருப்பவர்.

**15. நிருத்த கணபதி**



கற்பக மரத்தினடியில் நர்த்தனமிடுகின்ற நிருத்த கணபதி பொன்போலும் நிறமுடையவர். பாசம், அங்குசம், கோடரி, அபூபம், தந்தம் ஆகியவற்றைத் தாங்கியவர். கைவிரல்களில் மோதிரங்கள் அணிந்தவர்.

**16. ஊர்த்துவ கணபதி**



பச்சை நிறமுடைய தேவியினால் ஆலிங்கனம் செய்யப்பட்ட ஊர்த்வ கணபதி தங்கம்போல் பிரகாசிப்பவர். செங்கழுநீர்ப்பூ, நெற்கதிர், தாமரை, கரும்புவில், பாணம், தந்தம், கதாயுதம் என்பவற்றைத் தரித்திருப்பவர்.

**17. ஏகாட்சர கணபதி**



செந்நிறமுடைய ஏகாக்ஷர கணபதி செம்பட்டாடை, செஞ்சந்தனம், சிவந்த பூ ஆகியவற்றைத் தரித்தவர். முக்கண்ணர், சந்திரனை அணிந்தவர். பெரிய வயிறும், குட்டையான கை கால்களுடன் தாமரையில் வீற்றிருப்பவர். மாதுளம்பழம், பாசம், அங்குசம், தந்தம், வரதம் ஆகியவற்றைத் தாங்குபவர்.

**18. வர கணபதி**



சிந்தூரவண்ணரும் முக்கண்ணரும் சந்திரனை அணிந்தவருமான வரகணபதி கைகளில் பாசம், அங்குசம், மதுக் கபாலம் ஆகியன தாங்கி, தாமரையும் துவஜமும் கொண்ட புஷ்டி சக்தியினால் ஆலிங்கனம் செய்யப்பெற்றவராக விளங்குகிறார்.

**19. திரயாசக்ஷர கணபதி**



அசையும் சாமரைபோன்ற காதுகளும் பாசம், அங்குசம், தந்தம், மாம்பழம் ஆகியன தாங்கிய நான்கு கரங்களும் உடைய தங்கநிறமான த்ரயக்ஷர கணபதி துதிக்கையில் மோதகம் தாங்கியுள்ளார்.

**20. க்ஷிப்ரபிரசாத கணபதி**



சந்திரனைச் சிரசிலணிந்தவரும் முக்கண் உடையவரும் செந்நிறத்தவரும் ஆன க்ஷிப்ர ப்ரசாத கணபதி பாசம், அங்குசம், கல்பலதை, தந்தம், மாதுளம்பழம், தாமரை ஆகியன தாங்கியவராவார்.

**21. ஹரித்திரா கணபதி**



மஞ்சள் நிறமுடையவரும் பாசம், அங்குசம், மோதகம், தந்தம் ஆகியன ஏந்திய நான்கு கரங்களும் பேழை வயிறும் உடையவராக ஹரித்ரா கணபதி காட்சி தருவார்.

**22. ஏகதந்த கணபதி**



பருத்த வயிறும் நீல நிறமும் உடைய ஏகதந்த கணபதி கோடரி, ஜபமாலை, மோதகம், தந்தம் ஆகியவற்றை ஏந்தியவராகக் காட்சிதருவார்.

**23. சிருஷ்டி கணபதி**



பெருச்சாளி வாகனமுடையவரும் சிவந்த நிறமுடையவருமான சிருஷ்டி கணபதி பாசம், அங்குசம், தந்தம், மாம்பழம் ஆகியவற்றை உடையவர்.

**24. உத்தண்ட கணபதி**



நீலோத்பலம், தாமரை, மாதுளம்பழம், கதை, தந்தம், கரும்புவில், புஷ்பம், ரத்னக் கலசம், நெற்கதிர், பாசம், அங்குசம் என்பன தாங்கும் பத்துக் கரங்களையுடையவராயும் தாமரைப்பூ ஏந்திய பச்சைவண்ணத் தேவியால் தழுவப்பெற்றவராயும் உடைய உத்தண்ட கணபதி செந்நிறமானவர்.

**25. ரணமோசன கணபதி**



வெண்பளிங்கு மேனியில் செம் பட்டாடை தரித்தவரான ருணமோசன கணபதி பாசம், அங்குசம், தந்தம், நாவற்பழம் என்பவற்றைத் தரித்துள்ளார்.

## 26. துண்டி கணபதி



அக்ஷமாலை, கோடரி, ரத்னக் கலசம், தந்தம் இவற்றைத் தாங்கிய நான்கு கரங்களுடன் டுண்டி விநாயகர் காட்சி தருகிறார்.

## 27. துவிமுக கணபதி



நீலநிறமுடையவர். செம்பட்டாடையும் ரத்தினக் கிரீடமும் அணிந்தவர். மாலைகள் அணிந்தவர். இரு முகங்களை உடையவர். இத்தகைய துவிமுக கணபதி தந்தம், பாசம், அங்குசம், ரத்னபாத்திரம் என்பவற்றை உடையவர்.

## 28. மும்முக கணபதி



அங்குசம், அக்ஷமாலை, பாசம், அமிர்தகலசம் ஆகியன தாங்கி அபய வரதங்களுடன் தங்கத் தாமரையின் பொகுட்டிலே மூன்று முகங்களுடனும் ஆறு கரங்களுடனும் வீற்றிருக்கும் மும்முக கணபதி பலாசம்பூப்போன்ற செந்நிறத்தை உடையவர்.

## 29. சிங்க கணபதி



வீணை, கற்பகக் கொடி, சக்கரம், தாமரை, ரத்னகலசம், அழகிய பூங்கொத்து ஆகியவற்றையும் அபய வரதங்களையும் தாங்கிய சிம்ம கணபதி துதிக்கையுடன் கூடிய சிங்கமுகத்தை உடையவர். வெண்மைநிறமானவர்.

## 30. யோக கணபதி



யோகபட்டம் அணிந்து யோக நிலையில் இளம்சூரியன் போன்ற வண்ணத்துடன் இந்திரநீலநிற ஆடை அணிந்து பாசம், கரும்பு, அக்ஷமாலை, யோகதண்டம், ஆகியன தரித்தவராக யோக கணபதி காட்சி தருகிறார்.

### 31. துர்க்கா கணபதி



உருக்கிய தங்கம்போன்நிறமும் எட்டுக்கரங்களும் பருத்த சரீரமும் உடையவரும் செந்நிற ஆடை அணிந்தவருமான துர்க்கா கணபதி அங்குசம், அம்பு, அக்ஷமாலை, தந்தம், பாசம், வில், கல்பலதை, நாவல்பழம் ஆகியவற்றைத் தரித்திருக்கிறார்.

### 32. சங்கடஹர கணபதி



இளம் சூரியன்போன்ற நிறத்தவரும் ரத்னாபரணங்கள் அணிந்திருப்பவரும் நீலோத்பலம் ஏந்திய பசியநிறச் சக்தியை இடது தொடையில் வைத்திருப்பவரும் நீலநிற ஆடையணிந்து செந்தாமரைப் பீடத்திலிருப்பவருமான சங்கடஹர கணபதி பாசம், அங்குசம், பாயசபாத்திரம், வரதம் என்பவற்றைத் தாங்கியுள்ளார்.

### பல்வேறு பொருட்களில் நின்று பல்வேறு பலன் தரும் பிள்ளையார்.

வெள்ளெருக்கால் செய்த பிள்ளையாரைப் பூஜித்தால் அஷ்ட ஐஸ்வரியங்களும் கிடைக்கும். புற்று மண்ணால் செய்த விநாயகரை வழிபட்டால் வியாபாரம், செய் தொழில் என்பற்றில் இலாபம் கிடைக்கும். அரிசிமாவைக் கொண்டு செய்த விநாயகரை வணங்கினால் செயல்கள் தடைப்படாமல் வெற்றி கிட்டும். வெல்லத்தால் செய்த விநாயகரைப் பூஜித்தால் சௌபாக்கியம் கிடைக்கும். களிமண்ணால் செய்த பிள்ளையாரை வணங்கினால் முடிவிலா இன்பமும், முடிவில் மோட்சமும் கிடைக்கும்.

## ஆனைமுகனுக்கு உகந்த மலர்கள் 21

| | | | |
|---|---|---|---|
| 01. புன்னை | 02. மந்தாரை | 03. மகிழம்பூ | 04. பாதிரி |
| 05. தும்பை | 06. ஊமத்தை | 07. சம்பங்கி | 08. மாம்பூ |
| 09. தாழம்பூ | 10. முல்லை | 11. கொன்றை | 12. எருக்கு |
| 13. செங்கழுநீர் | 14. செவ்வரணி | 15. வில்வம் | 16. அரளி |
| 17. குருந்தை | 18. பவளமல்லி | 19. ஜாதிமல்லி | 20. மாதுளம்பூ |
| 21. கண்டங்கத்தரிப்பூ | | | |

# கணபதிக்கு உகந்த நிவேதனங்கள் 21

01. அப்பம்
02. மோதகம்
03. அவல்
04. பொரி
05. பால்
06. தேன்
07. எள்ளுப்பாகு
08. பிட்டு
09. கரும்பு
10. மாம்பழம்
11. பலாப்பழம்
12. வாழைப்பழம்
13. விழாம்பழம்
14. வள்ளிக்கிழங்கு
15. வெள்ளரிப்பழம்
16. இராசவள்ளிக்கிழங்கு
17. பயறு
18. கடலை வகைகள்
19. பருப்பு வகைகள்
20. நாவற்பழம்
21. சித்திரான்னம்



# ஷோடச கணபதி

(பதினாறு கணபதி நாமங்கள்)

1. பாலகணபதி
2. தருண கணபதி
3. பக்தி கணபதி
4. வீரகணபதி
5. சக்திகணபதி
6. த்வஜகணபதி (ப்ரம்மகணபதி)
7. பிங்களகணபதி
8. உச்சிஷ்டகணபதி
9. விக்னகணபதி
10. க்ஷிப்ரகணபதி
11. ஹேரம்பகணபதி
12. லக்ஷ்மிகணபதி
13. நக்னகணபதி (மஹாகணபதி)
14. புவனகணபதி
15. ந்ருத்தகணபதி
16. ஊர்த்வகணபதி

## ஆனந்த புவனம்

கைலைவாசனின் இருப்பிடமாகிய கைலாயத்தின் ஒரு புறமாக இருப்பதுவே ஆனை முகனின் இருப்பிடமான ஆனந்தபுவனம். கணநாதனின் இருப்பிடமான இங்கு கரும்புச்சாறு கடலாக உள்ளது. கணபதி ஸகஸ்ரநாமம், இவரைச் சிந்தாமணித் த்வீபத்தின் அதிபதி என்கிறது.

## பஞ்சமுக விநாயகர் (விஸ்வரூபம்)

தும்பிக்கையானை நினைக்காத காரணத்தால் சிவபெருமானையே கணநாதன் தண்டித்த சம்பவம் உண்டு. திரிபுர சம்ஹாரம் செய்வதற்காக ஈசன் கிளம்பிய அடுத்த கணமே அபசகுணம் போல் தேரின் அச்சு முறிந்து விழுந்தது. தேவர்கள் கலங்கினார்கள்.. விக்னராஜனை மறந்து புறப்பட்டமைதான் இந்த விக்னத்திற்குக் காரணம் என்று அரனுக்குப் புரிந்தது. எல்லோரிடமும் அதைச் சொன்னார். மூலப்பொருளான மூஷிக வாகனனை எல்லோரும் முழுமனத்தோடு துதித்தார்கள். ஈசனும் பிள்ளை என்று நினையாமல் பிள்ளையாரை வேண்டினார். நாரத முனிவரின் யோசனைப்படி சிவபெருமான் கணேசனை வேண்டி அவரது அருளைப் பெற்றார். அப்போது தோன்றிய கணபதிக்கு ஐந்து முகங்களும் பத்துக் கைகளும் இருந்தனவாம். அவற்றில் வைரம், சக்தி, தண்டம், கட்கம், பாசம், அங்குசம், கதை, திரிசூலம், பத்மம், சக்கரம் என்பவை தாங்கியதோடு மட்டுமன்றி தீவஜம், பாணம், தனுசு, கமண்டலம், கரும்பு, முத்கரம் போன்றவையும் தரித்துள்ளதாகக் கூறப்பட்டுள்ளது.பின்னர் போர் புரியச் சென்று திரிபுரங்களோடு திரிபுராசுரரையும் தன் சிரிப்பினாலே அழித்தார்.

## கணபதியின் கல்யாணம்

ஒரு யுகத்தின் ஆரம்பத்தில் பார்வதி பரமேஸ்வரன் மகனாகக் கணபதி என்ற நாமத்தோடு கணேசன் அவதரித்தார். அந்த சமயத்தில் முன்பு பிரம்மாவுக்கு விநாயகரால் அளிக்கப்பட்ட இச்சாசக்தி, ஞானசக்திகள் இரு பெண்களாக உருவெடுத்து, வளர்ந்து, திருமணப் பருவத்தை அடைந்திருந்தனர்.

கணேசரிடம் பெற்ற சக்திகளை அவரிடமே அளிக்க விரும்பினார் பிரம்மதேவன். நிச்சயிக்கப்பட்ட முகூர்த்தத்தில் மணமேடையில் மாப்பிள்ளையாக வந்தமர்ந்த பிள்ளையாருக்கே பிள்ளையார் பூசை செய்து விட்டுக் கல்யாண மந்திரங்களை ஜனக முனிவர் உச்சரிக்க நான்முகனின் புதல்விகளான சித்தியும், புத்தியும் விநாயகரின் இரு புறமும் அமர்ந்தனர்.

## பிள்ளையாரின் பிள்ளைகள்

எந்தச் செயலையும் தொடங்குமுன்பு விநாயகரை வழிபடுவது மரபு. ஏனென்றால் சித்திக்கும், புத்திக்கும் க்ஷேம லாபங்களுக்கும் அதிபதி அவர்தான். அவரால் தான் அவற்றைத் தரமுடியும் என்ற நம்பிக்கைதான் காரணம்.

கணபதியின் சக்திகளான சித்திக்குப் பிறந்தவன் சுபன், புத்திக்குப் பிறந்தவன் லாபன். சுபம் - ஷேமமாக இருப்பது. அதாவது நலமாக இருப்பதால் நிகழக்கூடியது. லாபம் என்பது நம் செயலுக்குரிய பலனைக் குறைவின்றிப் பெறுவதைக் குறிப்பது.

'கணபதியை வணங்கினால் காரியம் சித்திக்கும்' அதனால் 'சுபம்' ஏற்படும். 'புத்தி' தெளிவாகி 'லாபம்' விளையும். இதைத்தான் மறைமுகமாக உணர்த்துகிறது விநாயகர் புராணம். இப்படியாக உருவான பிள்ளையாரின் பிள்ளைகளான சுபனும், லாபனும் தங்களுக்கு ரக்ஷை கட்டுவதற்கு ஒரு சகோதரி வேண்டும் என்று வேண்டிக் கேட்டதற்காக பிள்ளையார் உருவாக்கிய மகள்தான் 'சந்தோஷிமாதா' என்றும் ஒரு உப புராணக்கதை உண்டு. எல்லா இல்லங்களிலும் எல்லா உள்ளங்களிலும் சந்தோஷத்தை உண்டாக்குபவள் என்னும் கருத்தில் "சந்தோஷி" எனப்படுகிறாள்.

## அறுகம்புல்லின் மகிமை

ஒரு சமயம் தேவலோகத்தில் ரம்பை, ஊர்வசி, திலோத்தமை ஆகியோரின் நடனம் நிகழ்ந்தபோது திலோத்தமையின் அழகில் மயங்கிய யமதர்மன், அங்கிருந்து தன் மனைவியைத் தேடி அந்தப்புரம் சென்றபோது அவன் உடலிலிருந்து வெளியான காமாக்னி ஓர் அசுரனாக மாறியது.

அக்னியை விட அதிபயங்கரமான வெப்பம் அந்த அசுரன் உடலிலிருந்து வெளிப்பட்டதால் அவன் அனலாசுரன் என்று அழைக்கப்பட்டான். அனலாசுரன் சென்ற இடமெல்லாம் பற்றி எரிந்தது. தந்தையான யமதர்மனைத் தவிர தேவர்கள், முனிவர்கள், மனிதர்கள் என மூவுலகோரையும் தன் அடாத செயல்களினால் வாட்டி வதைத்தான். அக்னி தேவன் கூட அவனை நெருங்க முடியாமல் அஞ்சி ஓடினான்.

பலகாலம் அவனுக்குப் பயந்து திரிந்தவர்கள் தாங்க முடியாத கட்டத்தில் ஆனைமுகனை வேண்டினார்கள். அப்போது ஓர் அந்தணர் வடிவில் அவர்களிடையே தோன்றிய ஆனைமுகன் அஞ்சேல் என்று அபயமளித்துவிட்டு அதே வடிவத்தோடு அனலாசுரனைத் தேடிப் போனார். அவனைக் கண்டதும் தன் சுய உருவை எடுத்தார். எதிர்க்க வந்த அனலாசுரனை தன் துதிக்கையால் தூக்கி வாயில் போட்டு விழுங்கினார் விநாயகர்.

அனலாசுரன் அழிந்தான் என்று எல்லோரும் சந்தோஷப்பட்ட வேளையில், பிள்ளையாரின் வயிற்றுக்குள் அனலாசுரன் சென்ற சில கணங்களில் உஷ்ணம் பரவத் தொடங்கியது. அதைத் தாங்கமுடியாமல் அக்னிதேவன் அலறினான்.

வெப்பம், சூடு, வெம்மை விநாடிக்கு விநாடி கூடிக்கொண்டே போக தேவர்கள் தவிக்கத் தொடங்கினார்கள். மண்டை பிளந்து துடித்தார்கள். மண்ணுலக மக்கள், பறவைகள், விலங்குகள், பூச்சிகள், புழுக்கள், எல்லாம் அப்படியே கருகி விழுந்தன. என்ன காரணம் என்று புரியாமல் எல்லோரும் தவிக்க பிரம்மதேவன் சொன்னார். "விநாயகரின் வயிற்றுக்குள்

அனலாசுரன் சென்றதால் ஏற்படும் வெப்பம் பரவிக் கொண்டிருக்கிறது. அகில உலகமும் அவர் வயிற்றினுள் அடக்கம் என்பதால் மூவுலகையும் அந்த உஷ்ணம் வாட்டுகிறது. ஆனைமுகனின் மேனி குளிர்ந்தால் தான் இந்த வெப்பம் நீங்கும்" என்றார்.

நான்முகன் சொன்னதைக் கேட்ட எல்லோரும் விநாயகர் உடல் உஷ்ணத்தைக் குறைக்க ஆளாளுக்கு முயற்சி செய்தார்கள். ஒருவர் குடம்குடமாகப் பாலை ஊற்றினார். அக்னி பகவான் தான் கிட்டே போனால் தானே எரிந்து விடுவோமோ என்று பயந்து பதுங்கி நின்றார். எத்தனை விதமாக முயற்சி செய்தும் அனலாசுரனால் ஏற்பட்ட வெம்மை நீங்கவில்லை.

அந்தச் சமயத்தில் மூவுலகிலும் உள்ள முனிவர்கள் அனைவரும் வந்து, விநாயகரை வணங்கிவிட்டு ஒவ்வொருவரும் இருபத்தொரு அறுகம்புற்களால் அவரை அர்ச்சித்தார்கள். முதல் அறுகு பட்டதுமே குளிரத் தொடங்கிய கணபதியின் உடல் வெப்பம் எல்லா முனிவர்களும் அர்ச்சித்து முடிந்த போது முழுமையாக நீங்கி உடல் குளிர்ந்தது.

அப்போது கணநாதன் 'நீங்கள் செய்யும் உபசாரங்களில் உயர்வானது அறுகம்புல்லால் செய்யும் அர்ச்சனையாகும். எவ்வளவு பெரிய அளவில் பலவித பூக்கள், பத்ரங்களால் எனக்கு அர்ச்சனை செய்தாலும், அறுகும், வன்னியுமே எனக்கு மிகவும் பிடித்தமானவை' என்று சொல்லி மறைந்தார். அப்போது முதல் பிள்ளையார் வழிபாட்டில் அறுகு முக்கிய இடம்பெற்றது.

## வன்னி, மந்தாரை

விநாயகருக்கு உகந்த பொருட்களுள் வன்னி பத்ரமும், மந்தாரை மலரும் முக்கிய இடம் பிடிப்பவை. இதற்கு புராண கால வரலாறு ஒன்று உண்டு. சமீ (வன்னி) என்பவள் மாமுனிவர் அவுரவர் - சுமேதா தம்பதியினரின் மகள். அவளது கணவன் தௌமிய முனிவரின் மகனான மந்தாரன்.

இந்தத் தம்பதியினர் ஒரு சமயம், மகாகணபதியின் வடிவத்தில் உள்ளவரும் விநாயக பக்தருமான புருசுண்டி என்னும் முனிவரைக் கண்டனர். யானை போன்ற தும்பிக்கையுடன் இருந்த முனிவரின் தோற்றத்தைக் கண்டு பயந்து ஓடினாள் வன்னி. புருசுண்டியைக் கிண்டல், கேலி செய்து மிரட்டினான் மந்தாரன். புருசுண்டி முனிவர் விநாயகரின் பெருமைகளையும் தான் யார் என்பதையும் எடுத்துக் கூறியும் தம்பதியினர் அதனைப் பொருட்படுத்தாமல் கேவலப்படுத்தி மரியாதைக் குறைவாகவே நடந்து கொள்ள, புருசுண்டி முனிவர் சாபம் இடுகின்றார். வன்னி, வன்னிமரமாகவும், மந்தாரன் மந்தாரை மரமாகவும் மாறிவிடுகிறார்கள்.

தங்கள் தவறை உணர்ந்த வன்னியும், மந்தாரனும் பிள்ளையாரிடம் சாபவிமோசனம் கேட்கிறார்கள். அவரோ 'தனது அடியாரை அவமானப்படுத்திய குற்றத்தைத் தான் மன்னிக்க விரும்பவில்லை என்றும், இருப்பினும் திருந்தி, வருந்தி, மன்னிப்பு கேட்பதால் உங்கள் பெயர் என்றும் நிலைத்திருக்கும் படி வன்னி, மந்தாரையாகிய உங்களை எனக்குகந்த பூஜைப் பொருளாக, ஏற்று வன்னியூர் என்னும் கிராமத்தில் கோயில் கொள்வேன்' என்று ஆசிகூறி வன்னியூரில் கோயில் கொண்டார்.

வன்னி பத்ரம் (இலை) மற்றும் மந்தாரை புஷ்பத்தால் தன்னை அர்ச்சித்து வழிபாடு செய்பவர்களது சகலவிதமான கஷ்டங்களையும் போக்கி ஆறுதலளிப்பவர் கணபதி.

# ஹோமத் திரவியங்களின் பலன்கள்

01. வாழைப்பழம் - சந்துஷ்டி
02. பூரண மோதகம் - கீர்த்தி (பூரண மோதகம் - பெரிய மோதகம்)
03. மோதகம் - சர்வாபீஷ்டபிரதம் (நினைத்தகாரியம் கைகூடல்)
04. கரும்பு - ஆரோக்கியம்
05. பால் - சம்விருத்தி (வளம்)
06. தயிர் - சர்வகாரியஜெயம் (எல்லா கருமங்களிலும் வெற்றி)
07. பஞ்சாமிர்தம் - வித்யாபிரதம் (கல்வியில் விருத்தி)
08. நெல்லிக்காய் வற்றல் - பரிபூரண சித்தி
09. பொன் - தானாபிவிருத்தி (பொன் ஆபரணங்கள் சேர்தல்)
10. அவல் - புத்ரப்பிரதம் (குழந்தைச் செல்வம் கிடைத்தல்)
11. வெட்டிவேர் - பஹுபுத்ரப்பிரதம் ( குழந்தைச் செல்வம் கிடைத்தல்)
12. எலுமிச்சம்பழம் - துக்க நிவர்த்தி
13. மஞ்சள் மா - சர்வமங்களங்களும் கிடைத்தல்
14. பச்சைப்பயறு - எல்லாக் காரியங்களிலும் வெற்றி
15. கஸ்தூரி - வசியசித்தி
16. மரு - க்ஷுத்ர நிவாரணம்
17. இராசவள்ளிக்கிழங்கு - சர்வ ரக்ஷாப்பிரதம் (எல்லாவகையிலும் பாதுகாப்பு)
18. கற்கண்டு - விசாலபுத்தி (அறிவு வளர்ச்சி)
19. சந்தனச் சமித்து - விரைவில் சித்திகள் கிடைத்தல்
20. திராட்சை - மனச் சாந்தி
21. சர்க்கரை - அதிஷ்டலாபம்
22. நெற்பொரி - செல்வம் கிடைத்தல்
23. நெய் - மனோவசியம்
24. மாதுளம்பழம் - திரிகால தர்சனம் (முக்காலமும் உணர்தல்)
25. மாம்பழம் - தீர்க்கதரிசனம் (வரப்போவதை முன்கூட்டி அறிதல்)
26. செஞ்சந்தனம் - ஜகத்பிரதம் (பூமிலாபம்)
27. பச்சைக் கற்பூரம் - மேதாவிருத்தி (அறிவு வளர்ச்சி)
28. தேன் - ரக்ஷாபிரதம் (பாதுகாப்பு)
29. இலவங்கம் - சர்வரக்ஷாபிரதம் (எல்லாவகையிலும் பாதுகாப்பு)
30. பேரீச்சம்பழம் - தைரியம்
31. கோரோசனை - கணபதி கடாட்சம்

32. கருங்காலி - திடகாத்திரம்
33. வாசனைத் திரவியங்கள் - யசஸ் பிராப்தி (புகழ்)
34. எள் - சங்கட நிவர்த்தி
35. இலாமிச்சை - ரிண நிவர்த்தி (கடன் தீரும்)
36. வெண்கடுகு - சகல ரிண நிவர்த்தி
37. விளாம்பழம் - குருபக்தி
38. கடலை - சத்ருநாசம் (எதிரிக்கு அழிவு)
39. கோதுமை - கிரகதோஷ நிவர்த்தி
40. சாதிக்காய் - தேவவசியம்
41. சாதிப்பூ - ரோக நிவர்த்தி (நோய் நீக்கம்)
42. உழுந்து - தானிய விருத்தி
43. தேவதாரு - சர்வமங்களம்
44. சுத்தான்னம் - ஈஸ்வர அனுக்ரகம் (சுத்தான்னம் - வெண்சாதம்)
45. கொள்ளு - யோகசித்தி
46. வடை - கலாபிவிருத்தி (கலைகளில் தேர்ச்சி)
47. குங்குமப்பூ - தேவி அனுக்ரகம் மற்றும் ராஜயோகம்
48. பலாப்பழம் - ஐயப்பிரதம் (வெற்றி)
49. அறுகு - தாபநிவர்த்தி
50. தேங்காய் - இஷ்டசித்தி
51. தாம்பூலம் - இஷ்டகர்மசித்தி

## தீபங்களும் அதற்குரிய தெய்வங்களும்

| | | |
|---|---|---|
| ஏகமுக தீபம் | - | பிரம்மா |
| புஷ்பரத தீபம் | - | அவ்வாலய தேவதைகள் |
| புருஷமிருக தீபம் | - | சரஸ்வதி |
| கஜதீபம் | - | கணபதி |
| வ்யாக்ரதீபம் | - | பராசக்தி |
| அன்னபக்ஷி தீபம் | - | சோமன் |
| நக்ஷத்திர(வாஹி) தீபம் | - | துர்க்கை |
| சிம்மதீபம் | - | திருமூர்த்தி |
| திருசூல தீபம் | - | வாயு |
| கொடி தீபம் | - | அஸ்வினி தேவர்கள் |
| விருஷப தீபம் | - | தேவி |
| பிரம்ம தீபம் | - | ஸ்கந்தன் |
| குக்குட தீபம் | - | விஷ்ணு |
| கூர்ம தீபம் | - | சக்தி |
| கற்பூரஹாரத்தி | - | சகல தேவதைகள் |

# அபிஷேகம் செய்வதால் ஏற்படும் பலன்கள்

01. சந்தனாதி தைலம் - இன்பம், சுகம் ஏற்படும்
02. அரிசிமா - கடன் தீரும்
03. மஞ்சள் மா - அரசு வசியம், அழகு அளிக்கும்
04. நெல்லி பருப்புப் பொடி - பிணி நீக்கம் (வியாதி நீக்கம்)
05. திருமஞ்சன திரவியம் - பிணி நீக்கம்
06. பஞ்ச கவ்யம் - சுத்தம், பாவநீக்கம்
07. பஞ்சாமிர்தம் - முக்தி, வெற்றி தரும்
08. பால் - ஆயுள் விருத்தி
09. தயிர் - பிரஜாவிருத்தி (குழந்தைப் பேறு)
10. நெய் - முக்தி
11. தேன் - ராஜபோகம், இன்பமளிக்கும், குரல் வளம்.
12. கரும்புச்சாறு - ஆரோக்கியம்
13. எலுமிச்சம்பழச்சாறு - யம பயம் போக்கும்
14. நாரத்தம்பழச்சாறு - மந்திரசக்தி, வசியம்.
15. மாதாளம்பழச்சாறு - பகைமையகற்றல், கோபம் தணியும்
16. வாழைப்பழம் - பயிர்விருத்தி
17. மாம்பழம் - நன்மக்கட்பேறு, நினைத்த காரியப் பேறு.
18. பலாப்பழம் - துன்பம் நீக்கும்
19. வீபூதி - சகல ஐஸ்வர்யம் கிட்டும்
20. சந்தனம் - அரசாட்சி, பெரும் செல்வம்
21. பன்னீர் - குளிர்ச்சி ஏற்படும், சாலோக்ய சுகம்.
22. இளநீர் - யோகம் கிடைக்கும், அபம்ருத்யு நாசம்.
23. வில்வ இலை நீர் - அச்சத்தைப் போக்கும்
24. நீர்த்திரவியம் - நற்பேறு அளிக்கும்
25. சர்க்கரை - பகைவரை அளிக்கும்
26. கோரோசனை, ஜவ்வாது, புனுகு, பச்சைக்கற்பூரம், -ஆரோக்கியம்
27. குங்குமப்பூ மிக்க புகழ் கிடைக்கும்
28. அன்னாபிஷேகம் - விளைநிலங்கள் பலன் தரும். அரசபதவி கிடைக்கும்.
29. சஹஸ்ரதாரை சகல ஆரோக்கியம் மிக்க புகழ்
30. நவ கலச அபிஷேகம் - சித்தசுத்தியடைந்து சிவதரிசனம் (மோட்சம்)
31. சங்காபிஷேகம் - சகல பாபாரிஷ்டம், புண்ணியம்

# பன்னிரு மாதங்களிலும் செய்யவேண்டிய தானங்கள்

| | | |
|---|---|---|
| சித்திரை | - | பட்சணம், நீர்மோர்,செருப்பு, விசிறி. |
| வைகாசி | - | குடை, தயிர்ச்சாதம். |
| ஆனி | - | தேன் |
| ஆடி | - | வெண்ணெய் |
| ஆவணி | - | தயிர் |
| புரட்டாதி | - | சர்க்கரை |
| ஐப்பசி | - | பரமான்னம் |
| கார்த்திகை | - | பால், தீபம். |
| மார்கழி | - | பொங்கல், பதிர்பேணி. |
| தை | - | தயிர் ஏடு |
| மாசி | - | நெய் |
| பங்குனி | - | தேங்காய் |

## தானப் பொருட்களும்
## தானம் செய்வதால் ஏற்படும் பலன்களும்

| | | |
|---|---|---|
| அன்னதானம் | - | தரித்திரமும் கடனும் நீங்கும் |
| வஸ்திரதானம் | - | ஆயுளை விருத்தி செய்யும் |
| பூமிதானம் | - | பிரம் யோக்யதை, ஈஸ்வர தர்சனம் |
| தேன் | - | புத்திரபாக்கியம் |
| கோதானம் | - | ரிஷிகடன், தேவகடன், பிதிர்க்கடன் மூன்றையும் அகற்றும். |
| நெல்லிக்கனி | - | ஞானப்பேறு |
| தீபம் | - | கண்பார்வை தீர்க்கமாகும் |
| அரிசி | - | பாவநீக்கம் |
| நெய் | - | நோய் நீக்கம் |
| பால் | - | துக்கநிவிர்த்தி |
| தயிர் | - | ஆண்மை விருத்தி |
| தேங்காய் | - | பூரண நலன், நினைத்த காரியசித்தி |
| பழங்கள் | - | புத்தியும் சித்தியும் கிட்டும் |
| தங்கம் | - | குடும்ப தோஷம் போக்கும் |
| வெள்ளி | - | மனக்கவலை நீக்கும். |

# ஷோடச தீப ஆராதனை

## 16 வகை தீப ஆராதனைகளும் அதன் பயன்களும்

| | தீப விபரம் | பலன் |
|---|---|---|
| 1. | தூபம் | உற்சாகம் |
| 2. | தீபம் | விழிப்பு |
| 3. | மஹா தீபம் | அரசபோகம் |
| 4. | நாகதீபம் | உயர் பதவி |
| 5. | விருஷப தீபம் | அரசு உயர்வு கதி |
| 6. | புருஷ மிருக தீபம் | பிணி நீக்கம் |
| 7. | சூல தீபம் | ரோக நிவ்ருத்தி |
| 8. | கமட (ஆமை) தீபம் | நீர் பயம் நீங்கும் |
| 9. | கஜதீபம் | செல்வம், அஷ்ட ஐஸ்வரியத்தைத் தரும் |
| 10. | வ்யாக்ர (புலி) தீபம் | துஷ்ட நிவ்ருத்தி |
| 11. | சிம்ஹ தீபம் | ஆயுள் வ்ருத்தி |
| 12. | த்வஜ தீபம் (கொடி) | செல்வம் |
| 13. | மயூர தீபம் (மயில்) | மகட்பேறு |
| 14. | 5 தட்டுகளுடன் பூர்ண கும்பம் | சாந்தி மங்களம் |
| 15. | நக்ஷத்திர தீபம் | உலகாளும் ஆதிபத்யம் |
| 16. | மேரு தீபம் | மேலான சிவசாயுஜ்ய நிலை |

## ஏனைய உபசார விளக்கம்

| | | |
|---|---|---|
| பாத்யம் | - | பாவநாசத்தைப் போக்கும் |
| ஆசமணியம் | - | பாவத்தைப் போக்கும் |
| அர்க்யம் | - | புத்ரவ்ருத்தி |
| கந்ததோகம் | - | சாந்தி தருவது |
| அர்கியோதயம் | - | யாக வ்ருத்தி |
| அக்ஷதை | - | பாவ நீக்கம் |
| மந்திரம் | - | சிவ சாமீப்யம் |
| ஆபரணம் | - | அஷ்ட ஐஸ்வரியம் |
| கற்பூரம் | - | குஷ்ட நாசம் |
| புஷ்பம் | - | துக்க நிவ்ருத்தி |
| நெய்வேத்யம், தாம்பூலம் | - | மஹாசாந்தி |
| கும்ப தீபம் | - | ராஜ்ய சம்பத் |
| கண்ணாடி | - | உலக வளர்ச்சி |
| சாமரம் | - | சகல பாக்யம் |
| விசிறி | - | மங்கலம் |
| சுருட்டி | - | அரசனைக் காக்கும் |
| அம்ருதபாணி | - | பிராணரக்ஷகன் |
| விபூதி | - | லோகரக்ஷகன் |

# திருவிளக்கு ஏற்றுவோம்

குத்து விளக்கில் மும்மூர்த்திகளும் வாசம் செய்வதாக ஐதிகம். விளக்கின் அடிப்பகுதி, ஆசனம். இது 'பிரம்ம' சொரூபம். தண்டுப்பகுதி 'விஷ்ணு' சொரூபம், தண்டின் மேல்புறம் எண்ணெய் ஊற்றும் பகுதியை அகல் என்பார்கள். இது 'சிவ அம்சம்'. அகல் பகுதியின் மேற்புறம் உள் பகுதி 'மகேஸ்வரன்' வசிக்கும் இடம். அதன் உச்சி 'சதாசிவ' அம்சம். ஊற்றப்படும் 'எண்ணெய்' நாதததத்துவத்தைக் குறிக்கும். திரி, பிந்து தத்துவத்தைக் குறிக்கும். சுடர் திருமகளின் வடிவம். அதன் பிழம்பு கலைமகள், சுடரும் அக்னி, தேவியின் அம்சம் என்று புராண நூல்கள் குறிப்பிடுகின்றன.

விளக்கு, தீபலக்ஷ்மியின் சொரூபம். விளக்கு ஏற்றுவதில் தான் எந்த ஒரு பூஜையும் வழிபாடும் தொடங்குகிறது. திருவிளக்கு வழிபாடு செய்வதால் நம் வாழ்வில் தூய்மையும், தெய்வத் தன்மையும் பெருகும். சஞ்சலமும் வறுமையும் நீங்கி, சாந்தியும் வளமையும் நிறையும்.

பெண்கள் தினந்தோறும் தங்கள் இல்லங்களில் அந்தி மாலையில் சூரிய ஒளி மறைந்ததும் திருவிளக்கேற்றி மலர்கள் தூவி குடும்பத்தில் உள்ள எல்லோரும் கூடி மண்டியிட்டு வழிபட வேண்டும். அஷ்ட லக்ஷ்மிகளும் அங்கே குடிகொண்டு நமக்கு வேண்டிய எல்லா நலன்களையும் அருளுவார்கள்.

தினந்தோறும் திருவிளக்கு வழிபாடு நடைபெறும் இல்லங்களில் தெய்வ சாந்நித்யம் பெருகுவதால் பேய், பிசாசு, பில்லி, சூன்யம் எதுவும் அங்கே அணுகாது. தினசரி வழிபாட்டில் விளக்கிற்கு நிவேதனம் செய்தல் நல்லது. நிவேதனமாக கற்கண்டு, வெல்லம் ஆகியவையே போதும்.

பண்டிகை மற்றும் விரத நாட்களில் விளக்கிற்கும் சிறப்பாக நிவேதனம் செய்ய வேண்டும். தேங்காய், பழம், பொங்கல், சுண்டல், அவல்,கடலை முதலியவை ஏற்றவை.

வீட்டுப் பூஜையறையில் ஏற்றும் விளக்கை அடிக்கடி இடம்மாற்றக்கூடாது. ஒரே இடத்தில்தான் எப்போதும் இருக்க வேண்டும். விளக்கினை வெறும் தரையில் வைக்காமல் ஒரு சிறு தட்டில் சிறிது அரிசியினை இட்டு அதன் மேல் வைத்து ஏற்றுவது மிகவும் சிறந்தது.

குத்து விளக்கின் ஒருமுகத்தில் மட்டும் தீபம் ஏற்றினால் அது கிழக்கு முகமாகத்தான் சுடர்விடுபடி ஏற்ற வேண்டும். தினசரி மாலை வேளைகளில் விளக்கேற்றி வைத்து. மகாலட்சுமி துதிகளைச் சொல்லி வழிபட்டால் வறுமை நீங்கி வளம் சேரும்.

குலதெய்வ பூஜையின்போது, வேப்பெண்ணெய், இலுப்பெண்ணெய், பசுநெய் மூன்றையும் கலந்து விளக்கேற்ற வேண்டும். பிள்ளையாருக்கும், மகாலட்சுமிக்கும் பசுநெய் தீபமேற்றி வணங்குவது சிறப்பானது. மகேசனுக்கு இலுப்பை எண்ணெய் தீபமும், மகாவிஷ்ணுவிக்கு நல்லெண்ணெய் தீபமும் ஏற்றுவது நன்மை தரும்.

திருவிளக்கிற்குத் திலகம் (பொட்டு) வைக்கும் போது, உச்சியில் ஒரு பொட்டு, அதன்கீழ் ஒன்று, ஐந்து முகத்திற்கும் ஐந்து பொட்டு. பாதத்தில் ஒரு பொட்டு ஆக எட்டு இடங்களில் பொட்டிட வேண்டும்.

செந்நிறத் துணியால் திரியிட்டு தீபம் ஏற்றிடும் கன்னியர்க்கு, திருமணத் தடை நீங்கி மணவாழ்வு கிடைக்கும். குழந்தைகளில்லாத பெண்களுக்கு மகப்பேறு கிட்டும்.

உத்தம பலன்கள் அத்தனையும் பெற, வெண்மை நிறத் துணியினால் திரிசெய்து தீபமேற்றி இறைவனை வழிபட வேண்டும்.

ஒரு ஜோடி தேங்காய் எண்ணெய் தீபமேற்றும் பலன் ஒரு நல்லெண்ணெய் விளக்கேற்றுவதற்கு சமன்.

ஒரு ஜோடி நல்லெண்ணெய் விளக்கேற்றும் பலன் ஒரு இலுப்பெண்ணெய் விளக்கிற்குச் சமம்.

ஒரு பசு நெய் விளக்கேற்றுவது ஆயிரம் இலுப்பெண்ணெய் விளக்கிற்குச் சமம். அதுவும் கபில நிறப் பசுவின் பாலிலிருந்து எடுக்கும் நெய் மிகவும் சிறப்பானது.

**விளக்கேற்றத் தகுந்த திரிவகைகள்**

வாழைத்தண்டு நார்த்திரி, பருத்திப் பஞ்சுத் திரி, தாமரைத் தண்டு திரி, வெள்ளைஎருக்கம் இலைப்பட்டைத் திரி, புதிய மஞ்சள் சேலைத்திரி மற்றும் சிவப்புச் சேலைத் திரி என்பன சிறந்தவை.

## விளக்கேற்றும் முகத்தின் பலன்

ஒரு முகம் - மத்திமமானது
இரு முகம் - குடும்ப ஒற்றுமை ஏற்படும்
மூன்று முகம் - புத்திரசுகம் ஏற்படும்
நான்கு முகம் - பசு, பூமி, செல்வம் பெருகும்
ஐந்து முகம் - சகல நலன்களும் கிடைக்கும்

## பூஜைக்குகந்த விளக்குகள்

மண்ணால் செய்யப்பட்ட அகல், வெள்ளி அல்லது பஞ்சலோகத்தால் செய்யப்பட்ட விளக்குகள் பூஜைக்கு மிகவும் உகந்தன. ஐந்துமுக விளக்குகள் சாலச் சிறந்தது.

## தீபமேற்றும் திசைகளும் பலன்களும்

கிழக்கு : இந்த திசையில் தீபம் ஏற்றி வழிபட துன்பம் விலகும்.

மேற்கு : இத்திசையில் தீபம் ஏற்றி வழிபடக் கடன் தொல்லை, சனிக்கிரகத்தால் எற்படும் துன்பம், கிரகதோஷம், பங்காளிப் பகை நீங்கும்.

வடக்கு : இத்திசையில் தீபம் ஏற்றி வழிபட்டால் திரண்ட செல்வமும், மங்களமும் உண்டாகும். திருமணத் தடை, சுபகாரியத்தடை, ஜீவனத்தடை கல்வித் தடை அனைத்தும் நீங்கும்.

தெற்கு : இத்திசையில் தீபம் ஏற்றவே கூடாது. பெரும்பாவம் உண்டாகும்.

## தீபம் ஏற்றும் எண்ணைகளின் பலன்கள்

நெய் : நெய் விளக்கு மிகவும் சிறப்பானது. சகல தோஷங்களும் நீங்கும்.

நல்லெண்ணெய் : எல்லாத் துன்பங்களும் விலகும்.

விளக்கெண்ணெய் : வசியம், புகழ், ஜீவனசுகம், தாம்பத்ய சுகம் கிடைக்கும்.
(விளக்கெண்ணெய் - ஆமணக்கெண்ணெய்)

இலுப்பெண்ணெய் : ஆரோக்கியம் ஏற்படும்.

## தோஷம் நீங்க ஏற்ற வேண்டிய தீபங்கள்

சிறிய மண் அகல்விளக்கில் நெய்தீபம் ஏற்ற வேண்டும்.

ராகுதோஷம் - 21 தீபங்கள்
சனிதோஷம் - 9 தீபங்கள்
குரு தோஷம் - 33 தீபங்கள்
துர்க்கைக்கு - 9 தீபங்கள்
சிவனுக்கு - 11 தீபங்கள்
திருமண தோஷம் நீங்க - 21 தீபங்கள்
புத்திர தோஷம் நீங்க - 51 தீபங்கள்
சர்ப்ப தோஷம் நீங்க - 48 தீபங்கள்
காலசர்ப்ப தோஷம் நீங்க - 21 தீபங்கள்
களத்திர தோஷம் நீங்க - 108 தீபங்கள் ஏற்ற வேண்டும்.

## தெய்வங்களுக்கு ஏற்ற எண்ணெய்கள்

| | | |
|---|---|---|
| கணபதிக்கு | - | தேங்காயெண்ணெய் |
| முருகனுக்கு | - | நெய் |
| ருத்ராதிதேவதை | - | இலுப்பெண்ணெய் |
| தேவி (அம்பாள்) | - | ஐந்து வகை எண்ணெய் |
| நாராயணனுக்கு | - | நல்லெண்ணெய் |
| மகாலட்சுமிக்கு | - | நெய் |
| சர்வ தேவதைக்கு | - | நல்லெண்ணெய் |
| குல தெய்வத்துக்கு | - | வேப்பெண்ணெய், நெய் |

## குத்துவிளக்கின் ஐந்து முகங்கள் குறிப்பன

ஆதித்தன், அம்பிகை, விஷ்ணு, கணபதி, மகேசன்.

அல்லது

அன்பு, மனஉறுதி, நிதானம், சகிப்புத்தன்மை, சமயோசித புத்தி.

## தத்துவம்

அடிப்பாகம்- மூலாதாரம்.
தண்டு - சுஷும்னா நாடி.
ஜ்வாலை - புருவமத்தியில் தோன்றும் ஞான ஒளி.

## ஆலயத்தில் தீப பூஜை

ஆலயங்களில் பெண்கள் ஒன்று கூடி முறைப்படி ஆளுக்கு ஒரு தீபமேற்றி வரிசையாக வைத்து வழிபடும் போது ஆன்மீக ஒருமைப்பாடும் அன்பு உணர்வும் வளரும். ஆலயத்தில் அருள் அலைகள் நிறைந்து ஆலயத்தின் உள்ளும் புறமும் அவ்வூரெங்கும் பரவி நிற்கும். அதனால் அவ்வூரில் தீய சக்திகளும், கொடிய பிணிகளும் விலகி அன்பும், அமைதியும், செல்வமும், சிறப்பும் வளரும். ஆகவே நம் வீட்டு நலமும் நாட்டு நலமும் வளர நம் இல்லங்களிலும், பொதுவாக ஆலயங்களில் பெண்கள் ஒன்று கூடி சிறப்பாகவும், திருவிளக்கு வழிபாடு செய்ய முன்வரவேண்டும். தீபத்தில் மகாலட்சுமியை ஆவாஹனம் செய்து (மகாலட்சுமியாக நினைத்து) பூஜை செய்வதால் சர்வமங்களங்களும் ஏற்படும். லட்சுமி கடாட்சம் கிடைக்கும்.

## உபசாரங்கள் :

**பதினாறு உபசாரங்களாவன :**
ஆவாகனம், ஆசனம், பாத்தியம், அர்ச்சக்கியம், ஆசமனம், அபிஷேகம், ஆடை தரித்தல், உபவீதந் தரித்தல், சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம், முகவாசம், தோத்திரத்துடன் கூடிய நமஸ்காரம், பிரதக்ஷிணம் என்பன.

**ஐந்து உபசாரங்களாவன :**
சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம் என்பன.

**பிருதிவி, அப்பு, அக்கினி, வாயு, ஆகாசம் ஆகிய ஐந்து பூதங்கள் சம்பந்தமான உபசாரங்கள் :**

பிருதிவி சம்பந்தமான உபசாரமாவது :- சந்தனம், புஷ்பம், கிழங்கு, வேர், பழம் முதலியன.

அப்பு சம்பந்தமான உபசாரமாவது :- ஜலம், பால், ஆடை, தயிர், கோசலம்முதலியன.

அக்கினி சம்பந்தமான உபசாரமாவது :- தீபம், சுவர்ணம், இரத்தினம், ஆபரணம் முதலியன.

வாயு சம்பந்தமான உபசாரமாவது :- சாமரம், தூபம், உலோகத்திலான விசிறி, ஓலை விசிறி முதலியன.

ஆகாச சம்பந்தமான உபசாரமாவது :- கானஞ் செய்வதற்குரிய வாத்தியம், புல்லாங்குழல், வீணை, வேதகோஷம் முதலியன.



# தூபத்திரவியம்

பச்சைக்கற்பூரம், அகில், சந்தனம், தக்கோலம், ஜாதிக்காய், இலவங்கம், குந்துருக்கம்பிசின், ஜடாமஞ்சை, முஸ்தா என்னும் கோரைக்கழங்கு இவற்றின் சூர்ணத்தாற் செய்யப் பெற்ற தூபத்திரவியத்திற்கு யக்ஷகர்த்தமம் என்று பெயர்.

சந்தனம், அகில், பச்சைக்கற்பூரம், ஏலம், இலவங்கம், இலவங்கத்தின் தொல், அதன் இலை, அதன் புஷ்பம், குந்துருக்கம்பிசின், ஜடாமஞ்சை என்னும் இவற்றின் சூர்ணமானது பிராஜாபத்தியம் எனப் பெயருடையது.

சந்தனம், அகில், பச்சைக்கற்பூரம், கஸ்தூரி, இலவங்கப்பட்டை, குந்துருக்கம்பிசின், சர்க்கரை, கோரைக்கிழங்கு என்னுமிவற்றின் சூர்ணம் விஜயம் எனப்படும்.

பச்சைக்கற்பூரம், கறுப்பு அகிற்கட்டை, குருவேர், குங்குமப்பூ, குந்துருக்கம், சர்க்கரை, துருஷ்கம் என்னும் கஸ்தூரி, தாமரைத்தண்டு, சந்தனப்பொடி என்னுமிவற்றின் சூர்ணம் முறையே ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டுப்பாகமான தேனுடன் சேர்க்கபட்டு சீதாம்சு எனப்படும்.

சந்தனம், அகில், பச்சைக்கற்பூரம், குந்துருக்கம்பிசின், கீழாநெல்லி, குங்கிலியம், கோரைக்கிழங்கு என்னுமிவற்றின் சூர்ணமானது கலியாணமெனப் பெயருடையதாகும்.

சந்கனம், அகில், கஸ்தூரி, கோரைக்கிழங்கு,குந்துருக்கம்பிசின் என்னுமிவற்றின் சூர்ணம் அமிர்தம் எனப்படும்.

தக்கோலம், கமுகம் பூ, பச்சைக்கற்பூரம், ஜாதிக்காய், இலவங்கமென்னுமிவற்றின் சூர்ணம் சுகந்தமெனப்படும்.

# விபூதி மகிமை

## கோயிலில் விபூதி வாங்கும் முறை

கோயிலில் விபூதி பிரசாதம் வாங்கும் போது ஒற்றைக் கையை மாத்திரம் நீட்டி வாங்கக் கூடாது.

வலக்கையின் கீழ் இடக்கையைச் சேர்த்து வாங்க வேண்டும். வாங்கிய விபூதியை இடக்கையில் கொட்டி, அதிலிருந்து மறுபடியும் எடுத்து நெற்றியில் தரிப்பது நல்லது.

வயதில் நம்மைவிட இளையவர்கள் கையிலிருந்து விபூதி எடுத்துத் தரிக்கக்கூடாது. விபூதியை நம்கையில் இடச் செய்து அதிலிருந்து தான் எடுத்துத் தரிக்க வேண்டும். குங்குமத்தை இளையவர் கைகளிலிருந்து எடுத்துத் தரிப்பதில் தவறில்லை.

## விபூதி தரிக்கும் பலன்

விபூதியை உச்சியில் தரிப்பதால், கழுத்துக்கு மேல் செய்த பாவம் நீங்கும். நெற்றியில் பூசிக் கொள்வதால் பிரம்மா எழுதிய தலையெழுத்தின் தோஷம் நீங்கும். கண்டத்தில் (கழுத்து) தரிப்பதால் உண்ணத் தகாததை உண்ட பாவம் அகலும். வயிற்றில் திருநீறணிவதால், தீய செயலால் வந்த குற்றம் நீங்கும். முழங்கால்களில் பூசுவதால் கால்களால் செய்த பாவம் போகும். தெரிந்து கொண்டே யாரும் குற்றமோ, பாவமோ செய்யக் கூடாது.

## உருத்திராக்க (ருத்திராக்ஷ) மகிமை

ருத்ராட்சம் என்ற பெயர் உருத்திரன் + அட்சம் (கண்) என்ற பெயரிலிருந்து வந்தது ஆகும். சிவபெருமானின் கண்ணீரிலிருந்து தோன்றியதே ருத்ராட்சம் எனப்படும். வலது கண்ணிலிருந்து மஞ்சள் நிறத்துடன் பன்னிரண்டு விதமான ருத்ராட்சமும், இடது கண்ணிலிருந்து வெண்ணிறத்தோடு பதினாறு விதமான ருத்ராட்சமும், நெற்றிக் கண்ணிலிருந்து கறுப்பு நிறமான பத்து விதமான ருத்ராட்சமும் தோன்றியதாகப் புராணங்கள் சொல்கின்றன.

நெல்லிக்காயளவு ருத்ராட்சம் உத்தமம். இலந்தைப்பழம் அளவு மத்திமம். கடலை அளவு அதமம். புழுக்கள் குடைந்த நசுங்கிய, மேற்புறத்தில் முட்கள் போன்று மிகக் கூர்மையானவையும், பிறர் அணிந்த ருத்ராட்சங்கயையும் அணியக் கூடாது. ஒரே அளவுள்ள ருத்ராட்சங்களை பட்டுக் கயிற்றில் கோத்து அணிய வேண்டும்.

ருத்ராட்சத்தைத் தரிசித்தால் லட்சம் மடங்கு புண்ணியம். தொட்டால் கோடி மடங்கு புண்ணியம், அணிந்தால் நூறு கோடி மடங்கு புண்ணியம், ருத்ராட்ச மாலையால் ஜபித்தால் நூறு கோடி மடங்கு புண்ணியம் அடைவதாக புராணங்கள் கூறுகின்றன.

ருத்ராட்சமணிந்தவர்களுக்கு அன்னமளிப்பவர்களும், ருத்ராட்ச மரத்தைப் பராமரிப்பவர்களும், ருத்ராட்ச ஆபரணம் அணிவிப்பவரும் சிவகணங்களால் கொண்டாடப்படும் பாக்கியத்தைப் பெறுவார்கள்.

ருத்ராட்சத்தின் மீதுபட்ட தண்ணீர் நம்மீதுபடுவதாலும் ருத்ராட்சம் ஊறவைத்த நீரைப் பருகுவதாலும், ருத்ராட்சத்தை அணிவதாலும் நல்லுறவு, ஐஸ்வர்யம், அன்பு, நினைவாற்றல் பெருகுதல், ஆரோக்கியம் இவை கிட்டும்.

ஒருவன் ஏராளமான பிறவிகள் எடுத்து, அவற்றின் முடிவில் சிவபெருமானின் திருவருள் கைகூடும் போதுதான் அவனுக்கு ருத்ராட்சம் அணிய வேண்டும் என்ற ஆசையே பிறக்கும். சுபாவ அறிவால் அது உண்டாவதில்லை' என்கிறது ஜாபால உபநிஷதம்.

கழுத்தில் 32 ருத்ராட்சங்களும், மணிக்கட்டுக்களில் 12 ருத்ராட்சங்களும், மேல் கையில் 16 ருத்ராட்சங்களும், காதுகளில் ஒவ்வொரு ருத்ராட்சமும், மார்பில் 108 ருத்ராட்சங்களும் தரிக்கலாம்.

## நோய்கள் தீர்க்கும் ருத்ராட்சம்

ஆயுர்வேத சாஸ்திரப்படி ருத்ராக்ஷம் அணிவதால் தாகம், கோழை, திரிதோஷம், விக்கல், பித்தத்தால் ஏற்படும் அனேக வியாதிகள் தீரும். 'கணீர்' என்ற குரல் வளம் வேண்டுவோர்

மற்றும் இயற்கையான குரல்வளத்தைப் பேணிக்காக்க விரும்புவோர் தொண்டையில் படும்படி ருத்ராட்சம் அணிவது சிறந்த பலன் தரும்.

## ருத்ராட்சம் அணியத் தகுதியானவர்கள்

அனைத்து வர்ணத்தாரும் பெண்களும் அணியலாம் என்று சிவபுராணத்தில் (அத்தியாயம் 25; சுலோகம் 47) சிவன் பார்வதியிடம் கூறியுள்ளார். ருத்ராட்சம் அணிபவர்கள் மது, மாமிசம் உண்ணக்கூடாது. பெண்கள் மாதவிலக்குக் காலத்தில் அணியக்கூடாது. ஆசார சீலர்களாக இருப்பவர்கள் எல்லோரும் ருத்ராட்சம் அணியலாம்.

எமது புண்ணியத்தைக் குறிப்பிட்ட ஒரு அளவு என்று வைத்துக் கொண்டால் ருத்ராட்சத்தைப் பார்ப்பது லட்சம் புண்யம் என்றும், அதை ஸ்பரிசிப்பது (தொடுவது) கோடி புண்ணியம் என்றும், அதை அணிவது பத்துக் கோடி புண்ணியம் என்றும், இதை அணிந்து (இஷ்ட) நாமங்களை ஜபிப்பது நூறு லட்சம் கோடி மற்றும் ஆயிரம் லட்சம் கோடி புண்யம் என்றும் பத்மபுராணம் கூறுகிறது.

## ருத்ராட்சம் தரிக்கும் முறை

புதிய ருத்ராட்சம் அணியும் போது கோமூத்திரம், அல்லது கங்கா ஜலம் (நீர்) அல்லது பாலில் முதலில் நனைத்துப் பின்னரே அணிய வேண்டும். வியாழக்கிழமையும், பூச நடசத்திரமும் சேர்ந்து வரும் (வருடத்தில் சுமார் 2 முறை வரும்) சுப நாளில் ருத்ராட்சம் தரிப்பது நன்மை பயக்கும் நூல்கள் கூறுகின்றன.

*உருத்திராக்க (ருத்திராக்ஷ)த்தை விபூதி தரித்தலைப் போல சிவபூசையில் எப்பொழுதுந் தரிக்க வேண்டும். உருத்திராக்கம் முறையே வெண்மை, செம்மை, பொன்மை, கருமை என்னும் வர்ணங்களையுடையவை. அனைவரும் ஏதாவது வகையான உருத்திராக்கங்களை அணியலாம்.*

*சிவபூசையில் சிரசு, கழுத்து, காது, புயம், மணிக்கட்டு, மார்பு என்னும் தானங்களில் அங்கங்களின் அளவுக்குரியதான எண்ணிக்கையுடன் கூடிய உருத்திராக்கத்தைத் தரிக்க வேண்டும் என்பது விதி.*

*வைரம், மாணிக்கம், வைடூரியம், பவளம், நல்முத்து என்னும் பஞ்ச ரத்தினங்களுடன் கூடிய உருத்திராக்கங்களையும் ஏற்றவாறு அணியலாம்.*

*மகுடம், குண்டலம், காதணி, கேயூரம், கடகம், ஒட்டியாணம் என்னும் ஆபரணங்களிலும் உருத்திராக்கத்தைத் தரித்தால் கேடுகளை நாசஞ் செய்யும்.*

*ஒருமுகமுடைய உருத்திராக்கத்தைத் தரித்தால் பெரிய அச்சங்கள் நீங்கும். ஆயுள், கீர்த்தி, சம்பத்து என்னுமிவைகளை விருத்தி பண்ணும். போகமோக்ஷங்களைக் கொடுத்து எல்லாச் சித்திகளையும் உண்டாக்கும்.*

*இரண்டு முகமுடைய உருத்திராக்கத்தைத் தரித்தால் ஆயுள் தோஷத்தை நீக்கும்.*

மூன்று முகமுடைய உருத்திராக்கத்தைத் தரித்தால் பஞ்சமா பாதகங்களினால் உண்டான தோஷத்தை நீக்கும்.

நான்கு முகமுடைய உருத்திராக்கத்தைத் தரித்தால் கொலை செய்த பாவங்களினாலுண்டான பாவத்தை நீக்கும்.

ஐந்து முகமுடைய உருத்திராக்கத்தைத் தரித்தால் எல்லாப் பாவங்களையும் நீக்கும்.

ஆறு முகமுடைய உருத்திராக்கத்தை வலது கையில் தரித்தால் கர்ப்ப தோஷத்தை நீக்கும்.

ஏழு முகமுடைய உருத்திராக்கத்தைத் தரித்தால் திருடியதாலுண்டாகும் தோஷத்தையும் பசுவைக் கொன்றதனாலுண்டாம் தோஷத்தையும் விஷத்தையும் நீக்கும்.

எட்டு முகமுடைய உருத்திராக்கத்தைத் தரித்தால் வஞ்சகமாக தொழில் செய்ததனாலுண்டான தோஷத்தை நீக்கும்.

ஒன்பது முகமுடைய உருத்திராக்கத்தைத் தரித்தால் பஞ்சமா மகா பாதகங்களைச் செய்ததனாலுண்டான தோஷத்தை நீக்கும்.

பத்து முகமுடைய உருத்திராக்கத்தைத் தரித்தால் சிங்கம், புலி, கொம்புள்ள மிருகங்கள் என்னுமிவைகளால் உண்டாகும் அச்சத்தை நீக்கும்.

பதினொரு முகமுடைய உருத்திராக்கத்தைத் தரித்தால் சர்ப்பம், மற்றும் ஊர்வன என்னுமிவைகளாலுண்டான அச்சத்தைப் போக்கும்.

பன்னிரண்டு முகமுடைய உருத்திராக்கத்தைக் கழுத்தில் தரித்தால் எல்லா வியாதிகளையும் பாவங்களையும் போக்கும்.

பதின்மூன்று முகமுடைய உருத்திராக்கத்தைத் தரித்தால் ஐசுவரியத்தை விருத்தி செய்யும்.

பதினான்கு முகமுடைய உருத்திராக்கத்தைத் தரித்தால் எல்லாக் காரிய சித்திகளையும் உண்டு பண்ணும். ஞானயோக சித்திகளை உண்டு பண்ணும்.

உருத்திராக்கத்தைக் கற்பசூத்திரத்தில் கூறியவாறு தானஞ் செய்யின் எல்லா வேதங்களையும் புராணங்களையும் அத்தியயனஞ் செய்ததனாலுண்டதம் பலன்களையும் எல்லா யாகங்களையும் தானங்களையும் செய்ததனாலுண்டாம் பலன்களையும் எல்லாத் தீர்த்தங்களினுஞ் சென்று ஆடினதாலுண்டாம் பலன்களையும் கொடுக்கும். எல்லா ரோகங்களையும் போக்கும். புத்திரமித்திருடன் கூடிய சகல ஐசுவரிய போகங்களையும் கொடுக்கும். சிவசாயுச்சியத்தையும் கொடுக்கும். பூஜா காலத்தில் கட்டாயம் உருத்திராக்கத்தைத் தரிக்க வேண்டும்.

# எத்தனை முக ருத்ராட்சம் அணிந்தால் என்ன பலன்

## (இன்னொரு வகை)

01. ஒரு முக ருத்ராட்சம் பரத்துவ சொரூபம், இதை அணிந்தால் பரத்துவத்தை அடையலாம்.
02. இருமுகம் அர்த்தநாரீஸ்வர உருவம். இதை சிரசில் அணிந்தால் தம்பதிகளின் ஒற்றுமை வலுவாகும்.
03. மும்முகம் அக்னி சொரூபம். இதை அணிவது மனச் சோர்வை நீக்கும்.
04. நான்குமுகம் பிரம்ம சொரூபம். இதனை மார்பில் அணிந்தால் சகல பாவங்களும் விலகும்.
05. ஐந்துமுக ருத்ராட்சத்தை கழுத்தில் அணிந்தால் காலனும் அஞ்சுவான்.
06. ஆறுமுக ருத்ராட்சம் அணிந்தால் பிரம்மஹத்தி விலகும்.
07. ஏழு முக ருத்ராட்சத்தை இடது காதில்அணிந்ததால் நீண்ட ஆயுள் உண்டாகும்.
08. எட்டு முக ருத்ராட்சத்தைக் காதில் அணிந்தால் செல்வம் அதிகரிக்கும். தடைகள் விலகும்.
09. ஒன்பது முக ருத்ராட்சத்தை மணிக்கட்டிலும், இடது தோளிலும் அணிந்தால் நவக்கிரக தோஷங்கள் நீங்கும்.
10. பத்து முக ருத்ராட்சத்தை சிரசில் அணிந்தால் பைசாசங்கள் விலகும்.
11. பதினொருமுக ருத்ராட்சத்தை சிரசில் அணிந்தால் பசுதானம் செய்த பலன் கிடைக்கும்.
12. பன்னிரண்டு முக ருத்ராட்சத்தை சிரசில் அணிந்தால் சகல யாகம் செய்த பலன் கிடைக்கும்.

கழுத்தில் 32 ருத்ராட்சங்களும், மணிக்கட்டுக்களில் 12 ருத்ராட்சங்களும், மேல் கையில் 16 ருத்ராட்சங்களும், காதுகளில் ஒவ்வொரு ருத்ராட்சமும், மார்பில் 108 ருத்ராட்சங்களும் தரிக்கலாம்.

## ஒவ்வொரு நட்சத்திரக்காரர்களுக்கும் உரிய ருத்ராட்சம்

| நட்சத்திரம் | அணிய வேண்டிய ருத்ராட்சம் | |
|---|---|---|
| அஸ்வினி, மகம், மூலம் | நவமுகம் | (9 முகம்) |
| பரணி, பூரம், பூராடம் | ஷண்முகம் | (6 முகம்) |
| கார்த்திகை, உத்தரம், உத்தராடம் | ஏகமுகம், துவாதசமுகம் | (1முகம், 12 முகம்) |
| ரோகிணி, அத்தம், திருவோணம் | த்வி முகம் | (2 முகம்) |
| மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம் | த்ரி முகம் | ( 3 முகம்) |
| திருவாதிரை, சுவாதி, சதயம் | அஷ்ட முகம் | ( 8 முகம்) |
| புனர்பூசம், விசாகம், பூரட்டாதி | பஞ்ச முகம் | (5 முகம்) |
| பூசம், அனுசம், உத்தரட்டாதி | சப்த முகம் | ( 7 முகம்) |
| ஆயில்யம், கேட்டை, ரேவதி | சதுர் முகம் | (4 முகம்) |

# சிவாகம சிறப்பியல்

| ஆகமத்தின் பெயர் | ஸ்தானம் | விளக்கம் |
|---|---|---|
| 1. காமிகாகமம் | பாதாய | பாதம் |
| 2. யோகஜாகமம் | குல்பாய | தொப்புள் |
| 3. சிந்தியாகமம் | பாதாங்குலே | கால்விரல்கள் |
| 4. காரணாகமம் | ஜங்காய | கணுக்கால் |
| 5. அஜிதாகமம் | ஜானுவே | முழங்கால் |
| 6. தீப்தாகமம் | உரசம் | மார்பு |
| 7. சூக்ஷ்மாகமம் | குஹ்யாய | குறி |
| 8. சஹஸ்ர ஆகமம் | கடிதாய | இடுப்பு |
| 9. அம்சுமான் ஆகமம் | பிருஷ்டாய | இடுப்பு கீழ்பகுதி |
| 10. சுப்ரபேத ஆகமம் | நாபௌ | தொப்புள் |
| 11. விஜயாகமம் | உதரம் | வயிறு |
| 12. நிஸ்வாச ஆகமம் | ஹ்ருதயம் | உள்ளம் (எண்ணம்) |
| 13. ஸ்வாயம்புவ ஆகமம் | ஸ்தநாய | மார்பு (இருபுறமும்) |
| 14. அநலாகமம் | லொசனாய | கண்கள் |
| 15. வீராகமம் | கண்டம் | கழுத்து |
| 16. ரௌரவாகமம் | ஸ்ரோத்ரம் | காது |
| 17. மகுடாகமம் | மகுடாய | கிரீடம் |
| 18. விமலாகமம் | பாஹுவே | கையில் |
| 19. சந்திரஞ்ஞானாகமம் | லச்ரத்நகுண்டலம் | அழகு இரத்ன குண்டலங்கள் |
| 20. பிம்பாகமம் | வதநம் | முகம் பார்ஸ்வம் |
| 21. ப்ரோத்கீதாகமம் | ஜிஹ்வா | நாக்கு |
| 22. லலிதாகமம் | கபொலாய | கன்னம் |
| 23. சித்தாகமம் | லலாடாய | நெற்றி |
| 24. சந்தானாகமம் | வக்ஷசே | முகம் |
| 25. சர்வோக்தாகமம் | யஞோபவீதிநே | பூணூல் |
| 26. பாரமேஸ்வராகமம் | ஹாரயெ | மலர்மாலையாக |
| 27. கிரணாகமம் | கரபூஷணாய | இரத்னாபரணங்கள் இழைக்கப்பட்ட தோள்கள் உடைய |
| 28. வாதுளாகமம் | வயநாய | வஸ்த்திரம் |

காமிகம் முதல் வாதுளம் வரையிலான இருபத்தெட்டு ஆகமங்களே சிவஞானங்களெனப்படும்.

1) காமிகம், மூன்று பேதத்துடன் பரார்த்தங்கிரந்தங்களை உடையது.
2) வாதுளம், ஐந்து பேதத்துடன் லக்ஷங்கிரந்தங்களை உடையது.
3) சிந்தியம், ஆறு பேதத்துடன் லக்ஷங்கிரந்தங்களை உடையது.
4) காரணம், ஏழு பேதத்துடன் கோடி கிரந்தங்களை உடையது.
5) அஜிதம், நான்கு பேதத்துடன் லக்ஷங்கிரந்தங்களை உடையது.
6) தீப்தம், ஒன்பது பேதத்துடன் லக்ஷங்கிரந்தங்களை உடையது.
7) சூக்குமம், ஒரு பேதத்துடன் பத்மமென்னுங்கிரந்தங்களை உடையது.
8) சகஸ்கரம், பத்துப் பேதத்துடன் சங்கமென்னுங்கிரந்தங்களை உடையது.
9) அம்சுமான், பன்னிரண்டு பேதத்துடன் ஐந்து லக்ஷங்கிரந்தங்களை உடையது.
10) சுப்ரபேதம், ஒரு பேதத்துடன் மூன்று கோடிகிரந்தங்களை உடையது.
11) விஜயம், எட்டுப் பேதத்துடன் மூன்று கோடிகிரந்தங்களை உடையது.
12) நிசுவாசம், எட்டுப் பேதத்துடன் கோடிகிரந்தங்களை உடையது.
13) சுவாயம்புவம், மூன்று பேதத்துடன் ஒன்றரைக்கோடிகிரந்தங்களை உடையது.
14) அனலம், ஒரு பேதத்துடன் முப்பதாயிரங்கிரந்தங்களை உடையது.
15) வீரம், பதின்மூன்று பேதத்துடன் லக்ஷங்கிரந்தங்களை உடையது.
16) ரௌரவம், ஆறு பேதத்துடன் எண்பது கோடிகிரந்தங்களை உடையது.
17) மகுடம், இரண்டு பேதத்துடன் லக்ஷங்கிரந்தங்களை உடையது.
18) விமலம், பதினாறு பேதத்துடன் மூன்று லக்ஷங்கிரந்தங்களை உடையது.
19) சந்திரஞானம், பதினான்கு பேதங்களையும் மூன்றுகோடிகிரந்தங்களை உடையது.
20) பிம்பம், பதினைந்து பேதங்களையும் லக்ஷங்கிரந்தங்களை உடையது.
21) புரோத்கீதம், பதினாறுபேதங்களையும் மூன்றுலக்ஷங்கிரந்தங்களை உடையது.
22) லளிதம், மூன்று பேதங்களையும் எண்ணாயிரங் கிரந்தங்களை உடையது.
23) சித்தம், நான்கு பேதங்களையும் ஒன்றரைக்கோடி கிரந்தங்களை உடையது.
24) சந்தானம், ஏழு பேதங்களையும் ஆறாயிரங்கிரந்தங்களை உடையது.
25) சாவோக்தம், ஐந்து பேதங்களையும் இரண்டு லக்ஷங்கிரந்தங்களை உடையது.
26) பாரமேசுவரம், ஏழு பேதங்களையும் பன்னிரண்டு லக்ஷங்கிரந்தங்களை உடையது.
27) கிரணம், ஒன்பது பேதங்களையும் ஐந்து கோடிகிரந்தங்களை உடையது.
28) வாதுளம், பன்னிரண்டு பேதங்களையும் லக்ஷங் கிரந்தங்களை உடையது.

## சிவாகமங்கள்

சிவாகமங்கள் சிவபிரானின் ஐந்து முகங்களிலிருந்தும் தோன்றின.

சத்யோஜாதம் - காமிகம் முதல் அஜிதம் வரை - 5
வாமதேவம் - தீப்தம் முதல் சுப்ரபேதம் வரை - 5
அகோரம் - விஜயம் முதல் வீரம் வரை - 5
தத்புருஷம் - ரௌரவம் முதல் முகபிம்பம் வரை - 5
ஈசானம் - புரோத்கீதம் முதல் வாதுளம் வரை - 8

சிவாகமங்களின் உபதேசக்கிரமம்

சத்யோஜாதமுகம் - கௌசிகமுனிவருக்கு
வாமதேவமுகம் - காசிபமுனிவருக்கு
அகோரமுகம் - பாரத்வாஜமுனிவருக்கு
தத்புருஷமுகம் - கௌசமுனிவருக்கு
ஈசானமுகம் - அகத்தியமுனிவருக்கு

சிவாகங்களின் வழிநூல்கள்

அஷ்டப்பிரகரணங்களும்,கிரியாபத்ததிகளும், சிற்பநூல்களும்.

அஷ்டப்பிரகரணங்கள்

தத்துவப்பிரகாசிகை, தத்துவசங்கிரகம், தத்துவத்திரயநிர்ணயம், போககாரிகை, மோக்ஷகாரிகை, நாதகாரிகை, பரமோக்ஷநிராசகாரிகை, ரத்னத்ரயம்.

கிரியா பத்ததிகள் பதினெட்டு.

உக்ரஜோதி, சத்யஜோதி, ராமகண்டர், வித்யாகண்டர், நீலகண்டர், வபூதிகண்டர், ஸ்ரீகண்டர், நாராயணகண்டர், ஹ்ருதயசிவன், பிரமசம்பு, வைராக்கியசிவன், ஞானசம்பு, திரிலோசனசிவன், வருணசிவன், ஈஸ்வரசிவன், அகோரசிவன்.

## ஆசனம்

பெரியோர்கள் ஒருபோதும் ஆசனமின்றி நிலத்தில் உட்காரக்கூடாது தினந்தோறும் செய்யும் ஜபம், அத்தியயனம் போன்ற சக்திகளை அவனது உடலிலிருந்து பாதாள உலகத்தில் இருக்கும் அசுரர்கள் அபகரித்து விடுவார்கள். ஆசனம் கிடைக்காத பக்ஷத்தில் சால்வையைப் போட்டு அதன்மேல் உட்காரவேண்டு மென்பது ஐதீகம். ஆசனமின்றி இருந்தால் நாளடைவில் பெருமை குறைந்து கொண்டே போகும்.

# துவாதச ஜோதிர் லிங்கங்கள்

| லிங்கப்பெயர்கள் | திருக்கோயில்கள் | மாநிலங்கள் |
|---|---|---|
| 1. ராமலிங்கேஸ்வரர் | சேதுபந்தம் (ராமேஸ்வரம்) | தமிழ்நாடு |
| 2. மல்லிகார்ஜுனர் | ஸ்ரீசைலம் | ஆந்திரா (தெலுங்கு) |
| 3. பீமசங்கரர் | பாஹினி | மஹாராஷ்டிரா |
| 4. குஸ்மேஸ்வரர் | சிவாலயம் | மஹாராஷ்டிரா |
| 5. திரியம்பகேஸ்வரர் | கோதாவரி | மஹாராஷ்டிரா |
| 6. மஹாகாளேஸ்வரர் | உஜ்ஜயினீ | மத்யப்ரதேசம் |
| 7. அளலேஸ்வரர் | ஓங்காரேஸ்வரம் | மத்யப்ரதேசம் |
| 8. வைத்யநாதர் | பரலி | பீஹார் |
| 9. விஸ்வநாதர் | வாரணாசி (காசி, பெனாரஸ்) | உத்தரப்ரதேசம் |
| 10. கேதாரேஸ்வரர் | கேதாரநாத் (திருக்கேதாரம்) | உத்தரப்ரதேசம் |
| 11. நாகேஸ்வரர் | தாருகாவனம் | குஜராத் |
| 12. சோமநாதேஸ்வரர் | சோமநாதம் | குஜராத் |

## சிதம்பரம் நடராஜப்பெருமானின் ஆறு அபிஷேகதினங்கள்

| | | |
|---|---|---|
| 1. சித்திரை | திருவோணம் | உச்சிக்காலம் |
| 2. ஆனி | உத்தரம் | பிரதோஷம் |
| 3. ஆவணி | சதுர்த்தசி | சயாரட்சை |
| 4. புரட்டாதி | அஷ்டமி | அர்த்தஜாமம் |
| 5. மார்கழி | திருவாதிரை | நள்ளிரவு |
| 6. மாசி | சதுர்த்தசி | காலைசந்தி |

**வணங்கும் விதி :**

பிரம்மா, விஷ்ணு, சிவன் இம்மூவரை வணங்கும் போது சிரசின் மேல் 12 அங்குலம் உயர்த்தி கைகூப்பி வணங்க வேண்டும். மற்ற தெய்வங்களை சிரசின் மேல் கைகூப்பி வணங்கினால் போதும் குருவை வணங்கும் போது, நெற்றியில் கைகூப்பி வணங்க வேண்டும். அரசரையும், தகப்பனாரையும் வணங்கும் போது வாய்க்கு நேராக கைகூப்பியும் பிராமணரை வணங்கும் போது மார்பில் கைகூப்பியும் தன்னுடைய தாயை வணங்கும் போது, வயிற்றில் கைவைத்தும் வணங்க வேண்டும்.

மாதா, பிதா, குரு, தெய்வங்களை வணங்கும் போது ஆண்கள் அஷ்டாங்க நமஸ்காரம் செய்ய வேண்டும். பூமியில் நெடுஞ்சாண் கிடையாக வணங்க வேண்டும். ஆனால் பெண்கள், மாதா, பிதா, குரு, தெய்வம் மற்றும் கணவனை வணங்கும் போது பஞ்சாங்க நமஸ்காரம் செய்ய வேண்டும். பெண்களுடைய ஸ்தனங்கள் பூமியில் படக்கூடாது.



## ஐந்தொழில் விளக்கம்

**தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்**
**சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமாம்**
**ஊன்று மலர்ப்பதத்தே உற்ற திரோ தம்முத்தி**
**நான்ற மலர்ப்பதத்தே நாடு.**

தோற்றம் - படைத்தல், துடி - உடுக்கு. நடராஜரின் கையிலுள்ள உடுக்கு படைத்தலைக் குறிக்கும்.

திதி (ஸ்திதி) - காத்தல் (இருப்பு), அமைப்பு - அபயகரம். அவரது அபயகரம் காத்தலைக் குறிக்கும்.

சங்காரம் - அழித்தல், அங்கி - நெருப்பு (அக்கினி). இறைவனின் கையிலுள்ள அக்கினி அழித்தலைக் குறிக்கும்.

திரோதம் - மறைத்தல், ஊன்றியிருக்கின்ற பாதம் மறைத்தலைக் குறிக்கும்.

முத்தி - அருளல், நான்ற மலர்ப்பதம் - தொங்குகின்ற பாதம், தூக்கிய திருவடி. தூக்கிய திருவடியே அருளலைக் குறிக்கும்.

திருச்சிற்றம்பலம்

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண்ஞ் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால்வெண் ணீறும்
இனித்தமுடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே.

திருச்சிற்றம்பலம்

## கும்பம் ~ சர்வ தேவதா ஸ்வரூபம்

கும்பத்தின் குடம் அந்த தேவதையின் உடல் ஆகிறது. அதில் சுற்றப்படும் நூல், நாடி நரம்புகளாகவும், நிரப்பப்படும் நீர் குருதியாகவும், அதில் போடப்படும் இரத்தினங்கள் சுக்கிலமாகவும், ஏனைய வாசனைப்பொருட்கள் மற்றும் உலோகம் முதலியன தாதுப் பொருட்களாகவும், தேங்காய் சிரசு ஆகவும், மாவிலை சிகை ஆகவும், தர்ப்பைக் கூர்ச்சம் ஜடாமுடி ஆகவும், ஆவாகன மந்திரம் அதன் உயிர் ஆகவும் அமைகிறது.

இங்கு தர்ப்பை ஜடாமுடி என்பதும் மாவிலை சிகை என்பதும் கவனிக்கத்தக்கது. சிகை - தலைமயிர், ஜடாமுடி தலைமயிரால் ஆன மகுடம். இவை ஞானத்தின் அடையாளங்கள்.



## பஞ்சாக்ஷர சிறப்பியல்

1. தாரக பஞ்சாக்ஷரம் - ஓம் நமசிவாய:
2. ப்ராசாத பஞ்சாக்ஷரம் - ஓம், ஹாம், ஹௌம், சிவாய நம:
3. மிஸ்ர பஞ்சாக்ஷரம் - ஓம் நமசிவாய சிவாய நம:
4. ஸ்தூல பஞ்சாக்ஷரம் - நமசிவாய:
5. சூக்ம பஞ்சாக்ஷரம் - சிவாய நம:
6. சுத்த பஞ்சாக்ஷரம் - ஓம் சிவாய நம:

### பஞ்சமுக சிறப்பு

| திக்கு | நிறம் | மூர்த்தியின் பெயர் |
|---|---|---|
| மேல்நோக்கிய முகம் | சுத்த ஸ்படிகம் | ஈசானமுகம் |
| கிழக்கு நோக்கிய முகம் | மஞ்சள் | தத்புருடம் |
| தெற்கு நோக்கிய முகம் | கருப்பு | அகோரம் |
| வடக்கு நோக்கிய முகம் | சிவப்பு | வாமதேவம் |
| மேற்கு நோக்கிய முகம் | வெள்ளை | சத்யோஜாதம் |

## ஆணவத்தின் ஏழு இயல்புகள்

1. மோகம் - நல்லறிவை மயக்குவது.
2. மதம் - உலக இன்பங்களை மேலாகக் கருதுதல்.
3. ராகம் - உலக இன்ப நுகர்வுகளில் ஆசை.
4. விஷாதம் - இன்பம் கிடையாதபோது உண்டாகும் வருத்தம்.
5. சோஷதம் - பற்றுள்ளவர்கள் விலகும்போது ஏற்படும் வாட்டம்.
6. வைசித்திரியம் - தனது குற்றங்களை இறைவன்மேல் ஏற்றித் தன் பெருமைகளைப் புகழுதல்.
7. அரிசம் - உலக இன்பங்களை அனுபவிக்கும்போது தமக்கொரு குறையுமில்லை என எண்ணுதல்.

# மஹோற்சவம்

மஹா - உற்சவம் என்பது பெரிய விழா எனப் பொருள்படும். ஆண்டுக்கு ஒரு தடவை நடத்தப்பெறும் இந்த விழா ஆலயங்களில் தினமும் நடைபெறும் நித்திய நைமித்திகக் கிரியைகளில் ஏற்படக்கூடிய குற்றங் குறைகளுக்குப் பிராயச்சித்தமாகவும் அமைகின்றது.

ஆகம விதி முறைகளுக்கமைய பத்துநாட்கள் முதல் இருபத்தைந்து நாட்கள் வரையில் மஹோற்சவம் என்னும் பெருந்திருவிழாக்கள் நடைபெறும். தினமும் காலை, மாலை இரு நேரங்களில் யாகபூஜை, கொடித்தம்ப பூஜை, சுவாமி வீதி வலம் வருதல் முதலிய நிகழ்ச்சிகள் தினமும் ஒரேமாதிரி நடைபெறும். இவற்றைவிட, இத்திருவிழா நாட்களில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமான சிறப்பினைக் காணலாம்.

## மஹோற்சவம் என்பது ஐந்தொழில் விளக்கம்.

பொதுவாக மஹோற்சவம் என்பது ஐந்தொழில் விளக்கம் எனக் கூறுவர். படைத்தல் (சிருஷ்டி), காத்தல் (ஸ்திதி), அழித்தல் (சம்ஹாரம்), மறைத்தல் (திரோபவம்), அருளல் (அனுக்கிரகம்) என்னும் பஞ்ச கிருத்தியங்களை (ஐந்தொழில்) மஹோற்சவம் சுட்டிநிற்கிறது. முதல்நாள் கொடியேற்று விழாவுடன் பெருந்திருவிழா ஆரம்பமாகும். கொடியேற்றுவிழா படைத்தலைக் குறிப்பது. தினமும் வாகனங்களில் இறைவன் ஏறி வீதி வலம் வருவது காத்தலைக் குறிக்கும். வேட்டைத் திருவிழா, தேர்த் திருவிழா முதலியன அழித்தலைக் குறிக்கும். சூர்ணோற்சவம் என்னும் சுண்ணமிடித்தலும் மௌனோற்சவமும் மறைத்தலைக் குறிக்கும். தீர்த்தவாரி, சண்டேஸ்வர உற்சவம், ஆசார்ய உற்சவம் முதலியன அருளலைக் குறிப்பனவாகும்.

## அதிகார நந்தியும் இடப வாகனமும்

இடப வாகனம் சிவபிரானுக்குரியது. கொடிச்சீலையில் வரையப்படும்போது அது ஆன்மாவைக் குறிக்கிறது. பலிபீடத்திற்கருகிலும் அது ஆன்மாவைக் குறிக்கும் வகையில் அமர்ந்திருக்கிறது. அங்கு ஒரு பெரும் தத்துவத்தை நாம் உணர்ந்துகொள்ள வேண்டும். தனது அகங்கார மமகாரங்களைப் போக்கி, ஆசைகளை விட்டொழித்து அனைத்தையும் பலிபீடத்தில் பலிகொடுத்துவிட்டு வேறு சிந்தனை எதுவுமில்லாமல் இறைவனையே பார்த்துக்கொண்டு அமர்ந்திருக்கிறது. இறைவனால் ஆட்கொள்ளப்பட்டுவிட்டது. பக்குவமடைந்த ஆன்மாவின் அடையாளம் இந்த இடபம். முன்னங்கால் ஒன்றை மடித்து எழ ஆயத்தமான நிலையில் அது இருப்பது இறைவனோடு ஐக்கியப்படத் தயாராகிவிட்டது என்பதைக் காட்டுகிறது. இதேபோலவே எல்லா ஆலயங்களிலும் அந்தந்த இறைவடிவத்தின் வாகனம் அமைக்கப்பட்டிருக்கும். இறைவனைத் தாங்கி வீதிவலம் வருவதற்கும் இடப வாகனமும் மூஷிகம், சிங்கம் போன்ற ஏனைய வாகனங்களும் பயன்படுத்தப்படுகின்றன. ஆன்மா பக்குவமடைந்து இறைவனிடம் சேரவேண்டும் என்பதையே இவை போதிக்கின்றன.

அதிகார நந்தி என்ற கருதுகோளை விளங்கிக்கொள்ளாமல் அதனை இடபத்துடன் இணைத்துக் குழப்புவது பொருத்தமில்லை. நந்தியும் இடபமும் தர்மதேவதையின் இரு வடிவங்கள். பொதுவாகவே வாகனங்கள் அனைத்துமே தர்மதேவதை என்பதே சமயநூற் கருத்தாகும். நந்தியம் பெருமான் சிவகணங்களுள் ஒருவர். குருசிஷ்ய பரம்பரையில் "என்னரு நந்தி எடுத்துரைத்தானே" எனத் திருமூலர் கூறுவதற்கிணங்க பூலோக குருபரம்பரைக்கு முதல்வராக அவர் விளங்குகின்றார். கைலாயத்திலே சிவனது காவலராகவும் அணுக்கத்தொண்டராகவும் அவர் புராணங்களில் உருவகப்படுத்தப் படுகிறார். நாத முதல்வராக மிருதங்க வாத்தியத்தின் அதிபதியாக அவர் விளங்குவதையும் கருத்தில் கொள்ளவேண்டும்.

## காமதேனு அல்லது காராம்பசு

இடபத்தை வாகனமாகக் கொள்ளும் நாம் இடபத்தின் சக்தியாகக் கருதக்கூடிய காராம்பசு அல்லது காமதேனுவையும் வாகனமாக்கி மகிழுகின்றோம். பசுவை வாகனமாக்கலாமா? என்ற கேள்வியும் எழாமலில்லை.

மேலானவற்றுளெல்லாம் மேலானதாகிய பரம்பொருளுக்கு மேலானவற்றுட் சிறந்த பசுவை வாகனமாக்கவேண்டும் என்ற எண்ணம் அன்பின் நெகிழ்ச்சியால் அடியார்களுக்கு ஏற்பட்டது வியப்பன்று. அதுவும் காமதேனு நமது விருப்பங்கள் யாவற்றையும் நிறைவேற்ற வல்லது. பாற்கடலில் கிடைத்த அரிய சொத்து. அதனை ஆண்டவனுக்கே உரியதாக்குவது பொருத்தமானதன்றோ? மிகவும் எளியவனாயிருத்தல் என்பது இறைவனின் உயர்குணங்களுள் ஒன்று என்பதால் அவன் பசுவினால் தாங்கப்படும் அளவிற்குத் தன்னை எளியவனாக்கிக் கொள்வான் என்பது நமக்குக் கிடைக்கும் செய்தி.

தொந்தி பெருத்த யானை வடிவினனாகிய பிள்ளையாருக்கு இத்தனை சிறிய எலியை வாகனமாகக் காட்டுவதும் இறைவனின் எளிவந்த தன்மையை உணர்த்தும் செயற்பாடல்லவா? இங்கு விநாயகப் பெருமானின் அருட் திருவிளையாடலொன்றை நினைவூட்டவும் இந்த மூஷிக வாகனம் உதவுகிறது.

### ஆணவம் அடங்கிய ஆன்மாவே வாகனம்

கஜமுகாசுரன் என்ற கொடிய அசுரன் வரபலம் பெற்றவன். மனிதர்களாலோ, விலங்குகளாலோ தேவர்களாலோ தான் கொல்லப்படலாகாது எனவும், ஆயதங்களால் தான் அழிக்கப்படலாகாது எனவும் வரம் பெற்றவன் அவன். அதனால் அவனை அழிப்பதற்காக மனிதனும் மிருகம் கலந்த தெய்வ வடிவம் கொண்ட விநாயகர் அவதரித்தார். அவர் ஆயுதத்தைப் பயன்படுத்தாமல் தமது தந்தத்தையே முறித்து அதனால் அவனை அழிக்கிறார். ஆனால் அவனை முற்றாக அழித்துவிடாமல் யானைபோலப் பலமும் பெரிய உருவமும் கொண்டிருந்த அவனை மிகச் சிறிய எலியாக மாற்றித் தமது வாகனமாகக் கொள்கிறார்.

ஆன்மாவைப் பற்றிநிற்கும் மும்மலங்களில் மாயை என்பது இறைவனால் ஆன்மாவின் நன்மை கருதி அனுப்பப்பட்டது. தனு, கரண, புவன, போகங்களைப் படைத்துக் கொடுத்து வினைகள் அனுபவித்துத் தீர்ந்ததும் தானே மறைந்துவிடும்.

கன்மம் என்பது வினைப்பயன். அது அனுபவித்துத் தீர்வது. ஆணவம் என்பது இயல்பாகவே ஆன்மாவுடன் என்றும் இருப்பது. ஆனால் ஆன்மா திருவருட் சக்தியின் துணையால் பக்குவமடைகின்றபோது (சத்திநிபாதம் - மலபரிபாகம்) அந்த ஆணவம் வலிகுன்றி அடங்கி நிற்கிறது.

இந்தத் தத்துவத்தை எடுத்துக் காட்டவே ஆடாத ஆட்டமெல்லாம் ஆடுகின்ற அசுரர்கள் அனைவருமே ஆண்டவன் திருவருளால் இறுதியில் அடக்கப்படுவதாக வருகின்ற அனைத்துப் புராணங்களிலும் அவர்கள் முற்றாக அழிந்ததாகக் கூறுவதில்லை. கஜமுகாசுரன் எலியாக மாறி விநாயகரின் வாகனமாக ஆகிறான். நடராஜர் பாதத்தின் கீழ் முயலகன் கிடக்கின்றான். சூரபதுமன் சேவலும் மயிலுமாக மாறி கொடியாகவும் வாகனமாகவும் ஆகிறான்.

'தீயவை புரிந்தாரேனும் குமரவேள் திருமுன் உற்றால்
தூயவராகி மேலைத் தொல்கதி அடைவர் என்கை
ஆயவும் வேண்டும் கொல்லோ அடுசமர் இந்நாட் செய்த
மாயையின் மகனும் அன்றோ வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்'

என்று கந்தபுராணம் கூறுவது நமது சைவ சமயத்தின் பெருங்கருணை மிக்க தத்துவத்தை விளக்குவதாக அமைகிறது.



# சாக்தம்

## வேத நாயகி - மந்திரச் செல்வி
## உலகம் யாவையும் ஊக்கிடும் தேவி - காயத்ரி



"விரும்பிய வரங்களை அளிப்பவளும், அக்ஷரப் பொருளும், வேதத்தால் அறியப்படுபவளும், வேத மாதாவும் ஆகிய காயத்ரீ தேவியே! நீ எங்கள்முன் எழுந்தருளி எங்கள் ஆராதனையை ஏற்கவேண்டும். நீயே பிராண சக்தியாகவும், இந்திரிய சக்தியாகவும், பகைகளை வெல்லும் திறமையாகவும், அங்கங்களின் வலிமையாகவும், ஞான ஒளியாகவும், தேவர்களுடைய பிரகாசமாகவும், உலக வடிவாகவும், காலரூபியாக உலகின் ஆயுளாகவும், அனைத்தையும் வெல்பவளாகவும், எல்லாமாகவும் இருக்கிறாய்"

- சந்த்யாவந்தன மந்த்ரம்.

சென்னியது உன்பொற் திருவடித் தாமரை சிந்தையுள்ளே
மன்னியது உன்திரு மந்திரம் சிந்துர வண்ணப்பெண்ணே
முன்னிய நின் அடியாருடன் கூடி முறைமுறையே
பன்னியது என்றும் உன்தன் பரமாகம பத்ததியே.

- அபிராமி அந்தாதி

# உலகத்து நாயகி - எங்கள் முத்துமாரி



**உபசர்க்கா ந சேஷாம்ஸ்து**
**மஹாமாரீ ஸமுத்பவான்**
**ததா த்ரிவிதம் உத்பாதம்**
**மாஹாத்ம்யம் சமயேன் மம**

பெருநோய்களால் (அம்மன் நோய்கள் ) வரும் மரணங்களையும் விபத்துக்களையும் மூவகையான துன்பங்களையும் எனது மஹாத்ம்யம் போக்குவதாயிருக்கட்டும்.

-- தேவீ மஹாத்ம்மியம் அத்.12 8ம் சுலோகம்.

மூவகைத் துன்பம்:

1. ஆதி ஆத்மிகம் - உடல்நோய், உடல் சம்பந்தமுள்ளவர்களின் பிரிவு.
2. ஆதி பௌதிகம் - கொடிய பிராணிகளால் ஏற்படுவது.
3. ஆதி தைவிகம் - இடி, மழை முதலியவற்றால் வரும் இயற்கைத் துன்பம்.

## அளவிலா விளையாட்டுடை அருட்சக்தி
## திரிபுரசுந்தரி



சிந்தையி னுள்ளே திரியும் சிவசக்தி
விந்துவும் நாதமு மாயே விரிந்தனள்
சந்திர பூமி சடாதரி சாத்தவி
அந்தமொ டாதிய தாம்வண்ணத் தாளே

- திருமந்திரம் 1138



# சர்வம் சக்திமயம்

சக்தியும் சிவனும் ஒன்றே. சிவனின்றிச் சக்தியில்லை. சக்தியின்றிச் சிவனுமில்லை. மிக உயர்ந்த நிலையில் பிரிவற்ற ஒருமையே உள்ளது. இறைவன் ஆனந்த மிகுதியால் திருவிளையாடல் புரியும்போதே அவனுடைய திருவுருவங்கள் அமைகின்றன. பரன் ஆணையால் பரை அனைத்துயிரையும், அனைத்து உலகங்களையும் படைக்கிறாள். உயிர்களை வினைபுரிய வைத்து, அன்பும் அருளும் சொரிந்து, இருள் மயக்கங்களைத் தீர்த்து, உண்மையொளி வீசி, அவற்றைப் பக்குவப்படுத்தி, உருமாற்றி இறுதியில் மீண்டும் இறைவனிடம் சேர்ப்பிப்பவள் மஹாசக்தி.

பரம்பொருளிலிருந்து பிரிவுபடாமல் பழமும் சுவையுமாக, நெருப்பும் சூடுமாக, விளங்கும் பராசக்தியே திருவருட்சக்தி. அதுவே மாயையாகிய திரோதான சக்தியும். அதுவே ஒன்றாய் அரும்பிப் பலவாய் விரிந்து வேதங்கள் போற்றும் இயற்கைச் சக்திகளாகவும், ஆகமங்கள் பூஜிக்கும் அருள்வடிவத் திருவுருவங்களாகவும், புராணங்கள் புகழும் வீரசக்திகளாகவும், பாமரமக்கள் வழிபடும் கிராமியத் தேவதைகளாகவும் விளங்கும் பெருமைக்குரியது.

ஒன்றாய் அரும்பிப் பலவாய் விரிந்து இவ்வுலகெங்குமாய்
நின்றாள் அனைத்தையும் நீங்கி நிற்பாள் என்தன் நெஞ்சினுள்ளே
பொன்றாது நின்று புரிகின்றவா இப்பொருள் அறிவார்
அன்று ஆலிலையில் துயில்கின்ற பெம்மானும் என்ஐயனுமே.

- அபிராமி அந்தாதி

காஷ்மீரத்திலே அம்பாள், ராஜபுதனத்தில் பவானி, கூர்ஜரத்தில் கல்யாணி, வங்கத்திலே காளி, அசாமில் காமரூபி, மைசூரில் சாமுண்டி, காசியில் விசாலாட்சியும் அன்னபூரணியும், மலையாளத்தில் பகவதி.........

தமிழகத்தில் பார்த்தால் - காஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி, திருவொற்றியூர் வட்டபுரி அம்மன், மாமல்லபுரம் கருக்கமர்ந்த காளி, தில்லைக் காளி, கோயமுத்தூர் கோணியம்மன், சமயபுரம் கருமாரி, தஞ்சாவூர் முத்துமாரி, திருவேற்காடு முத்துமாரி, பாரியூர் கொண்டத்துக் காளி, நாட்டரசன் கோட்டை கண்ணாத்தாள், காரைக்குடி கொப்புடையம்மன், தென் எல்லையில் கன்யாகுமரி, வடக்கிலிருந்து வந்த உஜ்ஜயினி மஹாகாளி, ஆந்திரத்திலிருந்து வந்த சக்கம்மாதேவி, இன்னும் பல இடங்களிலே எல்லை அம்மன், எல்லைப்பிடாரி, வடக்குவாசல் செல்லி, ஆத்தாயி, மாரியாத்தா, பிடாரி, மாயி, மகமாயி, ..............

சிலப்பதிகாரத்திலே மதுரையின் காவல் தெய்வம் மதுராபதி. மணிமேகலையில் சம்பாபதியைக் காண்கிறோம்.

ஈழத்தை நோக்கினால், நயினை நாகபூஷணி (புவனேஸ்வரி பீடம்), வேலணை புளியங்கூடல் முத்துமாரி, பெருங்குளம் முத்துமாரி, தெல்லிப்பளை துர்க்கையம்மன், சாவகச்சேரி விளைவேலி துர்க்கை, திருநெல்வேலி முத்துமாரி, திருகோணமலை பத்திரகாளி, முனீஸ்வரம் வடிவாம்பிகை (அளகேஸ்வரம் சக்தி பீடம்), மாத்தளை முத்துமாரி, நாவலப்பிட்டி முத்துமாரி என்று நீண்டு செல்லும் ஒரு பட்டியல்.

எங்கும் நிறைந்த பராசக்தி பூரணி, ராஜராஜேஸ்வரி, மூலப் பிரகிருதி.
முத்தொழில் புரியும்போது பிரம்மாணி, வைஷ்ணவி, ருத்ராணி.
ஈசனுக்கு ஒப்பாக துர்க்கை.
கல்விக்கு சரஸ்வதி.
செல்வத்திற்கு இலக்குமி.
காலசொரூபம் காளி
புக்தி முக்தி ப்ரதாயினி - போக மோட்சப் பிரதாயினி.

புத்தியின் ஞானசக்தியும் மனத்தின் இச்சாசக்தியும் உடலின் கிரியாசக்தியும் அவளுடைமைதான். அவளிடமிருந்துதான் பிரமன், விஷ்ணு, ருத்ரன், மகேஸ்வரன், சதாசிவன் என்ற பஞ்ச கர்த்தரும் தோன்றினர். சித்சக்தி, பராசக்தி, இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி என்ற பஞ்ச சக்திகளும் அவளிடமே தோன்றினர்.

பிரமவிஷ்ணு ருத்ரர்களின் சக்திகளாகவும் தேவர்களின் சக்திகளாகவும் சப்த மாதர்களாகவும் துர்க்கா லட்சுமி சரஸ்வதியாகவும் பஞ்சவிம்சதி எனும் மஹேஸ்வர மூர்த்தங்கள் 25 இற்கும் சக்தியாகவும், 64 சிவமூர்த்தங்களின் சக்தியாகவும் 64 பைரவர்களின் யோகினிகளாகவும் விளங்குகிறாள்.

தேவி பாகவதம், தந்திர சாரம், சிவாகமங்கள், சிற்ப நூல்கள், சம்ஹிதைகள், மந்திர சாஸ்திரம், தியான ரத்னாவளி, மகாபுராணங்கள், உபபுராணங்கள் முதலிய பல நூல்களில் தெய்வத் திருவுருவங்கள் வகை வகையாக விபரிக்கப்படுகின்றன. ஒரே சக்திக்கு அநேக மூர்த்தங்கள் சொல்லப்படுவது மட்டுமல்லாமல் ஒரே மூர்த்தத்திற்கே அநேக தோற்றப் பொலிவுகளை வர்ணிக்கின்றன இந்த நூல்கள்.

துர்க்கை, லட்சுமி, காளி ஆகிய சக்தி வடிவங்களை மது, மச்சம், மாமிசம், மாது, முத்திரை என்னும் பஞ்ச மகாரங்கள்மூலம் வழிபடுவர் சிலர். இது வாமாசாரம் எனப்பட்டது. நள்ளிரவில் இடுகாட்டில் பிரேதங்களைப் பூசித்தல், பெண்களை நிறுத்திப் பூசித்தல் (பூர்ண பிட்சை), மது மாமிசங்களால் பூசித்தல் முதலிய தவறான வழக்கங்கள் புகுந்தமையால் பெரியோரால் கண்டிக்கப்பட்டன.

இங்கு சொல்லப்படும் பஞ்ச மகாரங்கள் உண்மையில் தத்துவார்த்தங்களே. சித் சந்த்ர மண்டலத்திலிருந்து ஒழுகும் அமிர்த தாரையே மது. பட்டினி, விரதங்களால் உடல் வேட்கைகளை ஒடுக்குதலே மாமிசம். மச்சமும் முத்திரையும் இடை பிங்கலை நாடிகள். மாது என்பது பெண்கள் அனைவரையும் தாயாகக் காணுதல். வாமாசாரம் கௌல மார்க்கம் எனவும் சொல்லப்படும். "கௌலமார்க்க தத்பர சேவிதா" என லலிதா சஹஸ்ரநாமம் புகழ்கிறது.

தகுந்த குருவை அடைந்து ஸ்ரீவித்யா உபதேசம் பெற்று தச மஹா வித்யா மந்திரங்களை உபாசனை செய்வதே தட்சிணாசாரம். இது தென்னாட்டிற்கே உரிய சிறப்பான வழிபாடு. உபநிடதங்களும் சாக்த தந்திரங்களும் கௌடபாதரின் சுபகோதயமும் சௌந்தர்ய லஹரியும் இவ்வழிபாட்டின் மூல நூல்கள். பாஸ்கரராயர், லட்சுமீதரர் முதலானோரின் பத்ததிகள் வழிநூல்களாகும். பாஸ்ரராயரின் லலிதா சஹஸ்ரநாம பாஷ்யம் முதலிய மூன்று நூல்கள் பிரஸ்தான த்ரயம் எனப்படும்.

அம்பிகையின் உறைவிடம் ஸ்ரீசக்ரம். இதை சிவன் சக்தி இருவரின் சரீரம் எனவும் மந்திர நூல்கள் கூறும். பூ பிரஸ்தாரம், மேரு பிரஸ்தாரம், கைலாச பிரஸ்தாரம் (அர்த்த மேரு) என மூவகையாக ஸ்ரீசக்ரம் அமைக்கப்படும். இதன் அமைப்பை சௌந்தர்யலஹரி 11ம் செய்யுள் அழகாகக் கூறும். முக்கியமான மந்திரங்கள் பஞ்சதசாட்சரீயும் ஷோடசாட்சரீயும். “தந்திர, மந்திர, யந்திர ரூபிணி” என அம்பிகையைப் போற்றுவர்.

தமிழகத்தின் பல கோவில்களில் புராதனமாகவே ஸ்ரீசக்ரங்கள் ஸ்தாபிக்கப் பட்டிருப்பதைக் காணலாம். காஞ்சி காமாட்சி (காமகோடி பீடம்), திருக்குற்றாலம் (ஸ்ரீசக்ர பீடம்), ஆவுடையார் கோவில் (இங்கு ஸ்ரீசக்ர பீடத்தின்மேல் தேவியின் பாதுகை வழிபாடு), திருவானைக்காவில் அகிலாண்டேஸ்வரியின் காதணி ஸ்ரீசக்ரம், காசியில் இரு இடங்களில் சக்ர லிங்கேஸ்வரரர் (சிவலிங்கத்தின்மேல் ஸ்ரீசக்ரம்), திருவிடைமருதூரில் மஹாமேரு, சிதம்பரம் சிதாகாசத்தில் சம்மேளன சக்கரம் முதலியனவாக இவை இன்னும் பெருகும். ஈழத்திலும் இன்று பல இடங்களில் ஸ்ரீசக்ர ப்ரதிஷ்டையைக் காணலாம்.

இவ்வாறு தாந்திரிக வழியிலான ஸ்ரீசக்ரங்களிலும் சிவாகம மரபிலான சிவாலயங்களிலும் தேவீ ஆலயங்களிலுமுள்ள அம்பிகையின் பல்வேறு விதமான அருளுருவங்களிலும் கிராமிய மரபிலமைந்த பக்திமார்க்கமான வழிபாட்டு முறைகளிலும் எம்பெருமாட்டி பரந்து விரிந்து நிலைபெற்றும் கரந்துறைந்தும் அருள்செய்யும் பாங்கு அற்புதமானதாகும்.



# லலிதா நாமாவளி கூறும் தசாவதார மகிமை




**"அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே"**

அம்பிகையும் நாராயணனும் வேறல்ல என்பது சாஸ்திர முடிபு. சிவசக்தி வடிவமும் (அர்த்தநாரீஸ்வரர்) சிவ விஷ்ணு வடிவமும் (அரியர்த்தர், சங்கர நாராயணர்) இதையே உணர்த்துகின்றன.

# நவராத்திரியும் கொலுவும்

வீடுகளில் நவராத்திரி பூஜையை ஆனந்தமான ஒரு கொண்டாட்டமாகவே கொள்வர். தூய்மையுடனும், அழகுப் பொலிவுடனும் திகழும் கொலுமண்டபத்தை அமைத்து அங்கு பூர்வாங்க பூஜைகளுடனும், சங்கல்ப பூர்வமாகவும் முறைப்படி கும்பத்தை ஸ்தாபிக்க வேண்டும். சந்திர கும்பம் தனியாக வைக்காமல் சக்தி கும்பத்தை மண்குடத்தில் வைத்துச் சுற்றிவர மண்பரப்பி அதிலே நவதானியங்களிட்டு முளைக்கவிடுவது பல இடங்களில் வழக்கமாக உள்ளது. இந்த நவதானியத்தின் செழிப்பைத் தமது குடும்ப வளத்தின் நன்மை தீமைகளை அறியும் சகுனமாகக் கொள்வார்கள்.

வீடுகளில் கொலுவைத்தல் நவராத்திரியின் விசேஷ அம்சமாகும். படிப்படியாக அமைக்கப்பட்ட விசேஷமான பீடங்களில் அல்லது மாடிப்படிகளில் விதவிதமான பொம்மை எனப்படுகின்ற பல பதுமைகளை அழகாக அடுக்கிவைத்து அலங்கரித்து இக்கொலு அமைக்கப்படுகிறது. 5, 7, 9 என ஒற்றைப்படையாகப் படிகளின் எண்ணிக்கை இருக்க வேண்டும். அருகிலேயே கும்பம் வைத்து, சுவாமிப்படங்களையும் மாட்டி அணையா விளக்குகள் ஏற்றி ஒன்பது நாட்களிலும் விதவிதமான பட்சணங்களை நைவேத்தியம் செய்து பூஜித்தல் முறை. முக்கியமாக அவல், கடலைச்சுண்டல் என்பன நவராத்திரியில் அம்பிகைக்கான விசேஷ நிவேதனங்களாம். நாவற்பழம், கற்கண்டு முதலியனவும் வெற்றிலை, பாக்கு, பழவகை, தேங்காய் என்பனவும் படைக்கப்படும்.

கொலுப்படியை அழகுற அமைத்து அதில் விதவிதமான பொம்மைகளை கலைநயத்தோடும் தத்துவப் பொருட் செறிவோடும் அடுக்கி வைப்பது நல்லதொரு செயற்பாடாகும். மன ஒருமைப்பாடு, மனச்சாந்தி என்பவற்றை வழங்க இது உதவுகிறது.

சுமங்கலிப் பெண்களை இவ்விரத நாட்களில் வீட்டுக்கு அழைத்து அவர்களைப் பராசக்தியாகப் பாவித்துக் கொலுவின் அருகில் அமரச் செய்து வணங்கி மஞ்சள், குங்குமம், பட்டு, நாணயம், தாம்பூலம் என்பவற்றை வழங்குவர். 'கொலுவுக்கு அழைத்தல்' என இதனைக் கூறுவர். சுமங்கலிப் பிரார்த்தனை, சுவாசினீ பூஜை என்று விரிவான முறையில் நடத்தப்பெறும் சாந்திகளின் சுருங்கிய வடிவமாக இதனைக் கருதலாம்.



(சில ஆலயங்களில் நிகழும் நவராத்திரி விசேஷ பூஜையின் போது சுமங்கலிகளுக்குப் பூஜை செய்யும் சுவாசினீ பூஜையும், சிறு பெண் குழந்தைகளுக்குச் செய்யும் குமாரீ பூஜையும் முக்கிய இடம் பெறுவதையும் இங்கு குறிப்பிடலாம்.)

# நவராத்திரி – சில தகவல்கள்

1ம் நாள்

மது கைடப வதத்துக்கு மூல காரணமான குமாரி. அபய வரத ஹஸ்தம் புஸ்தகம் அட்சமாலை.

2 ம் நாள்

மகிஷாசுர வதத்திற்கு முன் அவனது சேனையை வதம் செய்யப் புறப்பட்ட அன்னை ஸ்ரீ ராஜராஜேஸ:வரி. கரும்பு வில், பாசாங்குசம், மலரம்பு,.

3 ம் நாள்

மகிஷாசுர வதம் புரிந்த துர்க்கை( கல்யாணி)

4 ம் நாள்

கொடிய அரக்கர்களை அழித்து முனிவர்களும் தேவர்களும் துதிக்கும் ரோகிணி துர்க்கை.

5 ம் நாள்

சும்பன் நிசும்பனின் தூதுவன் சுக்ரீவன் தூதைக் கேட்டு இளநகை சிந்தும் மகாகாளி.

6ம் நாள்

சர்ப்பராஜனை ஆசனமாகக் கொண்ட சண்டிகாதேவி.

7 ம் நாள்

சண்ட முண்டர்களை வதம் செய்தபின் ஆனந்தமாய் ஒரு பொற்பீடத்திலே ஒருகால் மடித்து மறுகால் தரையிலுள்ள தாமரை மலரில் வைத்தபடி வீணை வாசிக்கும் தோற்றம்.

8 ம் நாள்

ரக்த பீஜனை வதம் செய்து அட்டமா சித்திகள் புடைசூழ வீற்றிருக்கும் ஸ்ரீ துர்க்கை.

9 ம் நாள்

சும்ப நிசும்பர்களை வதம் செய்தபின் சிவசக்தியாக காமேஸ்வரி அல்லது சுபத்ராதேவி எனும் பெயரில் பரமேஸ்வரனுடன் வீற்றிருப்பவள்.

## நவராத்திரி விரத பூஜை

நவராத்திரி காலத்தில் ஒவ்வொருநாள் பூஜையின்போதும் கைக்கொள்ளவேண்டிய சில விடயங்கள் இங்கு தரப்படுகின்றன.

| நாள் | ராகம் | நைவேத்தியம் | பழம் | புஷ்பம் | பத்திரம் |
|---|---|---|---|---|---|
| 1ம் நாள் | தோடி | வெண்பொங்கல், சுண்டல் | வாழை | மல்லிகை | வில்வம் |
| 2ம் நாள் | கல்யாணி | புளியோதரை, வறுவல் | மா | முல்லை | துளசி |
| 3ம் நாள் | காம்போதி | சர்க்கரைப்பொங்கல், துவையல் | பலா | சம்பங்கி | மரு |
| 4ம் நாள் | பைரவி | கறிச்சாதம், பொரியல் | கொய்யா | ஜாதிமல்லிகை | கதிர்ப்பச்சை |
| 5ம் நாள் | பந்துவராளி | தயிர்ச்சாதம், அப்பளம் | மாதுளை | பாரிஜாதம் | விபூதிப்பச்சை |
| 6ம் நாள் | நீலாம்பரி | தேங்காய்ச்சாதம், வடகம் | நாரத்தை | செம்பருத்தி | சந்தனஇலை |
| 7ம் நாள் | பிலஹரி | எலுமிச்சம்பழச்சாதம், சூரணம் | பேரீந்து | தாழம்பூ | தும்பை |
| 8ம் நாள் | புன்னாகவராளி | பாயசம், முறுக்கு | திராட்சை | ரோஜா | பன்னீர்இலை |
| 9ம் நாள் | வசந்தா | அக்கார அடிசில், திரட்டுப்பால் | நாவல் | தாமரை | மருக்கொழுந்து |

# சப்த மாதர்

சக்தி வழிபாட்டில் சப்த மாதர் வழிபாடு மிகத் தொன்மையானதும், முக்கியமானதுமாகும். சப்த கன்னியர் எனவும் இவர்கள் அழைக்கப்படுவர். இவர்கள் முக்கியமான இந்துசமயத் தெய்வங்களின் சக்திகளாவர். பிரம்மா, மகேஸ்வரன் (சிவன்), குமரன் (முருகன்), விஷ்ணு, வராஹர், இந்திரன், யமன் ஆகியோரின் சக்திகளான பிராஹ்மி, மாஹேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹி, மாஹேந்த்ரீ (இந்திராணி), சாமுண்டா (சாமுண்டி) என்போரே சப்த மாதர்கள் ஆவார்.

சப்தமாதர்களின் தோற்றம் பற்றிப் பல்வேறு புராணக்கதைகள் கூறப்பட்டபோதும் அசுரர்களின் அழிவுக்காக மேற்குறித்த தேவர்கள் தமது சக்திகளை உருவாக்கிப் போரிட அனுப்பினர் என்பது எல்லாக் கதைகளிலும் பொதுமையான ஒரு செய்தி.

சப்தமாதர்கள் பற்றிய குறிப்பு ரிக் வேதத்திலேயே உண்டு என்பர் சிலர். 13ஆம் நூற்றாண்டவரான பனாரஸ் விஸ்வநாதரால் இயற்றப்பட்ட சித்தாந்த சேகரம் என்ற ஆகமம் சார்ந்த நூலில் சப்தமாதர்களை முதன்மைப்படுத்தியே மிஸ்ரமார்க்கம் அமைகிறது எனக் குறிப்பிடுகிறார். பரதசாஸ்திரத்தில் இவர்கள் நாட்டியமாதர்களாகக் காட்டப்படுகின்றனர்.

சாமுண்டி யமனின் சக்தி என்பதைச் சிலர் ஏற்பதில்லை. சாமுண்டிக்குப்பதில் நரசிம்மரின் சக்தியாகிய நார்ரசிம்ஹி சில நூல்களில் குறிப்பிடப்படுகிறது. சில இடங்களில் பைரவியும் குறிப்பிடப்படுகிறாள்.

சப்தமாதர்களின் தோற்றப் பொலிவுகள் மானசாரம், சிற்பரத்தினம், காசிப சிற்பம், ஸ்ரீ தத்வநிதி முதலிய சிற்ப நூல்களில் விளக்கப்படுகிறது.

இவர்களுக்குத் தனிக் கோவில்கள் இல்லை. அழகிய திருவுருவங்கள் அமைக்கப்படுவதும் குறைவு. (ஈழத்தில் இரு இடங்களில் வராஹிக்குத் தனிக் கோவில்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது) பல ஆலயங்களில் தெற்குப் புறத்தே தேவார முதலிகளின் சந்நிதிக்கருகில் கல்வடிவமாக இவர்கள் வழிபடப்படுவதுண்டு. இவர்களோடு கணபதி, வீரபத்திரர், வைரவர் ஆகியோர் சேர்த்து வைக்கப்படுவதுண்டு.

அஷ்ட பைரவர்களின் சக்திகளாகவும் சப்தமாதர்கள் சொல்வதுண்டு. அவ்வாறு சொல்லும்போது பிராமி, மாஹேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹி, சாமுண்டி ஆகிய எழுவரும் முறையே அசிதாங்க பைரவர், ருரு பைரவர், சண்ட பைரவர், க்ரோதன பைரவர், உன்மத்த பைரவர், கபால பைரவர், பீஷண பைரவர் ஆகிய எழுவருடன் சேர்க்கப்பட, எட்டாவது சம்ஹார பைரவருடன் சண்டிகாதேவி சேர்க்கப்படுகிறாள்.

## நவதுர்க்கைகள் ~ ஒருவகை

சைலபுத்ரீ, கூஸ்மாண்டா, ப்ரம்மசாரிணீ, சந்திரகாந்தா, ஸ்கந்தமாதா, காளராத்ரீ, மஹாகௌரீ, சித்திதாத்ரீ.

## நவதுர்க்கைகள் ~ வேறொரு வகை

(நவராத்ரி பூஜா பத்ததியில்)

ஆக்னேயீ, சூலினீ, சண்டிகா, சாமுண்டீ, வீரதுர்க்கா, பைரவீ, பிராம்மீ, பைரவீ, மாஹேஸ்வரீ. (இங்கு இருமுறை பைரவீ வருவதன் காரணம் தெரியவில்லை.)

## நவதுர்க்கைகள் ~ இன்னொரு வகை

(பவிஷ்ய புராணத்தின்படி)

ஸர்வசித்திப்ரதாயினி - மத்தியில் பதினெட்டுக் கரங்களுடன் இருக்க சுற்றிலும் பதினாறு கரங்களுடன் நவதுர்க்கா

ருத்ரசண்டா, சண்டோக்ரா, ப்ரசண்டா, சண்டா, சண்டநாயிகா, சண்டவதீ, சண்டரூபா, அதிசண்டிகா, உக்ரசண்டா.

## நவதுர்க்கைகள் ~ மற்றொரு வகை

(சைவாகமத்தின்படி)

சைலபுத்ரீ, ப்ரம்மசாரிணீ, சண்டகண்டா, ஸ்கந்த துர்க்கா, கூஸ்மாண்டா, காத்யாயனீ, காளராத்ரீ, மஹாகௌரீ, சித்திதாயினீ.

## நவசக்திகள் ~ ஒரு வகை

(நவராத்ரி பத்ததி)

ப்ரபா, மாயா, ஜயா, சூக்ஷ்மா, விசுத்தா, நந்தினீ, சுப்ரபா, விஜயா, சர்வசக்திப்ரதா

## நவசக்திகள் ~ இன்னொரு வகை (பவிஷ்ய புராணம்)

வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரீ, காளீ, கலவிகரணீ, பலவிகரணீ , பலப்ரமதனீ , சர்வபூததமனீ, மனோன்மனீ

# மாத்ருகா அக்ஷரங்கள் எனப்படும் அக்ஷர தேவிகள்

## (எழுத்தாய் இசைந்த இன்னருள் தேவியர்)

ஸ்ரீ வித்யை எனப்படும் சக்தி உபாசனா மார்க்கத்தில் ஐம்பத்தொரு அக்ஷரங்களான 'அ' முதல் 'க்ஷ' வரையிலான எழுத்துக்கள் வடிவில் அம்பிகையே இருக்கிறாள். இவற்றிற்கு மாத்ருகா அக்ஷரங்கள் என்று பெயர். அக்ஷரங்களின் வரிவடிவிலும் அவற்றின் சப்தமாகவும்கூட அவளே இருக்கிறாள். அம்பிகை மாத்ருகா அக்ஷரங்களையே மாலையாக அணிந்திருக்கிறாள்.

அதனால்தான் அம்பிகையை ஆராதிக்கத் தொடங்கும்போது உபாசகர் தமது உடம்பின் ஒவ்வோர் உறுப்பில் ஒவ்வொரு அக்ஷரமாக ஐம்பத்தோர் அக்ஷரங்களையும் சொல்லிக்கொண்டு தொடுவதன்மூலம் (நியாசம்) அந்தந்த இடத்தில் அந்தந்த சக்திகளைப் பதித்துக்கொள்கிறார். இதுபோன்ற நியாசங்களால் தம்மை தேவீ ரூபமாக மாற்றிக்கொண்ட பின்னரே தேவியைப் பூஜைசெய்ய ஆரம்பிப்பது மரபு.

'அ'காரதேவி, 'ஆ'கார தேவி என மாத்ருகா தேவிகள் அழைக்கப்படுகின்றனர். அவர்களுக்குத் தனித்தனியே தியானங்கள், தோற்றப்பொலிவுகள் உண்டு.

### அஷ்டலக்ஷ்மீ

1. தனலக்ஷ்மி 2. வித்யாலக்ஷ்மி 3. தான்யலக்ஷ்மி 4. வீரலக்ஷ்மி 5. ஸௌபாக்ய லக்ஷ்மி 6. ஸந்தான லக்ஷ்மி 7. காருண்ய லக்ஷ்மி 8. மஹாலக்ஷ்மி

# ஸ்ரீவித்யா உபாசனை

**ஸ்ரீவித்யை** என்பது அம்பிகையை விசேடமாக ஆராதிப்பதாகும். அது அன்னைக்கும் குழந்தைக்கும் இடையிலான அன்பைப் போன்றது. தொன்றுதொட்டு வருவது. வேதங்களிலும், பாவனோபநிஷத்து, த்ரிபுரோபநிஷத்து, பஹ்வ்ருசோபநிஷத்து முதலிய உபநிடதங்களிலும் ஸ்ரீசூக்தம், துர்க்கா சூக்தம், தேவீ சூக்தம் முதலிய சூக்தங்களிலும் தேவீ உபாசனை சொல்லப்படுகிறது. சந்த்யாவந்தனத்தில் ஸ்ரீ காயத்ரீ தேவி உபாசிக்கப்படுகிறாள்.

இதிஹாசமாகிய மஹாபாரதத்தில் போருக்குமுன் ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ஜுனனிடம் துர்க்காதேவியைப் பிரார்த்திக்குமாறு கூறுகிறான். பல புராணங்களில் தேவி பூஜை விபரிக்கப்படுகிறது. பிரம்மாண்ட புராணத்தில் **லலிதா சஹஸ்ர நாமமும், லலிதா த்ரிசதியும்** இடம்பெறுகின்றன. மார்க்கண்டேய புராணத்தில் **சப்தசதீ** எப் புகழ்பெற்ற **தேவீ மஹாத்மியம்** காணப்படுகிறது. **ஆகமரஹஸ்யம், ஸம்ஹிதை, யாமளம், ஆர்ணவம், தந்த்ரம்** என்ற பெயர்களில் எத்தனையோ நூல்கள் சக்தி வழிபாட்டு முறைகளையும் தத்துவங்களையும் விளக்குகின்றன.

ஸ்ரீவித்யை என்னும் சக்தி உபாசனையில் திளைத்தவர்களாகப் பன்னிருவரைச் சாஸ்திரங்கள் கூறும். மனு, சந்திரன், குபேரன், லோபாமுத்திரை, மன்மதன், அகஸ்தியர், அக்னி, சூரியன், இந்திரன், ஸ்கந்தன், சிவன், துர்வாசர் ஆகியோரே அவர்கள்.

மந்திரமும், யந்திரமும், தந்திரமும் ஸ்ரீவித்யை எனும் முக்கோணத்தின் மூன்று கோணங்கள். அவ்வகையில் இங்கு முக்கியமான மந்திரம் பஞ்சதசாக்ஷரீ. முக்கியமான யந்திரம் ஸ்ரீசக்ரம். முக்கியமான தந்திரம் ஐக்யானுசந்தானம். ஸ்ரீசக்ர பூஜையின் மிக உயர்வான நிலையில் சாதகன் தனது உடலையே ஸ்ரீசக்கரமாக பாவனை செய்வது மரபு.

சிவன் உலகிற்குப் பல தந்த்ர சாஸ்திரங்களை அளித்தபின் அம்பிகையின் வேண்டுகோளுக்கிணங்க எல்லாத் தந்திரங்களின் சாரமாக **ஸ்ரீதந்திரத்தை** அருளியதாக ஆதி சங்கரரின் **'ஸௌந்தர்ய லஹரி'** ஸ்லோகம் கூறுகிறது. **ஸ்ரீபுர உபாசனா** அல்லது **ஸ்ரீ வித்யா** எனப்படும் இந்த வழிபாட்டில் எல்லா உபாசனைகளும் அடங்கியிருத்தல் கண்டு **தத்தாத்திரேயர்** பதினெண்ணாயிரம் சுலோகங்களுடன் **'தத்த சம்ஹிதை'**யை உருவாக்கினார். அவரிடம் அதனைக் கற்ற பரசுராமர் அதனை ஆறாயிரம் சூத்திரங்களில் இயற்றினார். பரசுராமரின் சிஷ்யர் **ஸுமேதஸ்** என்பார் அதனை மேலும் சுருக்கி அமைத்து **பரசுராம கல்பம் சூத்திரம்** எழுதினார். இதன் அடிப்படையிலேயே இன்று தென்னாட்டின் தேவீ உபாசனை நடைபெறுகிறது.

**பாஸ்கரராயர்** என்பார் **'சௌபாக்ய பாஸ்கரம்'** என்ற பெயரில் லலிதா சஹஸ்ரநாமத்திற்கு ஒரு பாஷ்யம் எழுதியுள்ளார். வாமகேஸ்வர தந்திரத்தின் ஒரு பகுதியான **'நித்யா ஷோடசிகார்ணவம்'** என்பதற்கு **'சேதுபந்தனம்'** என்ற பெயரில் ஒரு விரிவுரையும் பஞ்சதசாக்ஷரீ மந்திரத்திற்கு விளக்கமாக **'வரிவஸ்யா ரஹஸ்யம்'** என்ற இன்னொரு நூலையும் எழுதியுள்ளார். பாஸ்கரராயரின் லலிதா சஹஸரநாம பாஷ்யம், சேதுபந்தனம், வரிவஸ்யா ரஹஸ்யம் ஆகிய மூன்று நூல்களும் ஸ்ரீ வித்யைக்கு **'ப்ரஸ்தான த்ரயம்'** எனப்படுகிறது.அவரது சிஷ்யர் உமானந்தநாதர் பரசுராம கல்பசூத்திரத்தை அனுசரித்து **'நித்யோத்ஸவம்'** என்ற நூலைத் தந்திருக்கிறார். அவருக்குப்பின் வந்த ராமேஸ்வர சாஸ்திரி **'ஸௌபாக்ய ஸுதோதயம்'** என்று ஒரு உரை எழுதியுள்ளார்.

*1938*இல் ஸ்ரீசக்ரபூஜை மரபில் ஒரு மலர்ச்சி ஏற்பட்டதெனலாம். மேற்கூறிய நூல்கள் யாவற்றையும் ஆராய்ந்து **சிதானந்த நாதர்** என்ற தீக்ஷா நாமத்தையுடைய **ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர்** என்பார் **ஸ்ரீவித்யா சபர்யா பத்ததி** என்ற நூலை ஆக்கினார். இதன் எளிமைப்படுத்திய வடிவமாக **லகு ஸ்ரீசக்ர பூஜா** முதலியனவும் பின்னர் உருவாகின.

இவற்றின் அடிப்படையிலேயே ஷோடசி, பஞ்சதசாக்ஷரீ முதலிய மந்த்ரோபதேசங்களைக் குரு மூலமாகப் பெற்று ஸ்ரீபுரமாகிய ஸ்ரீநகரத்தில் அமைந்துள்ள ஸ்ரீசக்ரத்தைப் பூஜை செய்து அம்பிகையை ஆராதிக்கும் முறைகள் வளம்பெற்றுள்ளன.

பாரத தேசத்தின் சக்தி பீடங்களிலும் மற்றும் பல்வேறு ஆலயங்களிலும் ஸ்ரீசக்ர ஆராதனைகள் சிறப்பாக இடம்பெற்று வருகின்றன.

இலங்கையில் சக்தி பீடங்களுள் ஒன்றான அளகேஸ்வரம் எனப்படும் முன்னேஸ்வரம் தலத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதியில் ஆதீனகர்த்தராக இருந்த சிவஸ்ரீ நா. குமாரசுவாமிக் குருக்கள் ஸ்ரீ வித்யா உபாசகராக இருந்தார். அவரையடுத்து அவ்வாலயத்தின் தர்மகர்த்தாவாக இருந்த சிவஸ்ரீ சோமாஸ்கந்தக் குருக்கள் அவர்கள் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இங்கு ஒரு மேரு யந்திரத்தை ஸ்தாபித்து ஸ்ரீசக்ர பூஜையை ஆரம்பித்து வைத்தார்.

இதனைத் தொடர்ந்து நல்லூர் கமலாம்பிகா சமேத கைலாசநாதர் திருக்கோவிலிலும் நயினை நாகபூஷணி அம்மன் ஆலயத்திலும் ஸ்ரீசக்ர வழிபாடுகள் ஆரம்பமாயின. இன்று பல ஆலயங்களிலும் வீடுகளிலும் ஸ்ரீசக்ர வழிபாடுகள் பௌர்ணமி தினங்களிலும் நவராத்திரி காலங்களிலும் நடைபெறுகின்றன.

# அம்பிகையின் அழகு நகரம்

## ஸ்ரீநகர வர்ணனை

பிரம்மாவின் சத்யலோகம் போலவும், விஷ்ணுவின் வைகுண்டம் போலவும், சிவனின் திருக்கைலாயம் போலவும் அம்பிகையின் இருப்பிடமாக ஸ்ரீநகரம் இருக்கிறது.

பிரம்மாண்டங்களுக்கு அப்பால் அமிர்த சாகரத்தின் மத்தியில் மேருமலையின் மூன்று சிகரங்களான பிரம்மபட்டினம், விஷ்ணுபட்டினம், ருத்ரபட்டினம் ஆகியவற்றினிடையில் இரத்தினத் துவீபத்தில் இது அமைந்துள்ளது. தேவசிற்பி விஸ்வகர்மாவால் அமைக்கப்பட்ட இந்நகரத்தைச்சுற்றி நானா விருக்ஷ மஹோத்யானம், கல்பவாடிகை, சந்தானவாடிகை, ஹரிசந்தனவாடிகை, மந்தாரவாடிகை, பாரிஜாதவாடிகை, கதம்பவனவாடிகை முதலிய உத்தியானங்களும் இரும்பு, எஃகு, செம்பு, வெள்ளீயம், பித்தளை, பஞ்சலோகம், வெள்ளி, தங்கம், புஷ்பராகம், பத்மராகம், கோமேதகம், வஜ்ரம், வைடூர்யம், இந்திரநீலம், முத்து, மரகதம், பவழம், நவரத்தினம், நானாரத்னம் முதலியவற்றால் ஆக்கப்பட்ட கோட்டைகளும் உள்ளன.

அதற்குள்ளே மஹாபத்மாடவீ உள்ளது. அதன் நடுவில் சிந்தாமணி க்ருஹம். அதனுள் ஸ்ரீசக்ரம். அதன் ஒன்பதாவது ஆவரணத்தில் ஸர்வானந்தமயபீடத்தில் பஞ்ச ப்ரம்மாசனத்தில் காமேஸ்வரனது மடியில் காமேஸ்வரி ஆகிய ஸ்ரீமத் திரிபுரசுந்தரீ எழுந்தருளியிருக்கிறாள்.

# அம்பிகையின் திருவோலக்கம்

## அருட் கொலுவாகிய ஸ்ரீசக்ர வர்ணனை (சக்ர ராஜம்)

ஸ்ரீநகரத்தின் மத்தியில் அமைந்திருக்கும் யந்த்ர ஸ்வரூபமே ஸ்ரீசக்ரமாகும். இது வெளியிலிருந்து ஆரம்பித்து உள்நோக்கி ஒவ்வொரு சக்ரமாக அமையும் ஒன்பது சக்ரங்களைக் கொண்டது. நவாவரணம் என இது அழைக்கப்படும். அதாவது பூப்ரஸ்தாரம் என்னும் ஒரே தள அமைப்பில் இது ஒவ்வோர் ஆவரணமாக (வரிசை) அமையும். மேரு ப்ரஸ்தாரத்தில் இவ் ஆவரணங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு படியாக - தளமாக - உயர்ந்து அமையும். நடுவில் அமைந்திருக்கும் பிந்து என்னும் வட்ட வடிவான சர்வானந்தமய சக்ரத்தில் அம்பிகை காமேஸ்வரன் என்னும் பரசிவனது மடியில் அமர்ந்திருக்க சூழ்ந்திருக்கும் ஒவ்வோர் ஆவரணங்களிலும் உள்ள கமல தளங்கள், முக்கோணங்கள் முதலிய பகுதிகளில் ஒவ்வொரு தேவதைகளாக சக்திகள் புடைசூழ எம்பிராட்டி கொலுவிருக்கும் யந்த்ரமே ஸ்ரீசக்ரமாகும்.

### சிவசக்தி ஐக்கிய வடிவமாகிய ஸ்ரீசக்ரம் - சிவலிங்க ஸ்வரூபமே

ஸ்ரீ சக்ரத்தில் ஒன்றையொன்று வெட்டிக்கொண்டு நான்கு முக்கோணங்கள் மேல் நோக்கிய முனைகளுடன் இருக்கும். இவை சிவ சக்ரம் எனப்படும்.

இதேபோல கீழ்நோக்கிய முனைகளோடு ஐந்து முக்கோணங்கள் ஒன்றையொன்று வெட்டியவாறு காணப்படும். இசை சக்தி சக்ரம் எனப்படும்.

இவையிரண்டும் ஒன்றன்மேல் ஒன்று பொருத்தப்படுவதால் அமைது நாற்பத்து மூன்று முனைகள் கொண்ட சிவசக்தி ஐக்கிய வடிவம். இதன் நடுவில்தான் சிவசக்திகள் ஒன்றாக அமர்ந்திருக்கும் சர்வானந்தமய பீடமாகிய பிந்து எனும் ஆவரணம் அமைகிறது.

ஒருவகையில் பார்க்கும்போது நான்கு முனைகளைக்கொண்ட சிவசக்ரமானது மச்சை, சுக்கிலம், பிராணவாயு, ஜீவாத்மா ஆகியவற்றையும் ஐந்து முனைகளைக்கொண்ட சக்தி சக்ரம் தாது, தோல், இரத்தம், மாமிசம், எலும்பு ஆகிய ஐந்தையும் குறிக்கும்.

இன்னொருவகையில் தத்துவார்த்தமாக நோக்கினால், சிவசக்ரம் மாயை, சுத்தவித்தை, மகேஸ்வரர், சதாசிவர் ஆகியவற்றையும் சக்தி சக்ரம் பஞ்சபூதங்களையும் குறிக்கிறது.

நாற்பத்துமுக்கோணத்திற்கு வெளியே வட்டமும் எட்டிதழ்த் தாமரையும் அதன் வெளியே பதினாறிதழ்த் தாமரையும் அமையும். அதன் வெளியே மூன்று வட்டங்களும் கோட்டை போன்ற வாசல் அமைப்பும் உருவாகியிருக்கும்.

வெளியில் அமைந்திருக்கும் இந்த பூபுரம் என்னும் சதுரமாயமைந்த கோட்டை போன்ற அமைப்பே முதலாவது ஆவரணமாகும். இங்கிருந்து உள்நோக்கி (மேல் நோக்கி) பூஜைகள் நடைபெறும்.

## முதலாவது த்ரைலோக்ய மோகன சக்ரம்

ஸ்ரீசக்ர யந்த்ரத்தின் முதலாவது ஆவரணம் இதுவாகும். இது நாற்சதுரமாய் மூன்று பிராகாரங்களுடன் விளங்கும். பூபுரம் எனப்படும் இப்பகுதி கோட்டைபோல அமைந்து ஸ்ரீசக்ரத்தைப் பாதுகாப்பதாகும். இதனுள்ளே மேகலாத்ரயும் என்ற மூன்று வட்டங்கள் இருக்கும்.

பூபுரத்தின் வெண்மை நிறமான முதல் ரேகையில் பரதேவதையின் தேக காந்திகளையே சரீரமாகத் தரித்த **தசசித்தி தேவதைகளும்**

சிவப்பு நிறமான இரண்டாவது ரேகையில் **அஷ்டமாதர்களும்**

மஞ்சள் நிறமான மூன்றாவது ரேகையில் **தசமுத்ரா தேவதைகளும்** வசிப்பார்கள்.

இவர்கள் இருபத்தெட்டுப் பேருக்கும் **பிரகட யோகினிகள்** என்று பெயர். இவர்களின் தலைவியான **திரிபுரா சக்ரேஸ்வரீ** முன்புறத்தில் **ரத்னசிம்மாசனத்**தில் பேரானந்தத்துடன் வீற்றிருப்பாள்.

## இரண்டாவது ஸர்வாசா பரிபூரக சக்ரம்

இது வெண்ணிறமான பதினாறு தளங்கள் கொண்ட கமலமாகும். ஷோடச கலைகளின் வடிவான - சந்திர ஸ்வரூபமான இச்சக்கரத்தில் பதினாறு **ஆகர்ஷிணீ**

தேவதைகள் வசிப்பார்கள். இவர்களுக்கு **குப்த யோகினிகள்** என்று பெயர். இவர்களின் தலைவியாகிய **திரிபுரேசீ** என்னும் சக்ரேஸ்வரி **மணிபீடத்தில்** வீற்றிருப்பாள்.

**மூன்றாவது ஸர்வ ஸ்க்ஷோபண சக்ரம்**

இது செந்நிறமான எட்டிதழ்ப் பதுமம் (கமலம்). அஷ்டமூர்த்தி ஸ்வரூபமான இச்சக்கரத்தில் எட்டு **அநங்கதேவதைகள்** வசிப்பர். இவர்கள் **குப்ததர யோகினிகள்** எனப்படுவர். இவர்களுக்குத் தலைவி **திரிபுரசுந்தரீ** எனும் சக்ரேஸ்வரி **சிம்மாசனத்தில்** வீற்றிருப்பாள்.

**நான்காவது ஸர்வ ஸெளபாக்ய தாயக சக்ரம்**

இது பதினான்கு முக்கோணங்களைக் கொண்ட சக்ரமாகும். இது மஞ்சள் நிறமானது. பதினாக்கு லோகஸ்வரூபமான இம் முக்கோணங்களில் பதினான்கு **ஸம்ப்ரதாய யோகினிகள்** வசிக்கிறார்கள். இவர்களின் தலைவி **திரிபுரவாஸினி** எனும் சக்ரேஸ்வரி **மணிமயபீடத்தில்** அமர்ந்திருப்பாள்.

**ஐந்தாவது ஸர்வார்த்த ஸாதக சக்ரம்**

இது வெளியே உள்ள பத்து முக்கோணங்களாகும். அதனால் பஹிர் தசாரம் எனப்படும். இது பச்சை நிறமானது. தசாவதாராத்மகமான விஷ்ணு ஸ்வரூபமான இச்சக்கரத்தில் பத்து **குலோத்தீர்ண யோகினிகள்** வசிக்கிறார்கள். இவர்களுக்குத் தலைவியாய் **திரிபுராஸ்ரீ** எனும்சக்ரேஸ்வரி **ஸ்வர்ண சிம்மாசனத்தில்** அமர்ந்திருக்கிறாள்.

**ஆறாவது ஸர்வரக்ஷாகர சக்ரம்.**

இது அந்தர் தசாரம் என அழைக்கப்படும் உள் பத்து முக்கோணங்களால் ஆனது. பத்துக் கலைகளின் வடிவான இது வெள்ளை நிறமானது. இங்கிருப்பவர்கள் **நிகர்ப்ப யோகினிகள்** எனப்படும் பத்துப் பேராவர். **திரிபுரமாலினி** என்னும் சக்ரேஸ்வரி இவர்களின் தலைவியாய் **ரத்னசிம்மாசனத்தில்** வீற்றிருப்பாள்.

**ஏழாவது ஸர்வரோக ஹர சக்ரம்**

எட்டுக் கோணங்களையுடைய வெள்ளை நிறமான இந்த அஷ்டமூர்த்யாத்மகமான ஏழாவது சக்கரத்தில் **வாக்தேவதைகள்** என்னும் பெயரையுடைய **ரஹஸ்ய யோகினிகள்** எட்டுப் பேர் கொலுவிருப்பார்கள். இவர்களின் தலைவியாகிய **திரிபுராசித்தா** என்னும் சக்ரேஸ்வரி **மஹாபீடத்தில்** எழுந்தருளியிருப்பாள்.

**எட்டாவது ஸர்வஸித்தி ப்ரதாயக சக்ரம்**

முக்கோண வடிவிலுள்ள இந்தச் வெள்ளை நிறமான சக்கரத்திற்கும் இதற்கு முந்திய எட்டுக் கோணங்களுக்கும் இடையில் வலது, இடது பக்கங்களிலும் மேற்பக்கத்திலுமாக மூன்று நாற்கோணங்கள் அமைந்திருக்கும். இந்த

நாற்கோணங்களில் சகல அஸ்திர தேவதைகளும் பாணம், அதனுசு, பாசம், அங்குசம் முதலிய ஆயுத தேவதைகளும் வசிப்பர்.

முக்குண ரூபமாகவும் த்ரிசக்த்யாத்மகமாகவும் உள்ள இந்த முக்கோணத்தில் சாதகனுக்கு எதிராக அமைந்துள்ள கீழ்க் கோணத்தில் காமகிரி ஆலயத்தில் அக்னிமயமான **காமகிரி பீடத்தில்** ஆத்மதத்வமயமான வாக்பவபீஜ ரூபிணியும் காதிவித்யாமய ப்ரம்மாத்மக சக்தியும் ஆகிய ஸ்ருஷ்டிக்ருத்ய க்ரியாசக்தி ஸ்வரூபிணி **மஹாகாமேஸ்வரி**யானவள், ஆறுகரங்களுடன் கூடியயவளாக **மித்ரேசநாதருடன்** வீற்றிருப்பாள்.

வலது கோணத்தில் சூர்யமண்டல மயமான ஜாலந்தர பீடத்தில் வித்யாதத்வமயமான காமராஜபீஜ ரூபிணியும் ஹாதிவித்யாமய விஷ்ணு ஆத்மக சக்தியும் ஆகிய ஸ்திதி க்ருத்ய ஞானசக்தி ஸ்வரூபிணி **மஹாவஜ்ரேஸ்வரி**யானவள் ஆறு கரங்களுடனும் **ஷஷ்டீசநாதருடன்** வீற்றிருப்பாள்.

இடது கோணத்தில் சந்திரமண்டல மயமான பூர்ணகிரி பீடத்தில் சிவதத்வமயமான சக்திபீஜ ரூபிணியும் ஸாதிவித்யாமய ருத்ராத்மக சக்தியும் ஆகிய ஸம்ஹார கருத்ய க்ரியாசக்தி ஸ்வரூபிணி **மஹாபகமாலினி**யானவள் ஆறு கரங்களுடனும் **உட்டீசானந்தநாதருடன்** வீற்றிருப்பாள்.

இம்மூவரும் அதிரஹஸ்ய யோகினிகள். இவர்களின் தலைவியான திரிபுராம்பா எனும் சக்ரேஸ்வரி முக்கோணத்தின் எதிர்க் கோணத்திலுள்ள இரத்தின சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறாள்.

### ஒன்பதாவது ஸர்வானந்தமய சக்ரம்.

முக்கோணத்தின் மத்தியில் ப்ரஜ்ஞான ஸ்வரூபமான பிந்து சக்ரம் அமைந்துள்ளது. இங்கு மாயாமயமான கயிறுகள்ல் கட்டப்பட்டுள்ள கருந்திரையினுள் மல்லிகை, முல்லை முதலிய நறுமலர்களால் அலங்கரிக்கப்பட்டு இலவம்பஞ்சு மெத்தை இடப்பட்ட மூப்பத்தாறு தத்வரூபமான படிகளுடன் விளங்குவதுமான பஞ்ச ப்ரம்ம மஞ்சத்தில் **திரிலோக சுந்தரனும் காமேஸ்வரனும் ஆகிய பரப்ரம்மம்** வீற்றிருக்க, அவரது இடது தொடைமேல் திரிலோக மோகினியாகிய **மஹாதிரிபுரசுந்தரி பராபட்டாரிகை** வீற்றிருந்தருளுகின்றாள்.

*ஸ்ரீவித்யே பரிபூர்ண மேரு சிகரே*
*பிந்து த்ரிகோண ஸ்திதே*
*வாகீசே சுர வந்திதே ஸுஸமயே*
*மஞ்சே சிவாகாரகே*
*காமாக்ஷீம் கருணாலயாங்கித தனும்*
*காமேஸ்வராங்க ஸ்திதாம்*
*காஞ்ச்யாம் சின்மய காமகோடி நிலையாம்*
*ஸ்ரீ ப்ரம் வித்யாம் பஜே.*

# தசமஹா வித்யா

## (பத்து மஹாவித்யா ரூபிணிகள்)

தசமஹாவித்தை என்பது சக்தி உபாசனையில் மிக முக்கியமான பத்து மார்க்கங்கள் ஆகும். காளி, தாரா, ஸ்ரீவித்யா, புவனேஸ்வரி, பைரவீ, ஸ்ரீசின்னமஸ்தா, ஸ்ரீதூமாவதீ வித்யா, ஸ்ரீ பகளாமுகீ, ஸ்ரீராஜமாதங்கீ, ஸ்ரீகமலாத்மிகா என்னும் சக்தி மூர்த்தங்கள், அவற்றுக்கான யந்திரங்கள், அவற்றுக்குரிய மந்திரங்கள் என்பன உபாசிக்கிப்படுகின்றன.

இவ்வடிவங்கள் சாந்தம், கோரம், வியப்பு, அருவருப்பு முதலிய பல்வேறு கண இயல்புடையனவாகக் காணப்படும்.

"தித்திப்பையே தின்றால் திகட்டும். கொஞ்சம் காரம், கொஞ்சம் புளிப்பு, கொஞ்சம் கசப்பு, கொஞ்சம் உவர்ப்பு...... இப்படி இருந்தால் திகட்டாது. அப்படித்தான் ஸௌம்ய ரூபம், கோர ரூபம், விசித்ர ரூபம், அதிசய ரூபம், ஆனந்த ரூபம் இப்படிப் பத்துவிதங்களில் தசமஹா வித்யைகளை உபாசிப்பார்கள்."

- பரத்வாஜ் சுவாமிகள்.

"இனிமையிலும் மகிழ்ச்சியிலும் அன்னையைக் கண்டு மகிழ்வதுபோலவே தீமை, பயங்கரம், துக்கம், அழிவு ஆகியவற்றிலும்கூட அன்னையைக் கண்டு வழிபடத் தெரிந்துகொள்! பயங்கரமாக இருப்பதைத் தொழுது வழிபடுவதன் வாயிலாகத்தான் அதன் பயங்கரத்தை முற்றிலும் அகற்றி அமர நிலையை எய்தமுடியும்"

- சுவாமி விவேகானந்தர்.



# ஐம்பத்தொரு சக்தி பீடங்கள்

1. காஞ்சிபுரம் : இது ஸ்ரீ சக்கரபீடம். தேவியின் எலும்புகள் இங்கு வீழ்ந்ததாகக் கூறுவர்.
2. மதுரை : இது மந்த்ரிணி பீடம்.
3. திருஆனைக்கா : இது வராகி பீடம்.
4. திருக்குற்றாலம் : இது பராசக்தி பீடம்.
5. திருவாரூர் : இது கமலை பீடம் – காமகலா பீடம் என்றும் கூறுவர்.
6. கன்னியாகுமரி : இது தேவியின் பிருஷ்டபாகம் விழுந்த இடம்.
7. அம்பத்தூர் : சென்னைக் கருகிலுள்ள வைணவி ஆலயம், சக்திபீட வரிசையில் ஐம் பத்தோரூர் என்பதே அம்பத்தூர் என மருவியதாகக் கூறுவர்.
8. கோகர்ணம் : வலது காது விழுந்த இடம். பரசுராம க்ஷேத்திரம். தேவியின் திருநாமம் பத்ரகர்ணிகை.
9. ஸ்ரீ சைலம் : இடது காது விழுந்த இடம். சிறந்த சிவத்தலம். அம்பிகையின் திருநாமம் பிரமராம்பாள். மாதவி பீடம்.
10. பூரி : நாபி விழுந்த இடம். உத்கலம் எனப் படும் ஒரிசா மாநிலத்தில் உள்ளது. பைரவபீடம். தேவியின் திரு நாமம் விமலை.
11. சிருங்கேரி : மைசூர் மாநிலத்தில் உள்ளது. தேவி சாரதையாகத் திகழ்கின்றாள்.
12. கோலாப்பூர் : கண்கள் விழுந்த இடம். அன்னை மகா இலக்குமியாக விளங்குகின்றாள்.
13. அரசூர் : தனம் விழுந்த இடம். ஆபூமலைக்கு அருகில் உள்ளது. இங்கு சிலாவடிவில் இல்லாமல் அம்பிகை யந்திர வடிவில் அம்பிகா என்ற திருநாமத்துடன் விளங்குகின்றாள்.
14. ஜலந்தரா : தனம் விழுந்த இடம். தேவியின் திருநாமம் திரிபுரமாலினி.
15. துவாராவாட் : குஜராத் மாநிலத்தில் உள்ளது.
16. பிரபாசா : திருவயிறு விழுந்த இடம். இதனை சோமநாதத் தலம் என்றும் கூறுவர்.
17. பராகத் : இக்குன்றின் அமைப்பே காளிகா யந்திர உருவில் உள்ளது.
18. சிம்லா : தேவியின் திருநாமம் சியாமளா. இதுவே திரிந்து சிம்லா வாயிற்று.
19. மானசரோவர் : இது ஒரு தடாகம். தலை விழுந்த இடம். இமயத்தில் உள்ளது. அம்பிகை தாட்சாயணி. குமுதா பீடம்.
20. காஷ்மீரம் : கழுத்து விழுந்த இடம். அம்பிகையின் திருநாமம் மகாமாயை.
21. நேபாளம் : முழங்கால் விழுந்த இடம். இங்குள்ள அஷ்ட மாத்ருகைகளின் ஆலயம் புகழ்மிக்கது.
22. ஜுவாலாமுகி : நாக்கு விழுந்த இடம்.
23. சுகந்தா : மூக்கு விழுந்த இடம். இமய மலைச் சாரிவில் உள்ள தலம்.
24. வாரணாசி(காசி): காதுக் குண்டலம் விழுந்த இடம். இது மணிகர்ணிகை பீடம். தேவியின் திருநாமம் விசாலாக்ஷி.
25. நைமிசாரண்யம் : அம்பிகை இலிங்க தாரிணியாகத் திகழ்கின்றாள்.
26. குருக்ஷேத்திரம் : முழங்கை விழுந்த இடம்.
27. பிரயாகை : கைவிரல்கள் விழுந்த இடம். லலிதா பீடம்.
28. உஜ்ஜயினி : இங்கு தேவி மங்கள சண்டிகையாக விளங்குகின்றாள். மகாகவி காளி தாசனுக்கு அருள் நல்கியவள்.

29. பிருந்தாவனம் : கூந்தல் விழுந்த இடம். இராதா பீடம்.
30. அத்தினாபுரம் : இங்கு அம்பிகையின் திருநாமம் ஜெயந்தி. ஜயந்தி பீடம்.
31. கன்னியாகுப்ஜம் : கௌரி பீடம். அம்பிகையின் திருநாமம் கௌரி.
32. புஷ்கரம் : அன்னையின் திருநாமம் புருஹூதை. புருஹூதா பீடம்.
33. கேதாரம் : சன்மார்க்க தாயினி பீடம்.
34. பத்ரை : பத்ரேஸ்வரி பீடம்.
35. உருத்திர கோடி: உருத்ராணி பீடம்.
36. சாளக்ராமம் : மஹாதேவி பீடம்.
37. மலயாசலம் : தேவியின் திருநாமம் கல்யாணி. ரம்பா பீடம்.
38. தேவிகா தடம் : நந்தினி பீடம்.
39. சஹஸ்திராக்ஷம்: உத்பலாக்ஷி பீடம்.
40. வராக சைலம் : ஜயா பீடம்
41. இரண்யாக்ஷம் : மகோத்பலா பீடம்.
42. திரிகூடபர்வதம்: உருத்திர சுந்தரீ பீடம்.
43. சஃயபர்வதம் : ஏகவீரா பீடம்.
44. வைத்தியநாதம்: ஆரோக்யா பீடம்.
45. மகாகாளம் : மஹேஸ்வரி பீடம்.
46. விந்தியபர்வதம்: நிதம்பை பீடம்.
47. வேதமுகம் : காயத்ரீபீடம்.
48. ஹேமகூடம் : மன்மதா பீடம்.
49. அமர கண்டம் : சண்டிகா பீடம்.
50. கல்கத்தா : கால் விரல்கள் விழுந்த இடம். அன்னை காளிகா தேவியாக அருள் பாலிக்கின்றாள்.
51. காமரூபம் : உபஸ்தம் விழுந்த இடம், இத்தலம் அஸ்ஸாமில் உள்ளது. காமாக்யா என்பது அம்பிகையின் திருநாமம்.



## துன்பம் அகல.......

1. தோல் வியாதிகள் நீங்க - வெட்டிவேர் விசிறியால் விசிறி விபூதி அணிந்து பிட்டும் சர்க்கரைப் பானகமும் அம்பிகைக்கு நிவேதித்து ஏழைகட்கு விநியோகிக்கலாம்.

2. வெட்டுக்காயங்கள் ஆற - குறுவேர் விசிறியால் விசிறி, அம்பிகைக்குக் குங்குமார்ச்சனை செய்து சுண்டலும் நீர்மோரும் நிவேதனம் செய்து ஏழைகட்கு அளிக்கலாம்.

3. கால் நடைகளுக்கு நோய் நீங்க - பனையோலை விசிறியால் விசிறி அம்பிகைக்கு எலுமிச்சம்பழரசமும் எலுமிச்சம்பழச் சாதமும் நிவேதிக்கலாம்

4. விஷக்கடி சுகமாக - தென்னோலையால் விசிறி அம்பிகைக்குப் பாயசம் நிவேதிக்கலாம்.

5. வாத, பித்த நோய்களுக்கு - மயில்தோகை விசிறியால் விசிறி அம்பிகைக்கு வெள்ளரிக்காயும், முறுக்கும் நிவேதனம் செய்யலாம்.

6. அம்மை நோய்களின் வேகம் தணிய - சாமரம் வீசிச் சந்தனம் பூசி அம்பிகைக்குப் பலாச்சுளை நிவேதிக்கலாம்.

7. கலகங்கள் மனவேற்றுமைகள் நீங்க - கவரிமான் மயிர் சாமரத்தால் அன்னைக்கு வீசித் தயிர் அபிஷேகம் செய்து அவல் நிவேதனம் செய்யலாம்.

# அறுபத்துநான்கு சக்தி பீடங்கள்

1. மாத்ரு புரம் - ரேணுகா பீடம்
2. கொல்லாபுரம் - லக்ஷமி பீடம்
3. துளஜாபுரம் - சப்தச்ருங்க பீடம்
4. இங்குளை - ஜவாலாமுகீ பீடம்
5. ஸ்ரீ காசி - அன்னபூர்ணா பீடம்
6. ரக்த தந்த்ரிகை - விந்த்யாசல பீடம்
7. ரக்த தந்த்ரிகை - துர்கா பீடம்
8. சாகம்பரி - ப்ராமீரி பீடம்
9. மதுரை - மீனாட்க்ஷி பீடம்
10. நேபாளம் - ரகஷய காளீ பீடம்
11. ஸ்ரீ நகரம் - சாம்பு நகேச்வரி பீடம்
12. நிலபர்வதம் - நீலாம்பரி பீடம்
13. ஸ்ரீ சந்திரகலை - கௌசிகீ பீடம்
14. ஸ்ரீ காஞ்சி - காமாக்ஷி பீடம்
15. வைத்ய நாதம் - ஜ்வாலா பீடம்
16. சைனா - நீலசரஸ்வதி பீடம்
17. வேதாரண்யம் - ஏகாம்பர பீடம்
18. வேதாரண்யம் - சுந்தரீ பீடம்
19. மஹாசலம் - யோகேஸ்வர பீடம்
20. ஹிதய பர்வதம் - மாதேவி பீடம்
21. மணித்வீபம் - புவனேஸ்வரி பீடம்
22. மணித்வீபம் - திரிபுரபைரவீ பீடம்
23. அமரேசம் - சண்டிகா பீடம்
24. ப்ரபாஸம் - புஷகரேக்ஷணி பீடம்
25. புஷ்கரம் - காயத்ரீ பீடம்
26. நைமிசம் - தேவி பீடம்
27. புஷ்காராக்ஷம் - புருகாதா பீடம்
28. ஆஷாடம் - ரதி பீடம்
29. பாரபூதி - பூதி பீடம்
30. கண்ட முண்டம் - தண்டினீ பீடம்
31. நாமுலம் - நாகுலேஸ்வரி பீடம்
32. ஸ்ரீகிரி - சாராதா பீடம்
33. பஞ்ச நகம் - திரிசூல பீடம்
34. ஹரிச் சந்திரம் - சந்திரா பீடம்
35. ஆமரதகேஸ்வரம் - ஸிக்ஷ்மபீடம்
36. மஹாகாளாஸ்தி - சாங்கரீ பீடம்
37. மத்யாபீதம் - சர்வாணிபீடம்
38. கயை - மங்களா பீடம்
39. கேதாரம் - மார்க்கதாயினீ பீடம்
40. பைரவம் - பைரவீ பீடம்
41. குருக்ஷேத்ரம் - தர்ணுப்பிரியை பீடம்
42. வியினாகுலம் - ஸ்வாயம் பலி பீடம்
43. கணகளம் - உக்ரபீடம்
44. விமகேஸ்வரம் - விஸ்வேஸ பீடம்
45. ஹடாஹாசம் - மதாந்தக பீடம்
46. பீமம் - பீமபீடம்
47. வஸ்த்ரம்பதம் - பவானிபீடம்
48. அவமுக்தம் - விசாலாக்ஷிபீடம்
49. அர்த்த கோடிகம் - ருத்ராணிபீடம்
50. அவமுக்தம் - வராஹிபீடம்
51. மஹாலயம் - மஹாபாகாபீடம்
52. கோகர்ணம் - பத்ரகாளீபீடம்
53. பத்ரகர்ணீகம் - பத்ராபீடம்
54. ஸ்தானும் - ஸ்தாண்வீசாபீடம்
55. ஸ்வர்ணாக்ஷம் - உத்பலாக்ஷிபீடம்
56. கமலாலயம் - கமலாபீடம்
57. சகமண்டலம் - ப்ரசண்டபீடம்
58. மகேடம் - மகுடேஸ்வரிபீடம்
59. குரண்டலம் - த்ரிசந்திராபீடம்
60. மண்டலேசம் - சரண்டகாபீடம்
61. ஸ்தூல கேஸ்வரம் - ஸ்தூல பீடம்
62. சங்க கர்ணம் - தீவனி பீடம்
63. கரவஞ்சம் - காளி பீடம்
64. ஞானிகள் இதயம் - பரமேஸ்வரி பீடம்



# நூற்றெட்டு சக்தி பீடங்கள்

1. காசி க்ஷேத்திரத்தில் *விசாலாக்ஷி*
2. நைமிசாரண்யத்தில் *லிங்க தாரணீ*
3. பிரயாகையில் *லலிதை*
4. கந்தமாதனத்தில் *காமுகீ*
5. மானசசரஸில் *குமுதா*
6. அதன் தென்திசையில் *விசுவகாமா பகவதி*
7. அதன் வடதிசையில் *விஸ்வகாமப்பூரணி*
8. கோமந்தகத்தில் *கோமதி*
9. மந்தரத்தில் *காமசாரிணீ*
10. சயித்திராதத்தில் *மதோத்கடை*
11. அஸ்தினாபுரத்தில் *ஜயந்தி*
12. கன்யாகுப்ஜத்தில் *கௌரி*
13. மலையாசலத்தில் *ரம்பை*
14. ஏகாம்பர பீடத்தில் *கீர்த்திமதி*
15. விஸ்வத்தில் *விஸ்வேஸ்வரி*
16. புஷ்டகரத்தில் *புருஹூதை*
17. கேதார பீடத்தில் *சன்மார்க்கதாயினி*
18. இமயமலையின் பின்புறத்தில் *மந்தா தேவி*
19. கோகர்ணத்தில் *பத்திரகர்ணிகா தேவி*
20. பவானியில் *ஸ்தானேஸ்வரி*
21. வில்வ பத்திரிகையில் *பில்வகை*
22. ஸ்ரீசைலத்தில் *மாதவி*
23. பத்திரையில் *பத்திரேஸ்வரீ*
24. வராக மலையில் *ஜயை*
25. கமலாலயத்தில் *கமலை*
26. ருத்ரகோடியில் *ருத்திராணி*
27. காலஞ்சரத்தில் *காளி*
28. சாளக்கிராமத்தில் *மகாதேவி*
29. சிவலிங்கத்தில் *ஜலப்பிரபை*
30. மகாலிங்கத்தில் *கபிலை*
31. மாகோட்டத்தில் *மகுடேஸ்வரி*
32. மாயாபுரியில் *குமாரி*
33. சந்தானத்தில் *லலிதாம்பிகை*
34. கயையில் *மங்களாம்பிகை*
35. புருஷோத்தமத்தில் *விமலை*
36. சகஸ்ராக்ஷத்தில் *உத்பலாட்சி*
37. இரண்யாக்ஷத்தில் *மகோத்பலை*
38. விபசாவில் *அமோகாக்ஷி*
39. புண்டரவர்த்தனத்தில் *பாடலீ*
40. சுபாரு சுவத்தில் *நாராயணி*
41. திரிகூட பர்வதத்தில் *ருத்திர சுந்தரி*
42. விபுலத்தில் *விபுலாதேவி*
43. மலையாசலத்தில் *கல்யாணி*
44. சஹ்ய பர்வதத்தில் *ஏகவீனா*
45. அரிச்சந்திரத்தில் *சந்திரிகாதேவி*
46. ராமதீர்த்தத்தில் *ரமணா*
47. யமுனா தீர்த்தத்தில் *மிருகாவதி*
48. கோடிக்கரையில் *கோடவீ*
49. மாதவவனத்தில் *சுகந்தாதேவி*
50. கோதாவரியில் *திரிசந்தி*
51. கங்காதுவாரத்தில் *ரதப்பிரியை*
52. சிவகுண்டத்தில் *சுபானந்தை*
53. தேவிகாதடத்தில் *நந்தினி*
54. துவாரகையில் *ருக்மிணி*
55. பிருந்தாவனத்தில் *ராதை*
56. மதுரையில் *தேவகி*
57. பாதாளத்தில் *பரமேஸ்வரி*
58. சித்திரகூடத்தில் *சீதாதேவி*
59. விந்தியத்தில் *விந்தியாவாசினி*
60. கரவீரத்தில் *மகாலக்ஷ்மி*
61. வைத்தியநாதத்தில் *ஆரோக்யை*
62. விநாயகத்தலத்தில் *உமாதேவி*
63. மகாகளத்தில் *மகேஸ்வரி*
64. உஷ்ண தீர்த்தத்தில் *அபயாம்பிகை*
65. விந்தியமலையில் *நிதம்பை*
66. மாண்டவியத்தில் *மாண்டவி*
67. மகேஸ்வரபுரத்தில் *ஸ்வாஹாதேவி*
68. சகலண்டலத்தில் *பிரசண்டை*
69. அமரகண்டத்தில் *சண்டிகாதேவி*
70. சோமேஸ்வரத்தில் *வராரோகை*
71. பிரபாசத்தில் *புஷ்கராவதி*
72. மகாலயத்தில் *மகாபாகை*

78. சோணசங்கமத்தில் *சுபத்திரா*
79. சித்தவதனத்தில் *லக்ஷ்மி*
80. பரதாசிரமத்தில் *அனங்கை*
81. ஜாலந்தரத்தில் *விஸ்வமுகி*
82. கிஷ்கிந்தமலையில் *தாராதேவி*
83. தேவதாரு வனத்தில் *புஷ்டிர்மேதை*
84. காஷ்மீரத்தில் *பீமாதேவி*
85. ஹிமாத்திரியில் *துஷ்டிவிஸ்வேஸ்வரி*
86. கபால மோசனத்தில் *சுத்தி*
87. காயாரோகணத்தில் *மாதாதேவி*
88. சங்கோத்தரத்தில் *தாரா*
89. பிண்டாரக ஆலயத்தில் *திருதி*
90. சந்திரபாகா நதியில் *கலாதேவி*
91. அச்சோதயத்தில் *சிவதாரணி*
92. வேணியாற்றில் *அமுதாதேவி*
93. பதரியில் *உரசி*
94. உத்தரகிரியில் *ஔஷதை*
95. குசத்வீபத்தில் *குசோதகாதேவி*
96. ஏமகூடத்தில் *மன்மதை*
97. குமுதத்தில் *சத்தியத்வாதினி*
98. அஸ்வத்தில் *வந்தினி*
99. குபோலயத்தில் *நிதிதேவி*
100. தேவமுகத்தில் *காயத்திரி தேவி*
101. பிருமாமுகத்தில் *சரஸ்வதி*
102. சிவ சந்நிதியில் *பார்வதி தேவி*
103. தேவலோகத்தில் *இந்திராணி*
104. சூரிய பிம்பத்தில் *பிரபாதேவி*
105. சப்த மாதர்களில் *வைஷ்ணவி*
106. பதிவிரதைகளில் *அருந்ததி*
107. அழகான மங்கையரில் *திலோத்தமை*
108. சகலதேகிகளின் சித்தத்தில் *சக்தி பிரம்மகலை.*

சிவபெருமானை மதிக்காமல் தக்கன் செய்த யாகத்திற்குச் சென்ற பராசக்தியாகிய தாக்ஷாயணி, அங்கு தானும் தனது நாயகனும் அவமதிக்கப் பட்டதையறிந்து மனம் பொறுக்காமல் அந்த யாககுண்டத்திலேயே விழுந்து உயிர் துறந்தாள். இதனைக் கேள்வியுற்ற சிவபெருமான் அடங்காச் சினத்துடன் அங்கு வந்து கோபக் கனலாக மாறித் தனது தேவியின் இறந்த உடலை எடுத்துச் சிரசின் மேலே வைத்துச் சுழன்று சுழன்று ஆவேசமாக ஆடினான். உலகமே அஞ்சியது. அழிவு நெருங்கி விட்டதோ என்று பிரம்மா முதல் அனைவரும் நடு நடுங்கினர். கடல் பொங்கியது. கோள்கள் நிலைதடுமாறிச் சுழன்றன. பூமி நடுங்கியது. இதனைப் பார்த்த காத்தற் கடவுளாகிய திருமால், தனது சக்கராயுதத்தை ஏவிப் பராசக்தியின் உடலைத் துண்டுகளாக்கித் தெறித்து வீழச் செய்தார். பாரத நாட்டின் பல்வேறு பாகங்களில் உடற்பாகங்கள் விழுந்தன. அவையே சக்தி பீடங்களாகத் திகழ்கின்றன.

சக்தி பீடங்கள் ஐம்பத்தொன்று என்றும், அறுபத்து நான்கு என்றும், நூற்றெட்டு என்றும் கூறுவர். 'பீடநிர்மயா' என்ற நூல் ஐம்பத்தொரு சக்தி பீடங்களைச் சிறப்பாகக் குறிப்பிடுகின்றது.

தட்சன் மகளாய் அன்னை அவதரித்து, சதிதேவி எனப் பெயர் பெற்று, தந்தை சிவனை தூஷித்ததால் அக்னியில் பாய அக்கினிக்குள் சித்கலாரூபமாக இருந்த சதி தேவியின் திருமேனியைத் தோளில் தூக்கிக் கொண்டு உலகமெலாம் திரிந்த சிவன், விஷ்ணு வேண்ட சித்கலாரூபமான அன்னையின் கலைகளை அகிலமெங்கும் தனித் தனிப் பீடமாக இருக்கச் செய்தார். அங்ஙனம் அமைந்த நூற்றெட்டுப் பீடங்களிலும் தானும் அமர்ந்து அருள் செய்தார். இந் நூற்றெட்டுச் சக்தி பீடங்களின் பெயர்களையும், தேவியின் பெயர்களையும் கேட்கவோ நினைக்கவோ செய்பவர் பாவங்களில் இருந்து விடுபட்டுத் தேவியின் திருவடி அடைவர் எனத் தேவிபாகவதத்தில் வியாசர் கூறியுள்ளார்.

சிவபெருமான் தேவியின் சிற்கலாரூபத்தைத் தாங்கி நிற்கையில் உலக ஜீவனத்தின் பொருட்டு அதனை வேண்டி திருமாலே சக்தி பீடங்களாக ஸ்தாபித்தார் என்கிறது அபிதான சிந்தாமணி.

# வைஷ்ணவம்

## விஷ்ணு ஆலய தரிசனம்

விஷ்ணு ஆலயங்களை வழிபடச் செல்லும்போது நாம் தெரிந்து கொள்ளவேண்டியவை சில உண்டு. தொலைவில் செல்லும்போதே "கோபுர தரிசனம் கோடி புண்ணியம்" என்பதற்கிணங்கக் கோபுரத்தை வணங்கிக்கொண்டு சென்று கை, கால்களைச் சுத்திசெய்து செல்லவேண்டும்.

கோயிலுக்கு வெளியே சிறியதிருவடி எனப்படும் ஆஞ்சனேயர் சந்நிதி இருக்கும். அங்கு சென்று அவரை முதலில் சேவிக்க (வணங்க) வேண்டும். கொடிமரத்துக்கு அருகில் வீழ்ந்து வணங்கி ஆணவ முனைப்பை அகற்றி, இறைவனைச் சரணடையத் தயாராக வேண்டும். பின்னர் துவார பாலகர்களைத் தரிசித்து வணங்கி அனுமதி பெற்றுக் கொள்ளுதல் வேண்டும்.

அதன்பின் ஆழ்வார்கள் சந்நிதி, ஆசார்யர் சந்நிதிகள் இருக்குமானால் அவர்களைச் சேவித்துவிட்டு (குருவருள் இருந்தால்தான் திருவருள் பெறலாம்) அதன்பின் தாயார் சந்நிதிக்குச் செல்லவேண்டும்.

பெரிய பிராட்டியார் எனப்படும் மஹாலக்ஷ்மி சந்நிதியில் துவார பாலகிகளை வணங்கி அனுமதி பெற்று உள்ளே சென்று அர்ச்சனை வழிபாடுகளைச் செய்து பிரதான சந்நிதிக்குச் செல்லவேண்டும்.

கருடாழ்வாரை சேவித்து பகவானைத் தரிசிக்க அனுமதி தருமாறு வேண்டிக்கொண்டு உள்ளே சென்று பகவானை சேவிக்க வேண்டும். அர்ச்சனை வழிபாடுகள் செய்து துளசி தீர்த்தம் பெற்று சடாரி எனப்படும் சடகோபம் தலையில் தரிப்பித்து சந்நிதிகளைப் பிரதட்சணம் செய்து வணங்கவேண்டும். விஷ்ணு சந்நிதியை வலம்வந்து வணங்கும்போது நான்குதரம் வலம்வரவேண்டும் என்பதே முறை. இதனைக் கவனத்தில் கொள்ளவேண்டும்.

வழிபாடுகள் முடிந்ததும் ஒருபுறத்தில் அமைதியாக உட்கார்ந்து பிரார்த்தனை செய்தபின் எழுந்து மறுபடியும் துவாரபாலகர்களை வணங்கி அனுமதி பெற்றுக்கொண்டு வீடுசெல்லவேண்டும்.

### சதுர்மூர்த்திகள்

திருமாலின் வியூகத்தில் முக்கியமான நான்கு வடிவங்கள் சதுர்மூர்த்திகள் எனக் குறிப்பிடப்படுகின்றன.

சங்கர்ஷணன், பிரத்யும்நன், அநிருத்தன், வாசுதேவன் என்பனவே அவை.

நான்கும் ஒன்றிணைந்த வடிவம் தோன்றும்போது,

கிழக்குநோக்கிய தெய்வீக முகமாக வாசுதேவரும்

தெற்குநோக்கிய சிங்க முகமாக சங்கர்ஷணனும்

மேற்குநோக்கிய ருத்ர முகமாக அநிருத்தனும்

வடக்குநோக்கிய வராக முகமாக பிரத்யும்நனும் அமைவர்.

இந்நான்கு வியூகங் களிலிருந்தும் மூன்று மூன்றாக 12 சிறப்பான மூர்த்தங்களும் அவற்றிலிருந்து பின்னர் உருவாகின்றவையுமாக 24 மூர்த்தங்கள் விஷ்ணுவின் விசேட மூர்த்தங்களாகும்.

# திருமாலின் சயனக் கோலங்கள் பத்துவகைப்படும்.

1. ஜல சயனம்
2. தல சயனம்
3. புஜங்க சயனம்(சேஷ சயனம்)
4. உத்யோக சயனம்
5. வீர சயனம்
6. போக சயனம்
7. தர்ப்ப சயனம்
8. பத்ர சயனம்
9. மாணிக்க சயனம்
10. உத்தான சயனம்

### சுதர்சன சக்கரம்

திருமாலின் திருக்கரத்தி லிருக்கும் சுதர்சனமென்னும் சக்கரம் முருகப்பெருமானின் வேலாயுதம்போலத் தனியான வழிபாட்டுக்குரியது. வல்லிபுரக் கோயிலின் கருவறையிலிருந்து அருள்பாலிப்பது சுதர்சன சக்கரமேயாகும். இது சக்கரத் தாழ்வார் என அழைக்கப் படுகிறது.

திருமாலின் ஆயுதங்களான சங்கு, சக்கரம் இரண்டிற்குமே தனித்தனியாக தியானம், காயத்திரி முதலியன அமைந்திருப்பதும் குறிப்பிடத் தக்கது.

### பஞ்சாயுத மகிமை

திருமாலின் ஆயுதங்களான **சங்கு, சக்கரம், வில், வாள், கதை** என்பன பஞ்சாயுதங்கள் எனச் சிறப்பிக்கப்படுகின்றன. இவை காவலுக்குரியன. அதனால் குழந்தைகளின் கழுத்திலே பஞ்சாயுதங்கள் பொறிக்கப்பட்ட பதக்கத்தினை அணிவிப்பது இந்துக்களின் மரபு.

### பிருந்தா தேவி
**(துளசி, துளவம், வனமாலை, திருத்துளாய்)**

துளசி வைஷ்ணவத்தில் மிகச் சிறப்பாகப் போற்றப் படுவது. பிருந்தாதேவியாகப் பிறந்திருந்தபோது விஷ்ணுவால் ஆட்கொள்ளப்பட்ட துளசி அவர் மார்பிலே என்றும் மாலையாக விளங்குகிறாள். வீடுகளில் துளசிமாடம் அமைத்துத் தினமும் விளக்கேற்றி வழிபடுதல் இல்லத்தரசிகளின் வழக்கம். விஷ்ணுவுக்குப் பிரீதியான துளசிச்செடியின் துளிர்கள், கதிர்கள் மூலம் அவரை அர்ச்சிக்கலாம். மாலை கட்டிச் சாத்தலாம்.ஆனால் துளசியை எல்லா நாட்களிலும் கொய்யக் கூடாது. ஞாயிறு, செவ்வாய், வெள்ளிக் கிழமை களிலும் அட்டமி, துவாதசி, சதுர்த்தசி, பௌர்ணமி, ஆகிய திதிகளிலும் திருவோண நட்சத்திரத்திலும் மாதப்பிறப்பு
நாளிலும் இரவிலும் துளசி எடுக்கலாகாது.

அவசியமேற்படின் இரண்டு கீழிலைகளுடன் கதிரினை ஆய்ந்தெடுக்கலாம். மேலும், பத்திரத் தேவைகட்குத் துளசி மாடத்திலிருந்து பறிக்கக் கூடாது.

# ஒரு வருடத்தில் வரும்
# இருபத்தைந்து ஏகாதசிகளின் பெயர்கள்

1. உற்பத்தி ஏகாதசி - மார்கழித் தேய்பிறை
2. மோக்ஷ ஏகாதசி - மார்கழி வளர்பிறை

(பெரிய ஏகாதசி, சுவர்க்கவாசல் ஏகாதசி, வைகுண்ட ஏகாதசி)

3. ஸபலா - தைமாதத் தேய்பிறை
4. புத்ரதா - தைமாத வளர்பிறை
5. ஷட்திலா - மாசித் தேய்பிறை
6. ஜயா - மாசி வளர்பிறை
7. விஜய - பங்குனித் துய்பிறை
8. ஆமலகீ - பங்குனி வளர்பிறை
9. பாப மோசனிகா - சித்திரைத் தேய்பிறை
10. காமதா - சித்திரை வளர்பிறை
11. வரூதினீ - வைகாசித் தேய்பிறை
12. மோகினி - வைகாசி வளர்பிறை
13. அபரா - ஆனித்தேய்பிறை
14. நிர்ஜலா - ஆனி வளர்பிறை
15. யோகிநீ - ஆடித்தேய்பிறை
16. சயிநீ - ஆடி வளர்பிறை
17. காமிகா - ஆவணித் தேய்பிறை
18. புத்ரதா - ஆவணி வளர்பிறை
19. அஜா - புரட்டாதித் தேய்பிறை
20. பத்மநாபா - புரட்டாதி வளர்பிறை
21. இந்திரா - ஐப்பசித் தேய்பிறை
22. பாபாங்குசா - ஐப்பசி வளர்பிறை
23. ரமா - கார்த்திகைத் தேய்பிறை
24. பிரபோதினி - கார்த்திகை வளர்பிறை
25. கமலா - மேலதிக ஏகாதசி

மேலதிக ஏகாதசி வரும் மாதம் **புருஷோத்தம மாதம்** எனப்படும்.

**வைஷ்ணவத் தமிழ் வேதம்** நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்.
(முக்கியமாக நம்மாழ்வாரின் திருவாய்மொழி)

**வைணவத் தமிழ் உபநிடதம்** - ஆண்டாள் திருமொழி.

**இறைவனுக்குரிய ஆறுகுணங்கள் (ஷட்குணம்)-**
தேஜஸ், வீர்யம், ஞானம், பலம், ஐஸ்வர்யம், சக்தி.

**விஷ்ணுவிடம் சிறப்பாகக் கூறப்படும் ஓர் அருங்குணம்-**
தோஷ போக்யத்வம் (வாத்ஸல்யம்)
அடியார்களின் குற்றங்களையும் பொறுத்தருளும் கருணை.

**வைஷ்ணவ சமயம் கூறும் நான்கு படிநிலை:**

| | | |
|---|---|---|
| தாஸ்யபாவம் | (சரியைபோன்றது) - | அடிமைநிலை. |
| வாத்ஸல்யபாவம் | (கிரியை போன்றது) | தந்தைமகன் போன்ற நிலை. |
| சக்யபாவம் | (யோகம் போன்றது) | தோழமை நிலை |
| மதுரபாவம் | (ஞானம் போன்றது) | நாயகீ பாவம் |

**பக்தியின் ஒன்பது படிநிலைகள்**

இறைபுகழ் கேட்டல், இறைபுகழ் பாடுதல், இறைவனை நினைத்தல், பாதசேவை புரிதல், அர்ச்சித்தல், வணங்குதல், அடிமைநிலையில் பக்திசெய்தல், தோழமை நிலையில் பக்தி செய்தல், பூரண சரணாகதி அடைதல்.

**கைங்கர்யம்**

*இறைவனுக்குமட்டுமன்றி இறையடியார்களுக்கும் பாதசேவை புரிதலே கைங்கர்யம் எனச் சிறப்பிக்கப்படுகிறது. வைஷ்ணவத்தின் அடிநாதமே இதுதான் என்றும் கூறலாம். சைவ சமயம் கூறும் மாகேஸ்வர பூசையுடன் இதனை ஓரளவு ஒப்பிட்டு நோக்கலாம். "மக்கள் சேவையே மகேசன் சேவை" என்று சொல்லப்படுவதற்கிணங்க சமூகசவை, அடியார் தொண்டு, அன்னதானம் என்பன இதிலடங்கும். கைங்கர்யத்தின் நோக்கம் கைங்கர்யமே என்ற உணர்வுடன் பிரதிபலன் எதிர்பாராத தியாக நோக்குடன் "என்கடன் பணி செய்து கிடப்பதே" எனப் பணிசெய்து வாழ்தலே கைங்கர்யமாகும்.*





# நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்

ஆழ்வார்கள் பன்னிருவர் அருளிய பாசுரங்களை நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் எனக் கூறுவர். நாலாயிரம் என்ற கணக்கு நிறைவதற்காக இறுதியில் இராமாநுஜ நூற்றந்தாதியும் சேர்த்துக்கொள்ளப்படுகிறது. எனவே இத்தொகுப்பில் பதின்மூன்று பேர் இயற்றிய 25 நூல்கள் அடங்குகின்றன.

பெயருக்கமைய நான்கு ஆயிரங்களாக இது பிரிக்கப்பட்டுள்ளது. முதலாயிரம், திருமொழி, திருவாய்மொழி, இயற்பா என்பது அப்பிரிவாகும்.

| | | |
|---|---|---|
| பெரியாழ்வார் | திருப்பல்லாண்டு | 12 |
| | திருமொழி | 461 |
| ஆண்டாள் | திருப்பாவை | 30 |
| | நாச்சியார் திருமொழி | 140 |
| குலசேகராழ்வார் | பெருமாள் திருமொழி | 105 |
| திருமழிசையாழ்வார் | திருச்சந்தவிருத்தம் | 120 |
| | நான்முகன் திருவந்தாதி | 96 |
| தொண்டரடிப்பொடியாழ்வார் | திருமாலை | 45 |
| | திருப்பள்ளியெழுச்சி | 10 |
| திருப்பாணாழ்வார் | அமலனாதிப்பிரான் | 10 |
| மதுரகவியாழ்வார் | கண்ணிநுண் சிறுத்தாம்பு | 11 |
| திருமங்கையாழ்வார் | பெரிய திருமொழி | |
| | திருக்குறுந் தாண்டகம் | |
| | திருநெடுந் தாண்டகம் | |
| | திருவெழுகூற்றிருக்கை | 1253 |
| | சிறிய திருமடல் | |
| | பெரிய திருமடல் | |
| பொய்கையாழ்வார் | முதல் திருவந்தாதி | 100 |
| பூதத்தாழ்வார் | இரண்டாந் திருவந்தாதி | 100 |
| பேயாழ்வார் | மூன்றாந் திருவந்தாதி | 100 |
| நம்மாழ்வார் | திருவிருத்தம் | 100 |
| | திருவாசிரியம் | 7 |
| | பெரிய திருவந்தாதி | 87 |
| | திருவாய்மொழி | 1102 |





**தத்துவத்திரயம் (முப்பொருள்)** - ஈஸ்வரன், சித்து, அசித்து

**ரஹஸ்யத்ரயம்** - அஷ்டாக்ஷரம், துவயமந்திரம், சரமசுலோகம்.

*அஷ்டாக்ஷரம்* - ஓம் நமோ நாராயணாய.

*துவயமந்திரம்* - 24 எழுத்து மந்திரம்.

நாராயணாய சரணௌ சரணம் ப்ரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம

*சரமசுலோகம்* - 32 எழுத்து மந்திரம்.

ஸர்வ தர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச.

**பஞ்ச சம்ஸ்காரம்-**

1. *தாபம்* விஷ்ணுவின் சின்னங்களாகிய சங்கு, சக்கரம் என்பவற்றை இரு தோள்களிலும் பொறித்தல்.

2. *புண்டரம்* நெற்றியிலும், மார்பிலும் திருமண், ஸ்ரீசூர்ணம் ஆகியவற்றால் திருநாமம் இட்டுக் கொள்ளுதல்.

3. *தாசநாமம்* விஷ்ணுவின் பெயர்களில ஒன்றுடன் தாசன் என்பதைச் சேர்த்துக் கடவுளின் அடியவன் என்ற கருத்தில் பெயர் தரித்தல்.

4. *மந்திரம்* தீட்சையின்போது குருவினால் உபதேசிக்கப்படும் அஷ்டாக்ஷர மந்திரத்தை இடைவிடாது ஓதுதல்.

5. *யோகம்* இடைவிடாமல் இறைசிந்தனையில் லயித்தல்.

**அர்த்தபஞ்சகஞானம்-**

1. *ஸ்வ ஸ்வரூபம்* - அடைபவன் (ஜீவன்)
   - தன்னை அறிதல்

2. *பர ஸ்வரூபம்* - அடையப்படுபவன் (விஷ்ணு)
   - பரம்பொருளை அறிதல்

3. *புருஷார்த்த ஸ்வரூபம்* -பெறும் பயன் (முடிவிலா இன்பம்)
   - பயனை அறிதல்

4. *உபாய ஸ்வரூபம்* - வழிவகை (பக்தி)
   -முக்திக்கு வழியை அறிதல்

5. *விரோதி ஸ்வரூபம்* - இடையூறுகள் (சாஸ்திரவிதிக்கு அமையாத செயல்கள்) - செய்யத்தகாதவற்றை அறிதல்

**விஷ்ணுவின் ஐவகை நிலைகள்:**

1. ***பரம்:*** யாவும் கடந்த பரம்பொருள் நிலை. நாராயணனாக நித்யவிபூதிகள் எனப்படும் முக்தர்கள் மட்டும் உணரும் உயர்நிலை.

2. ***வியூகம்***- பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் நிலை.

* 3. ***விபவம்***- அவதாரத் திருமேனிகள்- மச்சம், கூர்மம் முதலியன.

4. ***அந்தர்யாமித்வம்*** - எல்லா உயிர்களிலும் மறைந்து நின்று அருளும் நிலை.

5. ***அர்ச்சை*** - (உருவத் திருமேனி) நாம் பூஜைகள் மேற்கொள்ளும் திருவுருவங்களில் எழுந்தருளுதல்.

இவற்றில் **பரம்** என்பது பிரபஞ்சத்தில் இருக்கும் நீர் போன்று யாருக்கும் எட்டாத நிலை. **வியூகம்** என்பது பாற்கடல் போன்று உயர்நிலை ஆன்மாக்களுக்குரியது. **விபவம்** என்பது வெள்ளப் பெருக்குப் போன்றது. அப்பெருக்கு நடைபெறும் இடத்தில் அந்த நேரம் இருப்பவர்க்கு மட்டும் கிடைக்கும். **அந்தர்யாமிதவம்** நிலக்கீழ் நீர் போன்றது. முயற்சினால் அடையத்தக்கது. **அர்ச்சை** குளம் போன்றது. யாருக்கும் எப்போதும் இலகுவாகக் கிடைக்கக் கூடியது.

*** *விபவத்தின்மூன்று வகைகள்:***

***1.ஆவேசம்*** -ஒருகாரியம் நிகழ்வதற்காகத் திடீரெனத் தோன்றி அச்செயல் முடிந்ததும் மறைந்து வி:டுதல். (மச்சம், கூர்மம், நரசிம்மம் முதலியன)

***2. அவதாரம்*** - தாமே முழுமையாக அவதரித்து மனித நிலையில் வாழுதல். (ராமர், கிருஷ்ணர் முதலியன)

***3. அம்சம்*** - தமது அம்சங்களான சங்கு, சக்கரம், திருத்துளாய் (துளசி) முதலியவற்றைப் பிறப்பெடுக்கச் செய்தல். (ஆழ்வாராதியர்)

**திருமகளின் மூன்று சிறப்பியல்புகள்:**

*1. புருஷகாரம்* - ஆன்மாக்களுக்குப் பரிந்துரை செய்தல்.

*2. சேஷித்வம்* - விஷ்ணுவைத் தவிர ஏனைய யாவும் தமக்கே உடைமையாகக் கொண்டிருத்தல்.
(தாம் விஷ்ணுவுக்கு உடைமை)

*3. உபேயத்வம்* - அடையத்தக்க நிலை.

## நவக்கிரகங்கள் எவை?

நவக்கிரகம் என்பது ஒன்பது கோள்கள் எனப் பொருள் விளக்கம் பெறுகின்றன. கோள்கள் அல்லது கிரகங்கள் என்பன எவை என்பது பற்றியும் அவற்றின் எண்ணிக்கை பற்றியும் பலரிடம் தெளிவின்மை காணப்படுகிறது.

அண்மையில் புளுட்டோ கிரகம் வலுக்குன்றியமையால் அதனைக் கிரகங்களின் பட்டியலிலிருந்து தாம் விலக்கிவிடுவதாக விஞ்ஞானிகளால் அறிவிக்கப்பட்டபோது நமது ஆன்மீகவாதிகள் சிலரிடையே சலசலப்புத் தோன்றியது. இனிமேல் நாம் நவக்கிரகம் எனக் கூறலாமா எனக் கேட்டவர் பலர்.

இதற்குக் காரணம், சில ஆலயங்களில் ராகு, கேதுக்களின் பெயர்களுக்குப்பதில் யுரேனஸ், நெப்டியூன் முதலிய பெயர்களை எழுதி வைத்திருந்தமையே. ராகு, கேதுக்கள் வானியல் கூறும் கிரகங்களில் இல்லையே என்று அறியாமல் கேட்கின்ற சிலருக்கு அரைகுறை அறிஞர்கள் கண்ட தீர்வுதான் இந்தப் பெயர் மாற்றம். அதனால் வந்த சிக்கல்தான் ஆஸ்திகர்களுக்கு ஏற்பட்ட குழப்பம்.

வான சாஸ்திரம், ஜோதிட சாஸ்திரம் இரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பாடில்லாத இருவேறு அறிவியல் துறைகள்தான். பல விடயங்களில் இரண்டும் ஒரேவிதமான தகவல்களைத் தருகின்றன. இரண்டும் இந்துக்களால் கண்டறியப்பட்டு வேத காலத்திலிருந்தே பயன்படுத்தப்பட்டு வருவனவே. வராஹ மிஹிரரையும் ஆரிபட்டரையும் இந்த உலகிற்குத் தந்தது பாரத நாடுதான். இன்றைய விஞ்ஞான ஆய்வுகளாலும் இவையிரண்டும் மெய்யான அறிவியல் துறைகளென ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன.

ஆனால் கிரகங்கள் எத்தனை? அவை எவை? என்ற முக்கிய விடயத்தில் இவற்றிடையே காணப்படும் வேறுபாட்டை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

## விஞ்ஞானிகளின் கருத்து

பொதுவாக, சுய ஒளியுடைய அக்கினிக் குழம்பாகச் சூரியன் போன்று ஒளிர்கின்ற பொருட்களெல்லாம் நட்சத்திரங்கள் அல்லது உடுக்கள் (Stars) எனவும் அவ்வாறில்லாமல் ஒளிவீசும் தன்மையின்றி வெறும் கற்பாறைகளாகவோ வாயுக்கூட்டமாகவோ சூரியனின் ஒளியைப் பிரதிபலிப்பனவாக உள்ளவை கோள்கள் அல்லது கிரகங்கள் எனவும் (Planets) சொல்லப்படுவது மரபு.

கிரகங்கள் யாவும் சூரியனைச் சுற்றிவருகின்றன. கிரகங்களைச் சுற்றிவரும் சிறிய பொருட்கள் சந்திரன்கள் அல்லது உபகிரகங்கள் எனச் சொல்லப்படுகின்றன.

இவ்வகையில் பார்க்கும்போது சூரியன் ஒரு நட்சத்திரம். சந்திரன் ஒரு உப கிரகம். பூமியும் ஒரு கிரகம். எனவே, விஞ்ஞானிகள் கூறும் நவக்கிரகங்கள் **பூமி, செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி, யுரேனஸ், நெப்டியூன், புளுட்டோ** என்பனவாகும்.

## ஜோதிடம் கூறும் நவக்கிரகங்கள்

சூரியன், சந்திரன் இரண்டும் கிரகங்களாகக் கொள்ளப்படும் அதே நேரத்தில் பூமி கிரகமாகக் கொள்ளப்படுவதில்லை. அதில் வாழ்கின்ற மனிதர்களாகிய நமக்குரிய பலாபலன்களை ஏனைய கிரகங்களின் கதிர்வீச்சுகள்தான் ஏற்படுத்துகின்றன. யுரேனஸ் முதலிய மூன்றும் மிகத் தொலைவிலிருப்பதனால் அவற்றின் தாக்கம் நம்மை அதிகம் பாதிக்கமாட்டாது என்தை உணர்ந்தே ஜோதிட சாஸ்திரம் அவற்றைக் கணக்கெடுக்கவில்லை என்பது புரிந்துகொள்ளத்தக்கது. இப்போது விஞ்ஞானிகளால் ஒரு கிரகம் நீக்கப்பட்டிருப்பதே அன்றைய முனிவர்களின் தீர்க்க தரிசனத்திற்கு அடையாளமாகும்.

சந்திரன் ஒரு உபகிரகம் என்பதால் அதனைக் கிரகமாக ஏற்றமைகூட வியப்பில்லை. ஆனால் நட்சத்திரமாகிய சூரியனை ஜோதிடம் கிரகமாகக் குறிப்பிட்டமை ஏன் என ஒரு கேள்வி எழுவது நியாயமே. நமது பூமியும் ஏனைய கிரகங்களும் இந்தச் சூரியனைச் சுற்றியே வலம்வருகின்றன. ஏனைய கிரகங்களைப்போலவே சூரியனும் தனது கதிர்வீச்சு மூலம் எமக்குப் பாதிப்புக்களை ஏற்படுத்துவதால் அது ஜோதிட ஆய்வில் சேர்த்துக்கொள்ளப்பட நேர்ந்தது. அதுமட்டுமல்லாமல் ஏனைய நட்சத்திரங்கள்போலத் தம்பாட்டில் சுற்றிக்கொண்டிருக்காமல் ஏனைய கிரகங்களையும் சேர்த்துச் சுழற்றுகின்ற தலைமகனாகவும் இருப்பதால் சூரியனுக்கு முதன்மை கொடுப்பது பொருத்தமானதே.

அதேபோல் கோடிக்கணக்கான ஏனைய நட்சத்திரங்களிலும் எம்மைப் பாதிக்க வல்ல இருபத்தேழு நட்சத்திரங்களை மாத்திரம் கவனத்தில் எடுக்கின்றது ஜோதிடம்.

இந்த நட்சத்திரங்களும் கிரகங்களும் **பாசக்கரம்** என்று சொல்லப்படும் ஓர் ஒளிவட்டப் பாதையில் செல்கின்றன என ஜோதிடம் கூறுகின்றது. இது விஞ்ஞானிகள் கூறும் **பால்வீதி மண்டலமே** என்பது தெளிவு.

எனவே, ஜோதிடத்தின்படி **சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி, ராகு, கேது** என்பனவே நவக்கிரகங்களாகும். ஆரம்பகால ஜோதிடப் பேரறிஞரான **வராஹமிஹிரர்** ராகு, கேதுக்கள் பற்றிக் குறிப்பிடாமல் ஏனைய ஏழு கிரகங்களைப்பற்றி மட்டுமே குறிப்பிட்டுள்ளார். ஆனால் அனுபவ ரீதியாக ஆராய்ந்த வழிநூல் அறிஞர்களான **யாக்ஞவல்கியர், பராசரர்** போன்றோர் ராகு, கேதுக்களையும் சேர்த்து நவக்கிரகங்கள் என்ற மரபை நிலைபெறச் செய்தனர்.

**யாக்ஞவல்கிய ஸ்மிருதி, பிருஹத்ஜாதகம்** முதலிய புராதனமான ஜோதிட சாஸ்திரங்கள் நவக்கிரகங்கள் பற்றி விரித்துக் கூறுகின்றன. அதேநேரம் அறிவியல் அடிப்படையில் ஏற்றுக் கொள்ளக்கூடிய கருத்துக்களையும் அவை முன்வைத்திருக்கின்றன.

### நவக்கிரகங்களின் வகை

நவக்கிரகங்களை மூவகையாக வகுத்துக் காட்டும் இப்பழம்பெரும் நூல்கள் செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி ஆகிய ஐந்தையும் **தாராக் கிரகங்கள்** என்று பெயர்சுட்டி, சூரியன், சந்திரன் இரண்டையும் **மண்டலக் கிரகங்கள்** என

வேறுபடுத்திக் காட்டுவதுடன் ராகு, கேது ஆகிய இரண்டையும் **சாயாக் கிரகங்கள்** எனக் கூறுகின்றன. இச்செய்தி வியப்புடனும் பெருமையடனும் கவனிக்கத்தக்கது.

## ராகுவும் கேதுவும் கிரகங்களா?

சாயா என்றால் நிழல். ராகுவும் கேதுவும் நிழல் கிரகங்கள் என்று கூறப்படுவதன்மூலம் அவை உண்மையில் கிரகங்களாக இல்லை என்பது புரிந்துகொள்ளத் தக்கது அல்லவா? அவை கிரகங்களுக்குச் சமமாகப் பாதிப்புக்களை ஏற்படுத்தவல்ல இரு புள்ளிகள்.

சூரியனைச் சுற்றிப் பூமி வலம் வருகின்ற பாதையும் (ஒழுக்கு) பூமியைச் சுற்றிச் சந்திரன் வலம் வருகின்ற பாதையும் வெட்டுகின்ற புள்ளிகளே ராகு கேதுக்கள். நாம் வாழும் பூமியிலே **பேமுடா முக்கோணம்** என்ற ஓர் இடம் எவ்வாறு மர்மம் நிறைந்த பகுதியாக ஆராய்ச்சிக்கு எட்டாத வகையில் தன்னைச் சூழ்ந்த பகுதியில் சில அனர்த்தங்களை விளைவித்துக்கொண்டிருக்கின்றதுபோலவே இந்தப் புள்ளிகளும் சக்தி வாய்ந்தவையாக நம்மை ஆட்டி வைக்கின்றன.

## ஜோதிடம்

ஒரு மனிதன் பிறக்கின்ற வேளையில் கிரகங்களும் நட்சத்திரங்களும் வானத்தில் எந்தெந்த நிலையில் நிற்கின்றார்கள் எனபதைக் குறித்துக் காட்டுவதே ஜாதகக் குறிப்பு. அக்கிரகங்களும் நட்சத்திரங்களும் தொடர்ந்து சுழன்று வரும்போது அந்த ஆரம்ப நிலைக்கும் அப்போதுள்ள நிலைக்கும் (கோசாரநிலை அல்லது கோட்சார நிலை) உள்ள வேறுபாட்டைக் கண்டறிந்து பலன்கூறுவதே ஜோதிடமாகும்.

வானம் என்னும் பரந்த வெளியில் நமது பூமி நடுவில் நிற்பதாகவும் ஏனைய கிரகங்கள் யாவும் நம்மைச் சுற்றி வருவதாகவும் கொள்ளப்படும் ஒரு கருதுகோள்தான் ஜோதிடத்தின் அடிப்படை. சூரியனைச் சுற்றியே கோள்கள் யாவும் சுற்றுகின்றன என்பதும் தம்மைத் தாமேயும் அவை சுற்றுகின்றன என்பதும் வானியல் உண்மை. அதனை ஜோதிட சாஸ்திரம் உணர்ந்துள்ள போதிலும் சார்புக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு சூரியன் உட்பட யாவுமே பூமியைச் சுற்றி வருவதாகக் கொண்டு கணிக்கப்படுகின்றன.

நம்மைச் சூழ்ந்திருக்கும் வானவெளியை 360 பாகை உள்ள ஒரு வட்டமான (கோளமான) பரப்பாகக் கருதி அதை 30 பாகைகள் கொண்ட 12 இராசி மண்டலங்களாக வகுத்து மேஷம் முதல் மீனம் வரையிலான அந்தப் பன்னிரு பிரிவுகளையும் கிரகங்கள் கடந்துசெல்லும் இயல்பையும் ஒவ்வொரு இராசியிலும் நிற்கின்ற காலங்களை வைத்துமே இக்கணிப்பு நிகழ்கிறது.

## புராணங்கள் கூறும் செய்திகள்

கிரகங்கள் வீசும் கதிர்வீச்சுக்கள் பற்றியும் அவற்றின் நிறங்கள் பற்றியும்கூடப் புராணங்கள் கூறுகின்றன. அவற்றின் கதிகள் சுழற்சிகள் பற்றிச் சொல்லப்பட்டிருக்கும் பழைமையான செய்திகள் இன்றைய விஞ்ஞான விளக்கங்களுக்கு ஒத்துப்போவது வியப்பானதே.

ஓர் உதாரணத்தை மட்டும் இங்கு கூறலாம். சனிக்கிரகம் ஒருகால் ஊனமுற்றவன் என்றும் மிக மெதுவாக நகர்வதால் **மந்தன்** என அழைக்கப்படுவதாகவும் பழைய நூல்கள் கூறுகின்றன. இன்றைய விஞ்ஞானிகள் கண்டறிந்தபடி ஏனைய கிரகங்களைவிட மிக ஆறுதலாகவே சனி சூரியனைச் சுற்றி வருகின்றது. இந்தக் கால அளவு சுமார் 29 வருடங்கள் என அவர்கள் தெரிவிக்கின்றனர்.

(கதிர்வீச்சுக்கள் மற்றும் கால அளவு முதலிய விபரங்கள் யாவும் பின்னர் புள்ளி விபரங்களாகத் தரப்படுகின்றன.)

## ஆகம வழிபாட்டு முறைகள்

சிவாகம மரபில் நவக்கிரக ஆராதனைக்கு ஒரு தனியிடம் உண்டு. ஆலயங்களில் நவக்கிரகங்களுக்குத் தனிச் சந்நிதானம் அமைந்திருப்பதைக் காணலாம்.

தேர்ச் சிற்பம்போல உருவாக்கப்பட்ட கட்டடத்தில் அல்லது சதுரமாக உருவாக்கப்பட்ட கட்டடத்தில் நடுநாயகமாச் சூரியனும் எட்டுத் திக்குகளிலும் ஏனைய எட்டுக் கிரகங்களும் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும்.

ஆகம மரபின்படி திக்குகளில் சுபக் கிரகங்களும் விதிக்குகளில் (மூலைகளில்) அசுபக் கிரகங்களும் அமையும். ஆனால் இன்று அதிகமான சிவாலயங்களில் வைதிக மரபைப் பின்பற்றிப் பின்வருமாறு அமைக்கப்படுகின்றன.

## தலைவிதியை மாற்றமுடியுமா?

இனி, தலைவிதி என்பதும் அதை நாம் கண்டறிந்து பரிகாரம் தேடிக்கொள்வது என்பதும் ஏற்றுக்கொள்ளத்தக்கதா என்பதும் ஒரு கேள்வி. அதுபற்றியும் சிறிது சிந்திக்கலாம்.

| | | |
|---|---|---|
| ராகு | சனி | கேது |
| செவ்வாய் | சூரியன் | குரு |
| சந்திரன் | சுக்கிரன் | புதன் |

வ

கி

வேதகால மக்கள் இயற்கைச் சக்திகள் ஒவ்வொன்றையுமே தெய்வங்களாகக் கருதி வழிபட்டனர். பின்னர் அந்த இயற்கைச் சக்திகளின் பின்னால் அவற்றை இயக்குகின்ற தெய்வ சக்திகள் இருப்பதாக உணர்ந்தனர். அதாவது **இடி** என்ற சக்திக்குப்பின்னால் அதனை ஆயுதமாகப் பயன்படுத்துகின்ற **இந்திரன்** என்றொரு தெய்வசக்தியும் **மழை** என்ற இயற்கையின்பின்னால் மழையை வருவிக்கின்ற **வருணன்** என்ற தெய்வசக்தியும் இவ்வாறே பற்பல தெய்வ சக்திகளும் இருப்பதாகக் கருதி வழிபட்டனர்.

காலகதியில் இச்சக்திகள் யாவற்றையும் இயக்குகின்ற ஒரு பேரருட் சக்தி

இருக்கின்றது என உணர்ந்தனர். அதேபோல நவக்கிரகங்கள் தத்தமக்கு இருக்கும் ஆற்றல்களினால் உலக மாந்தரை வழிநடத்தும் இயல்பினை உடையன. ஆனால் அந்த நவக்கிரகங்களையும் ஆள்பவன் ஒரே இறைவன் என்பதை யாவரும் நினைவில் கொள்ளவேண்டும்.

அவரவர் கர்ம வினைகளுக்கேற்பப் பிறவியெடுத்த மனிதர் ஒவ்வொருவரும் தத்தமது வினைப் பயன்களை அனுபவித்தே தீரவேண்டும். இது உலக நியதி. ஆனால் துன்பங்களின் கடுமையைக் குறைக்கவும் அவற்றைத் தாங்கிக்கொள்ளும் வலிமையை நாம் பெறவும் இத்தகைய வழிபாடுகள் உதவுகின்றன.

எங்கும் நிறைந்த பரம்பொருளை ஆலயங்களில் பிரதிஷ்டை செய்த திருவுருவங்களில் நாம் கண்டு வழிபடுகின்றோம். அக்கினியிலே ஆவாகனம் செய்து அவிசொரிந்து வணங்குகிறோம். அந்த இடங்களில் இறைசக்தி அதிகரித்துக் காணப்படுவதால் இலகுவில் நாம் அவர் அருளைப் பெறமுடியும்.

அதேபோல அசேதனமான கிரகங்கள் ஒவ்வொன்றின் பின்னாலும் அதனை இயக்குகின்ற தெய்வசக்தி ஒன்று இருக்கிறது. அதனையே கிரக தேவர்களாக நாம் வணங்குகிறோம். அந்தக் கிரக தேவர்களை நாம் வழிபடுவதன்மூலம் அருட்சக்தியைப் பெறமுடிகிறது.

கிரகங்கள் பற்றிய புராண வரலாறுகளில் அவர்களின் பிறப்புப் பற்றிப் பல்வேறு கதைகள் சொல்லப்பட்டிருப்பது சிலருக்கு ஐயங்களைத் தோற்றுவிக்கின்றது. அப் பிறப்புக்களுக்குமுன் கிரகங்கள் பிரபஞ்சத்தில் இல்லையா என்பதும், பிறப்பு வரலாறுகள் பலவிதமாக முரண்படக் கூறப்படுவதேன் என்பதும்தான் அந்த ஐயங்கள்.

கிரக பதவிகளும் இந்திரப் பதவிபோல மாற்றமடையக் கூடியவையே. பிரம விஷ்ணுக்கள் கூட நிலையான பதவிகளல்ல. சிறிய ஆயுளையுடைய நாம் இதனை இலகுவில் புரிந்துகொள்ள முடியாது. தத்தமது ஆயுள் முடியும் காலத்தில் அவர்கள் மறைந்துவிட வேறொருவர் அந்தப் பதவிக்கு வருகிறார் என்பதையும் ஒவ்வொருமுறை பதவிக்கு வருபவரினதும் பிறப்பு முறைகள் வேறுபடுகின்றன என்பதும் நாம் விளங்கிக் கொள்ள வேண்டும்.

எனவே வேத காலத்திலிருந்து நாம் கடைப்பிடித்துவரும் ஜோதிட சாஸ்திரமும் அதனடிப்படையான பலாபலன் கண்டறியும் முறையும் தோஷங்களைப் போக்குவதற்கான பிரார்த்தனை வழிபாடுகளும் கண்மூடித்தனமானவையல்ல என்றும் அறிவியல் ஆய்வுகளின்படி ஏற்றுக்கொள்ளத் தக்கதே எனவும் நன்கு புரிந்துகொண்டு நம்பிக்கையுடனும் சிரத்தையுடனும் அவற்றில் ஈடுபட்டு நற்கதி அடைவோமாக.

## பஞ்சாங்கம்

நாள், திதி நட்சத்திரம், யோகம், கரணம் இவை ஐந்தையும் குறிப்பிடுவது பஞ்சாங்கம் எனப்படும்.

## கிழமைகளும் கிரகங்களும்

| | | |
|---|---|---|
| ஞாயிற்றுக்கிழமை | - | சூரியனுக்கும் |
| திங்கட்கிழமை | - | சந்திரனுக்கும் |
| செவ்வாய்க்கிழமை | - | செவ்வாய்க்கும் |
| புதன்கிழமை | - | புதனுக்கும் |
| வியாழக்கிழமை | - | வியாழனுக்கும் |
| வெள்ளிக்கிழமை | - | சுக்கிரனுக்கும் |
| சனிக்கிழமை | - | சனிக்கும் உரியது. |

ராகு, கேது ஆகிய இரண்டு கிரகங்களுக்கும் கிழமை கிடையாது. அவை நிழற் கிரகங்கள் ஆகும்.

## ருது காலம் ஆறு – அவையாவன :

| | | |
|---|---|---|
| 01. வசந்த ருது | சித்திரை, வைகாசி | இளவேனிற்காலம் |
| 02. கிரீஷ்ம ருது | ஆனி, ஆடி | முதுவேனிற்காலம் |
| 03. வருஷ ருது | ஆவணி, புரட்டாசி | கார் காலம் |
| 04. சரத் ருது | ஐப்பசி, கார்த்திகை | கூதிர்காலம் |
| 05. ஹேமந்த ருது | மார்கழி, தை | முன்பனி |
| 06. சிசிர ருது | மாசி, பங்குனி | பின்பனி |

## உத்தராயணம் :

தை, மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி இந்த ஆறு மாதங்களும் உத்தராயண காலமாகும். சூரியன் தெற்கிலிருந்து வடக்கு நோக்கி செல்லும் காலமாகும். தேவர்களுடைய ஒரு பகல் பொழுது காலமாகும். மிகவும் புண்ணியமான காலம். இக்காலத்தில் இறப்பவர்க்கு மறுபிறவியில்லை என்று ஒரு ஐதீகம்.

## தட்சிணாயணம் :

ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி ஆகிய ஆறு மாதங்களும் தட்சிணாயண காலமாகும். சூரியன், வடக்கிலிருந்து தெற்கு நோக்கிப் பயணமாகும் காலமாகும். தேவர்களுடைய ஒரு இரவுப் பொழுதாகும்.

## பட்சங்கள் இரண்டு

| | |
|---|---|
| பூர்வ பட்சம் | - அமாவாசை முதல் வளர்பிறை பதினைந்து நாட்கள். |
| அபரபட்சம் | - பௌர்ணமி முதல் தேய்பிறை பதினைந்து நாட்கள் |

**ராசிகள் 12 :**

மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம்.

**நட்சத்திரங்கள் 27 :**

அசுவினி, பரணி, கார்த்திகை, ரோகிணி, மிருகசீரிஷம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம், உத்தரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்ரட்டாதி, ரேவதி.

9 நவக்கிரகங்களும் இந்த நட்சத்திர வாரியாக, 12 ராசிகளிலும் பயணம் செய்வார்கள். சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி முதலிய 7 கிரகங்களும், ராசிச் சக்கரத்தில், இடமிருந்து வலமாகவும், சாயாக் கிரகங்களான ராகு, கேது என்பன வலமிருந்து இடமாகவும் செல்வார்கள். ராகுவுக்கு 7வது வீட்டில், சரியாக 180 பாகை தூரத்தில் கேது எப்போதுமே இருப்பார்.

சூரியன் ஒரு ராசியை ஒரு மாதத்தில் கடப்பார்
சந்திரன் ஒரு ராசியை 2 1/4 நாளில் கடப்பார்
செவ்வாய் ஒரு ராசியை 1 1/2 மாதத்தில் கடப்பார்
புதன் ஒரு ராசியை 1 மாதத்தில் கடப்பார்
குரு ஒரு ராசியை 1 வருடத்தில் கடப்பார்
சுக்கிரன் ஒரு ராசியை 1 மாதத்தில் கடப்பார்
சனி ஒரு ராசியை 2 1/2 வருடத்தில் கடப்பார்
ராகு, கேது இருவரும் ஒரு ராசியை 1 1/2 வருடத்தில் கடப்பார்கள்.

சூரியன் சித்திரை 1வது நாளன்று, கால புருஷனின் முதல் ராசியான மேஷ ராசியில் பிரவேசிப்பார். ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு ராசியாகக் கடந்து, பங்குனி முதல் தேதியன்று மீனத்தில் பிரவேசிப்பார். இப்படியே ஒரு வருடத்துக்குள் 12 ராசிகளையும் கடந்து செல்வார்.

**ஜாமம் :**

ஒரு ஜாமம் என்பது 2 மணி 24 நிமிஷம் கொண்டது. ஒரு நாளைக்கு 10 ஜாமங்களாகும். ஆறு நாழிகைகள் கொண்டது ஒரு ஜாமம். 60 நாழிகைகள் கொண்டது பகல், இரவு கலந்த ஒரு முழு தினமாகும்.

**யோகம் :**

சித்த யோகம், அமிர்த யோகம், மரண யோகம் என மூன்று வித யோகங்கள் உண்டு. இதில் மரணயோகம் உள்ள நாட்களில், சுபகாரியம் செய்யக்கூடாது.

**ஹோரை :**

தினசரி ஒரு மணி நேரத்துக்கு ஒரு ஹோரை வீதம், சூரியன், சுக்கிரன், புதன், சந்திரன், சனி, குரு, செவ்வாய் என ஏழு ஹோரைகள் உண்டு. தினசரி அன்றைக்கு என்ன கிழமையோ, அந்த கிழமைக்குரிய கிரகத்துக்குரிய ஹோரைதான் காலையில் முதலில் வரும். அதாவது

ஞாயிறு அன்று காலை மணி 6.00 முதல் 7.00 வரை சூரிய ஹோரையாகும். அதன் படி, திங்கட்கிழமை காலை 6.00 மணிமுதல் 7.00 மணி வரை சந்திரன் ஹோரையாகும். அதுபோல, புதன்கிழமை, புதன் ஹோரையிலும், வியாழக்கிழமை குரு ஹோரையிலும், வெள்ளிக்கிழமை சுக்கிர ஹோரையிலும், சனிக்கிழமை சனி ஹோரையிலும் ஆரம்பிக்கும்.

இதில் வியாழன், புதன், சுக்கிரன், வளர்பிறையில் சந்திரன் ஹோரைகளில் சுபகாரியம் செய்ய உத்தமம்.

**கௌரி பஞ்சாங்கம் :**

ஒரு நாளைக்கு 16 முகூர்த்தம் உண்டு. ஒரு முகூர்த்தத்துக்கு 1. 30 மணி நேரமாகும். உத்தி, அமிர்தம், ரோகம், லாபம், தனம், சுகம், விஷம், சோரம் என்று 8 வகையானவை கௌரி பஞ்சாங்கத்தில் உண்டு. இதை கவனித்து, அமிர்தம், லாபம், தனம், சுகம், உத்தி என்ற வேலைகளில் சுபகாரியம் செய்யலாம். மற்ற நேரங்களில் சுபகாரியம் கூடாது.

இராகுகாலம், எமகண்டம் என்று போட்டிருக்கும் காலங்களிலும் சுப காரியம் கூடாது.

**ராகு காலம் :**

| | | | | |
|---|---|---|---|---|
| ஞாயிறு | - | மாலை மணி | - | 4.30 - 6.00 |
| திங்கள் | - | காலை மணி | - | 7.30 - 9.00 |
| செவ்வாய் | - | பகல் மணி | - | 3.00 - 4.30 |
| புதன் | - | பகல் மணி | - | 12.00 - 1.30 |
| வியாழன் | - | பகல் மணி | - | 1.30 - 3.00 |
| வெள்ளி | - | காலை மணி | - | 10.30 - 12.00 |
| சனி | - | காலை மணி | - | 9.00 - 10.30 |

**திருவிழா சந்தடியில் வெளியிலே புறப்பட்டு விளையாடச் செல்வது ஞாயமன்று.**

**எம கண்டம் :**

| | | | | |
|---|---|---|---|---|
| ஞாயிறு | - | பகல் மணி | - | 12.00 - 1.30 |
| திங்கள் | - | காலை மணி | - | 10.30 - 12.00 |
| செவ்வாய் | - | காலை மணி | - | 9.00 - 10.30 |
| புதன் | - | காலை மணி | - | 7.30 - 9.00 |
| வியாழன் | - | காலை மணி | - | 6.00 - 7.30 |
| வெள்ளி | - | பகல் மணி | - | 3.00 - 4.30 |
| சனி | - | பகல் மணி | - | 1.30 - 3.00 |

ராகு காலத்தில் துர்க்கை வழிபாடு உத்தமம், எமகண்ட காலத்தில், இறந்தவர்க்கு செய்ய வேண்டிய திதி கொடுக்கலாம்.

**திதிகள் :**

அமாவாசை, பிரதமை, துவிதியை, திருதியை, சதுர்த்தி, பஞ்சமி, சஷ்டி, சப்தமி, அஷ்டமி, நவமி, தசமி, ஏகாதசி, துவாதசி, திரயோதசி, சதுர்த்தசி, பௌர்ணமி என்று திதிகள் உள்ளன.

பிரதமை, சஷ்டி, ஏகாதசி இவற்றில் கோயில் விழா எடுத்தல், நடனம், பாட்டு உத்தமம்.

துவிதியை, சப்தமி, துவாதசி, இவற்றில் வாகனம் வாங்க, விற்க, பிரயாணம் செய்ய உத்தமம்.

திரிதியை, அஷ்டமி, திரயோதசி இவற்றில் கொடிமரம் நடுவது நல்லது. திரிதியை, திரயோதசி திதியில் சுபகாரியம் செய்யலாம். சதுர்த்தி நவமி, சதுர்த்தசி இவற்றில் குரூரமான செயல்களுக்கு சிறந்தது. பஞ்சமி தசமி, பௌர்ணமி இவற்றில் திருமணம், யாத்திரை, யாகம் மற்றும் சுபகாரியங்கள் செய்யலாம்.

**அமாவாசை :**

அமாவாசையில் தானம், பிதுர்காரியங்கள் செய்யலாம். அமாவாசையில் வேறு ஏதாவது சுபகாரியம் செய்வதானால், அமாவாசையை ஆறாகப் பிரித்து, கடைசி 6வது பிரிவில் சுபகாரியம் செய்யலாம். ஆனால் அமாவாசையில் திருமணம் கூடாது. பிரதமை, அஷ்டமி , நவமி திதியில் திருமணம் கூடாது. ஏகாதசியில் விரதமிருக்க வேண்டிய நாளானதால் கூடுமானவரை திருமணம் விருந்து இவற்றை செய்யலாகாது.

**கரிநாட்கள் :**

கரிநாட்களில் சுபகாரியம் செய்யக் கூடாது.

**நாள் விழிப்பு :**

புதன், வியாழன் வெள்ளி 2 கண்ணுள்ள நாட்கள், ஞாயிறு, திங்கள் இவை ஒரு கண்ணுள்ள நாட்களானதால் சிறப்பானதல்ல. செவ்வாய், சனி குருட்டு நாட்களாகையால் சுபகாரியங்கள் கூடாது. புதன், வியாழன், வெள்ளி இருகண்ணுள்ள நாட்களாகையால் எல்லாவித சுபகாரியங்களும் செய்யலாம்.

**மலமாதம் :**

எந்த மாதத்திலாவது, இரண்டு அமாவாசை அல்லது இரண்டு பௌர்ணமி வந்தால் அது மலமாதமாகும். இதில் திருமணம் முதலிய சுபகாரியங்களுக்கு கூடாது.

**அக்னி நட்சத்திரம் :**

சித்திரை மாதம் 21 திகதி முதல் வைகாசி 14 திகதி வரை நடக்கும். இதில் சுபகாரியம் கூடாது.

**அக்னி நட்சத்திர காலங்களில் செய்யக் கூடியவை :**

விவாஹம், உபநயனம், பிரவேசம், ருதுசாந்தி.

**செய்யக் கூடாதவை :**

கிணறு தோண்டல், விதை விதைத்தல், மரம் நடுதல், குளம் வெட்டல்

## ஜென்ம நட்சத்திரம், திதி, கிழமைகளில் செய்யத் தகுந்தவை:

வித்தை ஆரம்பம், நிலம், சொத்து வாங்குதல், அன்னதானம், வேள்வி, பட்டாபிஷேகம் முதலியன செய்யலாம்.

## செய்யக் கூடாதவை :

விவாஹம், உடலுறவு, சீமந்தம், மருந்து சாப்பிடல் கூடாது. முகச்சவரம், எண்ணெய் தேய்த்துக் குளித்தல், புத்தாடை அணிதல் கூடாது. பெண்களுக்கு ஜென்ம நட்சத்திரத்தில் திருமணம் செய்யலாம். ஆனால் ஜென்ம வாரத்தில் திருமணம் கூடாது.

## தோஷமில்லாத காலம் :

உஷத் காலத்தில் திதி தோஷமும் அபிஜித் காலத்தில் அதாவது 12 1/2 நாழிகைக்கு மேல் 1 நாழிகைக்குள் நட்சத்திரத்திர தோஷமும், அஸ்தமன நேரத்தில் லக்ன தோஷமும், இரவில் வாரதோஷமும் கிடையாது.

## திருமணத்திற்கு பின்பு செய்யக்கூடாதவை :

ஒருவர் புதிதாக திருமணமாகி ஆறு மாதகாலத்திற்குள் பூணூல் போடுவதோ, தீர்த்த யாத்திரை செல்வதோ, புது வீடு குடிபுகுவதோ, முடியெடுத்தலோ கூடாது.

## பஞ்ச பட்சிகள் :

ஒவ்வொரு நட்சத்திரத்துக்கும் ஒரு பட்சி உண்டு.

அசுவினி, பரணி, கார்த்திகை, ரோகிணி, மிருகசீருஷம் இவை ஐந்துக்கும் பட்சி - வல்லூறு.

திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம் இவை ஆறுக்கும் பட்சி - ஆந்தை.

உத்தரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம் இவை ஐந்துக்கும் பட்சி - காகம்.

அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்ராடம் இவை ஐந்துக்கும் பட்சி - கோழி.

திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்ரட்டாதி, ரேவதி இவை ஆறுக்கும் பட்சி - மயில்.

## படுபட்சி நாட்கள் :

இந்நாட்களில், அவரவருடைய பஞ்சபட்சியானது செயலிழந்து விடும். இந்நாட்களில் எந்தவித சுபகாரியமும் பிரயாணமும், புதிய முயற்சிகளும் செய்யக் கூடாது.

## வல்லூறு – படுபட்சி நாட்கள் :

வளர்பிறையில் - வியாழக்கிழமை மற்றும், சனிக்கிழமை. தேய்பிறையில் - செவ்வாய்க்கிழமை.

**ஆந்தை – படுபட்சி நாட்கள் :**

வளர்பிறையில் - ஞாயிற்றுக்கிழமை மற்றும் வெள்ளிக்கிழமை. தேய்பிறையில் - திங்கட்கிழமை

**காகம் – படுபட்சி நாட்கள் :**

வளர்பிறையில் - திங்கட்கிழமை. தேய்பிறையில் - ஞாயிற்றுக்கிழமை

**கோழி – படுபட்சி நாட்கள் :**

வளர்பிறையில் - செவ்வாய்க்கிழமை. தேய்பிறையில் - வியாழக்கிழமை மற்றும் சனிக்கிழமை

**மயில் – படுபட்சி நாட்கள் :**

வளர்பிறையில் - புதன்கிழமை. தேய்பிறையில் - புதன்கிழமை மற்றும் வெள்ளிக்கிழமை

**சூலம் :**

வாரசூலம், திதிசூலம், நட்சத்திர சூலம் உள்ள திசைகளில் பிரயாணம் செய்யக்கூடாது. அவசியம் போக வேண்டுமாயின், வார சூலங்களில் நாழிகை 10க்கு மேல் பிரயாணம் செய்யலாம்.

**வாரசூலம் –**

| கிழமை | சூலம் | பரிகாரம் |
|---|---|---|
| திங்கள், சனி | கிழக்கு | - தயிர் |
| செவ்வாய், புதன் | வடக்கு | - பால் |
| வியாழன் | தெற்கு | - தைலம் |
| வெள்ளி, ஞாயிறு | மேற்கு | - வெல்லம் |

இந்த கிழமைகளில், மேற்சொன்ன திசைகளில் பிரயாணம் செய்யக்கூடாது. அவசியம் நேரிட்டால் - பரிகாரம் சொன்னபடி அந்தப் பொருளை உட்கொண்டு பின்பு செல்லலாம்.

**திதிசூலம் :**

| | | |
|---|---|---|
| பிரதமை, நவமி | - | கிழக்கு |
| துவிதியை, தசமி | - | வடக்கு |
| திருதியை, ஏகாதசி | - | தென்கிழக்கு |
| சதுர்த்தி, துவாதசி | - | தென்மேற்கு |
| பஞ்சமி, திரயோதசி | - | தெற்கு |
| சஷ்டி, சதுர்த்தசி | - | மேற்கு |

| | | |
|---|---|---|
| சப்தமி, பௌர்ணமி | - | வடமேற்கு |
| அஷ்டமி, அமாவாசை | - | வடகிழக்கு |

இந்த சூலங்களில் யாத்திரை செய்யக்கூடாது.

**நட்சத்திர சூலம் :**

| | | |
|---|---|---|
| கேட்டை, திருவோணம் | - | கிழக்கு |
| மகம், அசுவினி | - | தெற்கு |
| ரோகிணி, பூசம் | - | மேற்கு |
| அஸ்தம், உத்தரம் | - | வடக்கு |
| கேட்டை | - | தென்கிழக்கு |
| பூரட்டாதி | - | தென்மேற்கு |
| ரோகிணி | - | வடமேற்கு |
| உத்தரம் | - | வடகிழக்கு |

இந்த சூலங்கள் உள்ள திசைகளில் யாத்திரை ஆகாது.

**பிரயாணம் :**

மகாவிஷ்ணுவை தியானம் செய்துவிட்டு, தன்னுடைய மனைவியின் அனுமதி பெற்று, வேதமறிந்தோர், குலதெய்வம், பெரியோர்கள், குரு முதலானவர்களிடம் ஆசீர்வாதம் பெற்று பிரயாணம் செய்ய வேண்டும்.

புறப்படும் நேரத்தில், இடது நாசியில் சுவாசம் எளிதாக இருந்தால், இடது காலையும், வலது நாசியில் சுவாசம் எளிதாக இருந்தால், வலது காலையும் முதலில் வைத்துப் புறப்பட வேண்டும்.

யாத்திரை புறப்படும் போது, இடது மூக்கிலும், வீட்டிற்குள் நுழையும் போது வலது மூக்கிலும், சுவாசம் எளிதாக இருப்பது உத்தமம்.

மனைவி கர்ப்பமாக இருக்கும் போது, புருஷன் 6வது, 8வது மாதத்தில் பிரயாணம் செய்யக்கூடாது.

## சகுனங்கள் :

**சுபசகுனங்கள் :**

கன்னி, பசு, ரத்னம், மலர், தயிர், யானை, குதிரை, பல அந்தணர்கள், இரு அந்தணர்கள் கொடி, எரியும் அக்னி, பூர்ண கும்பம், காளை, தாமரை, சந்தனம், தானியங்கள், பிணம், வேசி. வெள்ளைமாலை, அக்ஷதை, எள்ளு, சலவைத்துணி, குழந்தையுடன் உள்ள பெண், கன்றுடன் கூடிய பசு, சங்கு, வாத்திய ஒலி, மாமிசத்துண்டு, நெய், பால் இவை எதிரில் வந்தால் உத்தமம்.

போ, வாழ்க, நன்றாய் இரு, செவ்வாய், எழு, புறப்படு முதலிய ஒலி வருமானால் நல்லது.

**அசுப சகுனங்கள் :**

மோர், எண்ணெய் தேய்த்துக் கொண்டவன், தலைமுடி விரித்துப் போட்டிருப்பவன், சடைமுடியையுடையவன், ஊர் சுற்றுபவன், குயவர், சிவந்தமலர், ஈரத்துணி, உப்பு, பன்றி, வலதுகால் தடுக்குதல், அழுகை, பாம்பு, முயல் இவை எதிரில் வரலாகாது.

வா, நில், எங்கே போகிறாய் என்ற ஒலி ஆகாது. பூனை பாம்புகளைக் கண்டால் ஆறுமாதம் பிரயாணம் செல்லக்கூடாது. ஆந்தையை கண்டால் மூன்று நாட்களும், முயலைக் கண்டால் எப்போதும் கூடாது. தும்மல் சப்தம் கேட்டால் ஒரு நாள் ஆகாது. ஒரு அந்தணனை கண்டால் ஆகாது, 3 அந்தணரைக் கண்டாலும் ஆகாது. இருவர், நால்வர் அல்லது பல அந்தணர்கள் எதிரில் வந்தால் நலம்.

### குளிகை காலம் :

ஒவ்வொரு நாளும் குளிகை காலத்தில், எண்ணெய் தேய்த்துக் குளிக்க, புதிய ஆபரணங்கள் அணிய, புதுமனை குடிபுக, யாகம் வளர்க்க, அறுவடை செய்ய, மருந்து உட்கொள்ள, சாஸ்திரம் பயில, வாசல்கால் நிறுத்த நல்லது.

### மருந்து உண்ண :

செவ்வாய், சனிக்கிழமை ஆகாது.

### நோய் தீர்ந்து குளிக்க :

பகலில் - ஞாயிறு, செவ்வாய், புதன், வியாழன், சனி

திதி - சதுர், அஷ்ட, நவ, தசமி, சதுர்த்தசி.

### புத்தாடை அணிய :

ஞாயிறு, வியாழன், வெள்ளி நல்லது.

### எண்ணெய் தேய்த்து முழுகுதல் :

ஆண்களுக்கு - புதன், சனிக்கிழமை நல்லது

பெண்களுக்கு - செவ்வாய், வெள்ளி நல்லது

அஷ்டமி, சதுர்த்தி , அமாவாசை, பௌர்ணமி, மாதப்பிறப்பு முதலிய நாட்களிலும், ஜென்ம நட்சத்திரத்திலும் இரவிலும் எண்ணெய் தேய்த்து குளிக்கக்கூடாது.

தலையில் தேய்த்த எண்ணெயை வழித்து, உடலில் மற்ற பாகங்களில் தேய்க்கக் கூடாது.

### புது ஆபரணம் அணிய :

கிழமை : திங்கள், புதன், வியாழன், வெள்ளி உத்தமம்

திதி : பிரத, பௌர், சஷ்டி, ஏகா, பஞ்ச, தசமி நல்லது ரோகிணியுடன் கூடிய சனிக்கிழமையில், அமிர்த யோகத்தில் தங்க நகை செய்து அன்றே அதை வாங்கி ஒருவன் அணிந்தால், பெரும் செல்வமும், சுகமும் கிடைக்கப் பெறுவான்.

## கிரகம் ஒவ்வொன்றும் சூரியனைச் சுற்றிவர எடுக்கும் காலம்

| | |
|---|---|
| பூமி | 365,1/4 நாள் |
| செவ்வாய் | 1 வருடம் 320 நாள் |
| புதன் | 88 நாள் |
| குரு | 11 வருடம் 314 நாள் |
| சுக்கிரன் | 226 நாள் |
| சனி | 29 வருடம் 168 நாள் |
| ராகு | 18 வருடம் 8 நாள் |
| கேது | 18 வருடம் 8 நாள் |

**சந்திரன் பூமியைச் சுற்றிவர எடுக்கும் காலம்** 29 நாள் 13 மணி

## ஒரு இராசியில் கிரகம் ஒவ்வொன்றும் சஞ்சரிக்கும் காலம்

| | |
|---|---|
| சூரியன் | 1 மாதம் |
| சந்திரன் | 2,1/4 நாள் |
| செவ்வாய் | 40 நாள் |
| புதன் | 30 நாள் |
| குரு | 1 வருடம் |
| சுக்கிரன் | 1 மாதம் |
| சனி | 2,1/2 வருடம் |
| ராகு | 1,1/2 வருடம் |
| கேது | 1,1/2 வருடம் |

## கிரகம் ஒவ்வொன்றும் தன்னைத்தானே சுற்றிவர எடுக்கும் காலம்

| | |
|---|---|
| பூமி | 23 மணி 56 நிமி. |
| செவ்வாய் | 24 மணி 37 நிமி. |
| புதன் | 58.65 நாள் |
| குரு | 9 மணி 50 நிமி. |
| சுக்கிரன் | 244 நாள் |
| சனி | 10 மணி 14 நிமி. |
| ராகு | 18 வருடம் 8 நாள் |
| கேது | 18 வருடம் 8 நாள் |

| | | | |
|---|---|---|---|
| மீனம் | மேடம் | இடபம் | மிதுனம் |
| கும்பம் | இராசியமைப்பு | | கடகம் |
| மகரம் | | | சிங்கம் |
| தனுசு | விருச்சிகம் | துலாம் | கன்னி |

# இராசி மண்டலம்
# THE ZODIAC

| | | |
|---|---|---|
| மேஷம் | (ஆடு) | **ARIES** |
| விருஷபம்-இடபம் | (எருது) | **TAURUS** |
| மிதுனம் | (ஆணும் பெண்ணும்) | **GEMINI** |
| கடகம் | (நண்டு) | **CANCER** |
| சிம்மம் | (சிங்கம்) | **LEO** |
| கன்னி | (பெண்) | **VIRGO** |
| துலாம் | (தராசு) | **LIBRA** |
| விருச்சிகம் | (தேள்) | **SCORPIO** |
| தனுசு | (வில் பிடித்த மனிதன்) | **SAGITTARIUS** |
| மகரம் | (முதலை) | **CAPRICORN** |
| கும்பம் | (நீர்க்குடம் ஏந்திய மனிதன்) | **AQUARIUS** |
| மீனம் | (தலைமாறி நிற்கும் இரு மீன்கள்) | **PISCES** |

## கால அளவை

| | |
|---|---|
| *15 நிமிஷம்* | *1 காஷ்டை* |
| *30 காஷ்டை* | *1 கலை* |
| *30 கலை* | *1 முகூர்த்தம் - (2 நாழிகை)* |
| *30 முகூர்த்தம்* | *1 நாள்* |
| *15 நாள்* | *1 பக்ஷம்* |
| *2 பக்ஷம்* | *1 மாதம்* |
| *6 மாதம்* | *1 அயனம்* |
| *2 அயனம்* | *1 வருடம் - (ஒருதேவநாள்)* |
| *360 மநுவருஷம்* | *1 தேவவருஷம்* |
| *பன்னீராயிரம் தேவவருஷம் -* | *1 சதுர்யுகம்* |

| | | |
|---|---|---|
| *கிருதயுகம்* | *- 17,28,000 மநுவருஷம்* | *- 4,700 தேவவருஷம்* |
| *திரேதாயுகம்* | *- 12,96,000 மநுவருஷம்* | *- 3,600 தேவவருஷம்* |
| *துவாபரயுகம்* | *- 8,64,000 மநுவருஷம்* | *- 2,400 தேவவருஷம்* |
| *கலியுகம்* | *- 4,32,000 மநுவருஷம்* | *- 1,200 தேவவருஷம்* |

## கிரகங்கள் வெளியேற்றும் கதிர்கள்
## COSMIC RAYS

| | | |
|---|---|---|
| சூரியன் | சிவப்பு | RED |
| சந்திரன் | ஆரஞ்சு | ORANGE |
| செவ்வாய் | மஞ்சள் | YELLOW |
| புதன் | பச்சை | GREEN |
| குரு | நீலம் | BLUE |
| சுக்கிரன் | கருநீலம் | INDIGO |
| சனி | ஊதா | VIOLET |

**சூரியக் கதிரில் காணப்படும் ஏழு நிறங்கள் (நிறமாலை)**

இந்த ஏழு நிறங்களின் முதலெழுத்துக்களால் இது குறிக்கப்படும்

**VIBGYOR**

## வானியல் அடிப்படையிலான இன்னும் சில தகவல்கள்

**சூரியன்:** இது பூமியைப்போல 13 லட்சம் மடங்கு பெரியது. சுற்றளவு 28 லட்சம் மைல்கள். விட்டம் 8,64,392 மைல்கள்.

**சந்திரன்:** பூமியைவிட ஐம்பது மடங்கு சிறியது சந்திரன். இதன் விட்டம் 2160 மைல்கள். இது பூமியிலிருந்து 2,38,840 மைல் தூரத்திலுள்ளது.

**செவ்வாய்:** பூமிக்கு மிக அருகிலுள்ள கிரகம். இது பூமியைவிட எட்டு மடங்கு பெரியது. சூரியனிலிருந்து 139 மில்லியன் மைல் தூரத்திலுள்ளது. இதன் விட்டம் 4363 மைல்கள்.

**புதன்:** சூரியனுக்கு மிக அருகிலுள்ளது. சூரியனிலிருந்து 36 மில்லியன் மைல் தூரத்திலுள்ளது. பூமிமைவிட 16 மடங்கு சிறியது. விட்டம் 3058 மைல்கள்.

**குரு:** கிரகங்களிலேயே மிகப் பெரியது. பூமியைவிட 1300 மடங்கு பெரியது. விட்டம் 84, 846 மைல்கள். சூரியனிலிருந்து 476 மில்லியன் மைல் தூரத்திலுள்ளது. இதற்கு நான்கு சந்திரன்கள் உண்டு.

**சுக்கிரன்:** இது கிட்டத்தட்டப் பூமியின் அளவைக் கொண்டது. விட்டம் 7510 மைல்கள். சூரியனிலிருந்து 67 மில்லியன் மைல் தூரத்திலுள்ளது.

**சனி:** பூமியைப்போல் ஆயிரம் மடங்கு பெரியது. இதன் விட்டம் 70,136 மைல்கள். சூரியனிலிருந்து 872 மில்லியன் மைல்கள் தூரத்திலுள்ளது.

**பூமி:** விட்டம் 7926 மைல்களாகும். சூரியனிலிருந்து 92 மில்லியன் மைல் தூரத்திலுள்ளது.

## ஜோதிட அடிப்படையிலான சில தகவல்கள்

### ஆட்சி வீடுகள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | சிங்கம் |
| சந்திரன் | - | கடகம் |
| செவ்வாய் | - | மேடம், விருச்சிகம் |
| புதன் | - | மிதுனம், கன்னி |
| குரு | - | மீனம், தனுசு |
| சுக்கிரன் | - | இடபம், துலாம் |
| சனி | - | மகரம், கும்பம் |
| ராகு | - | இல்லை |
| கேது | - | இல்லை |

### உச்ச வீடுகள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | மேடம் |
| சந்திரன் | - | இடபம் |
| செவ்வாய் | - | மகரம் |
| புதன் | - | கன்னி |
| குரு | - | கடகம் |
| சுக்கிரன் | - | மீனம் |
| சனி | - | துலாம் |
| ராகு | - | விருச்சிகம் |
| கேது | - | விருச்சிகம் |

### நட்பு வீடுகள்

சூரியன்- கடகம், விருச்சிகம், தனுசு, மீனம்
சந்திரன் - மிதுனம், சிங்கம், கன்னி
செவ்வாய் - சிங்கம், தனுசு, மீனம்
புதன் - இடபம், சிங்கம், துலாம்
குரு - மேடம், சிங்கம், கன்னி, விருச்சிகம்
சுக்கிரன் - மிதுனம், மகரம், கும்பம், தனுசு
சனி - இடபம், மிதுனம்
ராகு - மிதுனம், கன்னி, துலாம்
கேது - தனுசு, மகரம், மீனம்

## பகை வீடுகள்

| | | |
|---|---|---|
| சூரியன்- | | இடபம், மகரம், கும்பம் |
| சந்திரன் | - | இல்லை |
| செவ்வாய் | - | மிதுனம், கன்னி |
| புதன் | - | கடகம் |
| குரு | - | இடபம், மிதுனம், துலாம், கடகம் |
| சுக்கிரன் | - | சிங்கம் |
| சனி | - | கடகம், சிங்கம், விருச்சிகம் |
| ராகு | - | மேடம், கடகம், சிங்கம், கும்பம் |
| கேது | - | மேடம், கடகம், சிங்கம், கும்பம் |

## நீச வீடுகள்

| | | |
|---|---|---|
| சூரியன்- | | துலாம் |
| சந்திரன் | - | விருச்சிகம் |
| செவ்வாய் | - | கடகம் |
| புதன் | - | மீனம் |
| குரு | - | மகரம் |
| சுக்கிரன் | - | கன்னி |
| சனி | - | மேடம் |
| ராகு | - | இடபம் |
| கேது | - | இடபம் |

## சுபக் கிரகங்கள்

வளர்பிறைச் சந்திரன், பாபிகளுடன் சேராத புதன், குரு, சுக்கிரன்

## அசுபக் கிரகங்கள் (பாபக் கிரகங்கள்)

தேய்பிறைச் சந்திரன், பாபிகளுடன் சேர்ந்த புதன், சூரியன், செவ்வாய், சனி, ராகு, கேது.

## நவக்கிரகங்களுக்குரிய வழிபாட்டுத் தலங்கள்

| | |
|---|---|
| சூரியன் | - ஆடுதுறை சூரியனார் கோவில் |
| சந்திரன் | - திங்களூர், திருப்பதி |
| செவ்வாய் | - வைத்தீஸ்வரன் கோவில், பழனி. |
| புதன் | - மதுரை சொக்கநாதர் ஆலயம், விஷ்ணு ஆலயங்கள். |
| குரு | - திருச்செந்தூர், ஆலங்குடி (மயிலாடுதுறை அருகில்) |
| சுக்கிரன் | - ஸ்ரீரங்கம், கஞ்சனூர் (கும்பகோணம் அருகில்) |
| சனி | - திருநள்ளாறு, குச்சனூர் (தேனீ அருகில்) |
| ராகு | - திருநாகேஸ்வரம் (கும்பகோணம் அருகில்) |
| கேது | - காளஹஸ்தி (திருப்பதி வழி), பிள்ளையார்பட்டி. |

## பலம்பெறும் இடம்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | 10ம் இடம் |
| சந்திரன் | - | 4ம் இடம் |
| செவ்வாய் | - | 10ம் இடம் |
| புதன் | - | இலக்கினம் |
| குரு | - | இலக்கினம் |
| சுக்கிரன் | - | 4ம் இடம் |
| சனி | - | 7ம் இடம் |

## காரகத்துவம்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | பிதுர் காரகர் |
| சந்திரன் | - | மாதுரு காரகர் |
| செவ்வாய் | - | சகோதர காரகர் |
| புதன் | - | மாதுல் காரகர்(மாமன்) |
| குரு | - | புத்திர காரகர் |
| சுக்கிரன் | - | களத்திர காரகர் |
| சனி | - | ஆயுள் காரகர் |
| ராகு | - | வைராக்கிய காரகர் |
| கேது | - | ஞான, மோட்ச காரகர் |

## பார்வை

| | | |
|---|---|---|
| சூரியன் | - | 7ம் பார்வை |
| சந்திரன் | - | 7ம் பார்வை |
| செவ்வாய் | - | 4ம், 7ம் 8ம் பார்வை |
| புதன் | - | 7ம் பார்வை |
| குரு | - | 5ம், 7ம் 9ம் பார்வை |
| சுக்கிரன் | - | 7ம் பார்வை |
| சனி | - | 3ம், 7ம் 10ம் பார்வை |

## தசா வருடங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | 06 வருடங்கள் |
| சந்திரன் | - | 10 வருடங்கள் |
| செவ்வாய் | - | 07 வருடங்கள் |
| புதன் | - | 17 வருடங்கள் |
| குரு | - | 16 வருடங்கள் |
| சுக்கிரன் | - | 20 வருடங்கள் |
| சனி | - | 19 வருடங்கள் |
| ராகு | - | 18 வருடங்கள் |
| கேது | - | 07 வருடங்கள் |

## நோய்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | எலும்பு சம்பந்தமானவை |
| சந்திரன் | - | இரத்த சம்பந்தமானவை |
| செவ்வாய் | - | மூளை சம்பந்தமானவை |
| புதன் | - | தோல் சம்பந்தமானவை |
| குரு | - | தசை சம்பந்தமானவை |
| சுக்கிரன் | - | சுக்ல-சுரோணித சம்பந்தமானவை |
| சனி | - | நரம்பு சம்பந்தமானவை |
| ராகு | - | இல்லை |
| கேது | - | குடல் சம்பந்தமானவை |

## தொடர்புடைய உறுப்பு

| | | |
|---|---|---|
| சூரியன் | - | தலை |
| சந்திரன் | - | முகம், வயிறு |
| செவ்வாய் | - | கை, தோள் |
| புதன் | - | கழுத்து |
| குரு | - | இருதயம் |
| சுக்கிரன் | - | மர்மஸ்தானம் |
| சனி | - | தொடை |
| ராகு | - | பாதம், கணுக்கால் |
| கேது | - | தோள் |

## கிரகங்களின் வம்சாவளித் தொடர்புகள்

பாற்கடல்




சிவனது
நெற்றிக்கண்
வியர்வை
+
பூமாதேவி
|
**செவ்வாய்**

பிரமதேவன்
|
ஆங்கீரசர்
+
சிரத்தாதேவி
|
**குரு**
தாரை — மமதை
கசன் — பாரத்வாஜர்

பிருகு முனிவர்
|
**சுக்கிரன்**
|
தேவயானி
அரசை
நான்கு குமாரர்கள்

விப்ரசித்தி
+
சிம்ஹிகை
|
ஸ்வரபானு
**ராகு** — **கேது**

# நவக்கிரகங்கள் தொடர்பான நானாவித தகவல்கள்

## சமித்துக்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | எருக்கு |
| சந்திரன் | - | பலாசு |
| செவ்வாய் | - | கருங்காலி |
| புதன் | - | நாயுருவி |
| குரு | - | அரசு |
| சுக்கிரன் | - | அத்தி |
| சனி | - | வன்னி |
| ராகு | - | அறுகு |
| கேது | - | தர்ப்பை |

## புஷ்பங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | செந்தாமரை |
| சந்திரன் | - | வெள்ளலரி, அல்லி |
| செவ்வாய் | - | சண்பகம் |
| புதன் | - | வெண்காந்தள் |
| குரு | - | முல்லை |
| சுக்கிரன் | - | வெண்தாமரை |
| சனி | - | கருங்குவளை |
| ராகு | - | மந்தாரை |
| கேது | - | செவ்வல்லி, பல நிறப்பூ |

## தானியங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | கோதுமை |
| சந்திரன் | - | பச்சரிசி |
| செவ்வாய் | - | துவரை |
| புதன் | - | பச்சைப்பயறு |
| குரு | - | கடலை |
| சுக்கிரன் | - | மொச்சை |
| சனி | - | எள்ளு |
| ராகு | - | உழுந்து |
| கேது | - | கொள்ளு |

## உலோகங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | தாமிரம் |
| சந்திரன் | - | ஈயம் |
| செவ்வாய் | - | செம்பு |
| புதன் | - | பித்தளை |
| குரு | - | பொன் |
| சுக்கிரன் | - | வெள்ளி |
| சனி | - | இரும்பு |
| ராகு | - | கருங்கல், காரீயம் |
| கேது | - | துருக்கல் |

## இரத்தினங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | மாணிக்கம் |
| சந்திரன் | - | முத்து |
| செவ்வாய் | - | பவளம் |
| புதன் | - | மரகதம் |
| குரு | - | புஷ்பராகம் |
| சுக்கிரன் | - | வைரம் |
| சனி | - | நீலக்கல் |
| ராகு | - | கோமேதகம் |
| கேது | - | வைடூரியம் |

## ஸ்தானம்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | மத்தி |
| சந்திரன் | - | தென்கிழக்கு |
| செவ்வாய் | - | தெற்கு |
| புதன் | - | வடகிழக்கு |
| குரு | - | வடக்கு |
| சுக்கிரன் | - | கிழக்கு |
| சனி | - | மேற்கு |
| ராகு | - | தென்மேற்கு |
| கேது | - | வடமேற்கு |

## முகம்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | கிழக்கு |
| சந்திரன் | - | மேற்கு |
| செவ்வாய் | - | தெற்கு |
| புதன் | - | கிழக்கு |
| குரு | - | வடக்கு |
| சுக்கிரன் | - | கிழக்கு |
| சனி | - | மேற்கு |
| ராகு | - | தெற்கு |
| கேது | - | தெற்கு |

## வாகனங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | மயில், தேர் |
| சந்திரன் | - | முத்து விமானம் |
| செவ்வாய் | - | அன்னம், சேவல் |
| புதன் | - | குதிரை, நரி |
| குரு | - | யானை |
| சுக்கிரன் | - | கருடன், குதிரை, இடபம் |
| சனி | - | காகம், கழுகு |
| ராகு | - | ஆடு |
| கேது | - | சிங்கம் |

## வர்ணங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | மஞ்சள், பொன்னிறம். |
| சந்திரன் | - | வெள்ளை, வெளிர் மஞ்சள் |
| செவ்வாய் | - | சிவப்பு |
| புதன் | - | பச்சை |
| குரு | - | மஞ்சள், |
| சுக்கிரன் | - | வெள்ளை |
| சனி | - | நீலம், கறுப்பு |
| ராகு | - | வெளிர் நீலம், புகை நிறம் |
| கேது | - | சித்திர வர்ணம் (கதம்ப வர்ணம்) |

## சுவைகள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | கார்ப்பு (காரம்) |
| சந்திரன் | - | இனிப்பு |
| செவ்வாய் | - | துவர்ப்பு |
| புதன் | - | உவர்ப்பு |
| குரு | - | இனிப்பு |
| சுக்கிரன் | - | இனிப்பு |
| சனி | - | கசப்பு |
| ராகு | - | புளிப்பு |
| கேது | - | புளிப்பு |

## நைவேத்தியம்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | சர்க்கரைச்சாதம் |
| சந்திரன் | - | பாயாசம் |
| செவ்வாய் | - | அன்னம் |
| புதன் | - | தயிர்ச்சாதம் |
| குரு | - | பாற்சாதம் |
| சுக்கிரன் | - | நெய்ச்சாதம் |
| சனி | - | எள்ளுச்சாதம் |
| ராகு | - | உழுந்துச்சாதம் |
| கேது | - | புளிச்சாதம் |

## மண்டலங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | வட்டம் |
| சந்திரன் | - | நாற்சதுரம் |
| செவ்வாய் | - | முக்கோணம் |
| புதன் | - | பாணம் (அம்பு) |
| குரு | - | நீள்சதுரம் |
| சுக்கிரன் | - | பஞ்சலோகம் |
| சனி | - | வில் |
| ராகு | - | சுளகு |
| கேது | - | கொடி |

## எண்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | 1 |
| சந்திரன் | - | 2 |
| செவ்வாய் | - | 9 |
| புதன் | - | 5 |
| குரு | - | 3 |
| சுக்கிரன் | - | 6 |
| சனி | - | 8 |
| ராகு | - | 4 |
| கேது | - | 7 |

## அதிதேவதைகள்

| | |
|---|---|
| சூரியன் | - அக்னி |
| சந்திரன் | - வருணன் |
| செவ்வாய் | - ப்ருதுவி |
| புதன் | - விஷ்ணு |
| குரு | - இந்திரன் |
| சுக்கிரன் | - இந்திராணி |
| சனி | - பிரஜாபதி |
| ராகு | - பசு |
| கேது | - பிரம்மா |

## பிரத்யதிதேவதைகள்

| | |
|---|---|
| சூரியன் | - ருத்ரன் |
| சந்திரன் | - கௌரி |
| செவ்வாய் | - பைரவர் |
| புதன் | - புருஷன் |
| குரு | - பிரம்மா |
| சுக்கிரன் | - இந்திரன் |
| சனி | - யமன் |
| ராகு | - சர்ப்பம் |
| கேது | - சித்ரகுப்தன் |

## தெய்வங்கள்

| | |
|---|---|
| சூரியன் | - சிவன் |
| சந்திரன் | - பார்வதி |
| செவ்வாய் | - முருகன் |
| புதன் | - விஷ்ணு |
| குரு | - பிரம்மா, |
| | - தட்சணாமூர்த்தி |
| சுக்கிரன் | - இலக்குமி, |
| | - துர்க்கை |
| சனி | - விநாயகர், |
| | - ஆஞ்ஜனேயர், |
| | - துர்க்கை |
| ராகு | - காளி, துர்க்கை |
| கேது | - விநாயகர் |

## தானம் வழங்கவேண்டிய பொருள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | காராம்பசு |
| சந்திரன் | - | சங்கு |
| செவ்வாய் | - | சிவப்புக் கன்று |
| புதன் | - | பொன் |
| குரு | - | வஸ்திரம் |
| சுக்கிரன் | - | வெள்ளி |
| சனி | - | கரும்பசு |
| ராகு | - | ஆடு |
| கேது | - | யானை |

## கோத்திரம்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | காசியப |
| சந்திரன் | - | ஆத்திரேய |
| செவ்வாய் | - | பாரத்வாஜ |
| புதன் | - | ஆத்ரேய |
| குரு | - | ஆங்கீரச |
| சுக்கிரன் | - | பார்க்கவ |
| சனி | - | காசியப |
| ராகு | - | வைகானச |
| கேது | - | ஜைமினி |

## பத்தினிகள்

| | |
|---|---|
| சூரியன் | - உஷா, பிரத்யுஷா (சாயா, சம்ஞா) |
| சந்திரன் | - கிருத்திகா, ரோகிணீ |
| செவ்வாய் | - சக்திதேவி |
| புதன் | - ஞானதேவி |
| குரு | - தாராதேவி |
| சுக்கிரன் | - சுகீர்த்தி |
| சனி | - நீளா |
| ராகு | - ஸிம்ஹீ |
| கேது | - சித்ரலேகா |

## நாடு

| | | |
|---|---|---|
| சூரியன் | - | கலிங்கம் |
| சந்திரன் | - | யமுனாதேசம் |
| செவ்வாய் | - | தட்சணதேசம் |
| புதன் | - | பாண்டிய தேசம் |
| குரு | - | சிந்து |
| சுக்கிரன் | - | காஷ்மீர் |
| சனி | - | சௌராஷ்டிரம் |
| ராகு | - | சிங்களம் |
| கேது | - | மாளவம் |

## தொடர்புடைய தசாவதாரம்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | இராமன் |
| சந்திரன் | - | கிருஷ்ணன் |
| செவ்வாய் | - | நரசிம்மம் |
| புதன் | - | கல்கி |
| குரு | - | வாமனம் |
| சுக்கிரன் | - | பரசுராமன் |
| சனி | - | கூர்மம் |
| ராகு | - | வராகம் |
| கேது | - | மத்ஸ்யம் |

## குணம்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | ராஜசம் |
| சந்திரன் | - | சாத்விகம் |
| செவ்வாய் | - | ராஜசம் |
| புதன் | - | தாமசம் |
| குரு | - | சாத்விகம் |
| சுக்கிரன் | - | ராஜசம் |
| சனி | - | தாமசம் |
| ராகு | - | தாமசம் |
| கேது | - | தாமசம் |

## அருட் பலன்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | காரிய சித்தி |
| சந்திரன் | - | சர்வ பலன் |
| செவ்வாய் | - | ராஜவசீகரம் |
| புதன் | - | புஷ்டி |
| குரு | - | செல்வம் |
| சுக்கிரன் | - | தேஜஸ் |
| சனி | - | மோட்சம் |
| ராகு | - | மக்கட்செல்வம் |
| கேது | - | ஆயுள் |

## விருப்பமான ராகம்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | பூபாளம் |
| சந்திரன் | - | கல்யாணி |
| செவ்வாய் | - | பைரவி |
| புதன் | - | கரஹரப்பிரியா |
| குரு | - | வாசஸ்பதி |
| சுக்கிரன் | - | ஆனந்தபைரவி |
| சனி | - | முகாரி, சகானா |
| ராகு | - | நீலாம்பரி |
| கேது | - | ஹம்ஸத்வனி |

## பஞ்சபூதம்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | தீ |
| சந்திரன் | - | நீர் |
| செவ்வாய் | - | தீ |
| புதன் | - | மண் |
| குரு | - | ஆகாயம் |
| சுக்கிரன் | - | நீர் |
| சனி | - | காற்று |
| ராகு | - | ஆகாயம் |
| கேது | - | நீர் |

## தோற்றம்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | சம உயரம் |
| சந்திரன் | - | குள்ளம் |
| செவ்வாய் | - | குள்ளம் |
| புதன் | - | உயரம் |
| குரு | - | உயரம் |
| சுக்கிரன் | - | சம உயரம் |
| சனி | - | குள்ளம் |
| ராகு | - | உயரம் |
| கேது | - | உயரம் |

## தொடர்புள்ள நட்சத்திரங்கள்

| | | |
|---|---|---|
| சூரியன் | - | கார்த்திகை, உத்தரம், உத்தராடம். |
| சந்திரன் | - | ரோகிணி, அத்தம், திருவோணம். |
| செவ்வாய் | - | மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம். |
| புதன் | - | ஆயிலியம், கேட்டை, ரேவதி. |
| குரு | - | புனர்பூசம், விசாகம், பூரட்டாதி. |
| சுக்கிரன் | - | பரணி, பூரம், பூராடம். |
| சனி | - | பூசம், அனுஷம், உத்தரட்டாதி. |
| ராகு | - | திருவாதிரை, சுவாதி, சதயம். |
| கேது | - | அஸ்வினி, மகம், மூலம். |

## சித்தர்களுடன் தொடர்பான நவக்கிரகத் தலங்கள்.

சூரியன்- கோரக்கநாதர் சமாதியாகிய வடக்குப் பொய்யூர் (நாகப்பட்டினம் மாவட்டத்தில் அன்னை வேளாங்கண்ணி ஆலயத்திலிருந்து கடற்கரை வழியாக நாகப்பட்டினம் செல்லும் வழியில் இச்சமாதிக்கோவில் உள்ளது. பௌர்ணமி தினத்தில் வழிபடவேண்டும்.)

| | | |
|---|---|---|
| சந்திரன் | - | கொங்கணச் சித்தர் அடக்கம் செய்யப்பெற்ற திருப்பதித் தலம் |
| செவ்வாய் | - | போகர் சமாதியுள்ள பழனி. வன்மீக நாதர் சமாதியுள்ள எட்டுக்குடி |
| புதன் | - | சுந்தரானந்தர் சமாதியாகிய மதுரை. |
| குரு | - | பல்வேறு சித்தர்களின் சமாதிகளுள்ள திருச்செந்தூர் |
| சுக்கிரன் | - | சட்டைமுனியின் சமாதி உள்ள ஸ்ரீரங்கம் |
| சனி | - | நந்திதேவர் சமாதியாகிய சீர்காழி. |
| ராகு, கேது | - | கவரிமான் முனிவர் சமாதியுள்ள காளஹஸ்தி |

# இலகுவான வழிபாட்டு முறைகள்

## சூரிய தோஷம் நீங்க.....

ஞாயிற்றுக்கிழமை விரதம் சிறப்பானது.

காலை சூரியோதயத்தின்போது ஸ்நானம் செய்தவுடனே தூய்மையான நிலத்திலே நின்று சூரியனைப் பார்த்து வணங்கி சிவப்புப் பூக்களை ஒவ்வொன்றாக அவருக்குச் சமர்ப்பிக்கும் பாவனையில் நிலத்தில் வைத்து வீழ்ந்து வணங்கவேண்டும். இவ்வாறு ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று அல்லது இருபத்தொரு தரமாவது வணங்கவேண்டும்.

ஞாயிற்றுக் கிழமைகளில் செந்தாமரைப் பூ அல்லது வில்வம், கோதுமை, வெற்றிலை, பாக்கு, பழம் இவற்றைச் சூரியனுக்கு முன்னே ஒரு தட்டில் அல்லது வாழை இலையில் வைத்து முக்கூட்டெண்ணெய் (தேங்காயெண்ணெய், நல்லெண்ணெய், இலுப்பெண்ணெய்) விளக்கேற்றி வைத்துக் கர்ப்பூர தீபாராதனை செய்து ஒன்பது, பதினொன்று அல்லது இருபத்தொரு முறை வலம்வந்து வழிபடவேண்டும். வலம் வரும்போது சூரியனுக்குரிய மந்திரங்கள், துதிகளைச் சொல்லிவரலாம்.

கோதுமை சேர்ந்த பலகாரமும் கடுகு, காரம் சேர்ந்த நெய்ச் சாதமும் செந்தாமரை இலையில் அல்லது எருக்கலம் இலையில் வைத்து நிவேதனம் செய்யலாம். சர்க்கரைச் சாதம் சூரியனுக்குப் பிரியமானதே.

சூரியனுக்கு வெள்ளைச் சாம்பிராணியால் தூபமிடுதல் சிறப்பு.

கோதுமையைத் தலையணையின் கீழ் வைத்துப் படுத்தபின் மறுநாள் ஏழைகளுக்குத் தானம் செய்யலாம்.

## சந்திரக் கிரக தோஷம் நீங்க............

திங்கட்கிழமை விரதம், திருவோண விரதம் சிறப்பானவை.

சாளக்கிராம பூஜையும் செய்யலாம்.

திங்கட்கிழமை மாலைவேளையில் வெள்ளல்லிப்பூ அல்லது மல்லிகைப் பூ, நெல், வெற்றிலை, பாக்கு, பழம் இவற்றைச் சந்திரனுக்கு முன்னே ஒரு தட்டில் அல்லது வாழை இலையில் வைத்து முக்கூட்டெண்ணெய் (தேங்காயெண்ணெய், நல்லெண்ணெய், இலுப்பெண்ணெய்) விளக்கேற்றி வைத்துக் கர்ப்பூர தீபாராதனை செய்து ஒன்பது, பதினொன்று அல்லது இருபத்தொரு முறை வலம்வந்து வழிபடவேண்டும். வலம் வரும்போது சந்திரனுக்குரிய மந்திரங்கள், துதிகளைச் சொல்லிவரலாம்.

தயிர்ச்சாதமும் தித்திப்புப் பலகாரங்களும் (அரிசிமாப் பலகாரம் நன்று) வெண்டாமரை இலையில் வைத்து நிவேதனம் செய்யலாம். நெய் கலந்த பாயசமும் சந்திரனுக்குப் பிரியமானதே.

சந்திரனுக்கு நெய்யினாலேயே தூபமிடுதல் நன்று.

பச்சரிசி தானம் செய்யலாம்.

## செவ்வாய் தோஷம் நீங்க............

செவ்வாய்க்கிழமை விரதம், சிறப்பானது.

செவ்வாய்க்கிழமை இரவில் சண்பகம் அல்லது ஏதாவது சிவப்புநிறப் பூ, துவரை, வெற்றிலை, பாக்கு, பழம் இவற்றைச் செவ்வாய்க்கு முன்னே ஒரு தட்டில் அல்லது வாழை இலையில் வைத்து முக்கூட்டெண்ணெய் (தேங்காயெண்ணெய், நல்லெண்ணெய், இலுப்பெண்ணெய்) விளக்கேற்றி வைத்துக் கர்ப்பூர தீபாராதனை செய்து ஒன்பது, பதினொன்று அல்லது இருபத்தொரு முறை வலம்வந்து வழிபடவேண்டும். வலம் வரும்போது செவ்வாய்க்குரிய மந்திரங்கள், துதிகளைச் சொல்லிவரலாம்.

துவரை சேர்ந்த உணவுகள், துவர்ப்பான பச்சடி முதலியவற்றுடன் வெண்ணெய் சேர்ந்த சாதமும் நிவேதனம் செய்யலாம். கேழ்வரகுத் தானிய உணவும் செவ்வாய்க்குப் பிரியமானதே.

செவ்வாய்க்கு வெள்ளைக் குங்கிலியத் தூபமிடுதல் நன்று.

துவரை தானம் செய்யலாம்.

## புதன் தோஷம் நீங்க............

ஏகாதசி விரதம் சிறப்பானது.

புதன்கிழமை இரவில் வெண்காந்தள் பூ அல்லது வெள்ளைச் சாமந்திப் பூ, பயறு, வெற்றிலை, பாக்கு, பழம் இவற்றைச் புதனுக்கு முன்னே ஒரு தட்டில் அல்லது வாழை இலையில் வைத்து முக்கூட்டெண்ணெய் (தேங்காயெண்ணெய், நல்லெண்ணெய், இலுப்பெண்ணெய்) விளக்கேற்றி வைத்துக் கர்ப்பூர தீபாராதனை செய்து ஒன்பது, பதினொன்று அல்லது இருபத்தொரு முறை வலம்வந்து வழிபடவேண்டும். வலம் வரும்போது புதனுக்குரிய மந்திரங்கள், துதிகளைச் சொல்லிவரலாம்.

சர்க்கரை சேர்ந்த பொங்கல் சாதம், பயறு சேர்ந்த பலகாரங்கள், பயறு சார்ந்த உணவுகள் நிவேதனம் செய்யலாம்.

புதனுக்கு அகில்கட்டையால் தூபமிடுதல் சிறப்பு.

நெல்லி வற்றல் தேய்த்து ஸ்நானம் செய்தல், நெல்லிக்கனி அருந்துதல் முதலியனவும் நன்மை தரும்.

பயறு தானம் செய்யலாம்.

**குரு தோஷம் நீங்க.............**

வியாழக்கிழமை விரதம் சிறப்பானது.

தட்சணாமூர்த்தி வழிபாடு செய்யலாம்.

வியாழக்கிழமை இரவில் முல்லைப்பூ அல்லது மல்லிகைப் பூ, கடலை, வெற்றிலை, பாக்கு, பழம் இவற்றைச் வியாழனுக்கு முன்னே ஒரு தட்டில் அல்லது வாழை இலையில் வைத்து முக்கூட்டெண்ணெய் (தேங்காயெண்ணெய், நல்லெண்ணெய், இலுப்பெண்ணெய்) விளக்கேற்றி வைத்துக் கர்ப்பூர தீபாராதனை செய்து ஒன்பது, பதினொன்று அல்லது இருபத்தொரு முறை வலம்வந்து வழிபடவேண்டும். வலம் வரும்போது வியாழனுக்குரிய மந்திரங்கள், துதிகளைச் சொல்லிவரலாம்.

குருபகவானுக்கு மட்டிப்பாலை தூபமிடல் நன்று.

வெண்சாதம், கடலை மற்றும் கடலை சேர்ந்த பலகாரங்களும் நிவேதனம் செய்யலாம். தயிர்ச்சாதமும் குருவுக்குப் பிரியமானதே.

கடலை தானம் செய்யலாம்.

**சுக்கிர தோஷம் நீங்க.............**

வெள்ளிக்கிழமை விரதம் சிறப்பானது.

மஹாலட்சுமியை வழிபாடு செய்யலாம்.

வெள்ளிக்கிழமை இரவில் வெண்டாமரைப்பூ அல்லது நந்தியாவட்டைப் பூ, மொச்சை, வெற்றிலை, பாக்கு, பழம் இவற்றைச் சுக்கிரனுக்கு முன்னே ஒரு தட்டில் அல்லது வாழை இலையில் வைத்து முக்கூட்டெண்ணெய் (தேங்காயெண்ணெய், நல்லெண்ணெய், இலுப்பெண்ணெய்) விளக்கேற்றி வைத்துக் கர்ப்பூர தீபாராதனை செய்து ஒன்பது, பதினொன்று அல்லது இருபத்தொரு முறை வலம்வந்து வழிபடவேண்டும். வலம் வரும்போது சுக்கிரனுக்குரிய மந்திரங்கள், துதிகளைச் சொல்லிவரலாம்.

வெண்ணெய் சேர்ந்த சாதமும் இனிப்புப் பலகாரங்களும் வெண்தாமரை இலையில் வைத்து நிவேதனம் செய்யலாம்.

சுக்கிரனுக்கு வில்வக் கட்டையால் தூபமிடல் நன்று.

சுதர்சன வழிபாடு, சுதர்சன ஹோமம் செய்யலாம்.

மொச்சை தானம் செய்யலாம்.

**சனி தோஷம் நீங்க.............**

சனிக்கிழமை விரதம் சிறப்பானது.

ஆஞ்சனேயர் அல்லது ஐயப்பனை வழிபாடு செய்யலாம்.

சனிக்கிழமை இரவில் கருங்குவளை அல்லது வேறு நீல நிறப் பூ, எள்ளு, வெற்றிலை, பாக்கு, பழம் இவற்றைச் சனிக்கு முன்னே ஒரு தட்டில் அல்லது வாழை இலையில் வைத்து முக்கூட்டெண்ணெய் (தேங்காயெண்ணெய், நல்லெண்ணெய், இலுப்பெண்ணெய்) விளக்கேற்றி வைத்துக் கர்ப்பூர தீபாராதனை செய்து ஒன்பது, பதினொன்று அல்லது இருபத்தொரு முறை வலம்வந்து வழிபடவேண்டும். வலம் வரும்போது சனிக்குரிய மந்திரங்கள், துதிகளைச் சொல்லிவரலாம்.

எள்ளுச்சாதம், எள்ளுருண்டை மற்றும் கசப்புச் சுவை சார்ந்த உணவுகளும் நிவேதனம் செய்யலாம். இவற்றைக் காகத்துக்கும் வைக்கலாம்.

சனிக்குச் சாம்பிராணித் தூபமிடல் நன்று.

எள்ளு தானம் செய்யலாம்.

**ராகு தோஷம் நீங்க.............**

செவ்வாய், வெள்ளிக் கிழமை விரதங்கள் சிறப்பானவை.

துர்க்கை வழிபாடு செய்யலாம்.

செவ்வாய்க்கிழமை அல்லது வெள்ளிக் கிழமை ராகு காலத்தில் மந்தாரைப்பூ அல்லது வேறு மஞ்சள் நிறப் பூ, உழுந்து, வெற்றிலை, பாக்கு, பழம் இவற்றைச் ராகுவுக்கு முன்னே ஒரு தட்டில் அல்லது வாழை இலையில் வைத்து முக்கூட்டெண்ணெய் (தேங்காயெண்ணெய், நல்லெண்ணெய், இலுப்பெண்ணெய்) விளக்கேற்றி வைத்துக் கர்ப்பூர தீபாராதனை செய்து ஒன்பது, பதினொன்று அல்லது இருபத்தொரு முறை வலம்வந்து வழிபடவேண்டும். வலம் வரும்போது ராகுவுக்குரிய மந்திரங்கள், துதிகளைச் சொல்லிவரலாம்.

புளிச்சாதம், உழுந்து சேர்ந்த பலகாரங்கள் முதலியன நிவேதனம் செய்யலாம்.

ராகுவுக்குக் கொம்பரக்குத் தூபமிடல் நன்று.

உழுந்தைக் குவித்து வைத்து அதன்மேல் அகல்விளக்கு ஏற்றிவைத்து அதைச் சூழ அறுகம்புல் வைத்து வழிபடுவது நன்று.

உழுந்து தானம் செய்யலாம்.

**கேது தோஷம் நீங்க.............**

வெள்ளிக்கிழமை விரதம் சிறப்பானது.

விநாயகரை வழிபாடு செய்யலாம்.

வெள்ளி அல்லது ஞாயிற்றுக் கிழமை வெள்ளை அலரிப்பூ, கொள்ளு, வெற்றிலை, பாக்கு, பழம் இவற்றைச் கேதுவுக்கு முன்னே ஒரு தட்டில் அல்லது வாழை இலையில் வைத்து முக்கூட்டு எண்ணெய் (தேங்காயெண்ணெய், நல்லெண்ணெய், இலுப்பெண்ணெய்) விளக்கேற்றி வைத்துக் கர்ப்பூர தீபாராதனை

செய்து ஒன்பது, பதினொன்று அல்லது இருபத்தொரு முறை வலம்வந்து வழிபடவேண்டும். வலம் வரும்போது கேதுவுக்குரிய மந்திரங்கள், துதிகளைச் சொல்லிவரலாம்.

சித்திரான்னம் என்று சொல்லப்படும் வகையில் பல்வேறு வகைச் சாதங்ளை அல்லது எல்லாக் காய்கறிகளையும் சேர்த்துச் செய்த கறிச் சாதத்தையோ நிவேதனம் செய்யலாம்.

கேதுவுக்குக் கொம்பரக்குத் தூபமிடல் நன்று.

கொள்ளு தானம் செய்யலாம்.

உருவளர் **பாநு, திங்கள்** உத்தமர் **செவ்வாய்,** **புந்தி**
**குருமணி** கொடையோன் **வெள்ளி** குலவிடும் **சனீசன்** இன்பம்
தருமுயர் **இராகு** ஞானத் தவம்தரு **கேது**நாதர்
மருமலர்க் கழல்கள் நாளும் மனத்தினில் இருத்தி வாழ்வாம்.

## நவக்கிரக கோலங்கள்



# கௌமாரம்

முருகன் - குமரன் - கௌமாரம்.

"நமது சக்தி அறுமுகன் அவனும் யானும் பேதகம் அன்றாம்" எனக் கந்தபுராணத்தில் சிவபிரான் கூற்றாகவே வருதற்கிணங்கச் சிவபிரானின் ஒரு தோற்றப்பொலிவாகவே கந்தனைக் காணவேண்டும். 'சுப்ரம்மண்யோம்" என வேதங்கள் முழங்குவதற்கிணங்க வேத சிவாகமங்களில் தனித்துவமான வழிபாட்டுக்குரிய ஒரு மூர்த்தமாக சுப்பிரமணியர் என்னும் கந்தப் பெருமான் அருள்பாலிக்கிறார். சிவபிரானது மாஹேஸ்வர மூர்த்தங்களுள் முதன்மையான சோமாஸ்கந்த வடிவத்திலும் கந்தன் அம்மையப்பரோடு காட்சியளிப்பது குறிப்பிடத் தக்கது.

பாலசுப்பிரமணியர், வள்ளி தெய்வயானை சமேதராக முத்துக் குமாரசுவாமி, ஆறுமுகப் பெருமானாகிய ஷண்முகர் எனும் மூன்று திருவடிவங்களும் நமது ஆலயங்களில் முக்கியத்துவம் பெறும் முருகனின் வடிவங்களாகும். ஷண்முகர் ஒரு ராஜமூர்த்தமாக, தேரில் உலா வருப்வராக, சூரன் போருக்குரியவராக இருப்பதுடன் சண்முகார்ச்சனை என்னும் சிறப்பு வழிபாட்டுக்குரியவராகவும் விளங்குகிறார். கலியுக வரதன் என்ற பெயருக்கேற்றாற்போல இக்கால வழிபாட்டில் முருகன் முதன்மை பெறுகிறார்.

இம்மூன்று வடிவங்கள் மாத்திரமல்லாமல் முருகனுக்குரிய பதினாறு சிறப்புத் திருவுருவங்களை நூல்கள் பேசுகின்றன. சரவணபவ எனும் மந்திரத்திற்கு உரியவராகிய சரவணபவனுக்கு ஆறு படைவீடுகள் என்ற சிறப்பும் ஆறு கந்தஷஷ்டி கவசங்களும் அதற்கும் மேலாக சண்முக கவசம் என்னும் கவசமும் அடியார்களுக்கு விருப்பமான பிரார்த்தனைப் பாடல்கள். ஆறுநாள் நோன்பாகிய ஸ்கந்தஷஷ்டியானது பக்திபூர்வமாகத் தமிழகூறும் நல்லுலகெங்கும் அனுஷ்டிக்கப்படுவது.

அருணகிரிநாதர் முருகன் அடியாராகவே வாழ்ந்து திருப்புகழ், கந்தரனுபூதி, கந்தரலங்காரம், வேல்விருத்தம், மயில் விருத்தம் முதலிய பல நூல்களை அருளியிருக்கிறார். பாம்பன் சுவாமிகள், தேவராஜ சுவாமிகள் ஆகியோர் இவ்வழியில் வந்தவர்கள்.

சங்க காலத்திலேயே குறிஞ்சிக் கடவுளாக விளங்கிய கந்தப் பெருமானுக்கு திருமுருகாற்றுப்படை உருவாகிவிட்டது. ஸ்காந்தம் என்ற வடமொழிப் புராணமும் தமிழில் எழுந்த கந்தபுராணமும் முருக வழிபாட்டை மேம்படுத்துவன. திருச்செந்தூர்ப் புராணமும் உபதேச காண்டமும் இவற்றின் வழிநூல்கள்போல் அமைந்து சிறப்படைகின்றன. சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துஸ்வாமி தீக்ஷிதர் ஒரு முருக பக்தர் ஆவார். அவரது கவி முத்திரையே 'குருகுக' என்றே அமைகிறது.

கடம்ப மலர் முருகனுக்குரியது. அதனால் கடம்பன் என்றே அவன் போற்றப்படுகிறான்.

தமிழகத்தின் ஆறுபடை வீடுகளுக்கிணையாக ஈழத்திலும் கதிர்காமம், செல்லச் சந்நிதி, நல்லூர், பொலிகண்டி கந்தவனக்கடவை, மாவிட்டபுரம், திருகோணமலை வில்லூன்றி முதலிய முருகன் தலங்கள் புகழ்பெற்று விளங்குகின்றன.

## முருகனும் தமிழும்

தமிழர்களின் தனிப் பெருந் தெய்வமாக முருகனை வழிபடுவதற்குக் காரணம் உண்டு.

முருகப் பெருமானுக்கு முகங்கள் ஆறு. தமிழிலும் வல்லினம் ஆறு, மெல்லினம் ஆறு, இடையினம் ஆறு.

பன்னிரண்டு தோள்கள் உடையவன் அவன். தமிழிலும் உயிர் எழுத்துக்கள் 12.

முருகன் பதினெட்டுக் (6x3=18) கண்களை உடையவன் அதே போல தமிழிலும் 18 மெய்யெழுத்துக்கள் உள்ளன.

முருகனின் திருக்கரத்தில் உள்ளவேல் வேறு எந்தத் தெய்வத்திற்கும் இல்லாத ஆயுதம். அது போல தமிழில் உள்ள ஆய்த எழுத்து வேறு எந்த உலக மொழிகளிலும் இல்லை. ஆய்த எழுத்தின் வடிவம் வேலை ஒத்ததாகும். இச்சை, கிரியை, ஞானம் என்ற மூன்று தன்மைகளையும் பொருந்தியது வேலாயுதம். ஆய்த எழுத்தும் இவற்றைக் குறிக்கும் வகையில் மூன்று புள்ளிகளைக் (ஃ) கொண்டது.

### மாவிளக்கு

மாவிளக்கு என்பது முருக வழிபாட்டுடன் தொடர்பான ஒன்று. மலை சார்ந்த இடமாகிய குறிஞ்சி நிலத் தெய்வம் முருகன். அந்த இடத்தின் விசேட விளைபொருட்கள் தேனும் தினைமாவும். இவ்விரண்டையும் சேர்த்து மேலும் சுவை சேர்க்க வாழைப்பழமும் சர்க்கரையும் சேர்த்துப் பிசைந்து அதனால் சிறு அகல் விளக்குப் போல் செய்வார்கள். அதில் நெய் வார்த்து திரி இட்டு இறைவன்முன் ஏற்றி வைப்பார்கள். நன்கு சுடர்விட்டு எரியும்போது அந்த வெப்பத்தில் மா வெந்து நெய் வாசனையுடன் சுவையாக இருக்கும்.

இறைவன் முன் ஏற்றப்படும் நெய்விளக்காகவும், அதன்மூலம் தயாராகிய சுவையான நிவேதனமாகவும் அமையும் சிறப்பு இதற்குண்டு. மாவினால் உருவாகிய விளக்கு என்பதனால் மாவிளக்கு எனப்படுகிறது.

# சுப்ரம்மண்ய ஷோடச மூர்த்திகள்
## (குமாரதந்த்ரம்)



ஸ்ரீ சோமாஸ்கந்தர்

ஞானசக்தி தர ஸ்கந்தோ தேவ சேனா பதிஸ்ததா
சுப்ரம் மண்ய கஜாரூடஸ் சரகானன சம்பவ
கார்த்திகேய குமாரஸ்ச ஷண்முகஸ் தாரகாந்தக
ஸேநாநீ ப்ரஹ்ம சாஸ்தா ச வல்லீ கல்யாண சுந்தர
பாலஸ்ச க்ரௌஞ்ச பேதா ச சிகி வாஹன ஏவ ச
ஏதானி ஸ்வாமி நாமானி ஷோடஸ ப்ரத்யஹம் நர
யஹ் படேத் ஸர்வ பாபேப்ய ஸமுச்யேத மஹாமுனே.

# அஷ்ட பைரவர்


அசிதாங்கபைரவர்


ருரு பைரவர்


சண்ட பைரவர்


குரோதன பைரவர்


கபால பைரவர்


உன்மத்த பைரவர்


பீஷண பைரவர்


சம்ஹார பைரவர்

## வாருணபத்ததியில் கண்டபடி அஷ்ட பைரவர் விபரம்

| எண் பெயர் | திக்கு | சக்தி | வாகனம் | நிறம் | ஆயுதம் | பொது |
|---|---|---|---|---|---|---|
| 1. அசிதாங்க பைரவர் | கிழக்கு | பிராமி | ஹம்ஸம் | வெண்மை | கத்தி, பாநபத்திரம், ருத்திராக்ஷமாலை, கமண்டலம் | ஒன்று முதல் எழுவரும் முக்கண்ணும், சிகையும் சாந்தகுண முடையவர், வரதர், குமாரர், திகம்பரர் கிருபாமூர்த்தி புன்சிரிப்பு உடையனர். |
| 2. ருருபைரவர் | தென்கிழக்கு | மஹேஸ்வரி | விருஷபம் | படிகநிறம் | டங்கம், கத்தி, பாநபாத்திரம், கத்தி | |
| 3. சண்டபைரவர் | தெற்கு | கௌமாரி | மயில் | பொன்நிறம் | வில், பாணம், கத்தி, பாநபாத்திரம் | |
| 4. குரோதன பைரவர் | தென்மேற்கு | வைஷ்ணவி | கருடன் | கறுப்பு | சங்கம், சக்கரம், கதை பாநபாத்திரம் | |
| 5. உன்மத்த பைரவர் | மேற்கு | வாராஹி | குதிரை | பொன்நிறம் | கத்தி, உலக்கை, கேடயம், கபாலம் | |
| 6. கபால பைரவர் | வடமேற்கு | இந்திராணி | யானை | பத்மராககாந்தி | பரசு, வஜ்ரம், கத்தி, பாநபாத்திரம் | |
| 7. பீஷண பைரவர் | வடக்கு | சாமுண்டி | சிங்கம் | சிவப்பு | சூலம், இரும்பு, உலக்கை, கபாலம், கத்தி | |
| 8. ஸம்ஹார பைரவர் | வடகிழக்கு | சண்டிகை | நாய் | வெண்மை | சூலம், டமருகம், சங்கம், சக்கரம், கதை, கத்தி, கபாலம், கட்வாங்கம் பாசம், அங்குசம் | முக்கண், 10 கை, சர்ப்பத்தை பூணூலாகத் தரிப்பவர், குமாரர், திகம்பரர், தெத்துப் பற்களால் பயங்கர முகமுடையவர் **அஷ்ட ஐசுவரியத்தைக் கொடுப்பவர்** |

(இந்த எட்டு பைரவர் திருமேனி போன்று ஒவ்வொன்றிலும் எட்டுஎட்டாக தோற்றமடைந்து 64 ஆக உள்ளன. இந்த 64 பைரவர்களைப் பற்றி சிவாகமங்கள் கூறுகின்றன.)

# சப்தமாதர்

இவர்கள் அந்தகாசூரவதத்தின் பொருட்டு சிவனால் தேவர்களின் சக்தியிலிருந்து தோற்று விக்கப்பட்டவர்கள் அஷ்ட வைரவர்களுக்கு தேவியர்களாக இருந்து காவல் தெய்வங்களாக காத்தருள்பவர்கள்.

பல சிவாலயங்களில், அம்மன் ஆலயங்களில் எல்லாம் சப்த கன்னியர் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் பிராமி, மகேசுவரி, கௌமாரி, வைஷ்ணவி, வராகி, இந்திராணி, சாமண்டி என பெயர் பெற்றவர்கள்! இவர்களின் பதியாக அசிதாங்க பைரவர், உருபைரவர், கண்ட பைரவர், குரோதன பைரவர், உன்மத்த பைரவர், கபால பைரவர், பீஷண பைரவர் அமைந்துள்ளனர். இவர்களில் எட்டாவது சப்தமாதரராக சண்டிகை சம்கார பைரவருக்கு உடனிருந்து அருள் பாலிக்கிறாள்!



ஊர் எல்லைகளில் சப்த கன்னியரை ஸ்தாபித்து வழிபட்டால் அவ்வூர் என்றும் அவர்களால் காக்கப்படும் என்றும் கூறுவர்.



# சிவனின் வைரவத் திருக் கோலங்கள்



### ஸ்வர்ணாகர்ஷண வைரவர்.

பைரவரின் மிகச் சாந்தமான வடிவம் இதுவாகும். பொன் பொருள் வேண்டிப் பணியும் உலகியல் நோக்குடைய அடியவர்களுக்கு வேண்டியன வேண்டியாங்கு ஈயும் சிறப்பியல்பு உடையவர்.

### ஆபத்தோத்தாரண மூர்த்தி

எல்லா ஜீவன்களுக்கும் பரமாத்மாவான சிவனால் மட்டுமே அவர்களின் குறைகளைக்களைய முடியும் வேறு துணையாருமில்லை. ஆபத்து காலத்தில் தமது துயர்களைக் கூறி யாசித்தால் அவர்கள் துன்பத்தைத் தொலைத்து சகாயஞ் செய்யும்படி எழுந்தருளிய திருக் கோலந்தான் ஆபத்தோத்தாரண மூர்த்தம்.





## வடுக மூர்த்தி

பிரமன் தன்னைத் துன்புறுத்திய முண்டாசுரனுக்கு அஞ்சி முறையிட்டபோது அம் மலரோனது வேண்டுகோளுக்கிரங்கி விடையூர்தி அவ்விடுக்கண் தீர்ப்பன் கருதி விடுத்த மூர்த்தமே வடுக மூர்த்தம் எனப்படும்.



## க்ஷேத்திரபாலக மூர்த்தி

க்ஷேத்திரம் – பூமி; பாலகர் – காப்பவர் எனவே க்ஷேத்ரமாகிய உலகத்துக்கு ஊழிக் காலத்தில் உற்ற துன்பத்தைத் தீர்த்து ரட்சித்தருளினமையால் உமைமணவாளனுக்கு க்ஷேத்திர பாலக மூர்த்தி என்ற நாமமும் உண்டு.



## பிரம்ம சிரச்சேத மூர்த்தி

தானே பிரமமெனத் தருக்குற்ற பதுமனது ஐந்தாவது தலையை நகநுதியா வரிந்தமையின் சங்கரருக்கு ப்ரஹ்ம ஸிரச்சேத மூர்த்தி என்ற பெயரும் உண்டாயிற்று.

– *'சிவ பராக்கிரமம்'* – நூலிலிருந்து.

# பைரவ உபாசனையின் பயன்கள்

உலகில் தோன்றி வாழ்ந்து வரும் சகலமான உயிரினங்களும், வானத்தில் உலாவருகின்ற சூரியன் முதலான ஒன்பது கோள்களும் காலச்சக்கரத்தின் ஆளுகைக்கு உட்பட்டவையே. அந்தக் காலச்சக்கரத்தை இயக்கும் பரம் பொருள் காலபைரவர் எனப்படுவார். சில கட்டுப்பாடுகளையும் மீறி நன்மைகளைச் செய்பவரும் இவரே.

கோள்களின் சஞ்சார காலத்தில் அவ்வப்பொழுது மனிதர்களுக்குண்டாகும் இன்னல்களை விலக்கி, அவர்களுக்கு நன்மைகளைச் செய்பவரும் இவரே. இதன் காரணமாக இவருக்கு ஆபதுத்தாரணர் என்ற பெயரும் விளங்கி வருகிறது. இவரே, மகாகாலர், க்ஷேத்திரபாலர், சட்டைநாதர் என்னும் பெயர்களாலும் அழைக்கப்படுகிறார்.

ஏதேனும் ஆபத்துகள் ஏற்படும் காலங்களில் பைரவரை வணங்கி அர்ச்சனை, பூஜை செய்வதால் எல்லா வகையான தொல்லைகளும் விலகி நன்மைகள் ஏற்படும்.

## குழந்தை பாக்கியம் பெற:

குழந்தை பாக்கியம் கிடைக்காத தம்பதியர் பைரவப் பெருமானுக்கு, ஆறு தேய்பிறை அஷ்டமி நாள்களில், சிவப்பு அரளியால் அர்ச்சனை செய்தால், விரைவில் மகப்பேறு கிட்டும்.

## வறுமை நீங்க:

ஒவ்வொரு வெள்ளிக்கிழமை நாளிலும் மாலை வேளையில் வில்வ இலைகளாலும், வாசனை நிறைந்த பிற மலர்களாலும் பைரவ மூர்த்திக்கு சகஸ்ரநாம அர்ச்சனை செய்து வந்தால் வறுமைத் துன்பத்திலிருந்து மீண்டு வளம் பெறலாம்.

## இழந்த சொத்துகளைத் திரும்பப் பெற:

சிறிதளவு மிளகை எடுத்து ஒரு சிறிய துணியில் கட்டி முடிச்சிட்டு பைரவ மூர்த்திக்கு முன்னால், ஓர் அகல் விளக்கில் வைத்து சிறிது நல்லெண்ணெய் ஊற்றி தீபமேற்றி அர்ச்சனை செய்தால் இழந்த பொருளோ, சொத்துகளோ எதை நினைத்து அர்ச்சனை செய்கிறோமோ, அவை விரை வில் திரும்பக் கிடைக்கும்.

## வழக்குகளில் வெற்றிபெற:

பைரவர் திருமேனியின் முன் அமர்ந்து (வீட்டில் என்றால் பைரவரின் படத்தின் முன்னால்) ஒன்பது முறை பைரவருக்கு அர்ச்சனை செய்து தயிர் அன்னம், தேங்காய், தேன் ஆகியவற்றை நிவேதனமாகப் படைத்து வழிபட்டால் வழக்குகளில் வெற்றி உண்டாகும். எதிரிகளின் தொல்லை நீங்கும். செய்துவரும் வியாபாரத்தில் கணிசமான லாபம் கிட்டும். பில்லி, சூனியம், போன்றவற்றின் ஏவலால் ஏற்பட்டுள்ள தொல்லைகள் முற்றிலுமாக நீங்கும்.

## திருமணம் விரைவில் நடைபெற:

உரிய வயது வந்தும் திருமணம் ஆகாது தடைபட்டு வரும் ஆண், பெண் இருபாலரும் ஞாயிற்றுக்கிழமை நாள் களில் இராகு காலத்தில் பைரவருக்கு உருத்திராபிஷேகமோ விபூதி அபிஷேகமோ செய்து, வடை மாலை சாத்தி சகஸ்ர நாம அர்ச்சனை செய்து வழிபட்டு வந்தால் தடைகள் யாவும் நீங்கி, விரைவில் திருமணம் நடைபெறும்.

## நல்ல குருநாதரை அடைய:

ஆகம தந்திர சாத்திரங்களில் வல்லவரான ஒரு குரு அமையவேண்டுமென விரும்புபவர்கள், பைரவ மூர்த்தியை இடைவிடாது தொடர்ந்து வழிபட்டு வருவார்களாயின், அவர்களுக்கு உயர்ந்த ஞானவானான குரு அமைந்து, உபாசனா மார்க்கத்தில் முன்னேற்றம் கிட்டும்.

## சனிபகவானால் ஏற்படும் கஷ்டங்கள் நீங்க:

சனீஸ்வர பகவானுக்குக் குருவாக விளங்கி அருள் புரிபவர் பைரவர். பைரவ மூர்த்திக்கு சனிக்கிழமைகளில் சகஸ்ரநாம அர்ச்சனை செய்துவந்தால், சனீஸ்வர பகவான் மகிழ்ச்சியடைவார். ஏழரைச் சனி, அஷ்டமச் சனி, என்று கூறப்படும் சனிபகவானால் ஏற்படும் இன்னல்கள் யாவும் அகன்று, நன்மைகளும், நலமான நல்வாழ்வும் உண்டாகும்.

இவ்வளவு பெருமைகளுக்குரிய பைரவ மூர்த்தியை அன்றாடம் வழிபட்டு நலமும், வளமும் பெறுவோம்.



# பைரவர் வழிபாடு

உலகில் அந்தகார இருளை நீக்கி, ஒளியைக் கொடுப்பவர் பைரவர். அதுபோல பிரளய முடிவில் ஒடுக்கத்தில் இருப்பவரும் பைரவரே. அதுமட்டுமல்லாது உலகக் காவல் தெய்வமாக விளங்குபவரும் பைரவரே. இப்படி படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் ஆற்றும் இந்த பைரவரின் வழிபாடு வடக்கேயிருந்து வந்த கபாலிக வழிபாட்டின் ஒரு கூறேயாகும்.

அனைத்து சிவாலயங்களில் பரிவார தெய்வ வழிபாடாக வழிபடப்படும் இந்த பைரவ வழிபாடு இல்லங்களில் திரிசூல வழிபாடாகவும் போற்றப்படுகிறது. வீடுகளில் காவல் தெய்வமான பைரவர் வடிவங்களை சிலைகளாகவோ படமாகவோ வைத்து வழிபடுவதற்குப் பதில் வீட்டின் சுவரில் திரிசூலத்தை வரைந்து அதனருகில் திருவிளக்கேற்றி வழிபடுகின்றனர்.

அனைத்து சிவாலயங்களிலும் வழிபாடு ஆரம்பம் என்பது காலையில் சூரியனிடமிருந்து தொடங்கி அர்த்தசாமப் பூசையாக பைரவருடன் முடிவடைகிறது. இரவு அர்த்தசாமப் பூசை முடிந்ததும் பைரவருக்கான சிறப்பு வழிபாடுகள் செய்து ஆலயத்தின் கதவுகளை மூடி ஆலய சாவிக்கொத்தை அவரின் காலடியில் வைப்பது வழக்கம். பாதுகாப்பற்ற இந்நாளில் இப்படி சாவிகளை வைப்பதைத் தவிர்த்து பூசை முடிந்ததன் அடையாளமாக கைமணியையும் அபிஷேக கலசம் அல்லது கைச்செம்பையும் வைக்கின்றனர்.

ஆலயங்களில் நடைபெறும் வருடாந்திர பிரமோற்சவத்திற்கு முன்னும் பின்னும் பைரவருக்குச் சிறப்பு வழிபாடுகள் செய்யப்படுகின்றன. விசேஷ தினங்களில் இவருக்கு நெய்யாபிஷேகம் சிறப்பாகச் செய்யப்படுகிறது. அதுமட்டுமல்லாது, அந்த விசேஷ தின பூசையில் எட்டுவித பட்சணங்களும் எட்டுவித அன்னங்களும், நைவேத்தியப் பொருட்களாக நிவேதிக்கப்படுகின்றன. இன்னும் எட்டுவித மலர்களால் அர்ச்சனை செய்து எட்டுவித ஆரத்திகளும் செய்யப்படுகின்றன.

**வழிபாட்டிற்கு உகந்த நேரம்**

பைரவருக்குரிய வழிபாட்டு நேரம் நள்ளிரவாகும். இந்த அகால நேரத்தில் பராசக்தியானவள் பைரவி என்னும் பெயரில் நடமாடுகிறாராம். அவளுடன் இறைவனும் பைரவராக தலத்தை வலம் வருவாராம். அதனால் சித்தர்கள் அந்த நள்ளிரவு வேளையில் திரிபுர பைரவியையும் பைரவரையும் தியானிக்கிறார்களாம்.

**பைரவ வழிபாட்டுக்கு ஏற்ற நாட்கள்**

ஒவ்வொரு மாதமும் பரணி நட்சத்திரத்தில் பைரவ விரதம் இருந்து வழிபட்டால் எந்தத் துன்பமும் நம்மை அணுகாது. சித்திரை பரணி மற்றும் ஐப்பசி பரணியில் பைரவ விரதம் இருப்பது இன்னும் சிறப்பளிக்கும். தை மாத செவ்வாய் மற்றும் வெள்ளிக்கிழமைகளிலும் பைரவரை வழிபடுவது விசேஷமாகக் கருதப்படுகிறது. அன்றையதினம் அவருக்குப் பொங்கல் வைத்து சிவப்புப்பட்டாடை அணிவித்து செவ்வரளி அல்லது செம்பருத்தி மலர்களால் மாலை அணிவித்து வடை மாலை சாத்தி முக்கனிகள் படையலிட்டு பூசை செய்து சிறப்பான பலன்களைப் பெறுகின்றனர்.

கிராமத்து பூசைகளில் ஸ்ரீ பைரவரை மகிழ்விக்க பலியிடுவதற்குப் பதிலாக வெண்பூசணி வெட்டி வடைமாலை சாத்துகின்றனர். இந்த பைரவர் வழிபாட்டில் தேங்காய்ப்பழ தாம்பூலத்துடன் எலுமிச்சம் பழமும் சிற்றன்ன சாதங்களும் முக்கியமானவைகளாகும்.

**பைரவர் நோன்பு**

திருக்கார்த்திகையிலிருந்து 21 நாட்களும் பைரவ நோன்பு கடைப்பிடிக்கப்படுகிறது. பைரவ நோன்பு இருக்கும் பக்தர்கள் நாளுக்கு ஓரிழையாக 21 நூல் இழைகளை எடுத்து வைப்பர். பின்னர் 21ஆம் நாள் அந்த நூலிழைகளைத் திரியாகத் திரித்து, மாவிளக்கிலிட்டு நெய் தீபமேற்றி பைரவரை வழிபடுவர். அன்றைய தினம் பைரவருக்குச் சிறப்பு அர்ச்சனைகள் செய்யப்படும்.



# சங்கீதம்

Suddha Madh-Yama Melas
Prati Madh-yama Melas

1 INDU — Ra Ga
1 Kanakangi
2 Ratnangi
3 Ganamurti
4 Vanaspati
5 Manavati
6 Tanarupi

2 NETRA — Ra Gi
7 Senavati
8 Hanumatodi
9 Dhenuka
10 Natakapriya
11 Kokilapriya
12 Rupavati

3 AGNI — Ra Gu
13 Gayakapriya
14 Vakulabharanam
15 Mayamalavagaula
16 Chakravakam
17 Suryakantam
18 Hatakambari

4 VEDA — Ri Gi
19 Jhankaradhvani
20 Nathabhairavi
21 Kiravani
22 Kharaharapriya
23 Gaurimanohari
24 Varunapriya

5 BANA — Ri Gu
25 Mararanjani
26 Charukesi
27 Sarasangi
28 Harikambhoji
29 Dhirasankarabharanam
30 Naganandini

6 RUTU — Ru Gu
31 Yagapriya
32 Raga vardhani
33 Gangeyabhushani
34 Vagadhisvari
35 Sulini
36 Chalanata

7 RISHI — Ra Ga
37 Salagam
38 Jalarnavam
39 Jhalavarali
40 Navaneetham
41 Pavani
42 Raghupriya

8 VASU — Ra Gi
43 Gavambhodhi
44 Bhavapriya
45 Subhapantuvarali
46 Shadvidha margini
47 Suvarnangi
48 Divyamani

9 BRAHM — Ra Gu
49 Dhavalambari
50 Namanarayani
51 Kamavardhani
52 Ramapriya
53 Gamanasrama
54 Visvambhari

10 DISI — Ri Gi
55 Syamalangi
56 Shanmukhapriya
57 Simhendra Madhyama
58 Hemavati
59 Dharmavati
60 Nitimati

11 RUDRA — Ri Gu
61 Kantamani
62 Rishabhapriya
63 Lahangi
64 Vachaspati
65 Mechakalyani
66 Chitrambari

12 AIDTYA — Ru Gu
67 Sucharitra
68 Jyotisvarupini
69 Dhatuvardhini
70 Nasikabhushani
71 Kosalam
72 Rasikapriya

## கடபயாதி சக்கரம்

சுருதி மாதா லய பிதா

கலைகளின் அரசி சங்கீதம்
கவிதை அதன் சகோதரி

சங்கீதம் என்பது கந்தர்வ வேதம் ஆகும்

அளவுகடந்து அனுபவித்தாலும் சன்மார்க்க உணர்ச்சிக்கும் சமய உணர்ச்சிக்கும் கேடு உண்டாக்காத புலன் நுகர்ச்சி இசை ஒன்றே

துன்பக் கடலைத் தாண்டும்போது தோணியாவது கீதம்
எங்கும் சிதறும் எண்ணங்களையே இழுத்து வருவதும் கீதம்
இணைத்து மகிழ்வதும் கீதம் ~ துயர் இருளை மறைப்பதும் கீதம்

**பல்லவி**

சரச மோகன சங்கீதாமிர்த சாரலில் மாங்குயில் கூவுது பார்
சுவையில் தேனிசை கேட்பவர் யாவரும் சித்திரமாகும் விசித்திரம் பார்
(சரச)

**அனுபல்லவி**

சந்தையிலே விற்கும் பொருளல்ல கீதம்
சிந்தையிலே எழும் ஜீவ லயம்
சுந்தர வான்கவி சுகக்குரலில் எழும்
சுதந்திர நாதமே சங்கீதம் (சரச)

**சரணம்**

மந்தை மேகங்கள் மாமழை பொழியும்
விந்தை யாய்மயில் வளைந்தசைந் தாடும்
மந்த மாருதம் மலரிசை பாடும்
அந்த கீதமே அமரசங் கீதம் (சரச)

## சப்த ஸ்வரங்கள்

| | | |
|---|---|---|
| மயில் அகவும் த்வநி - | ஷட்ஜம் | ஸ |
| எருதுகள் இடும் சப்தம் - | ரிஷபம் | ரி |
| வெள்ளாடு முதலியன - | காந்தாரம் | க |
| கிரவுஞ்சப்பட்சி கூவுவது - | மத்யமம் | ம |
| வஸந்தகாலத்தில் கூவும் குயிலின் சப்தம்- | பஞ்சமம் | ப |
| குதிரையிடும் சப்தம் - | தைவதஸ்வரம் | த |
| யானையின் சப்தம் - | நிஷாதம் | நி |

## பன்னிரு ஸ்வர ஸ்தானங்கள்

ஏழு ஸ்வரங்ளில் ஸ, ப இரண்டும் அடிப்படையானவை. மாற்றமில்லாதவை. அவை பிரகிருதி ஸ்வரங்கள் எனப்படும். (அதனால்தான் அவை ஸ்ருதி சேர்க்கப் பயன்படுகின்றன). ஏனைய ஐந்தும் இரண்டு வகையாக ஒலிக்கின்றன. எனவே இவ்வகையில் பன்னிரண்டு ஸ்வரஸ்தானங்கள் உருவாகின்றன.

1. ஷட்ஜம்
2. சுத்த ரிஷபம்
3. சதுஸ்ருதி ரிஷபம்
4. அந்தர காந்தாரம்
5. சாதாரண காந்தாரம்
6. சுத்த மத்யமம்
7. பிரதி மத்திமம்
8. பஞ்சமம்
9. சுத்த தைவதம்
10. சதுஸ்ருதி தைவதம்
11. கைசிகி நிஷாதம்
12. காகலி நிஷாதம்




கல்வி
கலை
சாஸ்திரம்
சாமான்ய கலைகள்
லலித கலைகள் (நுண்கலைகள்)
சங்கீதம்
கவிதை
ஓவியம் (Painting)
சித்திரம் (Drawing)
சிற்பம்


ராகம்
ஜனக ராகம் (தாய் ராகம்)
ஜன்ய ராகம் (சேய்ராகம்)
ஜன்ய சம்பூர்ண ராகம் (வர்ஜமல்லாத)
வர்ஜராகம்
வக்ர ராகம்
உபாங்க ராகம்
பாஷாங்க ராகம்
வர்ஜம்
வர்ஜம் அல்லாதது
ஸம்பூர்ண, ஷாடவ, ஔடவ, ஸ்வராந்தர பேதங்கள்


சங்கீதம்
கல்பித சங்கீதம்
மனோதர்ம சங்கீதம்

சங்கீதத்தின் ஆறு லக்ஷணங்கள்:

1. இனிய ஸ்வரம், 2. நல்ல சுவை 3. அழகான ராகம் 4. மதுரமான வார்த்தைகள் 5. அணிகள் 6. ஒழுங்கு (பங்கீடு)

கருவி வகைகள்:

தத ~ நரம்புக் கருவிகள்
ஸுஷித ~ துளைக்கருவிகள்
அவனத்த தோல்கருவிகள்
கன ~ கஞ்சக் கருவிகள்

இன்னொரு வகை

1. ஸ்ருதி வாத்தியம் ~ தம்புரா, ஒத்து, ஏக்தார், தோதார், துந்தனா, தோணை.
2. லய வாத்தியம் ~ மிருதங்கம், தவில், கஞ்சிரா, கடம்
3. ஸ்வர வாத்தியம் ~ வீணை, வயலின், குழல், நாதஸ்வரம் முதலியன.

இசையில் அடிப்படையான தாய் ராகங்கள் மேளகர்த்தா எனப்படும். இவை 72. இவற்றின் சேய் ராகங்கள் பல்லாயிரக் கணக்கில் உண்டு.

**ஓரே ராகத்தின் வேறு பெயர்கள்:**

சிந்துபைரவி ~ ஹிந்துஸ்தான் காந்தாரி
பிபாஸ ~ ஹிந்துஸ்தான் பூபாளம்
காமவர்த்தனி ~ பந்துவராளி
யமன் கல்யாணி ~ மிஸ்ரயம்ன்
உதயரவிச்சந்திரிகா ~ சுத்ததன்யாசி
சாமரம் ~ சண்முகப்பிரியா

**ஓரே சாயை உடைய ராகங்கள்**

ஆனந்தபைரவி ~ ரீதிகௌளை
ஆபேரி ~ பீம்பிளாஸ் ~ கர்நாடக தேவகாந்தாரி
பைரவி ~ முகாரி ~ உசேனி
தர்பார் ~ நாயகி
பந்துவராயி ~ பூர்விகல்யாணி
ஆபோகி ~ ஸ்ரீரஞ்சனி

## ராகங்களும் பயன்களும்

பாகேஸ்ரீ வாதநோயைக் குணப்படுத்தும்
கரஹரப்பிரியா பசியைப் போக்கும்
பிலஹரி சோர்வைப் போக்கும்

# தமிழ்ப் பண்களும் ராகங்களும்

நட்டபாடை ~ நாட்டை
பழந்தக்கராகம் ~ சுத்தசாவேரி
குறிஞ்சி ~ ஹரிகாம்போதி
அந்தாளிக்குறிஞ்சி ~ சாமா
யாழ்முரி ~ அடானா
பியந்தைக்காந்தாரம்~ நவரோஸ்
கொல்லிக்கௌவாணம் ~ நவரோஸ்
சீகாமரம் ~ நாதநாமக்கிரியை
செவ்வழி ~ யதுகுலகாம்போதி
கௌசிகம் ~ பைரவி
சாதாரி ~ பந்துவராளி
புறநீர்மை ~ பூபாளம்
திருநேரிசை ~ நவரோஸ்
திருவிருத்தம் ~ பொது (எல்லா ராகமும்)
தக்கராகம் ~ காம்போதி
தக்கேசி ~ காம்போதி
வியாழக்குறிஞ்சி ~ சௌராஷ்டிரம்
மேகராகக் குறிஞ்சி~ நீலாம்பரி
காந்தாரம் ~ நவரோஸ்
கொல்லி ~ நவரோஸ்
இந்தளம் ~ மாயாமாளவ கௌளை
நட்டராகம் ~ பந்துவராளி
காந்தாரபஞ்சமம் ~ கேதாரகௌளை
பஞ்சமம் ~ ஆகிரி
பழம்பஞ்சுரம் ~ சங்கராபரணம்
செந்துருத்தி ~ மத்யமாவதி
திருக்குறுந்தொகை ~ மாயாமாளவகௌளை
திருத்தாண்டகம் ~ ஹரிகாம்போதி

# பாடல் வகைகளும் ராகங்களும்

வெண்பா ~ சங்கராபரணம்
அகவல் ~ தோடி
தாழிசை ~ கல்யாணி
விருத்தம் ~ எல்லா ராகமும்
திருவாசகம் ~ மோகனம்
திருத்தாண்டகம் ~ ஹரிகாம்போதி

# காலங்களும் ராகங்களும்

காலை ~ பூபாளம், பௌளி, பிலஹரி, தன்யாசி, மத்யமாவதி, தேவமனோஹரி

மதியம் ~ சாரங்கா, சுருட்டி, சங்கராபரணம், காம்போதி, தோடி, கல்யாணி

இரவு ~ வசந்தா, பைரவி, அடாணா, சகானா, கானடா, மோகனம், பந்துவராளி

திருமண வேளையில் மங்கலநாண் பூட்டுவதற்கு முன் நாட்டைக்குறிஞ்சியும் அதன்பின் ஆனந்தம் ஆனந்தம் என்ற பாடலும் வாசிப்பது மரபு. பொதுவாக ஆனந்த பைரவி வாசித்தலும் உண்டு.

சரத்காலம் (கூதிர்) (ஐப்பசி, கார்த்திகை) ~ பைரவி
ஹேமந்த (முன்பனி) மார்கழி, தை) ~ ஹிந்தோளம்
சிசிர (பின்பனி) (மாசி, பங்குனி) ~ ஸ்ரீராகம்
வசந்த (வசந்தகாலம்) (சித்திரை, வைகாசி) ~ வசந்தா
கிரீஷ்ம (முதுவேனில்) (ஆனி, ஆடி) ~ தீபக்
வர்ஷ (கார்காலம) (ஆவணி, புரட்டாதி) ~ அமிர்தவர்ஷிணி

# உணர்ச்சிகளும் ராகங்களும்

தன்யாசி ~ மகிழ்ச்சி
நீலாம்பரி ~ இரக்கம், வாத்ஸல்யம்
தேவகாந்தாரி ~ பக்தி
சகானா, புன்னாகவராளி, நாதநாமக்கிரியை, சாமா ~ கருணாரசம்
சாமா ~ சாந்தம்
வசந்தா ~ மனநிறைவு, குதூகலம்
ஆஹிரி ~ சோகம்
ரவிச்சந்திரிகா ~ உக்ரம், மென்மை இரண்டும் கலந்த உணர்வு
ஸ்ரீராகம் ~ மென்மை, உருக்கம்

கம்பீரநாட்டை ~ கம்பீரம், உற்சாகம்
நாட்டை, தேவகாந்தாரி ~ வீரம்
கமாஸ், உசேனி ~ சிருங்காரம்
அடாணா ~ கோபம்
ஹிந்துஸ்தான் பெஹாக் ~ அற்புதம்
பிலஹரி ~ வீரம், மகிழ்ச்சி
கேதாரகௌளை ~ பக்தி
கேதாரம் ~ வீரம் (அணிவகுப்பு இசைக்குரியது)
தீபக் ~ சூழலை உஷ்ணமாக்குவது

# கருவிகளின் இயல்பு

நாதஸ்வரம் ~ பக்தி    காதல் ~ வயலின், வீணை    சோகம் ~ ஷெனாய்

ராகங்களில் பிராமணராகம், ஹத்ரிய ராகம், வைசிய ராகம், சூத்திர ராகம் என்றும் ஆண் ராகம், பெண் ராகம் என்றும் பிரிவுகள் உள்ளன.

சங்கீதமானது சப்த தாளங்கள் எனப்படும் அடிப்படையான ஏழு தாளங்களில் அமைவது. இவை ஒவ்வொன்றும் ஐவைந்தாகப் பிரிந்து முப்பத்தைந்து சூளாதி தாளங்களாக விரிகின்றன. இவை பஞ்ச கதிபேதங்களால் மேலும் பகுக்கப்பட்டு 175 தாளங்கள் ஆகின்றன.

# சாஹித்யகாரரின் முத்திரைகள்

| | |
|---|---|
| ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் - | குருகுஹ |
| ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் - | தியாகராஜ |
| ஸ்ரீ ஸ்யாமா சாஸ்திரிகள் - | ஸ்யாமகிருஷ்ண |
| புரந்தரதாசர் - | புரந்தரவிட்டல |
| கோபாலகிருஷ்ண பாரதியார் - | கோபாலகிருஷ்ண |
| ஸ்வாதித்திதிருநாள் மஹாராஜா - | பதுமநாப |
| சதாசிவ ப்ரம்மேந்திரர் - | பரமஹம்ஸ |
| மைசூர் வாசுதேவாச்சார் - | வாசுதேவ |
| வேதநாயகம்பிள்ளை - | வேதநாயக |
| பட்டணம் சுப்பிரமணிய ஐயர் - | வெங்கடேச |
| பாபநாசம் சிவன் - | ராமதாசன் |
| அருணாசலகவி - | அருணாசலகவி |
| க்ஷேத்ரஜ்ஞர் - | முவ்வகோபால |

# பலதும் பத்தும்

## சம்க்ஷேப வார்த்தைகளும் சங்கேத வார்த்தைகளும்

வடமொழி மரபிலே சில விடயங்களைப் பூடகமாகக் குறிப்பிடுவதுண்டு. கருத்து வெளிப்படாமல் மறைந்து நின்று சிறிது சிந்தனைக்குப் பிறகு அக்கருத்துப் புலப்படும் போது அந்த இலக்கியச் சுவை ரசிக்கத் தக்கது. இவற்றில் இருவகை உண்டு. ஒன்று சம்க்ஷேபமாக – சுருக்கக் குறியீடாக – தொகை மொழியாக வருபவை. மற்றது சங்கேதமாக – மறைபொருளில் வருபவை. வைத்தியம், சோதிடம் சம்பந்தமான நூல்களில் இவ்வியல்பைப் பரக்கக் காணலாம். கிரியா பத்ததிகளிலும் இத்தகைய இயல்பு உண்டு. இவற்றுட் சிலவற்றை இப்போது பார்க்கலாம்.

### I. சம்க்ஷேப வார்த்தைகள்

1. பஞ்சப் பிரம்ம மந்திரங்கள் – ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம்
2. ஷடங்க மந்திரங்கள் – ஹ்ருதயம், சிரஸ், சிகா, கவசம், நேத்ரம், அஸ்த்ரம்
3. சம்ஹிதா மந்திரங்கள் – மேலே குறிப்பிட்ட பிரம்ம மந்திரம் ஐந்தும் அங்கமந்திரம் ஆறும் சேர்த்துப் பதினொரு மந்திரங்களும் இப்பெயரால் சொல்லப்படும்.
4. மூல ப்ரம்மாங்க மந்திரம் – 1. மூலமந்திரம் 2. பிரம்மமந்திரம் 3. அங்கமந்திரம் மூன்றும் சேர்ந்தது.
5. ஷடுத்தாசனம் – அனந்த, தர்ம, ஞான, வைராக்ய, ஐஸ்வர்ய, பத்மாசனங்கள் ஆகிய ஆறு ஆசனங்கள்.
6. பஞ்சாசனம் – அனந்தாசனம், சிம்மாசனம், யோகாசனம், பத்மாசனம், விமலாசனம் ஆகிய ஐந்து ஆசனங்கள்.
7. ஆசன மூர்த்தி மூலம் – குறிப்பிட்ட தெய்வத்தின் ஆசனம், அதன் மூர்த்தி, மூலமந்திரம் என்பன உ+ம் :- கணபத்யாசனாய நம: கணபதி மூர்த்தயே நம : கணபதயே நம :

### II. *சங்கேத வார்த்தைகள்*

*1. கட்க மந்த்ரம் - அஸ்த்ர மந்த்ரம் (கட்கேன ஹூத்வா என்றால் அஸ்த்ராய ஸ்வாஹா என ஆகுதி வழங்குதல்)*
*2. ரஸமுகம் - ஆறுமுகம் (ரஸ - ஆறு, அறுசுவை)*
*3. வசுகோணம் - எண்கோணம் (வசு - எட்டு, அட்டவசுக்கள்)*
*4. வேதசங்க்யயா - நான்கு முறை ( வேதங்கள் நான்கு)*
*5. பூதவாரம் - ஐந்து தடவை ( பூதங்கள் ஐந்து)*
*6. வர்மம் - கவசம். ( வர்மணா அவகுண்ட்ய என்றால் கவசாய நம: என அவகுண்டனம் செய்யவேண்டும்.*

## மணி அடித்தல்

தேவர்களை மணியின் நாதத்தினால் வரும்படி அழைக்கின்றோம். அதே நேரத்தில் இந்த மங்களகரமான நாதம் அசுரர்களையும் துஷ்டர்களையும் இங்கு வராமல் தடுக்கின்றது.

பெரியமணி :- அபிஷேக ஆரம்பம், அபிஷேக முடிவு, அர்ச்சனை முடிவு, நைவேத்தியத்தின் ஆரம்பம், உற்சவ ஆரம்பம், உற்சவ முடிவு, நர்த்தனத்தின் முடிவு இக்காலங்களில் பெரிய மணி அடிக்க வேண்டும்.

கைமணி :- கர்ஷணம் முதலான கிரியைகளின் ஆரம்பத்திலும் விக்னேஸ்வர பூஜை புண்ணியாக வாசன ஆரம்பத்திலும் தூப தீப நீராஜன காலத்திலும், பலியோடும் போது இவைகள் முடியும் வரை கைமணி அடிக்க வேண்டும். மணியின் சப்தம் இல்லாவிடில் அக்காரியம் பயனற்றது.

மணிநாதக்கிரமம்:- ஒரு தரம் மோக்ஷத்திற்காகவும், இருதரம் போகத்திற்காகவும், மூன்று தரம் சகல சித்தியின் பொருட்டும் ஆகும். புண்ணியாகம், தூபம், தீபம், நீராஜனம், நைவேத்தியம், பலி போன்றவற்றில் இரண்டு நாதமும் தீபாராதனையின்போது ஒரு நாதமும் தேவர்களின் நிமித்தம் மூன்று நாதமும் அடிக்கவேண்டும்.

## சங்கு

சங்கு பஞ்சஜனன் என்னும் ஓர் அசுரனுடைய எலும்பில் இருந்து உண்டானது. கிருஷ்ணாவதாரத்தில் தன் குருவான சாந்தீபினியின் புத்திரனைக்கொன்ற அவ்வசுரனிடமிருந்து அந்த சங்கத்தைப் பகவான் எடுத்துக்கொண்டார் எனப் புராணங்கள் கூறுகின்றன. சங்கில் இருக்கும் மூன்று ரேகைகளும் மூன்று பாத வடிவமான காயத்ரியே என்பர். மூன்று அவயமும் உள்ள சங்கம் என்பார்கள். தீபம் இல்லாமல் பூஜை செய்தால் கண் குருடாகும். மணி இல்லாமல் பூஜை செய்தால் காது செவிடாகும். சங்கு இல்லாமல் பூஜை செய்தால் ஊமையாவான்.

வலம்புரிச் சங்கில் பூஜை செய்தால் அஷ்டலக்ஷ்மியை அடையலாம். உள்ளே மூன்று நாக்கு இருப்பது சங்கு. காதில் வைத்து வெளிச்சத்தம் வராமல் அடைத்தால் “ஓம்” என்னும் பிரணவச் சப்தம் கேட்க வேண்டும். வலம்புரிச் சங்கு எடுப்பது கஷ்டம். எந்தச் சங்கமாயினும் அதன் நுனியை வெள்ளியால் அல்லது தங்கத்தகட்டால் (கவசம்போல்) கட்டி அதன் நுனியில் நவரத்தினங்களைக் கோர்த்திருப்பின் ரத்னாபிசேகம் செய்யலாம். பூஜை செய்த சங்க ஜலத்தை மற்றைய ஜலத்துடன் கலந்து அபிஷேகம் செய்ய வேண்டும். கடைசியில் அபிஷேக ஜலத்துடன் கூடிய சங்கத்தை மூன்றுமுறை சுவாமி மீது சுற்றிச் சங்க ஜலத்தால் தனது தலையின் மீது புரோக்ஷித்தால் ப்ரம்மஹத்தி தோஷம் அகலும். இவ்வித மகிமையுடைய சங்க பூஜையை ஆத்மார்த்த - பரார்த்த பூஜைகளில் செய்வது மிகவும் நல்ல பலனைத் தரும்.

# அஷ்ட அவதானி

இந்த அட்ட அவதானங்களும் கைவரப்பட்டோர் மக்களிடையே அட்டாவதானி எனப் பெருமையுடன் போற்றப்படுவார்கள்.

**கிரஹணம்** என்பது கேட்டலாகிய திறனாற்றல்
**தாரணம்** என்பது கேட்டவற்றைத் தன் மனத்தில் பதித்தல். **ஸ்மரணம்** என்பது மனத்தில் பதித்தவற்றை வேண்டும் பொழுது நினைவுக்கு கொண்டுவருதல்.

**பிரவசனம்** என்பது மேற்கூறியவற்றைத் தேவை ஏற்படும் பொழுது எடுத்து விளக்குதல்

**யூகம்** என்பது புத்தியின் ஆற்றலால் ஒன்றை வைத்துக் கொண்டு மற்றதனை அறியும் திறன்.

**அபோஹனம்** என்பது தேவையற்ற இடத்தில் மறைக்க வேண்டியவற்றை மறைத்திடல்.

**அர்த்த விஞ்ஞானம்** என்பது ஒரு விடயத்தைப் பற்றி நன்கு தெளிவுபட முழுமையாக அறிதல்.

**தத்துவ ஞானம்** என்பது மேற்சொன்ன ஆற்றல்கள் உடையவராய் மெய்யறிவு பெற்றவராகப் பெரும் மகான் எனப் பெருமை பெறல்.

## பதினாறு பேறுகள்

பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க என வாழ்த்துவதன் அர்த்தம்

1. க்ஷேமம், 2. ஸ்திரம், 3. வீரயம், 4. விஜயம், 5. ஆயுள், 6. ஆரோக்கியம், 7. ஐஸ்வர்யம், 8. தர்மம், 9. அர்த்தம், 10. காமம், 11. மோக்ஷம், 12. சித்தி, 13. ஸமஸ்த மங்களம், 14. ஸமஸ்த துரிதம், 15. புத்ரபௌத்ர அபிவிருத்தி 16. சங்கல்ப பூர்த்தி ஆகியவை.

தமிழில் பதினாறு பேறுகளைப் பற்றிய தனிப்பாடல் ஒன்று உள்ளது.

துதிவாணி வீறுவிசயம் சந்தானம் துணிவு தானம்
மதி தானியம், சௌபாக்கியம், போதமறி(வு) அழகு,
புதிதாம் பெருமை அறம் சூழ, நோயகல் பூண் வயது
பதினாறு பேறும் தருவாய் மதுரைப் பராபரனே.

இவ்வளவு பேறுகளையும் பெற்று வாழ்ந்திடவே பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ்க என்று வாழ்த்துகின்றனர்.

## மகாலட்சுமி இருக்கும் இடங்கள்

யானையின் முகம், பசுவின் பின்புறம், வெள்ளையான வாசனையுள்ள மலர்கள், தாம்பூலம், சந்தனம், விளக்கு, கன்னிப்பெண்கள், அதிகம் பேசாதவர்கள், உள்ளங்கை, குதிரை, டமாரம், பசுவின் கால்தூசி, வேள்விப் புகை, உத்தமர்கள் இருக்கும் இடம்.

# அறுபத்து நான்கு கலைகள்

1. அக்கர இலக்கணம்
2. இலிகிதம்
3. கணிதம்
4. வேதம்
5. புராணம்
6. வியாகரணம்
7. நீதி சாஸ்திரம்
8. சோதிட சாஸ்திரம்
9. தரும சாஸ்திரம்
10. யோக சாஸ்திரம்
11. மந்திர சாஸ்திரம்
12. சகுன சாஸ்திரம்
13. சிற்ப சாஸ்திரம்
14. வைத்திய சாஸ்திரம்
15. உருவ சாஸ்திரம்
16. இதிகாசம்
17. காவியம்
18. அலங்காரம்
19. மதுரபாடனம்
20. நாடகம்
21. நிருத்தம்
22. சக்தபிரமம்
23. வீணை
24. வேணு
25. மிருதங்கம்
26. தாளம்
27. அத்திர பரீக்ஷை
28. கனக பரீக்ஷை
29. இரத பரீக்ஷை
30. கஜ பரீக்ஷை
31. அசுவ பரீக்ஷை
32. இரத்தின பரீக்ஷை
33. பூபரீக்ஷை
34. சங்கிராம இலக்கணம்
35. மல்யத்தம்
36. ஆகருஷணம்
37. உச்சாடனம்
38. வித்துவேஷணம்
39. மதன சாஸ்திரம்
40. மோகனம்
41. வசீகரணம்
42. இரசவாதம்
43. காந்தர்வவாதம்
44. பைபீலவாகம்
45. கௌத்துகவாதம்
46. தாது வாதம்
47. காருடம்
48. நாட்டம்
49. முட்டி
50. ஆகாயப்பிரவேசம்
51. ஆகாயமனம்
52. பாகாயப் பிரவேசம்
53. அதிரிச்சயம்
54. இந்திர ஜாலம்
55. மகேந்திர ஜாலம்
56. அக்கினித்தம்பம்
57. ஜலஸ்தம்பம்
58. வாயுத் தம்பம்
59. திட்டித் தம்பம்
60. வாக்குத் தம்பம்
61. சுக்கிலத் தம்பம்
62. கன்னத்தம்பம்
63. கட்கத்தம்பம்
64. அவத்தைப் பிரயோகம்.



## தெய்வங்களுக்குப் பிடித்தமான பத்திர புஷ்பங்கள்

| | |
|---|---|
| விநாயகர்: | அறுகம்புல், செம்பருத்தி, தாமரை, ரோஜா. |
| சிவன்: | வில்வம், சங்குபுஷ்பம் (காக்கணவன்), தும்பை, தாமரை, செம்பருத்தி. |
| விஷ்ணு: | துளசி, பவளமல்லி, தாமரை, மருக்கொழுந்து. |
| அம்பிகை: | மல்லிகை, முல்லை, வெண்தாமரை, சூரியகாந்தி, செவ்வரளி, கதம்பம். |
| முருகன்: | கடம்பு, முல்லை, மல்லிகை, சாமந்தி, சூரியகாந்தி, ரோஜா. |

## தெய்வங்களுக்கு ஆகாத பத்திர புஷ்பங்கள்

| | |
|---|---|
| விநாயகர்: | துளசி |
| சிவன்: | தாழம்பூ |
| விஷ்ணு: | அட்சதை, ஊமத்தை, எருக்கலை. |
| அம்பிகை: | நெல்லி இலை. |
| துர்க்கை: | அறுகம்புல் |
| சூரியன்: | வில்வம் |
| லட்சுமி: | தும்பை |
| சரஸ்வதி: | பவளமல்லி. |
| பைரவர்: | மல்லிகை, நந்தியாவட்டை. |

*சர்வ + அதிகாரி, சர்வாதிகாரி என்றும்*
*அமிர்த + அஞ்சனம்= அமிர்தாஞ்சனம் என்று கூறப்படுவது போல*
*நினைவு + அஞ்சலி நினைவாஞ்சலி என்று கூறப்படுகிறது. வடமொழிச் சொற்களுக்குக் கூறப்படும் தீர்க்க சந்தி, குணசந்தி, விருத்தி சந்தி என்னும் மூன்று சந்திகளுள் மேலே கண்ட சொற்கள் தீர்க்க சந்தி இலக்கணத்திற்கு உட்பட்டவை. இரு வடசொற்களுக்குத் தானேயன்றி தமிழ் வடசொல் புணர்ச்சிக்கு இந்த வடமொழிச் சந்தி இலக்கணம் பொருந்தாது. நினைவு என்பது தமிழ்ச் சொல். அஞ்சலி என்பது வட சொல். நினைவு என்பதை வடசொல்லாக்கி நினைவாஞ்சலி எனக் கூறப்பட்டு வருகிறது. நினைவு தமிழ்ச் சொல். ஆகவே தாங்கள் கூறுவது போல் நினைவஞ்சலி என்பதே சரி. பாலாபிஷேகம் என்பது தவறு. பாலபிஷேகம் என்பதுதான் சரி*

## சிவராத்திரி விரத பூஜை

சிவராத்திரி காலத்தில் ஒவ்வொரு யாமப் பூஜையின்போதும் கைக்கொள்ளவேண்டிய சில தகவல்கள் இங்கு தரப்படுகின்றன.

| யாமங்கள் | அபிஷேக கலசங்களின் எண்ணிக்கை | விசேஷ அபிஷேக திரவியம் | சாத்தும் வாசனைத் திரவியம் | வஸ்திரம் | அக்ஷதை | பத்ரபுஷ்பம் | நைவேத்தியம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1ஆம் யாமம் (6 – 9 மணி) | 108 கலசம் | பஞ்சகவ்யம் | சந்தனக் குழம்பு | சிவப்புப் பட்டு | பச்சரிசி | தாமரை, அலரி, வில்வம், துளசி | பயற்றம்சாதம் அல்லது சுத்தான்னமும் கறிவகைகளும், வில்வம்பழம் |
| 2ஆம் யாமம் (9 – 12 மணி) | 49 கலசம் | பஞ்சாமிர்தம் | பச்சைக்கற்பூரச் சுண்ணம் | மஞ்சள் பட்டு | வாற்கோதுமை | தாமரை, வில்வம், குருந்து, துளசி | பாயசம் அல்லது லட்டு முதலிய பட்சணங்கள், பலாப்பழம் |
| 3ஆம் யாமம் (12 – 3 மணி) | 25 கலசம் | தேன் அல்லது பழச்சாறு | புனுகுசந்தனம் | வெண்பட்டு | கோதுமை | சண்பகம், அறுகு வில்வம், ஆத்தி, மல்லிகை, முட்கிழுவை | எள்ளுச்சாதம் அல்லது மாவில் செய்த நெய்ப்பலகாரங்கள், மாதுளம்பழம் |
| 4ஆம் யாமம் (3 – 6 மணி) | 9 கலசம் | கருப்பஞ்சாறு அல்லது சந்தனம் | குங்குமம் பன்னீர் | நீலப் பட்டு | சப்த தானியங்கள். | நீலோத்பலம், கருநொச்சி, சகல நறுமண மலர்கள் | சுத்தான்னம் அல்லது கோதுமைப் பலகாரம், எல்லாப் பழங்களும். |

## அளவைகள் பலவிதம்

அளவைகள் காலத்துக்குக் காலம் இடத்துக்கு இடம் தேவைகளுக்கேற்றபடி பலவிதமாகப் பயன்படுத்தப்படுகின்றன. இந்துக்களின் கிரியைகளில் பயன்படும் பல அளவீடுகள் பற்றிய விபரங்கள் ஆகமங்களில் காணப்படுகின்றன. அவற்றுட் சில வருமாறு.

1. **ப்ராதேச மாத்ரம்** - கைவிரல்களை விரித்து நீட்டிப் பிடிக்கும்போது பெருவிரல் நுனியிலிருந்து சுட்டுவிரல் நுனிவரையுள்ள தூரம்.
2. **தாலம்** - பெருவிரல் நுனியிலிருந்து நடுவிரல் நுனிவரையுள்ள தூரம்.
3. **கோகர்ணம்** - பெருவிரல் நுனியிலிருந்து ஞானவிரல் நுனிவரையுள்ள தூரம்.
4. **விதஸ்தி** - பெருவிரல் நுனியிலிருந்து சின்னிவிரல் நுனிவரையுள்ள தூரம்.
5. **ஹஸ்தமாத்திரம்** - முழங்கையிலிருந்து விரல் நுனிவரை (சுமார் ஒருமுழம்)

## அந்தணர் அணிகலன்கள்

பூணூலின் மூன்று புரிகள் - முக்குணம். முக்கடன்கள்.
(முன்னோர்கள் ரிஷிகள் கடவுள்) பலம் அறிவு நீண்ட ஆயுள்.
தர்ப்பையால் ஆன மேகலை – வேதங்களால் சூழப்பட்டவன்.
மான்தோல் - ஆன்மீக வழியிலும் அறிவிலும் உன்னத நிலை.
பலாசு – வேதங்களுக்குக் காலாக நிற்கிறான்.
சூரியன் - தவறாத கடமை கட்டுப்பாடு ஒழுங்கு

## ஷட்கர்ம நிரதர்

*ஸ்நானம் சந்த்யா ஜபோ ஹோமம் தேவதானாம் ச பூஜனம்*
*ஆதித்யம் வைஸ்வதேவம் ச ஷட்கர்மானி தினே தினே*

ஸ்நானம், சந்தியாவந்தனம், ஜபம், ஹோமம், பூஜை, விருந்தினர் உபசாரம், வைஸ்வதேவம் (சிற்றுயிரோம்பல்) என்ற ஆறுகர்மங்களும் நித்யகர்மாக்களாகும்.

## கோத்ர ரிஷி

மகரிஷிகள் ப்ருகு, அங்கிரஸ், மரீசி, அத்ரி ஆகிய நால்வரும் ப்ரம்மாவின் நான்கு புத்திரர்களாவர்.

1. ப்ருகுவிடம் இருந்து ஜமதக்கினியும்
2. அங்கிரஸிடம் இருந்து கௌதமரும், பாரத்துவாஜரும்
3. மரீசியிடம் இருந்து கஸ்யபர், வசிஷ்டர், அகஸ்த்யரும்
4. அத்திரியிடமிருந்து விஸ்வாமித்திரரும் உண்டாயினர்.

நாம் எந்தக் கோத்திரத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் மேற்கூறிய ரிஷிகளில் ஒருவராவது எம்முடைய ப்ரவரத்தில் வரும்.

## தர்மத்தின் வகைகள்

தர்மம் நான்கு வகைப்படும் அதில் முதலாவது **சாமான்ய தர்மம்** பிள்ளைகள் பெற்றோரிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும்? சீடன் குருவிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும்? கணவன் மனைவியிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும்? இத்தகைய சாமான்ய தர்மங்களைத் தானே பின்பற்றி எடுத்துக் காட்டினார் இராமபிரான்.

சாமான்ய தர்மத்தை ஒழுங்காகச் செய்து கொண்டு வந்தால் இறுதியில் ஒரு நிலைவரும். அந்த நிலையில் பகவானின் பாதங்களைத் தவிர வேறு எதுவும் சதம் அல்ல என்ற நினைப்பு வரும். இத்தகைய தர்மத்திற்கு **சேஷ தர்மம்** என்று பெயர். இதைப் பின்பற்றிக் காட்டினான் இலட்சுமணன்.

தூரத்தில் இருந்து கொண்டு எப்போதும் பகவானின் சிந்தனையாக இருப்பது **விசேஷ தர்மம்**. இஃது சேஷ தர்மத்தை விடக் கடினமானது. இதைக் கடைப்பிடித்துக் காட்டினான் பரதன்.

நான்காவது தர்மத்திற்கு **விசேஷதர தர்மம்** எனப் பெயர். பகவானைவிட அவரின் அடியார்களுக்குத் தொண்டு செய்வதே முக்கியம் என்று கருதி வருவது தான் இந்த தர்மம் சத்ருக்கினன் பாகவத உத்தமனாகிய பரதனுக்குத் தொண்டு செய்தே கரையேறி விட்டான்.

ஆக இந்த நான்கு தர்மங்களையும் இராமாவதாரத்தில் நான்கு அவதார புருஷர்கள் மூலமாக அவர் உலகிற்கு எடுத்துக் காட்டுகிறார்.

## கண்டங்கத்தரி

கண்டங்கத்தரிச் செடிக்கு “கர்ப்பவாதி”, “கோப்தார்” முதலிய பெயர்கள் உண்டு. இச்செடியில் மலட்டுத் தன்மையைப் போக்கும் இயல்புகள் உள்ளன. கண்டங்கத்தரி வேர் ஆண்மலட்டுத்தன்மையையும், காய் பெண்மலட்டுத்தன்மையையும் போக்கும் என மருத்துவ நூல்கள் கூறுகின்றன. பொதுவாகவே இருபாலாரதும் பாலியல் உறுப்புக்களின் செயற்பாடுகளை விருத்தி செய்வதற்கு இச்செடி உதவும்.

## வெற்றிலைச் செல்வம்

வெற்றிலை என்பது பட்சணங்களைப்போல அள்ளி வாயில் போட்டு மெல்லுவதற்குரியதன்று. பழைய காலத்தவர்கள் வெற்றிலை போடுவதற்கென்றே பலநிமிட நேரத்தைச் செலவிடுவர். அது ஒரு கலை.

தாம்பூலம் தரிக்கும்போது ஐந்து 'பூ"க்களை விலக்கி, மூன்று 'பூ"க்களைச் சேர்க்கவேண்டுமென்று கூறுவர். காம்பு, நரம்பு, தலைப்பு, விளிப்பு, பழுப்பு என்பவற்றை வெற்றிலையிலிருந்து நீக்கி சுண்ணாம்பு, சாதிப்பூ, கராம்பு என்பன சேர்த்து உண்ணவேண்டும் என்பர்.

# தர்ப்பை

தர்ப்பை ஒருவகைப் புல் ஆகும். நெல்லின் இலை போன்றது. இது மிகவும் புனிதமானதாகவும் தெய்வீகத் தன்மை வாய்ந்ததாகவும் கருதப்படுகிறது. நமது கிரியைகள் யாவற்றிலும் தர்ப்பை பயன்படுகின்றது.

தர்ப்பை விஷ்ணுவின் வராக அவதாரத்துடன் தொடர்புடையது. மிகத் தொன்மையான காலத்திலிருந்து தர்ப்பை இந்துக்களால் அவர்களுடைய கிரியைகளில் பயன்படுத்தப் படுகிறது. மிகப் புனிதமானதாகவும் மந்திரசக்தியை ஈர்த்து வைத்திருக்கக்கூடிய சக்தியை உடையதாகவும் தர்ப்பை உள்ளதனால் தெய்வங்களை ஆவாஹனம் செய்து பூசிக்கின்ற இடங்களிலெல்லாம் தர்ப்பை பயன்படுகிறது.

கும்பங்களில் பூஜை நிகழும்போது அங்கே மாவிலை, தேங்காயுடன் தர்ப்பையினால் செய்த கூர்ச்சம் வைக்கப்படுகிறது. இது கும்ப தேவதையின் சிகை ஆகிறது. சிகை என்பது தலைமயிர். பொதுவாக சிகை அறிவின் சின்னமாகக் கருதப்படுகிறது. பிரதான கும்பங்கள் அமைக்கப்படும்போது இந்த அலங்கார கூர்ச்சத்தைவிட தர்ப்பையினாலான இன்னுமொரு கூர்ச்சம் கும்பத்தினுள்ளே வைக்கப்படுகிறது. இக்கூர்ச்சங்கள் மந்திர சக்தியை - ஆவாஹனம் செய்யப்படும் தெய்வசக்தியை சேமித்துவைக்கப்பயன்படுகின்றன. மாவிலை, தர்ப்பை இரண்டுமே பூப்பத்திரங்கள் போல நல்ல அதிர்வுகளைக் கொண்டிருக்கின்றன என விஞ்ஞானிகள் கண்டறிந்துள்ளனர்.

யாகத்தைக் காக்க என வைக்கப்படுகின்ற யாகேஸ்வர தேவரின் கும்பத்தில் ஞானகட்கம் (அறிவாகிய வாள்) என ஒன்று தர்ப்பையால் செய்யப்பட்டு வழங்கப்படுகிறது.

ஹோமங்கள் நிகழும் அக்னி குண்டத்தின் நான்கு புறமும் தர்ப்பைகளைப் பரப்பி இரண்டாவது படியில் தர்ப்பைகளால் செய்யப்பட்ட விஷ்டரம் என்பது நாற்புறமும் வைக்கப்பட்டு அவற்றில் இந்திரன் முதலிய திக்பாலகர்களும் தசாயுதங்களும் ஆவாஹனம் செய்யப்படுகிறார்கள்.

இறைதிருவுருவங்களிலும் கும்பங்களிலும் மந்திரங்களை ஜபம் செய்யும்போதும் நியாசம் செய்யும்போதும் தரப்பைகளாலான தொடுபுல் என்பதைக் கையில் வைத்திருந்து அதனால் தொட்டுக்கொள்வது வழக்கம்.

கிரியைகள் செய்ய ஆரம்பிக்கும்போது தர்ப்பைகளைப் பரப்பித் தர்பாசனத்தில் அமர்ந்து மோதிர விரலில் தர்ப்பைகளாலான பவித்திரம் அணிந்துகொண்டு ஆரம்பிப்பார்கள்.

## பாத்யம், அர்க்யம், ஆசமனீயம்

இறைவழிபாட்டிலே திருவுருவின் முன்னால் மூன்று பாத்திரங்கள் வைக்கப்பட்டிருக்கக் காணலாம். (ஸ்ரீசக்ர வழிபாடு முதலிய விரிவான தாந்திரிக வழிபாட்டுக் கிரியைகளின்போது சங்கும் வேறுசில மேலதிக பாத்திரங்களும் இருக்கும்.) இவை முறையே பாத்யம், அர்க்யம், ஆசமனீயம் என்பவற்றை வைத்திருந்து உரிய வேளையில் அதனை உபசாரமாக இறைவனுக்கு வழங்குவதற்காகவேயாம்.

பாத்யம் என்பது கால் அலம்புவதற்கான நீர். பாதம் என்பதிலிருந்து பாத்யம் உருவானது. இந்நீரில் இலாமிச்சை, சந்தனம், அறுகு, வெண்கடுகு ஆகிய நான்கு பொருட்கள் சேர்க்கப்படும். அங்கமந்திரங்களால் இது பூஜிக்கப்படவேண்டும்.

அர்க்யம் என்பது மகிழ்ச்சிக்கும் குளிர்ச்சிக்குமாக சிரசில் துளிப்பதற்கும் தூய்மை கருதி சூழலில் தெளிப்பதற்கும் உரியதாகும். இந்த நீரில் எள்ளு, யவம், தர்ப்பை நுனி, பால், அரிசி, பூ, வெண்கடுகு என்பன சேர்க்கப்படும். மூலமந்திரமும் சம்ஹிதாமந்திரமும் இதில் பூசிக்கப்படும்.

ஆசமனீயம் என்பது மந்திர நீரருந்தலுக்குரியது. இந்த நீரில் ஏலம், கராம்பு, பச்சைக்கற்பூரம், சம்பகமொட்டு சாதிக்காய், பூலான்கிழங்கு என்பன சேர்க்கப்படும். இங்கு சம்ஹிதா மந்திரங்கள் பூசிக்கப்படும்.

## பஞ்சாசனம்

இறைவன் அமரும் ஆசனமாக நாம் உருவாக்கும் தத்துவார்த்த ஆசனம் இதுவாகும். ஐந்து அடுக்குகளைக் கொண்டதாக இது அமைகிறது. அனந்தன் முதலிய எட்டு நாகங்களால் அமைந்த அனந்தாசனமும் தர்மன் முதலிய சிங்கங்களால் அமைந்த சிம்மாசனமும் யுகங்கள் முதலிய யோகிகளால் உருவாகிய யோகாசனமும் தாமரை வடிவிலான பத்மாசனமும் அதன் மேல் பொகுட்டில் அமையும் விமலாசனமும் என ஐந்து அடுக்குகள் புனையப்படுகின்றன.

பஞ்சாசன பூஜையில் இந்த ஐந்து ஆசனங்களிலும் வீற்றிருக்கின்ற தேவதைகள் தனித்தனியே பூசிக்கப்பட்டபின் அதன்மேல் பிரதான மூர்த்தி பூசிக்கப்படுகிறார். இதனைக் காட்டும்வகையில் சில ஆலயங்களில் மரத்தினால் இத்தகைய பஞ்சாசனங்கள் செய்யப்பட்டுள்ளன.

## ஆதி சங்கரர்

சங்கரரின் காலம் கி.பி.8ம் நூற்றாண்டு.(788-820)

சங்கரர் தோன்றிய இடம் மலையாள நாட்டில்(கேரளம்) காலடி என்ற கிராமம்.

இவரது பெற்றோர் பெயர்கள் சிவகுரு - ஆர்யாம்மா.

சங்கரர் வாழ்ந்த காலம் முப்பத்திரண்டு ஆண்டுகள்.

இவரது குரு கோவிந்த பகவத் பாதர்.

சங்கரரது பரமகுரு (குருவின்குரு)கௌடபாதர்.

சங்கரரது முக்கிய சீடர்கள் நால்வர்: பத்மபாதர், தோடகர், ஹஸ்தாமலகர், மண்டனமிஸ்ரர் (சுரேஸ்வராசாரியார்)

சங்கரர் நிறுவிய ஐந்து மடங்கள்

வடக்கு - பத்ரி - ஜோதிர்மடம் - தோடகர் - அதர்வவேதம்
மேற்கு - துவாரகை - காளிகாபீடம் - ஹஸ்தாமலகர் - சாமம்
கிழக்கு - பூரிஜகந்நாதம் - கோவர்தனபீடம் - பத்மபாதர் - இருக்கு
தெற்கு - சிருங்கேரி - சாரதாபீடம் - சுரேஸ்வரர் - யசுர்வேதம்
மத்தி - காஞ்சி - காமகோடி - சர்வக்ஞாத்மர் - இருக்குவேதம்.

சங்கரர் எழுதிய நூல்கள்

வேதாந்தபாஷ்யம், கீதாபாஷ்யம், தசோபநிஷதபாஷ்யம் சிவானந்தலஹரி, ஆனந்தலஹரி, சௌந்தர்யலஹரி, கணேசபஞ்சரத்னம், சுப்ரமண்யபுஜங்கம், பஜகோவிந்தம், கனகதாராஸ்தவம் இன்னும் பல தோத்திரங்கள்.

## ஸ்ரீ இராமாநுஜாச்சாரியார்

இராமானுஜர் ஆதிசேடனின் அவதாரம்.

இவர் வாழ்ந்த காலம்11ம் நூற்றாண்டு.

இராமானுஜரின் பெற்றோர்கள் கேசவசோமயாஜி, காந்திமதிஅம்மை.

இராமானுஜரின் இளமைப் பெயர் இளையாழ்வார்.

இவரது பிறப்பிடம் ஸ்ரீபெரும்புதூர்.

இவர் எழுதிய நூல்கள் ஸ்ரீபாஷ்யம், வேதாந்தசாரம், வேதாந்ததீபம், வேதாந்த சங்கிரகம், கீதாபாஷ்யம், சரணாகதிதத்வம்,

## பௌத்தம்

பௌத்தம் கூறும் மும்மணிகள் புத்தம், சங்கம், தர்மம்.

பௌத்தத்தின் வேறு பெயர்கள்
மாத்யாமிகம், அநாத்மவாதம், சூனியவாதம்,க்ஷணிகவாதம், க்ஷணபங்குரவாதம்.

பௌத்தத்தின் முதல்வர் கௌதம புத்தர்.

இவரது இயற்பெயர் சித்தார்த்தன்.

ஆரிய சத்தியங்கள் நான்கு
துக்கம், துக்கமூலம், துக்கநிவாரணம், துக்கநிவாரண மார்க்கம்.

அநாத்மவாதம் என்பது ஆத்மா என்று ஒன்று இல்லைஎன்னும் தத்துவம்.

பஞ்சசீலம் கள்ளாமை, அஹிம்சை, பொய்யாமை, கற்பு, மதுஅருந்தாமை.

திரிபிடகத்தின் மூன்று பிரிவுகள் சுத்தபிடகம், விநயபிடகம், அபிதம்மபிடகம்.

பௌத்தத்தின் இருபெரும் பிரிவுகள் ஹீனயானம், மஹாயானம்.

## தத்துவ தரிசனங்கள்

சாங்கிய தரிசனத்தின் அடிப்படைநூல் சாங்கிய காரிகை.

அதனை இயற்றியவர் ஈஸ்வரகிருஷ்ணர்.

சாங்கியமும் சைவசித்தாந்தமும் ஏற்றுக்கொள்ளும் வாதம் சற்காரியவாதம்.

யோகசூத்திரத்தின் மூலகர்த்தா பதஞ்சலி.

அவரது நூலின் பெயர் யோகசூத்திரம்.

அட்டாங்க யோகம்: இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி.

நியாய தரிசனத்தின் வேறுபெயர்கள் நையாயிகம், பிரமாணசாஸ்திரம், ஹேதுவித்யா.

இதன் அடிப்படை நூல் நியாயசூத்திரம்.

அந்நூலை இயற்றியவர் கௌதமர்.(அட்சபாதர்)

குசுமாஞ்சலி என்ற நூலை எழுதியவர் உதயணர்.

வைசேடிகத்தின் ஆரம்ப கர்த்தா கணாதர்.(உதாகர்)

அவர் எழுதிய நூல் வைசேடிக சூத்திரம்.

மீமாம்சையின் மூலகர்த்தா ஜைமினி.

மீமாம்சா சூத்திரத்திற்குப் பாடியம் எழுதியவர் சபரமுனிவர்.

## சைவ சித்தாந்தம்

சைவம் என்ற சொல் முதன்முதலில் கையாளப்பட்டது
சங்கமருவியகால நூலாகிய மணிமேகலையில்.

சித்தாந்தம் என்பதன் பொருள் முடிந்தமுடிபு.

சித்தாந்தம் என்றசொல் முதன்முதல் கையாளப்பட்டதுதிருமூலரின் திருமந்திரத்தில்.

சைவசித்தாந்தம் கூறும்உண்மைப் பொருட்கள் முப்பொருட்கள். பதி,பசு,பாசம்.

சைவசித்தாந்த தத்துவத்தின் அடிப்படைவாதம் என்ன? சத்காரியவாதம்.

சத்காரியவாதம் கூறுவது உள்ளபொருள் இல்லாதாகாது. இல்லாதபொருள் உள்ளதாகாது.

மூவகை ஆன்மாக்கள்

சகலர் - மும்மலமுடையோர்.
பிரளயாகலர் - ஆணவம், கன்மம் உடையோர்.
விஞ்ஞானகலர்- ஆணவம் மட்டும் உடையோர்.

மூவகைக் கன்மங்கள்

சஞ்சிதம் - பழவினைத்தொகுதி.
பிராரத்தம் - இப்போது அநுபவிக்கும் வினை.
ஆகாமியம் - புதிதாகச் செய்யும் வினை.

மூவகை மாயைகள் சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை.

பதியின் இருநிலைகள் சொரூபஇலக்கணம், தடத்தஇலக்கணம்.

ஆன்மாவின் மூன்று அவத்தைகள் கேவலாவத்தை, சகலாவத்தை, சுத்தாவத்தை,

இறைவனின் மூவகைத் திருமேனிகள் அருவம், உருவம், அருவுருவம்.

அருவத்திருமேனிகள் சிவம், சக்தி, நாதம், விந்து.

அருவுருவத்திருமேனி சதாசிவ வடிவமாகிய சிவலிங்கம்.

உருவத்திருமேனிகள் பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேஸ்வரன்.

இவ்வொன்பது திருமேனிகளும் நவந்தருபேதம்.

சிவபிரானின் சிறந்த மகேஸ்வரவடிவங்கள் 25.

அர்த்தநாரீஸ்வரரின் வேறுபெயர் அரியர்த்தர்.

சிவனும் விஷ்ணுவும் இணைந்த வடிவம் ஹரிஹர வடிவம்.(சங்கர நாராயணர்)

பரமுத்தி : சாயுச்சியம்.

அபரமுத்தி : சாலோகம், சாமீபம், சாரூபம்.

பஞ்சகிருத்தியம் என்பது ஐந்தொழில்கள்.

சிருஷ்டி - படைத்தல்
ஸ்திதி - காத்தல்
சம்ஹாரம் - அழித்தல்
திரோபவம் - மறைத்தல்
அநுக்கிரகம் - அருளல்.

பஞ்சகிருத்திய நடனம் என்பது: ஐந்தொழிலை விளக்கும் சிவனது ஆனந்த தாண்டவம்.

ஐந்தொழில்புரியும் மூர்த்திகள்

படைத்தல் - பிரம்மா
காத்தல் - விஷ்ணு
அழித்தல் - உருத்திரன்
மறைத்தல் - மகேஸ்வரன்
அருளல் - சதாசிவன்.

இறைவனின் எண்குணங்கள்

தன்வயத்தனாதல் - (சுவதந்திரம்)
தூயஉடம்பினநாதல் - (விசுத்ததேகம்)
இயல்பாகவேபாசங்களின் நீங்குதல் - (நிராமயான்மா)
முற்றுமுணர்தல் - (சர்வஜ்ஞுத்துவம்)
என்றுமறிதல் - (அநாதிபோதம்)
வரம்பிலின்பமுடமை - (திருப்தி)
முடிவிலாற்றலுடமை - (அனந்தசக்தி)
பேரருளுடமை - (அனுப்தசக்தி)

சமயகுரவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகசுவாமிகள்.

அகச்சந்தான குரவர்

திருநந்திதேவர், சனற்குமாரமுனிவர், சத்தியஞானதரிசினிகள், பரஞ்சோதிமுனிவர்.

புறச்சந்தானசாரியார்

மெய்கண்டதேவர், அருணந்திசிவாசாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதிசிவாசாரியார்.

நூல்ஒன்றும் இயற்றாத சந்தானகுரவர் மறைஞானசம்பந்தர்.

மிகஅதிக நூல்களை இயற்றியவர் உமாபதிசிவாசாரியார்.

உமாபதிசிவத்தின் நூல்களுள் எட்டினை சித்தாந்த அட்டகம் என்பர்

சித்தாந்த சாஸ்திரங்கள் பதினான்கு.

சித்தாந்த சாஸ்திரங்கள் மெய்கண்டசாஸ்திரங்கள்.

சித்தாந்தசாஸ்திரங்கள் பதினான்கையும் இயற்றியவர்கள்: 6 பேர்.

மூவர்தேவாரங்கள் அடங்கிய தொகுதி அடங்கன்முறை.
அடங்கன்முறையிலடங்குபவை 797. பதிகங்கள்?

சைவத்தமிழ் வேதம் தேவாரங்கள்.

சைவத்தமிழ் உபநிடதம் திருவாசகம்.

தேவாரம் என்பதன் பொருள் என்ன?
தேவ ஆரம் - இறைவனது மாலை.
தே வாரம் - இனியதும் அன்புநிறைந்ததும்.

நால்வகை நெறிகளும் எவை?
சரியை (தாசமார்க்கம்)
கிரியை (சற்புத்திரமார்க்கம்)
யோகம் (சகமார்க்கம்)
ஞானம் (சன்மார்க்கம்).

நால்வகை முத்திகள் எவை?
சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம்.

பஞ்சலிங்கங்களை பஞ்சபூதத் திருத்தலங்களுடன் தொடர்பு

| | |
|---|---|
| பிருதுவிலிங்கம் | - காஞ்சி |
| அப்புலிங்கம் | - திருவானைக்கா |
| தேயுலிங்கம் | - திருவண்ணாமலை |
| வாயுலிங்கம் | - திருக்காளத்தி |
| ஆகாசலிங்கம் | - சிதம்பரம். |

இன்னொரு வகையில் லிங்கங்களின் வகை
காணலிங்கம், தைவிகலிங்கம், ஆரிடலிங்கம்,மானிடலிங்கம், சுயம்புலிங்கம்.

க்ஷணிகலிங்கம் என்பது பூஜையின்போது மஞ்சள்மா, சந்தனம், முதலியவற்றால் உருவாக்கப்படுவது.

இட்டலிங்கம் எனப்படுவது தீட்சையின்போது குருவினால் வழங்கப்பட்டு சிவபூஜையில் பயன்படுத்தப்படுவது.

இருவகைத் தீக்ஷைகள்: சாதார தீக்ஷை, நிராதார தீக்ஷை.

எழுவகைத் தீக்ஷை: நயனதீக்ஷை, பரிசதீக்ஷை, வாசகதீக்ஷை, மானசதீக்ஷை, சாத்திரதீக்ஷை, யோகதீக்ஷை, ஔத்திரிதீக்ஷை.

மூவகைத்தீக்ஷைகள்: சமயம், விசேக்ஷம், நிர்வாணம்.

சாம்பவ தீக்ஷை: இறைவன் திருவுலாக்காண்போர் பெறும் தீக்ஷை.

மூவகைக் குருமார்: வித்தியாகுரு, தீக்ஷாகுரு, போதககுரு.

ஏகாக்ஷர மந்திரம்: ஓம்.

தூலபஞ்சாக்ஷர மந்திரம் : நமசிவாய (நகராதி பஞ்சாக்ஷரம்)

சூட்சும பஞ்சாக்ஷரம் : சிவாயநம. (சிகராதி பஞ்சாக்ஷரம்)

சடக்ஷர மந்திரம் : சரவணபவ.

தூலலிங்கம் - கோபுரம்.
பத்திரலிங்கம் - பலிபீடம்.
சூக்குமலிங்கம் - மூலலிங்கம்.

சைவசித்தாந்தம் கூறும் தத்துவங்கள் 36.

பதினோராந் திருமுறையின் வேறுபெயர் பிரபந்த மாலை.

தேவாரத்திற்கு வழங்கும் வேறுபெயர்கள்: ஞானத்தமிழ், செந்தமிழ், மூவர்தமிழ், நற்றமிழ், அருந்தமிழ், தமிழாரம், பாமாலை.

## பன்னிரு திருமுறைத் தொகுப்பு

| | |
|---|---|
| முதலாம் திருமுறை | திருஞானசம்பந்தர் தேவாரம் |
| இரண்டாம் திருமுறை | திருஞானசம்பந்தர் தேவாரம் |
| மூன்றாம் திருமுறை | திருஞானசம்பந்தர் தேவாரம் |
| நான்காம் திருமுறை | திருநாவுக்கரசர் தேவாரம் (தேவாரம்) |
| ஐந்தாம் திருமுறை | திருநாவுக்கரசர் தேவாரம் (திருக்குறுந்தொகை) |
| ஆறாம் திருமுறை | திருநாவுக்கரசர் தேவாரம் (திருத்தாண்டகம்) |
| ஏழாம் திருமுறை | சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம் |
| எட்டாம் திருமுறை | மாணிக்கவாசகர் திருவாசகம் |
| ஒன்பதாம் திருமுறை | திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் |
| பத்தாம் திருமுறை | திருமூலரின் திருமந்திரம் |
| பதினோராம் திருமுறை | நாற்பது பிரபந்தங்கள் |
| பன்னிரண்டாம் திருமுறை | சேக்கிழாரின் பெரியபுராணம் |

நாயன்மார்கள் அறுபத்துமூவர். சுந்தர மூர்த்தி சுவாமிகள் பாடிய திருத்தொண்டர் தொகையில் இடம்பெறும் அடியார்கள் அவர் உட்பட அறுபத்து மூவர் என்பதால் சேக்கிழார் பாடிய பெரியபுராணத்தில் சுந்தரர் காலத்திற்குப் பிந்தியவரான மாணிக்க வாசகரின் வரலாறு இடம்பெறவில்லை. இது பலருக்குத் தெரியாத செய்தி.

ஆன்மஎழுச்சிகள் ஐந்து: காண்டல், கேட்டல், உண்டல், உயிர்த்தல், உய்தல்.

ஆன்மாவின் ஐந்து அவத்தைகள்: சாக்கிரம் (நனவு), சொப்பனம் (கனவு), சுளுத்தி (உறக்கம்), துரியம் (பேருறக்கம்), துரியாதீதம் (உயிர்ப்படங்கியநிலை)

மூவகைத்துன்பங்கள்

ஆதிதைவிகம், ஆதிஆன்மிகம், ஆதிபௌதிகம்.

சிவதத்துவம் ஐந்து. நாதம்,விந்து,சாதாக்கியம்,ஈசுரம்,சுத்தவித்தை.

வித்தியாதத்துவம் ஏழு. காலம்,நியதி,கலை,வித்தை,அராகம்,புருடன்,மாயை.

| | | | |
|---|---|---|---|
| ஆன்மதத்துவம் | இருபத்துநாலு | பஞ்சபூதம் | - 5 |
| | | ஞானேந்திரியம் | - 5 |
| | | கன்மேந்திரியம் | - 5 |
| | | தன்மேந்திரியம் | - 5 |
| | | அந்தக்கரணம் | - 4 |
| | | | 24 |

மூவினைகள் நல்வினை, தீவினை, வெறுவினை.

சிவஞானபோதத்திற்கு மாபாடியம் இயற்றியவர் சிவஞானமுனிவர்.

பஞ்சகோசங்கள்: அன்னமயகோசம் - தூலசரீரம்
பிராணமயகோசம் - சூககுமசரீரம்
மனோமயகோசம் - குணசரீரம்
விஞ்ஞானமயகோசம் - கஞ்சுகசரீரம்
ஆனந்தமயகோசம் - காரணசரீரம்.

ஷண்மதங்கள் : சைவம், சாக்தம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம், சௌரம்.

சாக்தத்தில் இடம்பெறும் இருவகைமார்க்கங்கள்

கௌலமார்க்கம்(வாமாசாரம்.), சமயமார்க்கம்.

சாக்தநெறியில் மூன்று முக்கிய வழிபாட்டு முறைகள் : தந்திரம், மந்திரம், யந்திரம்.

"மறந்தும் புறம் தொழார்" எனக்கூறப்படுபவர்: வைஷ்ணவர்.

கௌமார நெறிக்குரிய தனியான ஆகமம்: குமாரதந்திரம்.

அந்தணர்க்குரிய அறுதொழில்கள்:

கற்றல், கற்பித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.

விஷ்ணுவின் சிறப்பான அவதாரங்கள் பத்து.

மத்ஸ்யம் (மீன்), கூர்மம் (ஆமை), வராகம் (பன்றி), நரசிங்கம், வாமனர், பரசுராமர், பலராமர், தசரத ராமர், கிருஷ்ணர், கல்கி.

அவதாரத்தின் நான்கு வகைகள்: அவதாரம், ஆவேசம், அம்சம், அர்ச்சை.

அர்ச்சாவதாரம் : விக்கிரகங்கள்.

புருடார்த்தங்கள் (நாற்பொருட்கள்.) : அறம், பொருள், இன்பம், வீடு.

திரிவர்க்கம் : அறம், பொருள், இன்பம்.

ஐம்பெருவேள்விகள் (பஞ்சமகாயக்ஞம்) :பிரம்மயக்ஞம், தேவயக்ஞம், பூதயக்ஞம், பிதிர்யக்ஞம், அதிதியக்ஞம்.

ஆலயக்கிரியைகளின் வகைகள்:
நித்தியக்கிரியை, நைமித்திகக்கிரியை, காமியக்கிரியை.

ஆலயக்கிரியைகளின் வகைகள்: கர்ஷணாதி பிரதிஷ்டாந்தம், பிரதிஷ்டாதி உத்ஸவாந்தம், உத்ஸவாதி பிராயச்சித்தாந்தம்.

கும்பாபிஷேகத்தின் வகைகள்:
அநாவர்த்தம், ஆவர்த்தம், புனராவர்த்தம், அந்தரிதம்.

இல்லக் கிரியைகளின் வகைகள்: பூர்வம், அபரம்.

முச்சுடர்கள் : சூரியன், சந்திரன், அக்கினி.

ஆலயத்தில் காணப்படவேண்டிய மூன்று சிறப்புக்கள்: மூர்த்தி, தலம், தீர்த்தம்.

நால் வகைச் சமயங்கள்:
அகச்சமயம், புறச்சமயம், அகப்புறச்சமயம், புறப்புறச்சமயம்.

தக்ஷிணா மூர்த்தியின் நான்கு சீடர்கள்
சனகர், சனாதார், சநந்தனர், சனற்குமாரர்.

அறுபடை வீடுகள் : திருச்செந்தூர்(திருச்சீரலைவாய்), திருவேரகம்(சுவாமிமலை), திருவாவினன்குடி(பழனிமலை), திருத்தணிகை(திருப்பரங்குன்றம்), பழமுதிர்ச்சோலை, குன்றுதோறாடல்.

வேதாங்கங்கள் : சிட்சை, வியாகரணம், சந்தசு, நிருக்தம், சோதிடம், கற்பம்.

ஏழு புண்ணியநதிகள்:
கங்கை, யமுனை, கோதாவரி, நர்மதை, சிந்து, காவேரி, சரஸ்வதி.

வைணவத்தமிழ் வேதம்: நாலாயிர திவ்வியப் பிரபந்தம். (நம்மாழ்வாரின் திருவாய்மொழி)

வைணவத்தமிழ் உபநிடதம்: ஆண்டாள் திருமொழி.

அட்ட(எட்டு)சுயம்புத்தலங்கள்:
(வடநாடடில்) பதரிகாசிரமம், சாளக்கிராமம், புஷ்கரம், நைமிசாரண்யம்.
(தென்னாட்டில்) திருவேங்கடம், ஸ்ரீரங்கம், வானமாமலை, ஸ்ரீமுஷ்ணம்.

அட்டமா சித்திகள்: அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசித்துவம், வசித்துவம்.

இறைவனை சிறப்பாக பூசிக்கும் மூவிடங்கள்: தம்பம், கும்பம், விம்பம்.

ஆலயத்தில் காணப்படும் மூன்று சிறப்பான அம்சங்கள்:
மூர்த்தி, தலம், தீர்த்தம்.

சதாசிவ மூர்த்தியின் பஞ்சமுக அம்சம் பெற்ற மாகேசுர வடிவங்கள்

ஈசானமுகம் - சோமாஸ்கந்தர்
கூத்தப்பெருமான்
இடபாரூடர்
சந்திரசேகரர்
கல்யாணசுந்தரர்.

தத்புருஷம் - பிக்ஷாடனர்
காமாரி
காலாரி
சலந்தராரி
முப்புராரி.

அகோரம் - கயாரி
வீரபத்திரர்
தக்ஷிணாமூர்த்தி
கிராதர்
நீலகண்டர்.

வாமதேவம் - கங்காளர்
சக்கரதானர்
கயமுகானுக்கிரகர்
சண்டேசுரானுக்கிரகர்
ஏகபாதர்.

சத்யோஜாதம் - லிங்கோற்பவர்
சுகாசீனர்
உமாமகேசர்
அரியர்த்தர்
அர்த்தநாரீ.

எழுவகைப் பிறப்புகள்:
தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம்.

வீரசைவம் கூறும் அஷ்டஆவரணங்கள்: குரு, லிங்கம், சங்கமம், விபூதி, உருத்திராக்கம், தீர்த்தம், திருவைந்தெழுத்து, பிரசாதம்.

பிரபந்நர்கள் எனப்படுவோர் வைஷ்ணவ அடியார்கள், பிரபத்தி மார்க்கத்தவர்கள்

சைவத் திருமுறைகளை அருளியவர்கள் 27பேர்

அகச்சமயம் ஆறு பாடாணவாத சைவம், பேதவாத சைவம், சிவசங்கிராந்தவாத சைவம், சிவசமவாத சைவம், ஈஸ்வரவாத சைவம், சிவாத்துவித சைவம்.

இறைவனின் ஆறு குணங்கள் எவை? (ஷாட்குண்யம்)
தேஜஸ், வீர்யம், ஞானம், சக்தி, பலம், ஐஸ்வர்யம்.

## ஈழத்தில் சம்ஸ்கிருதக் கல்வியின் வளர்ச்சிக்காகப் பாடுபட்டுழைத்த, உழைக்கும் பெருமைக்குரியவர்கள்

பிரம்மஶ்ரீ முகாந்திரம் சதாசிவ ஐயர்
கோப்பாய் பிரம்மஶ்ரீ ஶ்ரீநிவாச சாஸ்திரிகள்
வியாகரணசிரோமணி பிரம்மஶ்ரீ தி. கி. சீதாராம சாஸ்திரிகள்
நல்லூர் நியாயசிரோமணி பிரம்மஶ்ரீ கி. சுப்பிரமணிய சாஸ்திரிகள்
மாவை பிரம்மஶ்ரீ பாலசுந்தரக் குருக்கள்
கீரிமலை சிவஶ்ரீ ராமையர்
கீரிமலை சிவஶ்ரீ குமாரசாமிக் குருக்கள்
வடலியடைப்பு அருணாசல சாஸ்திரிகள்
அச்சுவேலி சிவஶ்ரீ ச. குமாரசாமிக்குருக்கள்
கோப்பாய் பண்டிதர் பிரம்மஶ்ரீ ச. பஞ்சாட்சர சர்மா
கோண்டாவில் பிரம்மஶ்ரீ கி. நாராயண சாஸ்திரிகள்
பேராசிரியர் கா. கைலாசநாதக் குருக்கள்
மல்லாகம் நாகரத்தினம்
நீர்வேலி சங்கரபண்டிதர்
நீர்வேலி சிவப்பிரகாச பண்டிதர்
இணுவில் சிவஶ்ரீ தா. மஹாதேவக் குருக்கள்
தெல்லிப்பழை பிரம்மஶ்ரீ வி. நாராயண சர்மா
மட்டுவில் பிரம்மஶ்ரீ கி. சதாசிவசர்மா
பிரம்மஶ்ரீ ச. ரா. பாலகிருஷ்ணசர்மா

---

## ஆலயங்களில் பயன்படும் கிரியாபத்ததி நூல்களை உருவாக்கிய முன்னோடிகள்

அச்சுவேலி சிவஶ்ரீ ச. குமாரசாமிக் குருக்கள்
திருமலை சிவஶ்ரீ இ. கு. பூர்ணானந்தேஸ்வரக் குருக்கள்
நயினை சிவஶ்ரீ ஐ. கைலாசநாதக் குருக்கள்
நாயன்மார்கட்டு சிவஶ்ரீ சாம்பசிவக் குருக்கள்
நல்லூர் நியாய சிரோமணி கி. சுப்பிரமணிய சாஸ்திரிகள்
இணுவில் சிவஶ்ரீ தா. மஹாதேவக் குருக்கள்

## சம்ஸ்கிருத கிரந்த எழுத்தில் (அச்சுக் கோத்தல் முறையில்) அதிக நூல்களை நமக்குப் பயனுறத் தந்த பெருமைகளுக்குரியவர்கள் (ஈழத்தில்)

பருத்தித்துறை கலாநிதி யந்திரசாலை
யாழ்ப்பாணம் ஸ்ரீ சாரதா அச்சகம்
கொக்குவில் சோதிடப்பிரகாச யந்திரசாலை
மட்டுவில் திருக்கணித நிலையம்

---

## சம்ஸ்கிருத நாகர எழுத்திலமைந்த நூல்களை அச்சுவாகனமேற்றிப் பல சம்ஸ்கிருத நூல்களை நமக்குப் பயனுறத் தந்தவர் என்ற பெருமைகளுக்குரியவர்

யாழ்ப்பாணம் ஆசீர்வாதம் அச்சக அதிபர்
**திரு மு. வி. ஆசீர்வாதம் J.P. அவர்கள்**

---

## சம்ஸ்கிருத கிரந்த எழுத்தினைக் கணினிவழி வடிவமைத்து முதலில் நூல் வெளியிட்ட ஈழத்தவர் அதிக நூல்களை நமக்குப் பயனுறத் தந்தவர் என்ற பெருமைகளுக்குரியவர்

நீர்வேலி அரசகேசரிப் பிள்ளையார் தேவஸ்தானத்தைச் சேர்ந்தவரும்
ஜெர்மன் வாசரும் ஆன

**பிரம்மஸ்ரீ சா. பாலச்சந்திர சர்மா (நீர்வை இளமதி)**

---

## ஈழத்தில் சம்ஸ்கிருத கிரந்த எழுத்தின் கணினிவழி வடிவமைப்பின் முன்னோடிகள்

**(தற்போது கணினியில் பயன்படும் குஞ்சிதபாதம், கணபதி ஆகிய எழுத்துக்களை உருவாக்கித் தருவதற்கு மூலகாரணர்களான முதல்வர்கள்)**

1. அமரர் பேராசிரியர் கா. கைலாசநாதக் குருக்கள் அவர்கள்
2. அமரர் சிவஸ்ரீ குஞ்சிதபாதக் குருக்கள் அவர்கள்

## ஈழத்தில் சம்ஸ்கிருத கிரந்த எழுத்தில் கணினி வடிவமைக்கப்பட்ட முதல்நூலை உருவாக்கிய பெருமைக்குரியவர்

நெல்லியடி IIS நிறுவனப் இயக்குநர்
**பிரம்மஸ்ரீ எஸ். பிரபாகரன் அவர்கள்.**

இம்முதல்நூலை வெளியிட்ட பெருமைக்குரியவர்கள்
**ஊரெழு சிவாச்சார்ய பீடத்தினர்**

இந்த முதல் நூல்: **ஸ்ரீ மஹோற்சவ பத்ததி**

---

## யாழ்ப்பாணத்தில் சம்ஸ்கிருத நாகர எழுத்தில் கணினி வடிவமைக்கப்பட்ட முதல்நூலை உருவாக்கி வெளியிட்ட பெருமைக்குரியவர்

சர்வானந்தமய பீட அமைப்பாளர்
**வித்யாபூஷணம், பிரம்மஸ்ரீ ப. சிவானந்த சர்மா B.A (Hons)**
**(கோப்பாய் சிவம்)**

இந்த முதல் நூல்:
**சம்ஸ்கிருத ஸ்வபோதினி**

---

## இன்று உலகெங்குமுள்ள இந்து ஆலயங்களில் பயன்படும்வகையில் சம்ஸ்கிருத எழுத்தில் கணினி வடிவமைக்கப்பட்ட கிரியாபத்ததி நூல்களை மிக அதிகமாக உருவாக்கிய பெருமைக்குரியவர் (150 இற்கு மேற்பட்ட நூல்கள்)

சர்வானந்தமய பீட அமைப்பாளர்
**வித்யாபூஷணம், பிரம்மஸ்ரீ ப. சிவானந்த சர்மா B.A (Hons)**
**(கோப்பாய் சிவம்)**

# சமய அறிவை வளர்க்கும் சின்னஞ்சிறு கேள்விகளும் சிறப்பான பதில்களும்.

(இங்கு தரப்பட்டிருக்கும் சின்னச் சின்னக் கேள்விகளுக்கான பதில் உங்களுக்குத் தெரியுமா எனப் பரீட்சித்தபின் கேள்விகளின் முடிவில் உள்ள பதில்களைப் பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள்.)

1. இந்து சமயம் யாரால் உருவாக்கப்பட்டது?
2. எமது சமயத்தில் உள்ள இந்து என்னும் சொல் யாரால் வழங்கப்பட்டது?
3. இந்துசமயத்தின் உட்பிரிவுகளாக வழங்கும் முக்கிய சமயங்கள் எவை?
4. எமது சமயத்தின் அடிப்படைப் பிரமாண நூல்கள் எவை?
5. வேதங்களைக் கண்டறிந்து நமக்கு வழங்கியவர்கள் யார்?
6. வேதாங்கங்கள் என வழங்கும் நூல்கள் எத்தனை?
7. வேதாங்கங்கள் எவை?
8. சாங்கோபாங்கமாகக் கற்றல் என்றால் என்ன?
9. உபாங்கங்கள் எவை?
10. உபவேதங்கள் எவை?
11. வேதகால வழிபாட்டில் முதன்மை பெறுகின்ற இரு அம்சங்கள் எவை?
12. சிவாகமங்களில் முதன்மை பெறுகின்ற வழிபாட்டு முறைகள் எவை?
13. தமிழ்நாட்டில் பிரமச்சாரியாகவும் வடநாட்டில் பெரிதும் சம்சாரியாகவும் வழிபடப்படும் தெய்வம் யார்?
14. தமிழ்நாட்டில் சம்சாரியாகவும் வடநாட்டில் பிரமச்சாரியாகவும் வழிபடுகிற தெய்வம் யார்?
15. தமிழ்வேதம் எனக் கூறப்படுபவை எவை?
16. ஆலயங்களையும் விக்கிரகங்களையும் அமைக்கும் விதிமுறைகள் சிவாகமங்களில் கூறப்படுகின்றன. இவற்றை விரிவாக விரித்துரைக்கும் வழிநூல்கள் எவை?
17. கிரியைமுறைகளை விரித்துரைக்கும் சிவாகம வழிநூல்கள் எவை?
18. சம்ஸகித இலக்கண நூல்களை எவ்வாறு கூறுவர்?
19. ஐந்தாம் வேதம் எனப் போற்றப்படும் நூல் எது?
20. மஹாபாரதத்தில் பகவத் கீதைபோல இராமாயணத்தில் ஒரு பகுதி உண்டு. அது எது?

21. தேவீமஹாத்மியம் என்னும் பாராயண நூல் எந்தப் புராணத்தில் இடம்பெறுகிறது?

22. தேவீமஹாத்மியத்தின் பிரபலமான இன்னொரு பெயர் என்ன?

23. பகவத்கீதைக்கும் தேவீமஹாத்மியத்திற்கும் ஒரு ஒற்றுமை உண்டு. அது என்ன?

24. அந்தணர்கள் ஆத்மார்த்தமாகப் பாராயணம் செய்யும் முக்கியமான இரு சஹஸ்ரநாம ஸ்தோத்திரங்கள் எவை?

25. விரத வழிபாடுகள் பற்றிய செய்திகளையும் சஹஸ்ரநாமம் முதலிய வழிபாட்டு முறைகளையும் அதிகம் தருகின்ற நூல்கள் எவை?

26. மஹாபுராணங்கள் என விதந்து போற்றப்படும் புராணங்கள் எத்தனை?

27. இவற்றைத் தொகுத்து வழங்கியவர் யார்?

28. சைவத் தமிழ் வேதங்களாகப் போற்றப்படும் திருமுறைகள் எக் காலகட்டத்திற்குரியவை?

29. திருமுறைகள் எத்தனையாக வகுக்கப்பட்டுள்ளன?

30. திருமுறைகளை முதலில் வகுத்தவர் யார்?

31. தமிழில் வழங்கும் சைவசமயத்தின் தோத்திர நூல்கள் எவை? சாத்திர நூல்கள் எவை?

32. சாத்திர நூலாகவும் தோத்திர நூலாகவும் விளங்கும் ஒரு திருமுறை எது?

33. பன்னிரு திருமுறைகளையடுத்து நம்நாட்டில் அதிக முக்கிய இடம்பெற்று ஓதப்படும் நூல் எது?

34. சிவாகம நெறிமுறையில் ஆலயங்களில் பரார்த்த பூஜைகளை நடத்தத் தகுதி வாய்ந்தவர்கள் யார்?

35. அந்தணர்க்குரிய அறுதொழில்கள் எனப் போற்றப்படும் முக்கிய கடமைகள் ஆறும் எவை?

36. ஏற்றல் எனப்படும் தானம் பெறுதலால் ஏற்படக்கூடிய தோஷங்களிலிருந்து அந்தணர்களைக் காப்பது எது?

37. காயத்ரீ மந்திரம் எத்தனை அட்சரங்கள் கொண்டது?

38. காயத்திரி மந்திரத்தை எத்தனை பாகங்களாக நிறுத்தி ஜபம் செய்யவேண்டும்.

39. எல்லாத் தெய்வங்களுக்கும் தனித்தனியே காயத்திரி மந்திரம் சொல்லப்பட்டாலும் காயத்திரி மந்திரம் என உலகெங்கும் சிறப்பித்து ஓதப்படும் காயத்திரி எந்த தெய்வத்திற்குரியது.

40. அந்தணர்களின் வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய முக்கியமான சம்ஸ்காரங்கள் எத்தனை?

41. நித்யாஹ்நிக த்வயம் என்ற சொல் குறிப்பது எவற்றை?

42. சந்தியாவந்தனம் ஒரு நாளில் எத்தனை தடவை செய்யப்படவேண்டும்?

43. ஆலயங்களில் துவஜாரோஹணம், பிரதிஷ்டை முதலியவற்றைச் செய்வதற்கு ஒருவரிடம் இருக்கவேண்டிய முக்கிய தகுதிப்பாடுகள் எவை? (கல்வி அடிப்படையிலல்ல, ஆகம அடிப்படையில்)

44. சிவனுக்குரிய சண்டேஸவரர் எப்பெயர் பெறுகிறார்?

45. ஆகமங்கள் கூறும் சண்டேஸ்வர மூர்த்தங்கள் எத்தனை?

46. எவை?

47. இவர்களைவிட பைரவர், விஷ்ணு ஆகியோருக்கான சண்டேஸ்வரர்கள் யார்?

48. வைஷ்ணவர்களின் வழிபாட்டில் விநாயகர் எப்பெயர் பெறுகிறார்?

49. விநாயகருக்கு எத்தனை முறை குட்டி வணங்கவேண்டும்?

50. தோப்புக்கரணம் என்பதன் பொருள் என்ன?

51. விநாயகருக்கு நெற்றியில் குட்டி, தோப்புக்கரணம் போட்டுக்கும்பிடுதல் என்ற இலகு வழிபாடு. இதேபோல் முருகனுக்கு இலகு வழிபாடு இருப்பதாகத் தெரியவில்லை. என்றாலும் அவரைச் சந்தோஷப்படுத்த என்ன வழிபாடு செய்யலாம்? (சாதாரண மக்கள் வழிபாட்டுமுறை)

52. இதேபோல சிவனையும் விஷ்ணுவையும் மகிழ்விக்கும் வகையில் அவர்களுக்கு ....... பிரியர் என ஒவ்வொரு பெயர்கள் உள்ளன. அவை எவை?

53. விநாயகர், அம்பிகை இருவருக்கும் ஆகாத பத்திரங்கள் எவை?

54. நித்திய பூஜையின் மிக முக்கிய அங்கங்கள் எவை? குறைந்தது ஆறு சொல்லவேண்டும்.

55. அக்னிகார்யத்தின் முக்கிய பிரிவுகள் எவை? (குறைந்தது ஐந்து)

56. சகளீகரணம் என்ற சொல்லின் பொருள் என்ன?

57. பஞ்ச சுத்திகள் எவை?

58. சம்ஹிதா மந்திரங்கள் எத்தனை?

59. பஞ்ச ப்ரம்ம மந்திரங்கள் எவை?

60. ஷடங்க மந்திரங்கள் யாவை?

61. பஞ்சபாத்ரம் என்ற சொல் எப்படி வந்தது? அதன் பொருள் என்ன?

62. பஞ்சகவ்யம் என்ற சொல்லின் பொருளை விளக்குக.

63. மகேஸ்வர பூஜையா, மாகேஸ்வர பூஜையா? இரண்டையும் விளக்குக.

64. ஆலய விளம்பர அறிவித்தல்களில் இடம்பெறும் விஞ்ஞாபனம் என்பதன் பொருளை விளக்குக.

65. நவகுண்டங்களிலும் பூஜிக்கப்படும் நவாக்னிகளின் பெயர்கள் எவை?

66. அட்டமூர்த்திகளும் யாவர்?

67. சிவாக்னியின் மூன்று பருவங்களையும் கூறுக.

68. இம்மூன்று அக்னிகளும் எவ்வெவ் விடயங்களுக்குப் பயன்படுகின்றன?

69. நவகுண்டங்களின் வடிவங்களை திசைகளுடன் தொடர்புறுத்திக் கூறுக.

70. நவகண்ட ஸ்பர்ஸாகுதியில் இடம்பெறும் நவந்தரு பேதங்களை வரிசைப்படுத்துக.

71. த்ரிகண்டங்களையும் அவற்றுக்குரிய தத்வ தத்வேஸ்வரர்களையும் கூறுக.

72. டோலோற்சவம் என்பது என்ன?

73. ம்ருகயாத்ரா என்பது என்ன?

74. சோமன் என்ற பெயரால் சுட்டப்படும் இரு தெய்வங்கள் யாவர்?

75. சிவனது சிறப்பான மாஹேஸ்வர வடிவங்கள் எத்தனை?

76. முக்கியமான மாஹேஸ்வர வடிவங்கள் ஐந்து கூறுக.

77. பிள்ளையார் கதையை இயற்றிய நம் நாட்டவர் யார்?

78. இவர் இயற்றிய வேறும் இரு முக்கிய புராணங்களைக் கூறுக.

79. நடேசரபிஷேகம் வருடத்தில் எத்தனைமுறை வரும்?

80. மாதமிருமுறை வரும் இரு விரதங்கள் கூறுக.

81. சதர்த்தி விரதத்தையும் சங்கடஹர சதுர்த்தி விரதத்தையும் எவ்வாறு வேறுபடுத்துவீர்?

82. ஷடத்துவாக்கள் என்பன எவை?

83. ஆறாதாரம் எவை?

84. அறுசுவைகள் எவை?

85. சிவனது ஐந்து முகங்களுடன் முருகனின் ஆறாவது முகம் எது?

86. தசதிக் பாலகர்கள் யாவர்?

87. சுப்பிரமணியரின் ஷடக்ஷர மந்த்ரம் யாது?

88. விஷ்ணுவின் அஷ்டாக்ஷர மந்த்ரம் யாது?

89. அம்பிகையின் பதினைந்து எழுத்து மந்த்ரம் எது?

90. அந்த மந்திரம் அப்பெயர் பெற்றது ஏன்?

91. த்ரிபட்ச யஜனம் என்பது என்ன?

92. தர்ப்பணம் என்பதன் பொருள் என்ன?

93. அந்தர்யாகம் என்பது என்ன?

94. தர்ப்பணம், தர்ப்பணம் இரண்டு சொற்கள் ஆலயக் கிரியைகளில் இடம்பெறுகின்றன. வேறுபடுத்துக.

95. ஸ்ரீசக்ரத்தின் ஒன்பதாவது ஆவரணம் என்ன? அதன் பெயர் என்ன?

96. ஒரு மந்திரத்தின் ரிஷி, சந்தஸ், தேவதை என்பவை யாவை?

97. மேலுள்ள மூன்றையும் கூறும்போது தொடவேண்டிய அங்கங்கள் யாவை?

98. ஆறுகாலப் பூஜைகளை வரிசைப்படுத்துக.

99. வேத உச்சரிப்பில் காட்டப்படும் ஏற்ற இறக்கங்கள் தனித்தனியே எப்பெயர்கொண்டு அழைக்கப்படுகின்றன?

100. ஷடுத்தாசனம் என்பவை யாவை?

101. பஞ்சாசனம் எவை?



# விடைகள்.

1. யாராலும் உருவாக்கப்படாதது.
2. சிந்து நதியைக்கடந்து இந்தியாவிற்குள் நுழைந்த அந்நியர்களால்.
3. சைவம், சாக்தம், வைணவம், காணாபத்யம், சௌரம், கௌமாரம்.
4. வேதங்களும் ஆகமங்களும்.
5. ரிஷிகள் (முனிவர்கள்)
6. ஆறு
7. சிட்சை, வியாகரணம், ஜோதிஷம், சந்தஸ, நிருக்தம், கல்பம்.
8. ச அங்க உப அங்கமாக - அதாவது வேதங்களை அதன் அங்கங்களாகிய ஆறு நூல்களுடனும், உப அங்கங்களாகிய நான்கு நூல்களுடனும் விரிவாகக் கற்றல்.
9. மீமாம்சை, நியாயம், புராணம், தர்மசாஸ்திரம்.
10. ஆயுர்வேதம், கந்தர்வ வேதம், தனுர்வேதம், அர்த்த வேதம்.
11. பிரார்த்தனையும் வேள்வியும்.
12. ஆலயங்கள் அமைத்துத் திருவுருவங்களை அங்கு பிரதிஷ்டை செய்து அபிஷேகம், பூஜைகள் செய்தல்.
13. விநாயகர்.
14. முருகன்.
15. திருமுறைகள். (தேவாரம் - தமிழ் வேதம், திருவாசகம் - தமிழ் உபநிடதம்.)
16. சிற்ப சாஸ்திரங்கள்.
17. கிரியாபத்ததிகள்.
18. வியாகரணம்.
19. மஹாபாரதம்.
20. யோகவாசிஷ்டம்.
21. மார்க்கண்டேய புராணம்.
22. துர்க்கா சப்தசதி.
23. இரண்டுமே எழுநூறு சுலோகங்களால் ஆக்கப்பட்டவை.
24. லலிதா சஹ்ரநாமம், விஷ்ணு சஹஸ்ரநாமம்.
25. புராணங்கள்
26. பதினெட்டு.
27. வேதவியாசர்.
28. பல்லவர் காலம் - ஏழாம் எட்டாம் நூற்றாண்டு ஆகும். திருமுறைகளில் இடம் பெறும் மிகப்பழைய பாடலாசிரியர் காரைக்காலம்மையார். இவர் சங்கம் மருவிய காலத்தவர் என்ற கருத்தும் உண்டு.

29. பன்னிரண்டு.
30. நம்பியாண்டார் நம்பி.
31. திருமுறைகளும் சைவசித்தாந்த சாத்திரங்களும்.
32. திருமந்திரம்.
33. திருப்புகழ்.
34. சிவப்பிராமணர்கள்.
35. ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.
36. காயத்ரி மந்திரம்.
37. இருபத்துநான்கு. திரிபதா.
38. ஐந்து.
39. ஒளிக்கடவுள் ஆகிய சூரியன்.
40. நாற்பது.
41. வைதிக சந்தியாவந்தனம், ஆகம சந்தியாவந்தனம் அல்லது சிவபூஜை.
42. மும்முறை. (முப்போதும் திருமேனி தீண்டுவார்)
43. திருமணம் செய்தவராகவும் சிவாச்சார்ய அபிஷேகம் செய்யப்பெற்றவராகவும் இருக்கவேண்டும்.
44. த்வனி சண்டேஸ்வரர்.
45. ஐந்து.
46. விநாயகர் - கும்போதர சண்டேஸ்வரர்.
    சுப்பிரமணியர் - சுமித்திர சண்டேஸ்வரர்.
    தேவி - யமனீ அல்லது தாரிகா சண்டேஸ்வரி
    சூர்யன் - தேஜஸ் சண்டேஸ்வரர்
    சிவன் - த்வனி சண்டேஸ்வரர்.
47. பைரவர் - பக்த வடுகர், விஷ்ணு - விஷ்வக்சேன சண்டேஸ்வரர்
48. விஷ்வக்சேன கணபதி
49. ஐந்துமுறை. (குட்டனம் பஞ்ச வாரகம்)
50. தோர்பிஹி கரணம் கைகளால் காதினை
51. மாவிளக்கு, காவடி.
52. சிவன் - அபிஷேக பிரியர். விஷ்ணு - அலங்காரப் பிரியர்.
53. விநாயகருக்கு ஆகாதது - துளசி, அம்பிகைக்கு ஆகாதது - நெல்லி.
54. நிர்மாலிய விசர்ஜனம், அபிஷேகம், அலங்காரம், தூபம், நிவேதனம், தீபாராதனை, அர்ச்சனை.

55. குண்டசம்ஸ்காரம், அக்னி சம்ஸ்காரம், சுருக் சுருவ சம்ஸ்காரம், ஆஜ்யசம்காரம், வக்த்ரானுசந்தானம், வக்த்ரைகீகரணம், ஜிஹ்வாதீபனம், ஜிஹ்வைகீகரணம்

56. சகளம் உடம்பு. தேவ உடலாக்குதல். (சகளப்ரம்மம், நிஷ்கள ப்ரம்மம்)

57. ஆத்மசுத்தி, மந்த்ரசுத்தி, ஸ்தானசுத்தி, திரவ்யசுத்தி, லிங்கசுத்தி.

58. பதினொன்று.

59. ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம்.

60. ஹ்ருதயம், சிரஸ், சிகா, கவசம், நேத்ரம், அஸ்த்ரம்.

61. பஞ்ச - அகன்ற, அகன்ற வாயை உடைய பாத்திரம்.

62. பஞ்சகவ்யம் - ஆனைந்து.

பசுவின் ஐந்து. பால், தயிர், நெய், கோஜலம், கோமயம்.

63. மகேஸ்வர பூஜை - இறைவனுக்கான பூஜை,

மாகேஸ்வர பூஜை - இறையடியார்களுக்கான பூஜை. (அன்னதானம்)

பின்னதே சரி.

64. அறிவித்தல் அல்லது வேண்டுதல் என்பதுதான் இதன் பொருள்.

65. பிரதானம் - சிவாக்னி, கிழக்கு - ஆஹவனீயாக்னி, தெற்கு - தக்ஷிணாக்னி, வடக்கு - கேவலாக்னி, மேற்கு - கார்ஹபத்யாக்னி, ஆக்னேயம் - வ்ருத்தாக்னி, ஈசானம் - சாமான்யாக்னி, நிருதி - யௌவனாக்னி, வாயு - பாலாக்னி.

66. க்ஷமாமூர்த்தி, ஜலமூர்த்தி, வஹ்னிமூர்த்தி, வாயுமூர்த்தி, ஆகாசமூர்த்தி (க, வ்யோம), அர்க்கமூர்த்தி, இந்துமூர்த்தி, யஜமானமூர்த்தி.

67. பாலசிவாக்னி, யௌவன சிவாக்னி, வ்ருத்த சிவாக்னி.

68. வ்ருத்த - ப்ரதிஷ்டை, யௌவனம் - மஹோற்சவம்,

பால - ஏனைய எல்லாவற்றுக்கும்.

69. கிழக்கு சதுரஸ்ரம், தெற்கு - அர்த்தசந்த்ரன், வடக்கு - பத்மம், மேற்கு - வ்ருத்தம், ஆக்னேயம் - யோனி, ஈசானம் - எண்கோணம், நிருதி - த்ரிகோணம், வாயு - ஷட்கோணம். ப்ரதானம் - வ்ருத்தம்.

70. ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹேஸ்வரன், சதாசிவன், நாதம், பிந்து, சக்தி, சிவம்.

71. ப்ரம்ம பாகம் - ஆத்மதத்வம், ப்ரம்மா.

விஷ்ணு பாகம் - வித்யாதத்வம், விஷ்ணு.

ருத்ர பாகம் - சிவதத்வம், ருத்ரன்.

72. ஊஞ்சல் திருவிழா

73. வேட்டைத் திருவிழா.

74. சந்திரன், குபேரன்.

